# கே.ஜீவபாரதி படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**இரா.கண்ணதாசன்**
பதிவு எண் : 496

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**




**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி.
மனித வள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி
மற்றும் தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 3

தமிழ்நாடு, இந்தியா

ஏப்ரல் - 2019

**முனைவர் சு.இராசாராம்,**

பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி – 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**“கே.ஜீவபாரதி படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்”** என்னும் தலைப்பில் **இரா.கண்ணதாசன்** அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(சு.இராசாராம்)**

நெறியாளர்

**இரா.கண்ணதாசன்**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),

பதிவு எண் : *496*

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி – *630 003*.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**"கே.ஜீவபாரதி படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(இரா.கண்ணதாசன்)**

ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சு.இராசாராம்,**

பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி – *630 003*.

# நன்றியுரை

**“கே.ஜீவபாரதி படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்”** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், ஒப்புதல் நல்கிய தமிழ்த்துறைத் தலைவர் பேரா. மு.பாண்டி அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்து இவ்வாய்வேடு சிறப்புறவும், செம்மையுறவும் ஆய்வு நெறிகளை முறைப்படுத்தித் தந்த என் ஆய்வு நெறியாளர் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் சு.இராசாராம் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான பல ஆலோசனைகளை வழங்கியுதவிய மார்க்சிய அறிஞர், முனைவர் மு.பழநிஇராகுலதாசன் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினை வெளிப்படுத்திக்கொள்கின்றேன்.

ஆய்வுக்கான நேர்காணலில் தகவல்களைத் தந்துதவிய படைப்பாளர் கே.ஜீவபாரதி அவர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆய்வுத் தொடர்பான நூல்கள் தந்துதவிய பேராசிரியப் பெருமக்கள், நண்பர்கள், இலக்கியவாதிகள் அனைவருக்கும் நன்றியினைக் கூறுவதில் மகிழ்வடைகின்றேன். நூல்களை வழங்கிய நூலகங்களுக்கும் நன்றியினைக் கூறிக்கொள்கின்றேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறப்பாக அச்சாக்கம் செய்து நூற்கட்டாக வடிவமைத்துத் தந்த தம்பி, முனைவர் வ.பாவரசன் அவர்களுக்கும், ஆய்வேடு உருவாக்கத்திற்குப் பல வகையில் உதவிய தமிழ்த்துறை முனைவர் பட்ட ஆய்வாளர் ஆறு.செல்வமணி அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| க.ஆ | – | கட்டுரை ஆசிரியர் |
| ப.ஆ | – | பதிப்பாசிரியர் |
| நூ.ஆ | – | நூலாசிரியர் |
| தொ.ஆ | – | தொகுப்பாசிரியர் |
| மொ.பெ | – | மொழிபெயர்ப்பு |
| மொ.பெ.ஆ | – | மொழிபெயர்ப்பாசிரியர் |
| ப | – | பக்கம் |
| பக் | – | பக்கங்கள் |
| மேலது | – | மேலே குறிப்பிடப்பட்டது. |

**பொருளடக்கம்**

# முன்னுரை

பொதுவுடைமை என்பது தொழிலாளர் வர்க்கத்திற்கான அறிவியல் கொள்கையாகும். மனித வாழ்க்கை, போராட்டமும் சிக்கலும் நிறைந்ததாகவே காணப்படுகிறது. உற்பத்தி உறவுகளின் முரண்பாடே ஏற்றத்தாழ்வுகளை உருவாக்குகிறது. இந்நிலையில் பொருளியல் சமத்துவம் மலர்வதே பொதுவுடைமையின் நோக்கம் என்பதை பொதுவுடைமைவாதிகள் உணர்ந்தனர். பொதுவுடைமை மலர்வதற்குத் தடையாக உள்ள சமூகக் காரணிகளைக் களைய மெய்யியலை அவர்கள் வகுத்தனர். அவ்வகையில் தமிழ் இலக்கிய மரபில் இந்திய விடுதலைக்குப் பின் பொதுவுடைமை இலக்கியங்களின் வரவுகள் அதிகமாயின. கவிதை, உரைநடை, நாடகம், புதினம், சிறுகதை, தமிழிசை, வரலாற்றிலக்கியம், சிறுவர் இலக்கியம், கடித இலக்கியம் என அதன் கூறுகளை விரிக்க இயலும். இதில் கே.ஜீவபாரதியின் பொதுவுடைமைச் சிந்தனைமிக்க படைப்புகளை ஆராயும் முகமாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத்தலைப்பு**

**"கே.ஜீவபாரதி படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்"** என்பது ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

நவீன ஆய்வில் மார்க்சியம், பெண்ணியம், பின் நவீனத்துவம், பின் காலனியம், தலித்தியம் போன்ற களங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. இவற்றுள் சமூக மாற்றத்திற்கான பொதுவுடைமைக் கூறுகள் அடங்கிய மார்க்சியப் பார்வைகள் கே.ஜீவபாரதியின் படைப்புகளில் அதிகம் உள்ளன. அவர்தம் படைப்புகள் எளிய மக்களுக்காகப் படைக்கப்பட்டவை. சமுதாயத்தின் எல்லாத் தளங்களிலும் சமத்துவம் மலர வேண்டும் என்ற பொதுவுடைமைக் கோட்பாடு மிக்க களப்பணியாளராகவும் கே.ஜீவபாரதி திகழ்கின்றார். அவருடைய படைப்புகள் முழுவதும் சமூகச் சிந்தனை மிக்க இலக்கிய வடிவமாக இருப்பினும் அவற்றுள் மேலோங்கித் திகழ்வது பொதுவுடைமைச் சிந்தனையே ஆகும். ஜீவபாரதி படைப்புகளில் இடம்பெற்றுள்ள பொதுவுடைமைக் கருத்துகளை ஆராய்ந்து வெளிக்கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

பொதுவுடைமைச் சிந்தனையின் மூலவர்களாக காரல்மார்க்ஸ், பிரடெரிக் எங்கெல்ஸ், லெனின் போன்றோரின் கருத்துகளைத் தமிழ் இலக்கியத்தில் வெளிப்படுத்தியவர் ஜீவபாரதி ஆவார். பொதுவுடைமை இயக்கம் சார்ந்தவர் என்பதாலும் பொதுவுடைமைச் சார்பு இதழ்களில் பணியாற்றியவர் என்பதாலும் ஜீவபாரதியின் படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள் மேலோங்கி நிற்கின்றன. பொதுவுடைமைச் சமுதாயத்தை அமைப்பதையே முதன்மைக் கொள்கையாகக் கொண்டு ஜீவபாரதியின் படைப்புகள் திகழ்கின்றன என்று நிறுவுவதே இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வு முன்னோடிகள்

பொதுவுடைமைக் கோட்பாட்டில் தமிழ் ஆய்வில் ஈடுபட்ட க.கைலாசபதி, நா.வானமாமலை, ரகுநாதன், எஸ்.இராமகிருஷ்ணன், கே.முத்தையா, தி.க.சிவசங்கரன், ஆர்.கே.கண்ணன், இ.முருகையன், கா.சிவத்தம்பி, தமிழவன், அருணன், எம்.ஏ.நு:.மான், ஞானி, அ.மார்க்ஸ், கோ.கேசவன் போன்றோர் ஆய்வு முன்னோடிகள் ஆவர். மார்க்சிய ஆய்வின் பொதுவான முன்னோடிகள் இவர்கள் எனினும் கே.ஜீவபாரதியின் படைப்புகள் குறித்தும் ஆய்வுகள் வெளிவந்துள்ளன. பெ.சந்திரசேகரன் என்பவரால் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் எம்.பில். பட்டத்திற்காகச் சமர்ப்பிக்கப்பட்ட ‘கே.ஜீவபாரதியின் கவிதைகள் ஓர் ஆய்வு’ என்ற ஆய்வேடும், மு.கீதா என்பவரால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எம்.பில். பட்டத்திற்காகச் சமர்ப்பிக்கப்பட்ட ‘கே.ஜீவபாரதியின் வேலுநாச்சியார் நாவலில் பெண்ணியச் சிந்தனைகள்’ என்ற ஆய்வேடும் முன்னோடி ஆய்வுகளாகக் கருதப்பெறுகின்றன.

## ஆய்வு எல்லை

கே.ஜீவபாரதி வெளியிட்டுள்ள நூல்கள் நூற்று நான்கு ஆகும். இவற்றுள் தொகுப்பு நூல்கள் நீங்கலாக படைப்பு நூல்கள் நாற்பத்து ஒன்பதாகும். இவற்றுள்ளும் பொதுவுடைமைச் சிந்தனைமிக்க கவிதைத் தொகுப்புகளான ஒரு முடிவுக்கு வாருங்கள், களத்தில் பிறந்த கவிதைகள், கனல் மணக்கும் பூக்கள், புதுயுகக் கவிஞனும் புதியவன் குரல்களும், சொல்லுறதச் சொல்லிப்புட்டேன், மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, கவிதை எழுதினேன் கடிதம் வந்தது, அறிவை வளர்க்கும் சிறுவர் பாடல்கள், கே.ஜீவபாரதி கவிதைகள் ஆகிய ஒன்பது நூல்களும், வேலுநாச்சியார் என்னும் ஒரு புதினமும், வீரத்தாய் வேலுநாச்சியார் என்னும் ஒரு

நாடகமும், வரரலாற்று உரைநடை நூல்களான எனது தரிசனங்கள், காலமறிந்து கூவிய சேவல், வீரன் எட்டப்பன் முதல் வேலுநாச்சியார் வரை, இந்தப் பாடல்களும் எனது திரையும், மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள், வாழும் வரலாறு, அந்தநாள் ஞாபகம், சரித்திரம் பேசுகிறது, நல்லகண்ணு, உலக மேதைகள், நினைவு நாட்களும் நெஞ்சில் அலைகளும், மலர்களுக்காக மலர்ந்தவை, கண்ணோட்டம், பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை ஆகிய பதினான்கு நூல்களும் ஆக மொத்தம் இருபத்து ஐந்து நூல்கள் ஆய்வின் எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வுத் தரவுகள்

ஆய்விற்கு உட்படுத்தப்படும் கே.ஜீவபாரதியின் படைப்பாக்க நூல்கள் முதன்மைச் சான்றாதாரமாக விளங்குகின்றன. படைப்பாளரின் மற்றைய நூல்கள், ஆய்விற்குப் பயன்பட்ட பொதுவுடைமை சார்ந்த திறனாய்வு நூல்கள், இதழ்கள், நேர்காணல் போன்றவை துணைமைச் சான்றாதாரமாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

படைப்பாளரின் படைப்புகளைப் பகுத்தும், தொகுத்தும் விளக்கும் வகையில் விளக்கவியல் அணுகுமுறையும், பொதுவுடைமைச் சிந்தனைகளை ஆராயும் வகையில் மார்க்சிய அணுகுமுறையும், வரலாற்று நோக்கில் ஆராயும் வகையில் வரலாற்றியல் அணுகுமுறையும், பெண்ணிய நோக்கில் ஆராயும் வகையில் பெண்ணிய அணுகுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

"கே.ஜீவபாரதியின் படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்" என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவையாவன,

1. பொதுவுடைமையின் தோற்றமும் வளர்ச்சியும்
2. ஜீவபாரதியின் சமூகச் சிந்தனையில் பொதுவுடைமை
3. ஜீவபாரதியின் அரசியல், தத்துவச் சிந்தனைகளில் பொதுவுடைமை
4. ஜீவபாரதியின் பெண்ணியப் பதிவுகளில் பொதுவுடைமை
5. ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவுகளில் பொதுவுடைமை

**இயல் ஒன்று**

**“பொதுவுடைமையின் தோற்றமும் வளர்ச்சியும்”** என்பது ஆய்வேட்டின் முதல் இயலாகும். இவ்வியலில் பொதுவுடைமையின் தோற்றம், பொதுவுடைமைத் தத்துவம் ஒரு சமூக விஞ்ஞானம், பொருள்முதல் வாதக் கோட்பாடு போன்றவை விளக்கப்பட்டுள்ளன. சமூகப் பிரிவுகளான புராதனப் பொதுவுடைமைச் சமூகம் (Primitive Communism) அடிமை உடைமைச் சமூகம் (Slavic Society), நிலப்பிரபுத்துவச் சமூகம் (Feudalism), முதலாளித்துவச் சமூகம் (Capitalism), பொதுவுடைமைச் சமூகம் அல்லது விஞ்ஞான சோசலிசச் சமூகம் (Scientific Socialism) பற்றிய விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. பொருளாதாரப் போராட்டம், அரசியல் போராட்டம் குறித்த தகவல்கள் ஆராயப்பட்டுள்ளன. உலகளாவிய பொதுவுடைமைச் சிந்தனை, இந்தியாவில் பொதுவுடைமைப் புரட்சி, தமிழ்நாட்டில் பொதுவுடைமை இயக்கச்சிந்தனைகள், பொதுவுடைமை வளர்ச்சியில் கவிஞர் ஜீவபாரதி படைப்புகள் போன்றவை குறித்தும் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் இரண்டு**

**“ஜீவபாரதியின் சமூகச் சிந்தனையில் பொதுவுடைமை”** என்பது இரண்டாவது இயலாகும். சமூக மாற்றத்திற்கான பொருளியல் சிந்தனைகளையும், மார்க்சியக் கொள்கைகளையும் ஜீவபாரதியின் படைப்புகளிலிருந்து ஆராய்வதே இவ்வாய்வின் முக்கிய நோக்கமாகும். விவசாய முன்னேற்றம், பண்ணையார்களின் மீதான எதிர்ப்பு, மதங்கள் மீதான எதிர்ப்பு, சாதீய எதிர்ப்பு, மூடநம்பிக்கைகள் ஒழிப்பு, விலைவாசி எதிர்ப்பு, கடவுள் கொள்கை, விழாக்கள் குறித்த பார்வை போன்ற சிந்தனைகள் மார்க்சிய அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

“ஜீவபாரதியின் அரசியல் தத்துவச் சிந்தனைகளில் பொதுவுடைமை” என்பது மூன்றாவது இயலாகும். இவ்வியலில் வர்க்கப் போராட்டம் குறித்தும், வர்க்கப்போராட்டத்தின் தலைமை வடிவமான அரசியல் நிலைமை குறித்தும் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. ஜீவபாரதியின் சுதந்திரம் குறித்த சிந்தனைகள், ருஷ்யப் புரட்சி பற்றிய செய்திகள், மார்க்சியத் தத்துவச் சிந்தனைகள், தேர்தல் பற்றிய செய்திகள் போன்றவை குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. பொதுவுடைமைச் சிந்தனைமிக்க தமிழகத்தின் அரசியல் தலைவர்கள், கவிஞர்கள் குறித்த மார்க்சியச் சிந்தனையையும் இவ்வியல் முன்வைக்கிறது.

## இயல் நான்கு

“ஜீவபாரதியின் பெண்ணியப் பதிவுகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்” என்பது நான்காவது இயலாகும். இவ்வியலில் பெண்ணியம் குறித்த அறிஞர்களின் பார்வை, பெண்ணிய வரலாறு, இந்திய அளவிலும் தமிழக அளவிலும் பெண்ணியம் உருவான சூழல், மார்க்சியத்திற்கும் பெண்ணியத்திற்குமான தொடர்பு போன்றவை கூறப்பட்டுள்ளன. பெண்கள் குறித்து கே.ஜீவபாரதி படைத்துள்ள படைப்புகள் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

ஜீவபாரதியின் வேலுநாச்சியார் புதினத்தின் வழியே அவ்வக்காலத்தில் நிலவிய தந்தைவழிச் சமூக அமைப்பு, பெண் திருமண அடக்குமுறை போன்றவை விளக்கப்பட்டுள்ளன. மகளிர் கல்வி, சாதிய மறுப்பு, அரசியல் விழிப்புணர்வு போன்றவையும் இப்புதினத்தின் வாயிலாக ஆராயப்பட்டுள்ளன. ஜீவபாரதி எழுதியுள்ள உரைநடை நூல்களின் வழியாக ஜீவாவின் மனைவி பத்மாவதி அம்மையார், செங்கொடிகாத்த சிகப்பி, அகுஸ்தினா பூசிக், கிளாரா ஜெட்கின், ஜென்னிமார்க்ஸ், குரூப்ஸ்காயா போன்றோரின் பொதுவுடைமை வாழ்வியற் சிந்தனைகள் குறித்து விளக்கப்பட்டுள்ளன. மறக்கப்பட்ட மங்கையர்கள் என்ற நூலின் வழியே வெள்ளித்திருப்பூர் லெட்சுமி அம்மாள், கடலூர் அஞ்சலையம்மாள், வீரப்பெண்மணி கல்பனாதத், டாக்டர்.முத்துலெட்சுமி, காமா அம்மையார் போன்றோரின் பொதுவுடைமைப் பணியையும் இவ்வியல் ஆராய்கிறது.

## இயல் ஐந்து

“ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவுகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்” என்பது ஐந்தாவது இயலாகும். உலக அளவிலும், இந்திய அளவிலும், தமிழக அளவிலுமான பொதுவுடைமைச் சிந்தனையாளர்களையும், புரட்சியாளர்களையும் பற்றி ஜீவபாரதி எழுதியுள்ள வரலாற்றுப் பதிவுகளோடு பொதுவுடைமைக் கூறுகளை இணைத்து இவ்வியல் ஆராய்கிறது. மாயகோவ்ஸ்கி, சாக்ரடீஸ், மாசேதுங், பாப்லோ நெரூடா போன்ற உலகப் படைப்பாளிகளையும், ஹோசிமின், பிடல் காஸ்ட்ரோ, சேகுவேரா, யாசர் அராபத், நெல்சன் மண்டேலா போன்ற உலகத் தலைவர்களையும், ஸ்ரீஸ்ரீ, எஸ்.ஏ.டாங்கே, சரோஜினி நாயுடு போன்ற இந்தியப் படைப்பாளிகளையும், போராட்டங்கள் நடத்திய இந்தியப் பழங்குடி மக்களையும், வானமாமலை, தி.க.சி, சடையப்பன் போன்ற தமிழகப் படைப்பாளிகளையும், மாயாண்டி பாரதி, ராமுத்தேவன், எம்.வி.சுந்தரம், பி.ராமமூர்த்தி, ரங்காராவ், மதனகோபால், எஸ்.எம்.பொன்னையா,

டி.காசிநாதன் போன்ற தமிழகப் புரட்சியாளர்களையும் பற்றிய ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவுகளோடு கூடிய பொதுவுடைமைக் கூறுகள் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் அந்தந்த இயலில் கண்டறிந்தவை தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்குத் துணைநின்ற நூல்கள் துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளன. கே.ஜீவபாரதியின் வாழ்க்கைக் குறிப்புகள், ஆய்வாளர் கண்ட நேர்காணல், ஜீவபாரதியின் நூல்கள் அட்டவணை, நிழற்படங்கள் ஆகியவை பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளன.

# இயல் – 1

## பொதுவுடைமையின் தோற்றமும் வளர்ச்சியும்

பொதுவுடைமை என்னும் சொல் கம்யூனிசம் என்ற ஆங்கிலச் சொல்லுக்கான தமிழாக்கமாகும். பொதுவுடைமைக் கருத்துகள் அதன் மூலவர்களான காரல்மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின், மாவோ, கோசிமின் போன்றோரின் சோசலிசக் கருத்துகளை உள்ளடக்கியதாக உலக அளவில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. பொதுவுடைமை என்பது தத்துவமாகவும், கோட்பாடாகவும், விஞ்ஞானமாகவும் திகழ்கிறது. கருத்து முதல்வாதத்தைப் பின்னுக்குத் தள்ளி, பொருள் முதல்வாதத்தை நிறுவுவதே பொதுவுடைமையின் நோக்கமாகும். சமூக அமைப்புகள் காலந்தோறும் பல படிநிலை வளர்ச்சிகளைச் சந்தித்துள்ளன. சமூக மாற்றத்திற்காகப் பல போராட்டங்கள் நடைபெற்றுள்ளன. பொதுவுடைமைச் சமூகம் மலர உலக அளவிலும், இந்திய அளவிலும், தமிழக அளவிலும் பல தலைவர்கள் பாடுபட்டுள்ளனர். அவ்வகையில் பொதுவுடைமையின் தோற்றத்தையும், வளர்ச்சியையும் கூறி பொதுவுடைமை வளர்ச்சி வரலாற்றில் கே.ஜீவபாரதியின் இடத்தைச் சுட்டிக்காட்டுவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

### பொதுவுடைமையின் தோற்றச்சூழல்

சோசலிசப் புரட்சி 1917ல் ரஷ்யாவில் வெடித்தது என்றாலும் பொதுவுடைமைக் கருத்துகள் சங்க காலத்திலிருந்தே வலியுறுத்தப்பட்டு வந்ததனை தமிழ் இலக்கியங்களில் காண முடிகிறது. ‘‘மனிதநேயக் கருத்துகள் அவ்வப்போது தோன்றி வளர்ந்து வழிகாட்டி வந்துள்ளன. ‘உண்பது நாழி உடுப்பவை இரண்டே, பிறவும் எல்லாம் ஓரொக்குமே’, ‘கொள்வதூம் மிகை கொளாது கொடுப்பதூம் குறைபடாது’, ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’, ‘பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை’ என்னும் விழுமிய கருத்துகள் தமிழ்ச் சமுதாயத்தை வளர்த்து வந்துள்ளன’’[1] என்பர்.

பொதுவுடைமையின் தோற்றத்தை ஆராய்வதற்கு மார்க்சியப் பார்வை அவசியமாகிறது. காரல் மார்க்ஸ், பிரடெரிக் எங்கெல்ஸ் என்ற இருவரின் சிந்தனை ஆராய்ச்சியே பொதுவுடைமையின் மூலாதாரமாகத் திகழ்கிறது. இதனையே மார்க்சியம் என்று ஆய்வுலகம் அழைத்து வருகிறது.

“கம்யூனிஸ்ட் அறிக்கையானது எங்கள் கூட்டுப் படைப்பே என்றாலும், இதன் மையக் கரு மார்க்சுக்கே உரியது என்பதைக் குறிப்பிடுவது என் கடமையாகும் எனக் கருதுகிறேன்”[2] என்ற பிரடெரிக் எங்கெல்ஸ் கருத்து குறிக்கத்தக்கது.

**பொதுவுடைமைத் தத்துவம் ஒரு சமூக விஞ்ஞானம்**

பொதுவுடைமைச் சிந்தனைகள் அடங்கிய மார்க்சியக் கொள்கைகளும், தத்துவங்களும் மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகிய இவ்விருவரின் கண்டுபிடிப்புகளோடு முடிந்துவிடுவதில்லை. காலத்தின் வளர்ச்சிப் போக்கில் லெனின், ஸ்டாலின், மாவோ, கிராம்சி, ரோசாலிக், சம்பர்க், ஹோசிமின், டிமிட்ரோவ், இ.எம்.எஸ் போன்ற பல கம்யூனிசச் சிந்தனையாளர்களின் கருத்துகளும் இதில் அடங்கியுள்ளன.

மார்க்சின் முன்னோடிகளாவும் பலர் இருந்தனர் என்று மார்க்கிய அறிஞர் மாஜினி என்பார் தன்னுடைய “கம்யூனிஸம் – 5000 ஆண்டுகள்” என்ற நூலில் விவாதிக்கின்றார். ‘மார்க்சின் முன்னோடிகள்’ என்று தலைப்பிட்டு அவர் மிக விரிவாகவே ஆராய்கின்றார். மார்க்சின் முன்னோடிகளாக அமோஸ், ஹோசீயா, ஈசையா, ஜெரிமையா, எசிக்கியல், டென்ரோ, ஏசுகிறிஸ்து, கன்பூசியஸ், செயின்ட் அகஸ்டின், சவோன ரோலா, பிளேட்டோ, கவிஞர் வர்ஜில், ஜான் வைகிளிப், ஜான்பால், தாமஸ் மூர் என்றெல்லாம் அறிஞர் மாஜினி விவரித்துவிட்டு, இந்த உலகம் தழுவிய சிந்தனையாளர்களுக்கும், காரல் மார்க்சுக்கும் இடையிலான அடிப்படையான வேறுபாடுகளையும் சுட்டிக் காட்டும் இடம் மிக முக்கியமானது.

“இந்த அறிஞர்களும், மகான்களும் தீர்க்கதரிசிகளும் சமுதாயத்தில் புரையோடி நின்ற பிணியைக் கண்டு வெகுண்டார்களே தவிர மூலகாரணத்தை ஆராய்ந்து அதற்கான உண்மைகளை, பரிகாரத்தைக் காணவில்லை என்ற போதும் சமுதாயத்தைச் சாடுவதே பெரிய காரியம்... அதை ஓரளவுக்கு இந்தப் பெரியோர்கள் செய்தார்கள்... இந்தப் பெரியோர்களை நாம் மார்க்சியத்தின் முன்னோடி என்று சொல்லவேண்டும்”[3] என்று மாஜினி சுட்டிக் காட்டுகின்றார்.

முன்னோடிச் சிந்தனையாளர்கள் பலர் வந்து சென்ற பின்னர் காரல் மார்க்ஸ் 1818–இல் தோன்றுகிறார். ஹெகல் என்பவர் அளித்த ‘தருக்க இயல் மற்றும் வரலாற்றுப் பார்வை, ஆடம் ஸ்மித் என்பாரின் செவ்வியல் பொருளியல் கருத்துகள், ரூசோவின் குடியரசு பற்றிய கருத்துகள் ஆகியவற்றால் ஈர்க்கப்படுகிறார். ‘தத்துவத்தின் வறுமை’ என்ற தனது முதலாவது நூலை 1847–இல் வெளியிட்டார்.

தத்துவம் என்றால் புரியாத புதிர் என்றும், ஓர் இருண்மை என்றும், கடவுள் சம்பந்தப்பட்டது என்றும், காலங்காலமாகப் பரப்பப்பட்டு வந்துள்ளது. ஆனால் தத்துவம் என்பதனைக் கொள்கை, கோட்பாடு, நெறிமுறை, வழி நடத்துதல், துணைநிற்றல் என்ற பொருளில் கையாளலாம்; சூழ்நிலைக்கேற்ப, காலத்திற்கேற்ப, வாழ்வியல் முறைகளுக்கேற்ப மாற்றியமைக்கலாம் என்று மார்க்ஸ் கருதினார். தொடர்ந்து எங்கெல்சுடன் இணைந்து பொதுவுடைமை அறிக்கை என்னும் நூலை மார்க்ஸ் வெளியிட்டார். இந்த அறிக்கையின் அழகு, அமைப்பு, பொருள் ஆழம் ஆகியவற்றில் கவனம் செலுத்திய அறிஞர் சாமிநாத சர்மா, “மானிட சமுதாயத்தின் சரித்திரம் ஒரு தொகுப்பாக வாசகர் கண்முன்னே வந்து நிற்கிறது; அதனுடைய சென்ற காலம் எதிர்காலம் எல்லாம் ஒருங்கே தெரிகிறது”[4] என்பார். தொடர்ந்து சர்மா எழுதும்போது, “இந்த அறிக்கையில் உயிர்ச் சக்தி உள்ளது; அதனைக் கண்டு உலகமே வியப்படைகின்றது”[5] என்றும் குறிப்பிடுகின்றார்.

மார்க்சும் எங்கெல்சும் தங்களுடைய வாழ்க்கை முழுவதையும் சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்துக்கு அர்ப்பணித்தார்கள். அவர்களுடைய தத்துவ நூல்களும், செய்முறை நடவடிக்கையும், பாட்டாளி வர்க்கப் புரட்சிகர இயக்கத்தில் ஒரு புதிய கட்டத்தை உருவாக்கின. அவர்களுடைய சேவை தொழிலாளி வர்க்கத்துக்கு புரட்சி கரத் தத்துவமாக அமைகிறது.

“கம்யூனிசம் கற்பனையல்ல – விஞ்ஞானம். கம்யூனிசம் என்பது ஒரு தனி நபருடைய – அந்த நபர் மேதையாக இருந்தாலும் கூட – கண்டுபிடிப்பு அல்ல. அது மனித சமூக வளர்ச்சியின் தவிர்க்க முடியாத விளைவு என்று மார்க்சும் எங்கெல்சும் தங்களுடைய ஆராய்ச்சி மற்றும் புரட்சிகர நடவடிக்கையின் மூலம் முடிவு செய்தார்கள்”[6] என்று கூறுவர்.

“மார்க்சியம் என்றால் என்ன? கனவுகளுக்குப் பதிலாக அறிவியலையும், கண்ணீருக்குப் பதிலாகப் புரட்சியையும் முன்வைத்த போதனையே மார்க்சியம்”[7] என்பார் இரா.ஜவஹர்.

மார்க்சியம் குறித்து அறிஞர்கள் பலர் பல்வேறு விதமாகக் கருத்தினைத் தெரிவித்திருந்தாலும், மார்க்சியத்தின் மையக் கருத்தை கம்யூனிஸ்டு அறிக்கையின் முன்னுரையில் எங்கெல்ஸ் பின்வருமாறு விளக்குகிறார்.

“மனிதகுல வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களின் வரலாறே; சுரண்டும் வர்க்கங்களுக்கும், சுரண்டப்படும் வர்க்கங்களுக்கும் இடையிலான போராட்டங்களின் வரலாறே ஆகும்”[8] என்று எழுதிய எங்கெல்ஸ் தொடர்ந்து கூறும்போது, “இந்த வர்க்கப் போராட்டங்களின் வரலாறானது பரிணாமங்களின் தொடர் வரிசையாய் அமைந்து, தற்போது வந்தடையப் பெற்றுள்ள கட்டத்தில் சுரண்டப்பட்டும், ஒடுக்கப்பட்டும் வரும் வர்க்கமாகிய பாட்டாளி வர்க்கம், சுரண்டியும், ஒடுக்கியும் வரும் வர்க்கமாகிய முதலாளித்துவ வர்க்கத்தின் ஆதிக்கத்திலிருந்து தனது விடுதலையைப் பெற வேண்டுமாயின், அதே போன்று சமுதாயம் முழுவதையும் எல்லா விதமான சுரண்டலிலிருந்தும், ஒடுக்குமுறையிலிருந்தும், வர்க்கப் பாகுபாடுகளிலிருந்தும் முற்றாகவும், முடிவாகவும் விடுவித்தே ஆக வேண்டும்”[9] என்று கூறுகின்றார். எங்கெல்ஸ் தரும் இந்த விளக்கம் ‘மார்க்சியம்’ என்பது ஒரு ‘போராட்ட முறை’, ‘போராட்ட வரலாறு’ என்று பதிவு செய்வதாகக் கருத இயலும்.

**பொருள் முதல்வாதக் கோட்பாடு**

பொருள் முதல்வாதம் தோன்றுவதற்கு முன்பு ஆன்மிக நெறி வாதமாகக் கருத்து முதல்வாதம் காலூன்றி நின்றுள்ளது. நமக்கெல்லாம் மேலாக ஆன்மா ஒன்று இருப்பதாகவும், அதுவே கடவுள் என்று அழைக்கப்படுவதாகவும், அதுவே இந்த உலகத்தைப் படைத்து, காத்து, அழிப்பதாகவும் பொருள் கொள்ளப்பட்டது. பொருள்களுக்கு உள்ளும், வெளியேயும் உயிர்களிடத்திலும் கலந்து அதன் விருப்பத்திலேயே உலகம் இயக்கப்படுகிறது என்ற வாதமே கருத்து முதல் வாதாமாகத் திகழ்ந்திருக்கிறது.

சிந்தனை, கருத்து, உணர்வு, ஆன்மா, ஆண்டவன் இவைகளே முதன்மையானவை. இவற்றின் அடிப்படையிலேயே இயற்கை, பொருள், வாழ்க்கை, வசதி, புகழ் எல்லாமே அமைகிறது என்பது கருத்து முதல் வாதமாகும்.

பொருள், இயற்கை, பொருளியல் வாழ்க்கை இவைகளே முதன்மையானவை. இவைகளின் அடிப்படையிலேயே சிந்தனை, உணர்வு, கருத்து அமைகிறது என்ற முடிவினைக் கொண்டது பொருள் முதல்வாதமாகும்.

இந்த உலகம் படைக்கப்பப்பட்டதா? இயற்கையானதா? ஏன்ற கேள்வியும், உலக இயக்கம் இயற்கையானதா, கடவுளின் செயல்பாட்டால் இயங்கக் கூடியதா,

உயிர்கள் கடவுளால் படைக்கப்பட்டனவா, இயற்கையால் உருவானவையா, என்ற கேள்வியும் எழுந்த வண்ணம் உள்ளது.

“உலகம் என்பது செயற்கையான ஒருவனால் அதாவது கடவுள் என்ற ஒருவனால் படைக்கப்பட்டது அன்று. அது தானே இருப்பது – இனி என்றும் இருக்கப்போவது — அதற்கு அழிவே கிடையாது. தானாக இயங்குவது. அது மாறிக் கொண்டே இருக்கும் தன்மை உடையது. இதுவே உலகம் பற்றி, உயிர்கள் பற்றிப் பொருள் முதல்வாதிகளின் கருத்துரை ஆகும்”[10]

கடவுளால் உலகம் படைக்கப்பட்டது என்பதனைப் பொருள்முதல்வாதம் திட்டவட்டமாக மறுத்துப் பேசுகிறது. “பொருள் என்பது சடப்பொருளைக் குறிப்பதாகும். இச்சடப்பொருள் என்பது சிருஷ்டிக்கப்பட முடியாதது. அழிக்கப்படவும் முடியாதது. அது என்றென்றும் நிரந்தரமாக மாறிய வண்ணம் உள்ளது. ஆனால் அதன் தனியொரு துகளைக் கூட எவ்விதமான பௌதீக, இரசாயன அல்லது இதர நிகழ்ச்சிப் போக்குகளின் மூலமும், வெறுமையானதாக ஒன்றுமில்லாததாக ஆக்கிவிட முடியாது”[11] என்பர்.

உலக இயக்கச் சரித்திர விதிகளைக் காரண, காரியத்தோடு அறியவும், மனித அறிவின் உந்துதலை அறியவும் பொருள் முதல்வாதத்தைப் பரப்பினர் எனலாம். இதனை உலகாயதம் என்றும் கூறுவர்.

“பொருளைப் படைக்கவோ, அழிக்கவோ முடியாது என்பதால் பொருள் மயமான இப்பிரபஞ்சத்தையும் படைக்கவோ, அழிக்கவோ முடியாது. பொருளுக்கு ஆதி அந்தம் இல்லை. கால வகையிலும், இட வகையிலும் பொருள் எல்லையற்றது. பொருளுக்கு உரித்தான இந்தச் சிறப்பைத்தான் இறைப் பற்றாளர்கள் கடவுளுக்கு உரித்தாக்கிச் சொல்கிறார்கள்”[12] என்ற கருத்தும் இங்கே ஒப்பு நோக்கத்தக்கது.

பொருள் முக்கியமா? கருத்து முக்கியமா என்ற ஆய்வில் பொதுவுடைமை வாதிகள் பொருளையே முன்னிறுத்தி நிறுவுகின்றனர். இருப்பும், மறுப்பும் சேர்ந்தது இயக்கம் என்றார் ஹெகல்.

பொருள் முதல்வாதச் சிந்தனை இரண்டு பிரிவாகப் பகுக்கப்பெறும்.

1. இயங்கியல் பொருள் முதல்வாதம்

2. வரலாற்றுப் பொருள் முதல்வாதம்

இவ்விரண்டையும் தனித்தனி ஆய்விற்கு உட்படுத்தியவர்கள் பொதுவுடைமையாளர்கள் ஆவர்.

சூழல்களில் மனிதன் உருவாகிறான் என்றால் சூழல்களை உருவாக்குவது யார் என்பதே மார்க்ஸ் முன்னிறுத்தும் கேள்வியாகும். எனவே பொருள் முதல்வாதம் இரண்டு கிளையாகப் பிரிகிறது.

**இயங்கியல் பொருள் முதல்வாதம்**

சமூகத்திலும், வரலாற்றிலும் இயங்கும் பொருளை மார்க்ஸ் காண விழைந்தார். அவர்தம் தத்துவத்திற்கு இயங்கியல் பொருள் முதல்வாதம் எனப் பெயரிடப்பட்டது. மனிதர்களின் உழைப்பையும், நடவடிக்கைகளையும் செயல்பாட்டின் வடிவமாகவே அவர் கண்டார். மனிதர்களின் உற்பத்தி நடவடிக்கை என்பது சமூகத்திலும், வரலாற்றிலும் இயங்கும் பொருளாகவே அவரால் கணக்கிடப்பட்டது. உற்பத்தியின் செயல்பாடுகள் இன்றி எந்தச் சமுதாயமும் வாழமுடியாது என்பதனை இயங்கியல் பொருள் முதல்வாதம் பெரிதும் வலியுறுத்துகிறது.

இயங்கியல் என்பதனைப் பரிணாம வளர்ச்சி என்று குறிக்க இயலும். இதனைப் படிப்படியான தன்மையின் இடையீடு என்றும், அமைதியான மெதுவான வளர்ச்சி என்றும் லெனின் குறிப்பிடுகிறார்.

இயக்கமில்லாத உட்பொருள் எங்குமே, எப்பொழுதுமே இருந்ததில்லை இருக்கவும் முடியாது என்பார் எங்கெல்ஸ். மார்க்சிற்கு முந்தைய பல பொருள் முதல்வாதிகள் இயற்கை வாதிகளாகவும், புலனுணர்வு வாதிகளாகவும், எந்திரகதிச் சிந்தனைவாதிகளாகவும் இருந்தனரே ஒழிய இயங்கியலை மிகத் தெளிவாக எடுத்துக் கூறவில்லை. மார்க்சின் முன்னோடியான ஜெர்மானியச் சிந்தனையாளர் ஹெகல் என்பார் மிகத் தீவிரமான கருத்து முதல் வாதியாகத் திகழ்ந்தார் என்றாலும் அவருடன் அழுத்தமான இயங்கியல் சிந்தனை இருந்ததையும் மறுக்க முடியாது. ஹெகல் மற்றும் ஃபியவர்பாக் போன்ற பொருள்முதல்வாதிகளிடம் உள்ள தத்துவங்களை உள்வாங்கிக் கொண்டு சமூகச் சிக்கலோடும், வளமையோடும் ஒப்பிட்டு இயங்கியல் பொருள்முதல்வாத்தை மார்க்ஸ் வெளியிட்டார்.

“இயங்கியலற்ற பொருள்முதல்வாதம் ஒருதலைப்பட்சமானது. மனித வாழ்வையும், வரலாற்றையும் அதனால் விளக்க முடியாது. அவற்றை அது வெறும் சடப்பொருள் நிகழ்வாகக் குறைத்துவிடும்”[13] என்பார் ந.முத்துமோகன். பேசுகின்ற, வாதிடுகின்ற, செயல்படுகின்ற ஒவ்வொரு கருத்துக்கும், கொள்கைக்கும், அறிவியல்

உண்மையோடு கூடிய இயக்கப் பண்புகளை ஆராய்வது இயங்கியல் பொருள் முதல்வாதம் எனப்படும். இயற்கை, சிந்தனை, சமுதாயம் ஆகிய அனைத்தும் அதனதன் கோட்பாடுகளுக்கு உட்பட்டு இயங்குவதும், மாறுவதும் இயங்கியல் பொருள் முதல்வாதம் என்று காணப்பட்டது.

**வரலாற்றுப் பொருள் முதல்வாதம்**

மனிதருக்கும், இயற்கைக்கும் இடையிலான பருப்பொருள் கொண்ட உறவுகளை 'மனித வாழ்வின் அடிப்படை' என்று பொதுவுடைமைச் சித்தாந்தம் வரையறை செய்கிறது. மனித சமூகம் உற்பத்தியில் ஈடுபடுவது அதன் முதல் நிபந்தனை. உற்பத்தி முறையும், உற்பத்தி உறவும் சமூக வாழ்வின் அடிப்படையாகக் கொள்ளப் பெறுகிறது.

வெறும் உற்பத்தி நடவடிக்கைகளுடன் மனித வாழ்வு முடிந்துவிடுவதில்லை. அந்த உற்பத்தி வாழ்வின் தேவைகளுக்காகவும், அதன் உற்பத்தி உதவிகளுக்காகவும், மனிதர்கள் தமக்கிடையே பல கருத்தியல் உறவுகளையும் கொண்டுள்ளனர். இதன் பின்னணியில் மனித சமூக உற்பத்தி வாழ்வை 'அடிப்படை' என்றும், கருத்தியல் வாழ்வை 'மேற்கட்டுமானம்' என்றும் குறிப்பிடுகின்றனர்.

இயற்கையும், சமுதாயமும், சிந்தனையும் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் மாற்றத்திற்கு உட்பட்டன. அதன் அடிப்படையில் எவ்வெக் காலக்கட்டத்தில் உற்பத்தி உறவுகளும், உற்பத்திக் கருவிகளும் மாறுதலுக்கு உட்பட்டன என்பதனை வரலாற்று அடிப்படையில் ஆராய்வதே வரலாற்றுப் பொருள் முதல்வாதம் எனப்படும். இதனைச் சரித்திரவியல் பொருள் முதல்வாதம் என்றும் குறிப்பர்.

பொதுவுடைமைச் சிந்தனை வரலாற்றில் 'வரலாற்றுப் பொருள் முதல்வாதம்' என்ற சொற்றொடர் ஆக்கம் மிக முக்கியமான கருதுகோளாய் அமைகிறது. இது மார்க்சிய–லெனினியத் தத்துவ ஞானத்தின் மிக முக்கியமான உட்பிரிவாய்த் திகழ்கிறது. இதன் வரலாற்று ரீதியான இன்றியமையாமை குறித்து அறிஞர் பெருமக்கள், "வரலாற்றுப் பொருள் முதல்வாதம் சமூகத்தின் தோற்றுவாய்களையும், வளர்ச்சியையும் ஆராய்கிற விஞ்ஞானம் ஆகும்; சமூகம் என்றால் என்ன? அது எப்படி முன்னேறுகிறது? அந்த வளர்ச்சியை நிர்ணயிக்கிற விதிகள் எவை? என்ற வினாக்களுக்கு காரல் மார்க்சும், பிரெடெரிக் எங்கெல்சும் விடை கண்டார்கள். அதுதான் வரலாற்றுப் பொருள் முதல்வாதமாகும்."[14] என்று சுட்டுகின்றனர்.

வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என்ற அடிப்படையில் காரல் மார்க்சும், எங்கெல்சும் சமுதாயத்தை விஞ்ஞானப் பூர்வமாக ஆராய்ந்தனர். சமூகத்தின் தோற்றம் மற்றும் காலப்போக்கிலான வளர்ச்சியில் உழைப்புக்கு ஒரு முக்கியமான இடம் இருக்கிறது என்று உணர்ந்தனர். அந்த உழைப்பின் வளர்ச்சி தான் காலந்தோறும் அமைந்து வந்த சமூகங்கள் என்று சுட்டிக் காட்டினர்.

“காலந்தோறும் நிகழ்ந்த உற்பத்தி சக்திகளுக்கும், உற்பத்தி உறவுகளுக்கும் இடையில் மோதல் நிகழ்ந்து வந்தது என்றும், அதன் காரணமாக, பழைய பொருளாதார உருவாக்கம் அழிக்கப்பட்டு, அதனிடத்தில் புதியது ஒன்று தோன்றியது. இவ்வாறு தான் புதிய புதிய சமூகங்கள் உருவாயின”[15] என்று மார்க்சிய அறிஞர்கள் சுட்டுகின்றனர்.

இவ்வடிப்படையில் ஐந்து சமூகங்களை மார்க்சிய அறிஞர்கள் வகைப்படுத்துகின்றனர்.

1. புராதனப் பொதுவுடைமைச் சமூகம் (அல்லது) பூர்வீகக் கூட்டுவாழ்க்கைச் சமூகம் (Primitive Communism)
2. அடிமை உடைமைச் சமூகம் (Slavic Society)
3. நிலப் பிரபுத்துவச் சமூகம் (Feudalism)
4. முதலாளித்துவச் சமூகம் (Capitalism)
5. விஞ்ஞான சோசலிசச் சமூகம் (அ) பொதுவுடைமைச் சமூகம் (Scientific Socialism)

**புராதனப் பொதுவுடைமைச் சமூகம் (அல்லது) பூர்வீகக் கூட்டு வாழ்க்கைச் சமூகம்**

மலைகளிலும், காடுகளிலும் மனிதர்கள் ஆரம்ப காலத்தில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் முதன்முதலில் கல்லையே கருவியாகப் பயன்படுத்தினர். அவை கூர்மையற்ற கரடுமுரடானவையாக இருந்துள்ளன. பின்னர் தடித்த கழிகளையும், குச்சிகளையும் ஆயுதமாகப் பயன்படுத்தியுள்ளனர். இது மனித குலத்தின் ஆதிகாலச் சமூகப் பொருளாதார அமைப்பாக இருந்துள்ளது.

“புராதனப் பொதுவுடைமைச் சமூகத்தில் உற்பத்திச் சாதனங்கள் சமுதாயத்திற்குச் சொந்தம். கற்கருவிகளும், வில்லும், அம்பும் முக்கிய உற்பத்திச் சாதனங்களாக இருந்தன. உற்பத்திச் சக்திகள் வளர்ச்சி பெறாத காலக் கட்டத்தில் மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்வதும், பொதுவில் உழைப்பதும் இன்றியமையாததாக இருந்தது. கூட்டமாகவும், பொதுவாகவும் இல்லையென்றால் பட்டினிக்கோ, காட்டு விலங்குகளுக்கோ இரையாக நேரிட்டிருக்கும். இந்த அமைப்பில் சுரண்டுபவனும் இல்லை; சுரண்டப்படுபவனும் இல்லை; வர்க்கப் போராட்டமும் இல்லை”[16] என்பார் தியாகு.

இனக்குழுவாக வாழ்ந்த மக்கள் வில்லும், அம்பும் கண்டுபிடித்த பின் அவர்களின் உற்பத்தி வளர்ச்சியை அதிகப்படுத்தியது. புதிய கருவிகளின் வளர்ச்சி அவர்கள் வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. மான், யானை, காண்டாமிருகம் போன்ற விலங்குகளை வேட்டையாட அவர்களால் முடிந்தது.

பிறகு நெருப்பை உருவாக்கி விலங்குகளைச் சமைத்து உண்ணவும் தலைப்பட்டனர். எனவே உடற்கூறு அடிப்படையிலும் அவர்கள் வலிமை பெறத் தொடங்கினர். வேைலகளைத் தங்கள் இனக்குழுவிற்குள் பிரித்துக் கொண்டனர். ஆண்கள் வேட்டையாடும் தொழிலிலும், பெண்கள் குழந்தை வளர்ப்பு, முதியோர் பேணல் போன்ற செயல்களிலும் ஈடுபட்டனர். இக்காலத்தை ஒரு தாய் வழிச் சமூக மரபாகக் கொள்ள இயலும்.

பின்னர் மனிதர்கள் ஆடு, மாடுகளைப் பிடித்துப் பழக்கவும், அவற்றை வளர்க்கவும் முற்பட்டனர். இதன் காரணமாகக் கால்நடைகளின் உணவுக்காக மனிதன் புல்வெளிகளையும், மேய்ச்சல் நிலங்களையும் தேடிச் செல்லும் அவசியம் ஏற்பட்டது. ஒரு பகுதியினர் பழைய தொழிலில் ஈடுபடவும், இன்னொரு பிரிவினர் மேய்ச்சல் நிலங்களைப் பராமரிக்கும் பணியில் ஈடுபடவும் செய்தனர். இதுவே வேலைப் பிரிவினைக்கு வித்திட்டது.

இச்சமூகத்தில் ஆடு, மாடுகளான கால்நடைகளே முதற்செல்வமாக அறியப்பட்டன. அவற்றைக் கொண்டுதான் மற்றவற்றை அளவிட்டனர். புராதனப் பொதுவுடைமைச் சமூகம் வர்க்கப் பாகுபாடு இல்லாமல் சென்று கொண்டிருந்த வேளையில் விவசாயத்துடன் நெசவு, உலோகம், இரும்பு போன்ற இன்னபிற தொழில்களும் நடைமுறைக்கு வந்தன. கற்கருவிகள் மறையத் தொடங்கின.

இதனைத் தொடர்ந்து செல்வங்கள் ஓரிடத்தில் சேரத் தொடங்கியதால் ஏழை, பணக்காரர்கள் என்ற வர்க்கப் பிரிவினை ஏற்பட்டது. தனிச் சொத்துடைமை என்ற

நிலையும் உருவானது. இதற்கு அடுத்து வந்த சமூக அமைப்பில் சொத்துடைமையுடன் வர்க்கச் சமூகமாக உருவெடுக்கும் நிலை தோன்றியது. புராதனச் சமூகத்தின் தனித்தன்மையும், பொதுவுடைமையும் உடையத் தொடங்கியது.

**அடிமை உடைமைச் சமூகம்**

புராதனப் பொதுவுடைமைச் சமூக வீழ்ச்சி அடிமை உடைமைச் சமூகத்தை உருவாக்கியது. இங்கே வாழ்விற்குத் தேவையானதை விட அதிகமான பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டன. எனினும் அனைவருக்கும் பொதுவாகப் பகிர்ந்தளிக்கப்படவில்லை.

கற்கருவிகள் மறைந்து வில், ஈட்டி போன்றவை உருவாயின. இரும்பு கண்டுபிடிக்கப்பட்டு அதை உருக்கும் முறையும் உணரப்பட்டது. இரும்பாலான கோடரியும், கலப்பையின் கொழுமுனையும் இரும்பால் உருவாக்கப்பட்ட போது முன்பை விட அதிகமான பரப்பளவில் விவசாயம் மேற்கொள்ள ஏதுவாக அமைந்தது.

மனித உழைப்பின் அவசியம் கூடுதலானது. முன்பு எதிரிகளைக் கொன்று குவித்தவர்கள் இப்போது அடிமையாக்கி உழைக்க வைத்தனர்.

இக்காலத்தில் சமூகத்தில் அதிரடி மாற்றம் ஏற்பட்டது. ஆண் ஏராளமான கால்நடைகளுக்குச் சொந்தக்காரன் ஆனதால், அந்தக் கால்நடைகளும், அவற்றைக் கொடுத்து வாங்கப்பட்ட அடிமைகளும், அவனுக்கு ஒரு புதிய அங்கீகாரத்தை ஏற்படுத்தியது. குடும்பத்துக்கு வெளியே ஏற்பட்ட மாறுதல் சம உரிமையுடன் விளங்கிய பெண்ணைப் பின்னுக்குத் தள்ளியது. சமத்துவ நிலை பறிபோனது. பெண்ணின் உழைப்பு குடும்பத்திற்குள் குறுகிப்போனது. தாய்வழிக் குடும்பம் மறைந்து தந்தைவழிச் சமூகமாக மாறியது. இக்காலத்தில்தான் மனித வரலாற்றில் இரண்டாவது வேலைப் பிரிவினை ஏற்பட்டது.

“கைத்தொழில்கள் பெருகி வளர்ந்ததால், ஒருவனே உற்பத்தியையும், கைத்தொழிலையும் செய்யமுடியாத நிலை ஏற்பட விவசாயம் செய்வோர் என்றும், கைத்தொழில் செய்வோர் என்றும் பிரிவினை உண்டாயிற்று. விவசாயத்திலிருந்து கைத்தொழில் பிரிந்தது. ஏனைய உலோகங்களுடன் இரும்பும் இப்போது மிகவும் பயன்படுத்தப்பட்டது. கத்தி, கலப்பை, கொழு, கோடரி போன்ற உற்பத்திக் கருவிகளும் வளர்ச்சியடைந்தன”[17] என்பார் கோ.தான்யா.

இச்சமூக அமைப்பில் உழைக்கும் அடிமைகளின் வாழ்வு சொல்லொணாத் துயரத்திலும், சுரண்டும் செல்வந்தர்களின் வாழ்க்கை ஆடம்பர மோகத்திலும் இருந்த முரண்மிக்க சமூகமாகத் திகழ்ந்தது.

சமூகத்தில் கடன்பெற்றவர்கள், கடன் செலுத்த முடியாமல் அவதிப்பட்டனர். கடன் கொடுத்தவருக்கும், பெற்றவருக்கும் உள்ள முரண் அதிகரித்துக் கொண்டே சென்றது. கடன் கொடுக்கும் முறையில் கடுமையான வட்டிமுறை தோன்றியது.

அடிமைச் சமூக அமைப்பில் மேலும் ஒரு கொடுமை நிகழ்ந்தது. புராதனச் சமூக மரபில் அரசு அனைவருக்கும் சமஉரிமை வழங்கியது. இச் சமூக மரபில் தனியுடைமையாளருக்குச் சாதகமாகவும், பண்ணையாளர்களின் அன்பு பாராட்டும் அரசாகவும் திகழ்ந்தது. அரசு அடிமைகளுக்கு எதிராக யுத்தங்கள் நடத்தவும், கொள்ளையடிக்கவும் துணைபோனது.

அடிமைச் சமூக உற்பத்தி உறவில் அடிமையின் உழைப்பு கட்டாயமாக்கப்படடது. ஆடு மாடுகளைப் போல அடிமைகள் நடத்தப்பட்டனர். அடிமைகளின் உழைப்பனைத்தும் அடிமையின் உரிமையாளருக்கே சொந்தமாக்கப்பட்டது.

கலைகள், ஓவியங்கள், விழாக்கள் அனைத்தும் எசமானனின் மகிழ்ச்சிக்காகவே ஏற்படுத்தப்பட்டன. விலங்கினைப்போல் அடிமைகள் வாங்கவும், விற்கவும் பட்டனர். அடிமையோடு சேர்ந்து கொஞ்சம் உழைத்த எசமானர்கள் அடிமைகளின் எண்ணிக்கை அதிகரித்தவுடன் மொத்த உழைப்பையும் கைவிட்டனர்.

அடிமைகளுக்கும், எசமானர்களுக்கும் அவ்வப்போது சண்டைகள் ஏற்பட்டன. அடிமைகளுக்கு உயிரிழப்புகள் ஏற்பட்டன. அடிமைகள் சற்று எழுச்சியடைந்து போராடத் தலைப்பட்டனர். இறுதியில் அடிமைகளின் எழுச்சி, சமூகத்தை ஆட்டம் காண வைத்தது.

சமூகத்தின் உற்பத்திச் சக்தியாய் இருந்த அடிமைகளுக்கு மாற்றாக வேறு உற்பத்திச் சக்திகள் தேவைப்பட்டன. அடிமைச் சங்கிலியிருந்து விடுபட்டவர்களின் எண்ணிக்கை கூடியது.

பெருநிலங்கள் துண்டு நிலங்களாகப் பிரிக்கப்பட்டன. முன்போல் அடிமைகளாக இல்லாமல் பிரித்துக்கொடுக்கப்பட்ட நிலங்களில் உழுது, பயிரிட்டு விளைச்சலைக் கொண்டு பணமாகவோ, விளைபொருளாகவோ நிலம் கொடுத்தவருக்குக் கொடுத்தனர். ஆனாலும் முழுமையான விடுதலை பெற்ற விவசாயிகளாகத் திகழ முடியவில்லை.

நிலம் விற்கப்பட்டால் நிலத்தோடு சேர்த்து விவசாயம் செய்த விவசாயியும் விற்கப்பட்ட நிலை இருந்தது. இதன் தொடர்ச்சியாகவே நில உடைமைச் சமூகம் உருவானது.

**நில உடைமைச் சமூகம்**

நாளுக்கு நாள் பயிர் செய்வதற்கான விவசாயத் தொழில் உயர்வடைந்து வந்தது. உலோகக் கருவிகளால் ஆன உற்பத்திக் கருவிகள் பெருக்கம் அடைந்தன. காடுகள் அழிக்கப்பட்டு விளைநிலங்களாக மாற்றப்பட்டன. ஏற்கனவே அடிமைகளையும், உற்பத்திக் கருவிகளையும் கொண்டிருந்த சிறு உடைமையாளர்கள் கையில் இப்போது புதிய நிலங்கள் சேரலாயின. இதனால் நிலம் ஒரு சொத்தாக மாறி, பெரிய நிலப் பண்ணையாரை நில உடைமையாளரை, நிலப் பிரபுக்களை உண்டாக்கிற்று.

“துண்டு நிலங்களாகப் பிரித்தளித்த போக்கிலிருந்து நிலப் பிரபுத்துவ அமைப்புத் தோற்றம் பெற்றது. இது அடிமைச் சமூகத்தின் வீழ்ச்சியின் போது அதன் உள்ளிருந்து தோன்றிது. அடிமைச் சமூகத்தை நீக்கி, அதனிடத்தில் நிலப்பிரபுத்துவம் நிலைபெற்றது. அனைத்து நாடுகளிலும் அடிமைமுறை முழு வளர்ச்சி பெற்றிடவில்லை. சில நாடுகளில் தந்தை வழி அடிமையுடைமையின் சிற்சில கூறுகளைப் பெற்று செம்மை அடிமைச் சமூகத்தின் வடிவத்தில் முழு வளர்ச்சியை எட்டாமல் நிலப் பிரபுத்துவக் கட்டத்திற்குச் சென்றது. இந்தியா, ரஷ்யா போன்ற நாடுகள் அடிமைச் சமூகத்தின் கூறுகளிலிருந்து நேரடியாக நிலப் பிரபுத்துவத்திற்குச் சென்றது”[18] என்று அ.கா.ஈஸ்வரன் குறிப்பிடுகிறார்.

புதிய உற்பத்திச் சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள தொழிலாளியின் முழுப் பயிற்சியும் தேவைப்பட்டது. உழைப்பாளியின் ஆர்வத்தைத் தூண்டிவிட வேண்டிய அவசியமும் எழுகிறது. அடிமை சொன்னதைச் செய்பவனாகப் பயன்படுத்தப்பட்டான்.

“சமூக அமைப்பில் நிலம் உள்ளிட்ட உற்பத்திச் சாதனங்கள் நிலப்பிரபுவுக்குச் சொந்தம். ஆனால் உற்பத்தியில் ஈடுபடும் உழைப்பாளி, பிரபுவிற்குச் சொந்தம் இல்லை. நிலப் பிரபு பண்ணை அடிமையை வாங்கலாம். விற்கலாம். ஆனால் கொல்வதற்கு உரிமை இல்லை. பிரபுத்துவ நில உரிமைகளோடு கூடவே விவசாயிகளின் சிறு நில உடைமையும் காணப்படுகிறது. சொந்த உற்பத்திக் கருவிகளை வைத்துத் தொழில்புரியும் கைவினைஞர்களும் தலையெடுக்கிறார்கள். சொந்த உழைப்பைச் சார்ந்த தனியார் தொழில்களும் உருவெடுத்தன. அடிமைச்

சமுதாயத்தோடு ஒப்பிடும் பொழுது பிரபுத்துவச் சமுதாயத்தில் உற்பத்திச் சக்திகள் ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளன''[19] என்ற கருத்து கவனிக்கத்தக்கது.

சமுதாய வளர்ச்சிக் கட்டத்தில் நிலப் பிரபுத்துவச் சமுதாயம் அடிமைச் சமுதாயத்தை விட மேலானதாய்த் திகழ்ந்தது. பால்பண்ணை, வேளாண்மைத் தொழில்கள் வளர்ச்சியடைந்தன.

நிலவுடைமைச் சமூகத்தில் பெரும்பகுதி நிலத்தை நிலப்பிரபு வைத்துக் கொள்வான். மிகச்சிறிய நிலத்தை விவசாயிக்கு வழங்குவான். நிலப்பிரபுவின் நிலத்தில் வாரத்திற்குச் சில நாட்கள் கட்டாயமாக வேலை செய்ய வேண்டும். அதற்குப் பலனாக அவனுக்காக ஒதுக்கப்பட்ட நிலத்தில் அவன் வேலை செய்து கொள்ளலாம்.

''நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தில் நில உடைமையாளர், நில உழைப்பாளர் என்ற வர்க்க வேறுபாடு நடைமுறையில் இருக்கும். நிலப்பிரபு, நிலக் கூலி உழைப்பாளர்களைச் சுரண்டுபவராக இருப்பார்''[20] என்ற இதயகீதனின் கூற்றும் நோக்கத்தக்கது.

இத்தகு சமுதாயக் காரணங்களால் சமுதாயத்தின் மிகப்பெரிய அதிகார வர்க்க நிலப்பிரபுக்களே அரசையும், ஆளும் வர்க்கத்தையும் நிர்ணயிக்கும் சக்தியாக விளங்கினர். அரசு என்பது இப்போது முழுக்க முழுக்க நிலப்பிரபுக்களின் தகுதியைக் காப்பாற்றிக் கொள்ளும் பாதுகாப்பு வேலியாகவே, வர்க்க அரசாகவே அமைந்தது. அரசின் அதிகாரமும், கெடுபிடியும் பரந்து விரிகிறது. நிலப் பிரபுத்துவத்தின் உச்சக் கட்ட வளர்ச்சி முதலாளித்துவச் சமுதாயமாக மாறத் தொடங்கியது.

**முதலாளித்துவச் சமூகம்**

நில உடைமைச் சமூகத்தின் வீழ்ச்சி முதலாளித்துவச் சமூக அமைப்பிற்கு அடி கோலியது. வியாபார நோக்கத்தோடு சரக்கு உற்பத்தியும் பெருகியது. உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் சரக்கு விற்பனை பெருகியதால் வருவாய் அதிகரித்தது. இந்த வருவாயுடன் காலனி நாடுகளிலும், வெளிநாடுகளிலும் இருந்து ஏற்றுமதி செய்து கொண்டுவரப்பட்ட மூலதனமும் சேர்ந்து பொருளாதாரக் குவிப்பை ஏற்படுத்திக் கொண்டது. இச்சூழ்நிலையில் முதலாளித்துவச் சமூகம் வளர்ந்து கொண்டே வந்தது.

நிலப்பிரபுத்துவதிலிருந்து முதலாளிவத்துவச் சமுதாய அமைப்பிற்கு மாறியதை 'பூர்ஷ்வா புரட்சி' என்று அழைத்தனர். இப்புரட்சியில் தலைமை இடம் வகித்தது

முதலாளிகள் வர்க்கம் என்றாலும், முதலாளிகளுக்குப் பின்னால் மிகப்பெரிய சக்தியாகத் தொழிலாளர் வர்க்கம் திரண்டிருந்தது.

இதைப்பற்றிப் பிற நாட்டு மார்க்சிய அறிஞர்கள் குறிப்பிடும்போது, ‘‘முதலாளி வர்க்கம் செல்வத்தை உடைமையாக்கிக் கொள்கிறது. அதே சமயம் தொழிலாளி வர்க்கம் சமூகத்திற்குத் தேவையான ஒவ்வொன்றையும் உற்பத்தி செய்கிறது. உலகின் பெரும்பகுதி மக்கள் தொழிலாளர் வர்க்கத்தைச் சேர்ந்தவற்றைச் சொந்தமாக்கிக் கொள்ளலாம். ஆனால் அவர்கள் மூலதனத்தைச் சொந்தமாக்கிக் கொள்வதில்லை. மூலதனம் என்பது உழைப்பைச் சுரண்டி உபரி மதிப்பை உற்பத்தி செய்யும் சொத்து ஆகும்.’’[21] என்று குறிப்பிடுகின்றனர்.

மூலதனத்தை ஒரு வர்க்கப் பிரிவினர் உடைமையாக்கிக் கொள்வது இச்சமூக அமைப்பில் மிகப்பெரிய முரணாக அமைந்தது.

‘‘முதலாளித்துவம் இதுவரையில் அரசியலாதிக்கம் பெற்றிருந்த நிலப்பிரபுத்துவத்தை முறியடித்து அரசைக் கைப்பற்றியது. இதன் பின்னர் அரசு என்பது முதலாளித்துவத்தின் ஆடிப் பாவையாக மாறியது. ஒரு புறம் உற்பத்திக் கருவிகளின் சொந்தக்காரரான முதலாளியாகவும் மறுபுறம் அவர்களே நிலப் பிரபுக்களாகவும் விளங்கினர். இந்தச் சமுதாயத்தின் அதிகார வர்க்கமான முதலாளிகளே அரசை ஆளும் வர்க்கமாயினர்’’[22] என்ற சிந்தனை கருதத்தக்கது.

ஏற்றத் தாழ்வு மிக்க முதலாளித்துவச் சமூக அமைப்பு அடிமைச் சமூகம், நிலப்பிரபுத்துவச் சமூக அமைப்பை விட அசுரத்தன வளர்ச்சி மிக்கதாய்த் திகழ்ந்தது.

முதலாளித்துவத்தின் தனியுடைமைக் கோட்பாடு பொதுவுடைமைக் கோட்பாட்டுக்கு முற்றிலும் எதிராகத் திகழ்ந்தது. சமஉரிமைக் கொள்கைக்கு முரணாக அமைந்தது. மக்கள் வாழ்வியலில் நெருக்கடியைத் தந்தது.

‘‘உழைப்பின் உற்பத்தித் திறன் உயர்வதின் மூலம் இயந்திரங்கள் சமூகச் செல்வத்தை அதிகரிக்கச் செய்கிறது. ஆனால் முதலாளித்துவச் சமூகத்தில் தனிச் சொத்துடைமை நிலவுவதால், கிடைத்திடும் பலன்கள் முழுமையும் முதலாளிகள் தம்முடையதாக்கிக் கொள்கிறார்கள். இதனால் உருவான முரண்பாடு முதலாளித்துவ அமைப்பு நெடுகிலும் தீர்க்கப்படாமல் தொடர்கிறது’’[23] என்பர். நெடுகிலும் என்ற சொற்பிரயோகம் முதலாளித்துவம் பற்றிய சிந்தனையில் கவனிக்கத்தக்கது.

தொழிற்சாலையில் புதிய புதிய இயந்திரங்கள் புகுத்தப்படும் போது தொழிலாளர்களின் பணிகள் சுமையின்றி எளிதாக்கப்பட வேண்டும். ஆனால் முதலாளித்துவ உடைமை அமைப்பு, இதற்கு இடம் கொடுக்காமல் உழைப்பின் கடுமையை உயரத்திற்குக் கொண்டு சென்றதாய் அமைந்தது.

வளர்ச்சியடைந்த முதலாளித்துவச் சமுதாயத்தில் உற்பத்திப் பெருக்கம் அதிகமான காரணத்தாலும், அவற்றை விற்பனை செய்யும் சந்தையின் காரணத்தாலும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொள்ள ஆரம்பித்தன. போட்டிகள் கடுமையாகி யுத்தங்கள் ஏற்படவும், சந்தை தேடல் என்ற முயற்சியில் காலனி ஆதிக்கம் பெருகவும், ஏகாதிபத்திய ஆளுமை ஏற்படவும் காரணமாய் அமைந்தது.

வருமானத்தை நோக்கமாகக் கொண்ட முதலாளி வர்க்கம் தொழிலாளர்களைக் கொண்டு மிகுந்த சரக்குகளை உற்பத்தி செய்தனர். அதற்கான சந்தையின் தேவைகளை அவர்கள் சிந்திக்கவில்லை. இவ்வாறு அதிக உற்பத்தி என்னும் சிக்கலில் முதலாளித்துவச் சமூகம் வீழ ஆரம்பித்தது. தேவைக்கு அதிகமான உற்பத்தித் திறனால் வாணிபம் சுருங்கிச் சந்தைக்கு நெருக்கடி ஏற்பட்டது. இதனால் தொழிற்சாலையில் உற்பத்தியைக் குறைப்பதும், உற்பத்தியை நிறுத்துவதும், தொழிற்சாலையை மூடுவதுமான அபாயகர நிகழ்வுகள் நடந்தன. தொழிலாளர்களுக்கு வேலையிழப்பு ஏற்பட்டது.

ஒரு முனையில் மூலதனத்தின் குவியலும், மறு முனையில் வறுமையின் பெருக்கமும் சவாலாக அமைந்தன. இதனால் தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும் இடையே போராட்டம் வெடித்தது. தேச விடுதலைப் புரட்சியும் தோன்றியது.

‘‘முதலாளித்துவ வர்க்கம் தோன்றிய போதே தொழிலாளர் வர்க்கமும் தோன்றிவிட்டது. முதலாளித்துவ அமைப்பில், அதிக உற்பத்திக்காக, முதலாளிகள் ஆயிரம் தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக் கொண்டு அவர்களது உழைப்பைச் சுரண்டும் நிலையை ஏற்படுத்திக் கொண்ட போதே தொழிலாளர் வர்க்கமும் தோன்றியது. தனியுடைமை வர்க்கமாகிய முதலாளி வர்க்கம் தன்னை ஒழிக்கக் கூடிய தொழிலாளர் வர்க்கத்தையும் தானே தோற்றுவித்தது’’[24] என்பார் நா.வானமாமலை.

‘‘முதலாளி இல்லாமல் தொழிலாளி இல்லை. தொழிலாளி இல்லாமல் முதலாளி இல்லை என்பது உண்மையே. இதன் பொருள் இருவரின் நலமும் ஒன்றே என்பதல்ல. உள்ளுக்குள் இருவருக்குமிடையே போராட்டம் நடைபெற்றுக் கொண்டே

இருக்கிறது. அதன் பெயரே வர்க்கப் போராட்டம்''[25] என்று குறிக்கப்பெறுகிறது என்பார் அருணன்.

''முதலாளித்துவம் என்ற சுரண்டல் அமைப்பின் உடன்பிறந்த இயல்பே கூலியை எப்போதும் எங்கேயும் மிகக் குறைவாக வைத்திருக்க முயலும் எஜமானர்களின் சக்தியை அங்கீகரிப்பது மட்டுமல்ல. அதற்கு உடந்தையாகச் செயல்படுவதும்தான். அதற்காக வேலையற்ற ஒரு பெரும்படை எப்போதும் இருக்குமாறு பார்த்துக் கொள்வதும் முதலாளித்துவத்தின் மற்றொரு இயல்பு''[26] என்று என்.எம்.சுந்தரம் குறிப்பிடுவார்.

இத்தகைய முதலாளித்துவத்தின் உச்சக்கட்டத்தில் வர்க்க முரண்பாடுகள் பூதாகர வளர்ச்சியடைந்தன. இச்சூழ்நிலையில் தொழிலாளி வர்க்கம் ஒன்று சேரும் நிலை ஏற்பட்டது. வர்க்கமற்ற சோசலிச, பொதுவுடைமைச் சமூகத்தை உருவாக்கும் அவசியம் ஏற்பட்டது.

முரண்பாடுகளைக் களைவதற்கும், சோசலிச சமுதாயத்தை அமைப்பதற்கும், சமுதாய மாற்றத்திற்கும், போராட்டத்தை ஊக்குவிப்பதற்கும், பலம் வாய்ந்த தொழிலாளி வர்க்கத் தோழமை உணர்வுக்கும் மார்க்சியம் என்று சொல்லப்படும் பொதுவுடைமைச் சித்தாந்தமே வழிகாட்டுகிறது.

ஏழை — பணக்காரர், முதலாளி — தொழிலாளி, வேறுபாடுகளைக் களைந்து எல்லோரும் சமம் என்ற நிலையை உருவாக்குவதே சோசலிசம் அல்லது பொதுவுடைமை என்று சொல்லப் பெறுகிறது. இங்கும் ஏற்றத் தாழ்வுகளும், வேறுபாடுகளும் குறைவாக இருக்கும். சக்திக்கேற்ற உழைப்பு, உழைப்புக்கேற்ற ஊதியம் என்பது பொதுவுடைமைக் கோட்பாடாக வரையறுக்கப்படுகிறது.

''சோசலிச அரசு அதற்கு முன்பிருந்த எல்லாவகை அரசுகளினின்றும் தன்மையில் மாறுபட்ட அரசாகும். இவ்வரசில் அரசியல் அதிகாரம் தொழிலாளி வர்க்கத்தின் கையில் இருக்கும்.''[27] என்பார் நா.வானமாமலை.

''இந்தச் சமூக அமைப்பில் உற்பத்திச் சாதனங்கள் சமுதாயத்திற்குச் சொந்தம். ஆலைகள் தொழிலாளர்களுக்கும், நிலங்கள் விவசாயிகளுக்கும் கூட்டு முறையில் சொந்தம் என்ற நிலையிலிருந்து தொடங்கி, உற்பத்திச் சாதனங்கள் அனைத்தும் சமுதாயம் முழுவதற்கும் சொந்தம் என்ற நிலையை நோக்கி வளர்ச்சி அடைகிறது. உற்பத்திப் பண்டங்கள் அவரவரின் உழைப்புக்கேற்பப் பகிர்ந்தளிக்கப்படுகின்றன.

உழைப்பதற்குச் சக்தியுள்ள ஒவ்வொருவரும் உழைத்து வாழ்ந்தாக வேண்டும்''[28] என்ற தியாகுவின் கருத்தும் இங்கே ஒப்புநோக்கத்தக்கது.

ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தை அடக்கி, ஒடுக்கியாண்ட அரசாங்கத்தையே கேள்வி கேட்கும் புதிய சமுதாயமாகச் சோசலிசம் படைக்கப்பட்டது. சோசலிச அரசு என்பது பாட்டாளி வர்க்க அரசாக அமையும். வர்க்கமற்ற சமுதாய அமைப்பு என்பது உயர்ந்த பொதுவுடைமைச் சமுதாய அமைப்பாகும். சுரண்டுவோர் – சுரண்டப்படுவோர், முதலாளி – தொழிலாளி பேதமின்றி மக்களின் கூட்டமைப்பாக இச்சமுதாயம் காலத்தின் தேவைக்கேற்பப் படைக்கப்படுகிறது. இது பொதுவுடைமைச் சிந்தனை மிக்க மார்க்சியவாதிகளின் நீண்ட நாள் கனவாகும்.

‘‘தமக்கென்று சொந்தமாக உற்பத்திச் சாதனங்களைப் பெற்றிராதவர்களும், வாழ்க்கையை நடத்துவதற்காகத் தமது உழைப்புச் சக்தியை விலைபேசி விற்க வேண்டிய நிலைமைக்குத் தாழ்த்தப்பட்டிருப்பவர்களுமான நவீன காலத்துக் கூலி உழைப்பாளர்களின் வர்க்கம்''[29] என்று பாட்டாளி வர்க்கம் சொல்லப்படுகிறது.

**சோசலிசச் சமூகம்**

இந்தியாவில் இன்னும் பலகோடிப் பேர் இரவு உணவின்றிப் படுக்கைக்குச் செல்கின்றனர். பல பேர் இன்னும் வறுமைக் கோட்டின் கீழ் வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர். இச்சூழ்நிலை, முதலாளித்துவச் சமுதாயத்திற்கு ஏற்பட்ட நெருக்கடியாகும். இந்த நெருக்கடி முற்றுகிற போதுதான் சோசலிசச் சமுதாயம் உருவாகிறது.

‘‘சோசலிசப் புரட்சி என்பது ஒரே ஒரு தனிச்செயல் அல்ல. ஒரு முனையிலான ஒரே ஒரு போரும் அல்ல. கூர்மையான வர்க்கச் சச்சரவுகள் கொண்ட ஒரு சகாப்தம் அது. எல்லா முனைகளிலும் அதாவது பொருளாதார, அரசியல் பிரச்சினைகள் அனைத்திலும் நடக்கும் தொடர்ச்சியான நீண்ட போராட்டங்களைக் கொண்டது. அது, பூர்ஷ்வா உடைமைகள் பறிமுதல் செய்யப்படுவதில் தான் அப்போர்கள் முடிவுறும்''[30] என்பார் லெனின்.

சமுதாயத்தில் பெரும் வலிமை வாய்ந்த உழைப்பாளி வர்க்கம் சமுதாய மாற்றத்திற்கான தமது போராட்டத்தை மூன்று நிலைகளில் போராட வேண்டுமென பொதுவுடைமை சார்ந்த மார்க்சியம் முன் வைக்கிறது.

1. பொருளாதாரப் போராட்டம்

2. அரசியல் போராட்டம்

3. கருத்துப் போராட்டம் அல்லது தத்துவப் போராட்டம்

“இம்மூன்று போராட்டங்களும் தனித்தனியானவை அல்ல; இம்மூன்றுக்கும் இடையே உறுதியான, இயல்பான தொடர்பு இருக்க வேண்டும் என்பார் எங்கெல்ஸ்”[31] என்ற கருத்து கவனத்தில் கொள்ளத்தக்கது.

**பொருளாதாரப் போராட்டம்**

முதலாளித்துவச் சமுதாயத்தின் பொருளாதார இயக்க விதியை அக்குவேறு ஆணிவேராகப் பிரித்துத் தந்தது காரல் மார்க்சின் மூலதனமே. மூலதனத்தின் முழுமையான நோக்கம் முதலாளித்துவத்தின் அட்டுழியங்களையும், அவர்களின் பொருளாதாரக் கோட்பாட்டின் அநியாயங்களையும் தோலுரித்துக் காட்டுவதேயாகும்.

“சந்தையில் துணி போதுமான அளவுக்கு விற்பனையாகாமல் தேங்கினால், துணி உற்பத்தியைத் தொடர்ந்து செய்வது பாதிக்கப்படும். இதனால் தொழிலாளர்கள் வேலை இழக்கிறார்கள். தொழிலாளர்களுக்குத் துணி தேவைதான். ஆனால் அவர்களுக்கு வருமானம் இல்லை. ஏன் வருமானம் இல்லையென்றால் வேலை கிடைக்கவில்லை. ஏன் வேலை கிடைக்கவில்லையென்றால் அவர்களால் தொடர்ந்து உற்பத்தியில் ஈடுபட வாய்ப்பில்லை. இது ஏனென்றால் ஏற்கனவே அளவுக்கு அதிகமாக உற்பத்தியாகிவிட்டது. அதனால் தொழிலாளி மட்டுமல்ல, தொழிற்சாலைக்குக் கச்சாப் பொருளை விளைவிக்கும் விவசாயிகளும் பாதிக்கப்படுகிறார்கள். இந்த முரண்பாடு முதலாளித்துவத்தின் தவிர்க்க முடியாத தன்மை ஆகும் என்பார் காரல் மார்க்ஸ்”[32] என்று குறிப்பிடும் இரா.ஜவஹரின் கருத்து எண்ணிப் பார்க்கத்தக்கது.

உபரி மதிப்பே மூலதனத்தைக் குவிய வைக்கிறது. மனித உழைப்பில் சரக்கின் மதிப்பு நிர்ணயம் செய்யப்படுகிறது. தொழிலாளி வேலை செய்யும் எட்டு மணிநேரத்தில் நான்கு மணிநேரமே அவசியமான உழைப்பு எனக் கூறப்படுகிறது. மீதி நான்கு மணிநேரம் கூடுதல் உழைப்பாகக் கணக்கிடப்படுகிறது. இதைத்தான் உபரி என்றழைக்கின்றனர். இந்த உபரியே முதலாளிக்கு மிகுதியான வருமானத்தைத் தேடித் தருகிறது.

“பொருளாதாரப் போராட்டங்களில்தான் தொழிலாளி வர்க்கம் அதன் தோற்றக் காலத்திலிருந்து ஈடுபட்டு வந்துள்ளது. தற்காலத்தில் வேலைநிறுத்தப் போராட்டங்கள் நடைபெறாத தொழிலே கிடையாது. உலக ரீதியில் வேலை நிறுத்தப் போராட்டங்கள் பரவலான அளவில் நடைபெறுகின்றன. தொழிலாளி வர்க்க நலன்களையும், ஒற்றுமையையும் பொருளாதாரப் போராட்டங்கள் பாதுகாக்க உதவுகின்றன.”[33] என்ற சிந்தனை கவனிக்கத்தக்கது. பொருளாதார ஆதிக்கமாகிய தனியுடைமைச் சுரண்டலை எதிர்க்கும் பொருளாதாரப் போராட்டமே சமுதாயத்தின் உண்மையான விடுதலைப் போராட்டமாகும்.

பொருளாதார ஆதிக்கத்தினின்று விடுபட வேண்டும் என்று அறிவுறுத்துவதோடு மட்டுமின்றி அதற்கான விதிமுறைகளையும் பொதுவுடைமைக் கோட்பாடு வலியுறுத்திச் சொல்கிறது.

**அரசியல் போராட்டம்**

முதலாளி வர்க்கத்தின் அதிகாரம், ஆட்சி, மக்கள் விரோதக் கொள்கை ஆகியவற்றை எதிர்த்துச் சனநாயக உரிமை கோரிச் சுரண்டலை ஒழிப்பதற்குப் போராடும் போராட்டமே அரசியல் போராட்டம் என்பதாகும்.

“அரசு என்பது சமுதாயத்திற்கும் மேலாக நின்று கொண்டிருக்கும் ஒரு சிறப்பான அடக்குமுறைச் சக்தியாகும். அது நாளும் தன்னை அந்தச் சமுதாயத்திலிருந்து அன்னியப்படுத்திக் கொண்டிருக்கிறது”[34] என்பார் ஆலன் உட்ஸ்.

பொருளாதாரப் போராட்டம் நிகழும் போது ஆதிக்கக் காரர்களின் இயக்கத்தில் இருக்கும் அரசும், அதிகாரமும், காவல்துறை, இராணுவம் போன்ற அடக்குமுறை நிறுவனங்களும் பொருளாதாரப் போராட்டத்தை அழித்திட, பல வழிகளில் முனையும்.

இச்சூழ்நிலையில் உழைப்பாளி வர்க்கம் அரசியலை எதிர்க்க வேண்டிய நிலைக்கு மாறுகிறது. தனக்கென்று ஒரு அரசியல் கட்சியை உருவாக்கும் நிலைக்கு வருகிறது. அறிவியல் அடிப்படையில் சோசலிச மையமாய்ப் பொதுவுடைமைச் சித்தாந்தத்தை வலியுறுத்த வேண்டியுள்ளது.

புனித வாழ்க்கையை மதித்தும், உழைப்பினைப் போற்றியும், இனிய வாழ்வு அனைவருக்கும் அமையும் சமுதாயத்தை மலரச் செய்யவும் தொழிலாளத் தோழர்களுக்காகவும், பாட்டாளி வர்க்கத்திற்காகவும் ஓர் இயக்கம் ஏற்படுத்தப்பட்டது.

அவ்வியக்கமே பொதுவுடைமைக் கட்சி (Communist Party) என்றழைக்கப்பட்டது.

**கருத்துப் போராட்டம் அல்லது தத்துவப் போராட்டம்**

பொருளாதார, அரசியல் மாற்றங்கள் உருவாக கலை, இலக்கியம், பண்பாடு, தத்துவம் உள்ளிட்ட கருத்துருவாக்கம் தேவைப்பட்டது. எதிர்வினை கொண்ட கருத்துப் போராட்டத்தைத் தத்துவப் போராட்டம் என்றும் அழைத்தனர்.

சுரண்டும் வர்க்கத்தின் நலனை மேம்படுத்தும் பழமைக் கருத்துகளை அழிக்கவும், தொழிலாள வர்க்கத்தின் பொருளாதார, அரசியல் போராட்டத்திற்கு மக்களை ஒன்று திரட்டவும் கலை, இலக்கியம் பொதுவுடைமை நோக்கில் படைத்துக் கருத்துப் போராட்டம் நடத்தப்பெற்றது.

“தொழிலாளி வர்க்கம் உள்பட மக்கள் மனத்தில் ஆதிக்கம் செலுத்துவது முதலாளித்துவக் கருத்துக்களும், கருத்தமைப்புகளுமாகும். அவற்றை எதிர்த்து சோஷலிஸ்டு கருத்தமைப்பைத் தொழிலாளி வர்க்கத்தின் மனத்தில் புகுத்துவதும், மார்க்சியச் சிந்தனையை அவர்கள் மனத்தில் வளர்ப்பதும், கொள்கைப் போராட்டம் அல்லது தத்துவார்த்தப் போராட்டம் எனப்படும்”[35] என்ற விளக்கம் எண்ணிப் பார்க்கத்தக்கது.

“கலையானது மக்களுக்கு உரியதாகும். உழைப்பாளி மக்களிடையே அதன் வேர்கள் ஆழப் பதிந்திருக்க வேண்டும். அது அவர்களுக்குப் புரியக் கூடியதாய் இருக்க வேண்டும். அவர்களது நேசத்துக்கு உரியதாய் இருக்க வேண்டும். அது அவர்களுடைய சிந்தனையையும், சித்தத்தையும் ஒன்றிணைத்திட வேண்டும். உயர்த்திட வேண்டும்”[36] என்பர்.

இத்தகைய புதிய அறிவியல் பார்வை கொண்ட கருத்துப் போராட்டத்தினால்தான் வர்க்க முரண்பாடுகளை ஒழிக்கவும், பெண்களுக்கு ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகளைக் களையவும், மொத்தத்தில் சமுதாயத்தில் மாற்றத்தை ஏற்படுத்தவும், பாட்டாளி வர்க்கப் பொதுவுடைமைச் சமுதாயத்தைப் பூக்கச் செய்யவும் முடியும்.

**உலகளாவிய பொதுவுடைமைச் சிந்தனை**

பழைய சமுதாயம் விட்டுச் சென்ற செங்கற் கல்லைக் கொண்டு புதிய சமுதாயத்தைப் படைக்கத் தொடங்கியுள்ளோம் என்று லெனின் அறைகூவல் விடுத்தார். எனவே சோசலிசச் சித்தாந்தமாகிய பொதுவுடைமைக் கூறு என்பது மனிதநேயக் கருத்துகள் அடங்கிய சமுதாய மாற்றம் குறித்த புதிய வழிமுறை எனக் கொள்ள இயலும்.

“ரஷ்யப் புரட்சி பற்றி நூல் எழுதிய பிரிட்டிஷ் வரலாற்றாசிரியர் இ.எச். கார் ஸ்டாலின் தவறுகளைச் சுட்டிக் காட்டியபோதும், எவை எவ்வாறான தவறுகளாக இருப்பினும் சோவியத் புரட்சி செய்த உதவி மிக உயர்ந்தது. சிறப்பு மிக்கது. ஏனெனில் வளராத பின் தங்கிய நாடுகள் இயல்பாக சோவியத் தலைமையை ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. காலனி மக்களின் விழிப்புணர்ச்சிக்கு இதுவே உதவி செய்தது என்று குறிப்பிடுகிறார்.”[37]

“ருஷ்யாவில் சோசலிஸ்டு கட்சியர் ஏறக்குறைய தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றிவிடக் கூடுமென்று தோன்றுகிறது. சோசலிஸ்டுக் கட்சி என்பதைத் தமிழில் சமத்துவக் கட்சி என்று சொல்லலாம். அதுகூடச் சரியான மொழிபெயர்ப்பாகாது. சொத்து விபரம் செய்திருப்பதில் சிலர் செல்வரென்றும், பலர் ஏழைகளென்றும் ஏற்பட்டிருப்பதை மாற்றி உலகத்திலுள்ள சொத்தை, அதாவது பூமியை உலகத்து சனங்களுக்குச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்றும், தொழில் விசயத்தில் இப்போது போட்டிமுறை இருப்பதை மாற்றிக் கூடி உழைக்கும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வர வேண்டுமென்பதும் மேற்படிக் கட்சியாருடைய கோட்பாடு. ஆதலால் இந்தக் கட்சிக்கு ஐக்கியக் கட்சி என்று பெயர் சொல்லுவது பொருந்தும் என்று தோன்றுகிறது”[38] என்ற கருத்தும் இங்கே ஒப்புநோக்கத்தக்கது.

சோவியத் ரஷ்யாவின் ஆட்சியிலிருந்த கெரன்ஸ்கியின் அரசாங்கம் தூக்கி எறியப்பட்டு லெனின் தலைமையில் ஆட்சி அமைக்கப்பட்ட செய்தி உலகெங்கும் பரவியது. எங்கு நோக்கினும் முற்போக்குச் சிந்தனை காலூன்றத் தொடங்கியது. பல்வேறு நாடுகளிலும் பொதுவுடைமைக் கோட்பாடு வலிமை பெற்றது.

**இந்தியாவில் பொதுவுடைமைப் புரட்சி**

பொதுவுடைமைச் சிந்தனைக்கான களமாகச் சோவியத் புரட்சிக்கு முன்னரே இந்தியா தயாராகி விட்டதை “ரஷ்யப் புரட்சிக்கு முன்னரே இந்தியா கொதித்துக்

கொண்டு தானிருந்தது''[39] என்று மூத்த கம்யூனிஸ்டு தலைவர் ஹரிகிசன் சிங் சுர்ஜித் சொல்வது நோக்கத்தக்கது. இதற்கு அரணாக இம்மண்ணில் நடந்த விவசாயிகள், ஆதிவாசிகள், தொழிலாளர்களின் போராட்டங்கள் அமைகின்றன.

19 ஆம் நூற்றாண்டில் நடந்த விவசாயிகளின் போராட்டங்கள் பற்றி விரிவான சான்றுகள் இல்லையெனினும் கிடைத்த பழைய ஆவணச் சுவடிகளிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் விவசாயிகள் ரத்தம் சிந்தி நடத்திய எழுபத்தியேழு போராட்டங்களை வரலாற்று ஆசிரியர்கள் தொகுத்துள்ளனர்.

''விவசாயிகளின் போராட்டங்கள் பிரிட்டிஷ் ஆட்சியை மட்டும் எதிர்த்து நடக்கவில்லை. ஜமீன்தார்கள், லேவாதேவிக்காரர்கள், வியாபரிகள், ஐரோப்பியர்கள், அரசு அதிகாரிகள் ஆகிய ஐந்து எதிரிகளை எதிர்த்துப் போராட்டங்கள் நடைபெற்றன''[40] என்ற செய்தியும் சிந்திக்கத்தக்கது.

1855–இல் நடந்த சாந்தாப் விவசாயிகள் போராட்டம் 1866 — 68 ஆம் ஆண்டுகளில் அவுரி பயிரிட மறுத்து பீகாரில் விவசாயிகள் நடத்திய போராட்டம், நிலச்சுவான்தார்களின் குத்தகைக் கொள்கையை எதிர்த்து 1872ல் வங்காளத்தில் நடந்த போராட்டம், கேரளாவில் நடந்த மாப்ளா விவசாயிகளின் போராட்டம் போன்றவை 19ஆம் நூற்றாண்டில் விவசாயிகள் நடத்திய போராட்டங்களாகும்.

விவசாயிகளைப் போலவே ஆதிவாசிகளும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகப் பல போராட்டங்களை நடத்தியுள்ளனர்.

சாந்தாப் விவசாயிகள் அடிப்படையில் ஆதிவாசிகளாகவே இருந்துள்ளனர். 1820ல் கோல் ஆதிவாசிகளும், 1879ல் ரம்பா ஆதிவாசிகளும், 1895ல் முண்டா ஆதிவாசிகளும் நிலம் சார்ந்த போராட்டங்களை நடத்தியதாக வரலாற்றில் குறிக்கப் பெறுகின்றன.

1850 ஐத் தொடர்ந்து இந்தியாவில் ஆலைத் தொழிலாளி வர்க்கம் உருவாகின. இந்தியாவில் முதல் துணி ஆலை 1853ல் பம்பாயிலும் முதல் சணல் ஆலை 1855ல் வங்காளத்திலும் அமைக்கப்பட்டன.

''இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவில் 206 பஞ்சாலைகளும், 36 சணல் ஆலைகளும் தோன்றிவிட்டன. இவற்றில் வேலை பார்த்த தொழிலாளிகளின் எண்ணிக்கை மூன்று லட்சத்திற்கும் மேல் ஆகும். இதே காலக்கட்டத்தில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் ஒரு லட்சம் தொழிலாளிகள் பணிபுரிந்தனர். தொழிற்சாலைகளின்

ஒரே தாரக மந்திரம் ‘இலாபம்’. தொழிலாளிகள் கசக்கிப் பிழியப்பட்டனர். வேலைநேரம் 15, 16 மணிவரை இருந்தது. பம்பாய் ஆலைகளில் 18 மணி நேரம் கூட வேலை பார்த்தனர். ஒடுக்கப்படுவோர் அமைப்புகளைத் தேடுவது இயல்பு. தொழிற்சங்கங்கள் உருவாகின. தொழிற்சங்கங்கள் அடிப்படை வசதிகளுக்கேற்பப் போராட்டத்தில் இறங்கின”[41] என்பார் ச.மாடசாமி.

இவ்வாறு ஆதிவாசிகள், விவசாயிகள், தொழிலாளிகள் போன்ற எளிய மக்களின் போராட்டங்களும், தியாகங்களும் பொதுவுடைமை இயக்கம் இந்தியாவில் காலூன்றக் காரணமாய் அமைந்தன.

“பொதுவுடைமை இயக்கம் இந்தியாவில் அரும்புவதற்கு முன்பே இந்திய தேசியக் காங்கிரசின் தோற்றம் (1885), வங்காளப் பிரிவினை (1905), தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்தியடிகளின் இந்திய வருகை (1915), ஜாலியன் வாலாபாக் படுகொலை (1919), ஒத்துழையாமை இயக்கம் (1920) போன்ற முக்கியமான நிகழ்வுகள் நடைபெற்று விட்டன. சோவியத் புரட்சி மிகப்பெரிய நம்பிக்கையூட்டி, விடுதலை அனலைப் பெருகச் செய்தது. 1919 – 20 ஆம் ஆண்டுகளில் கிலாபத், ஒத்துழையாமை இயக்கங்களின் கூட்டால் தேசிய விடுதலை எழுச்சி உச்சத்தை எட்டியிருந்தது. சோவியத்தில் இருந்து வந்த சோசலிசக் கருத்துகள் போராளிகளுக்கும் புதிய ஆற்றலை அளித்தன”[42] என்ற கருத்து ஆராயற்பாலது.

இந்தியாவில் கனன்று கொண்டிருந்த விடுதலைப் போராட்டத்திற்கு சோசலிசக் கொள்கை தாங்கிய சோவியத் புரட்சி புது மெருகூட்டியது.

பொதுவுடைமைச் சிந்தனை வளர்ச்சிக்குக் கம்யூனிஸ்டு கட்சிகளின் பங்களிப்பு விரிவான களமாய் அமைகிறது. 1920–இல் அக்டோபர் 17–இல் ரஷ்யாவில் உள்ள தாஷ்கண்ட் நகரில் கம்யூனிஸ்டு கட்சி உருவானதென்றும், 1925–இல் டிசம்பர்த் திங்களில் கான்பூர் காங்கிரஸ் மாநாட்டையொட்டி சத்யபக்தா என்பவரின் முயற்சியில் தமிழ்நாட்டைச் சார்ந்த சிங்காரவேலர் தலைமையில் கம்யூனிஸ்டு உருவானதென்றும் இரு வேறுபட்ட கருத்து நிலவி வருகிறது.

பெஷாவர், கான்பூர், மீரட் என்ற மூன்று சதி வழக்குகளும், கம்யூனிஸ்டு கட்சியைத் திரும்பிப் பார்க்க வைத்தன. 1929–இல் கைதான கம்யூனிஸ்டுகள் 1934–இல் தான் விடுதலை ஆயினர். அதற்குப் பிறகே இந்தியக் கம்யூனிஸ்டிற்கு உலக கம்யூனிஸ்ட் இயக்கம் உரிய அங்கீகாரத்தை வழங்கியிருக்கிறது.

“இந்தியாவில் பொதுவுடைமை இயக்கம் திட்டமான ஸ்தாபன வடிவம் பெற்றிராத அக்காலத்தில் காங்கிரஸ், காங்கிரஸ் சோசலிஸ்ட், சுயராஜ்யக் கட்சி என்று எல்லாக் கட்சிகளிலும் பொதுவுடைமை நேயர்கள் நிரம்பியிருந்தனர். நேரு தம் மகளுக்கு உலக வரலாறு பற்றி எழுதிய கடிதங்கள் (Glimpses of World History *1934*) மார்க்சிய நோக்கில் அமைந்திருந்தன. அரசியல் கட்சிகளுக்கு வெளியே இருந்த இரவீந்திரநாத் தாகூர் எழுதிய ‘ரஷ்யாவில் இருந்து கடிதங்கள்’ (*1930*) என்னும் நூல் பார்வையாளர்களாக ஒதுங்கியிருந்த பலரைக் குறிப்பாக எழுத்தாளர்களைப் பொதுவுடைமைச் சிந்தனைகளின் பால் ஈர்த்தது”[43] என்பர்.

**தமிழ்நாட்டில் பொதுவுடைமை இயக்கச் சிந்தனைகள்**

இந்திய நாட்டின் ஒரு மாநிலமான தமிழ்நாட்டிலும், பொதுவுடைமை இயக்கம் திட்டமிட்ட அமைப்பாகக் காலூன்றி வளர்ந்தது. தமிழ்நாட்டின் தேசியக் கவிஞர் மகாகவி பாரதி,

> “முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
>
> முழுமைக்கும் பொதுவுடைமை
>
> ஒப்பிலாத சமூகம் உலகத்துக்கொரு புதுமை”[44]

என்று புதிய இலக்கணம் படைத்துப் பொதுவுடைமை இயக்க வளர்ச்சிக்கு வித்திட்டார்.

**சிங்காரவேலர்**

தமிழகத்தில் பொதுவுடைமைக் கருத்துகளை மக்களிடம் பரப்பியதில் சிங்காரவேலருக்குப் பெரும் பங்குண்டு. *1860*ல் மீனவக் குடும்பத்தில் சென்னையில் பிறந்த இவர் சட்டப்படிப்புப் பயின்று வழக்கறிஞராகப் பணிபுரிந்தார். வ.உ.சி., பாரதியார் போன்றோருடன் நெருங்கிய தொடர்புடையவராய்த் திகழ்ந்த இவர் தீவிர காங்கிரஸ்காரராகத் திகழ்ந்தார்.

*1919*ல் நடைபெற்ற ஜாலியன் வாலாபாக் படுகொலையைக் கண்டித்துத் தம் வழக்கறிஞர் பணியைத் துறந்தார். *1917*ல் நடைபெற்ற ரஷ்யப் புரட்சிக்குப் பின்னர் மார்க்சியத் தத்துவமே உலகிற்கு வழிகாட்ட முடியும் என நம்பினார். கம்யூனிசக் குழுவின் உறுப்பினரான எம்.என்.ராய் அவர்களுடன் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக *1922*ஆம் ஆண்டு முதல் பொதுவுடைமை இயக்கத்தில் தீவிரமாகப் பணியாற்றினார்.

பல்வேறு தொழிற்சங்கங்களில் உரைநிகழ்த்திப் பொதுவுடைமைக் கொள்கையைப் பறைசாற்றினார்.

1925ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் 26, 27–ஆம் நாள்களில் கான்பூரில் நடைபெற்ற இந்தியக் கம்யூனிஸ்டுகளின் முதல் வருடாந்திர மாநாட்டிற்குச் சிங்காரவேலர் தலைமை வகித்தார். இதில் உரையாற்றிய சிங்காரவேலர் “அடுத்து வரும் காலத்தில் எத்தகைய ஆட்சி, தன்னாட்சி அரசை நாம் அடைந்தாலும் அது இச்சமுதாயத்தில் ஆலைத் தொழிலாளி, விவசாயத் தொழிலாளி ஆகியோர் மனிதராக வாழ்வதற்கான உரிமையை அங்கீகரிக்க வேண்டும்”[45] என்று வலியுறுத்தினார்.

கான்பூரில் பேசிய சொற்பொழிவில் பொதுவுடைமை என்ற சொல்லுக்கே பொருள் பொதிந்த தத்துவத்தை வெளிப்படுத்தினார். “பொதுவுடைமை என்பது உலகக் கூட்டுறவு”[46] என்று மிகச் சுருக்கமாக, ஆழமான பொருளோடு வரையறுத்துக் காட்டினார்.

எழுத்துலகிலும் வலிமையைச் சேர்த்தவராகச் சிங்காரவேலர் திகழ்ந்தார். 1920ல் தொடங்கி தமிழுக்குப் புதிய செய்திகளை அறிவியல் நோக்கோடு அரசியலைக் கொண்டு சேர்க்கும் முயற்சியில் இறங்கினார். ‘தொழிலாளி’, ‘தொழிலாளர் விவசாயிகள் கெஜட்’ என்கிற ஏடுகளைச் சிங்காரவேலர் தொடங்கினார். மேலும் ‘சுவதர்மா’ போன்ற சில இதழ்களிலும் தொழிலாளர் நலன் குறித்த போராட்ட உணர்வை எழுதினார்.

1928ஆம் ஆண்டு நடைபெற்ற இரயில்வே தொழிலாளர்களின் போராட்டத்திற்கு ஆதாரவாகச் செயல்பட்டார் என்று குற்றம் சாட்டப்பட்டு இரண்டாண்டு கடும் சிறைத்தண்டனை பெற்றார். 1946ஆம் ஆண்டு பிப்ரவரி 11ஆம் நாள் மறைந்தார். ஏகாதிபத்தியம் இருக்கும் வரை யுத்தத்திற்கான மூல ஊற்று இருந்தே தீரும் என்ற லெனினிய வாதத்தைக் கடைசி வரை தம் நெஞ்சில் சுமந்தவர் சிங்காரவேலர்.

**பொதுவுடைமைக் கொள்கைப் பிரசாரத்தில் பெரியாரின் பங்களிப்பு**

ரஷ்யக் கம்யூனிஸ்டுகளின் தத்துவமான போல்ஷ்விஸம் இந்தியாவிலும், குறிப்பாகத் தமிழகத்திலும் பரவக்கூடாது என்றிருந்த சூழ்நிலையில் இம்மண்ணில் பொதுவுடைமைக் கருத்துக்களைப் பரப்ப முயன்ற எண்ணற்ற சிந்தனையாளர்களுள் பெரியார் குறிப்பிடத்தக்கவராய்த் திகழ்ந்தார்.

1927ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பெரியார் ஈ.வெ.ரா காங்கிரஸ் கட்சிக்கு எதிரான பிரச்சாரத்தில் ஈடுபட்டார். பெரியார் தொடங்கிய சுயமரியாதை இயக்கத்தின்

முதல் மாநாடு செங்கல்பட்டில் நடைபெற்றது. ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் குறித்து அனுதாபம் காட்டிய பெரியார் அவர்களுக்காக ஒரு தீர்மானம் நிறைவேற்றினார். பெரியாரின் நீண்ட நாள் நண்பரான சிங்காரவேலரும், பெரியாரின் பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்குத் துணை நின்றார். 1931 ஆம் ஆண்டு உலகச் சுற்றுப் பயணம் மேற்கொண்ட பெரியார் இங்கிலாந்து, ரஷ்யா போன்ற நாடுகளில் சுற்றுப் பயணத்தை முடித்துவிட்டு 1932 ஆம் ஆண்டு தமிழகம் திரும்பினார். 1933 ஆம் ஆண்டில் மே தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடுமாறு தொழிலாளர்களுக்கு அறைகூவல் விடுத்தார்.

சுயமரியாதை இயக்கம் சார்பாகப் பெரியார் சமதர்மப் பிரசாரம் செய்தார். பெரியாரின் இப்பிரச்சாரத்தைச் சுயமரியாதை இயக்கக்காரர்கள் சிலர் ஏற்றுக் கொள்ளவில்லை.

1933 ஆம் ஆண்டில் பெரியாரின் குடியரசு ஏட்டில் உலகப்புகழ் பெற்ற கம்யூனிஸ்டு அறிக்கையின் தமிழ்மொழிபெயர்ப்பு 'சமதர்ம அறிக்கை' என்ற பெயரில் தொடராக வெளிவந்தது என்பது நோக்கத்தக்கது. 'இந்த அரசு ஏன் ஒழிய வேண்டும்' என்ற தலைப்பில் தலையங்கம் எழுதியதால் பெரியாருக்கு ஆறு மாதச் சிறைத் தண்டனை விதிக்கப்பெற்றது.

**காங்கிரஸ் சோசலிஸ்டு கட்சி**

இடது சாரிக் கருத்துகளைக் கொண்டிருந்த காங்கிரஸ்காரர்கள் ஒன்று சேர்ந்து சென்னை ராஜதானி தீவிர இளைஞர் கழகம் என்ற அமைப்பினை 1934 ஆம் ஆண்டு உருவாக்கினர். பி. இராமமூர்த்தி, ஏ.எஸ்.கே. அய்யங்கார் போன்ற தலைவர்களின் முயற்சியால் இவ்வமைப்பு உருவாக்கப்பட்டது. பின்னர் 1936 ஆம் ஆண்டு காங்கிரஸ் சோசலிஸ்டுக் கட்சியும் உருவானது. பி. இராமமூர்த்தி பெரியாரை இக்கட்சியில் சேர வைப்பதற்குப் பெருமுயற்சி செய்தார். ஜெயபிரகாஷ் நாராயணனும், பி. இராமமூர்த்தியும் ஈரோட்டிற்குச் சென்று பெரியாரைச் சந்தித்தனர். ஆனால் பெரியார் இக்கட்சியில் சேர்வதற்கு மறுப்புத் தெரிவித்துவிட்டார்.

**பொதுவுடைமை வளர்ச்சியில் ஜீவாவின் பங்கு**

"காலுக்குச் செருப்புமில்லை

கால் வயிற்றுக் கூழுமில்லை

பாழுக்கு உழைத்தோமடா என்தோழா

பசையற்றுப் போனோமடா”

என்ற பாடலுள்ள வரை கவிஞர் ஜீவாவின் பொதுவுடைமைக் குரல் ஒலித்துக் கொண்டேயிருக்கும். தலைசிறந்த பேச்சாளராகவும், எழுத்தாளராகவும், பத்திரிகையாளராகவும் திகழ்ந்த ஜீவானந்தம் தமிழகத்தில் பொதுவுடைமை இயக்கம் காலூன்ற முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் பாடுபட்டவர் ஆவார்.

தொடக்கத்தில் காங்கிரஸ் கட்சியில் இருந்து உழைத்தவரான ஜீவா பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் ஈர்க்கப்பட்டு அங்கேயும் சில காலம் விடுதலைக்காகப் பாடுபட்டார். பெரியார் ரஷ்யாவிற்குச் சென்று திரும்பிய காலத்தில் அவருக்கு ஏற்பட்டிருந்த தாக்கத்தைப் பயன்படுத்தி, சுயமரியாதை இயக்கத்தை, சோசலிஸ்டு இயக்கமாகச் செயல்பட வைப்பதற்கு ஜீவா முயற்சி மேற்கொண்டார். ஜனசக்தி இதழைத் தொடங்கிப் பொதுவுடைமை இயக்க வளர்ச்சிக்கு உதவினார். ஜீவாவின் வீரியமிக்க எழுத்துகள் ஜனசக்திக்குப் புதிய உத்வேகத்தை அளித்தன.

தமிழே அரசாங்கத்தின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று சட்டமன்றத்தில் ஜீவா ஆற்றிய உரை வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்.

“நான் தமிழன். என்னுடைய மொழியே இந்த ராஜ்ஜியத்தில் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பது என்னுடைய கோரிக்கை. கல்விக் கூடங்களிலும், ஆட்சி மன்றத்திலும், நியாய மன்றத்திலும், நிர்வாகத் துறையிலும் பிரதேச மொழியே இயங்க வேண்டும். ஆகவே தமிழ் மொழியை ஆட்சிமொழியாக்க, அரசியலில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்”[47] என்று பேசியுள்ளார் என்று என்.இராமகிருஷ்ணன் குறிப்பிடுகின்றார்.

ஜீவாவின் தன்னலமற்ற தொண்டும், உழைப்பும் பொதுவுடைமைப் பணிக்குப் புதிய பாதையை வகுத்துத் தந்தது என்றால் அது மிகையாகாது.

**திரு.வி.க.வும் பொதுவுடைமைச் சிந்தனையும்**

காந்தியடிகளின் மீது அளவு கடந்த பக்தி பூண்டவரும், தமிழ்த்தென்றல் என்று அழைக்கப்பட்டவருமான திரு.வி.க தேசபக்தனிலும் (1917), நவசக்தியிலும் (1920) பொதுவுடைமைக் கருத்துகளை எழுதி வந்தார். சன்மார்க்கமும், சமதர்மமும் கலக்க வேண்டும் என்பது அவர் தம் சிந்தனையாக இருந்தது. அடிப்படையில் அவர் ஒரு முற்போக்கு இலக்கியவாதியாகவே திகழ்ந்தார்.

“அடையாறு ருக்மணி அருண்வேல் கலப்புத் திருமணம் நடைபெற்றபோது இந்து, சுதேசமித்திரன் போன்ற தேசிய இதழ்கள் அத்திருமணத்தை எதிர்த்தன. சுப்ரமணிய சிவா, வ.உ.சி போன்ற தேசியத் தலைவர்களும் எதிர்த்துக் கூக்குரலிட்டனர். ஆனால் திரு.வி.க ஒருவரே அவர்களின் திருமணத்தைப் போற்றினவர் ஆவார்”[48] என்பார் ம.ரா.போ.குருசாமி.

திரு.வி.க காங்கிரஸ் இயக்கத்தின் உறுப்பினர் எனினும் பொதுவுடைமை இயக்கச் சிந்தனைக்குப் பெரிதும் பாடுபட்டுள்ளார். 1918 ஆம் ஆண்டு ஏப்ரல் 27 அன்று சென்னைத் தொழிலாளர் சங்கம் என்ற பக்கிங்காம் கர்நாடிக் ஆலைத் தொழிலாளர் சங்கத்தை முதன் முதலாக ஆரம்பித்துப் புரட்சி செய்துள்ளார். இச்சங்கத்தில் தொழிலாளர் இயக்க வரலாறு, மார்க்ஸ் – லெனின் வரலாறு, ருஷ்யப் புரட்சி போன்ற தலைப்புகளில் பாடம் எடுத்தார் என்பது ஈண்டு கருதத்தக்கது.

**தமிழகத்தின் முதல் கம்யூனிஸ்டு அமைப்பும் பல்வேறு போராட்டங்களும்**

தமிழகத்தில் கம்யூனிஸ்டு கட்சியின் முதல் கிளை 1936 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. பி. இராமமூர்த்தி, சி. எஸ். சுப்ரமணியம் போன்றோர் ஒருங்கிணைந்து இவ்வமைப்பினை உருவாக்கினர்.

1937 ஆம் ஆண்டு கோவை லெட்சுமி மில் போராட்டத்திற்கு பி. ராமமூர்த்தியும், ஜீவாவும் ஆதரவளித்தனர். இதன் காரணமாகத் தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி பெற்றது. இப்போராட்ட வெற்றியினைத் தொடர்ந்து பல ஊர்களில் தொழிற்சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மதுரை மகாலெட்சுமி மில் ஊழியர்களின் போராட்டத்தைப் பசும்பொன் உ.முத்துராமலிங்கத் தேவரும் ஜீவாவும் முன்னின்று நடத்தினர். இதே போன்று நெல்லிக்குப்பம் பாரி சர்க்கரை ஆலைப் போராட்டத்திற்கும் கம்யூனிஸ்டுகள் ஆதரவளித்தனர். இதனால் இப்போராட்டங்கள் வெற்றியடைந்தன.

1936 ஆம் ஆண்டு சென்னையில் மாணவர் சங்கம் உருவாக்கப்பட்டது. மதுரை அமெரிக்கன் கல்லூரியில் ஆரம்பிக்கப்பட்ட மாணவர் அமைப்பிலிருந்து பூவண்ணன், என். சங்கரய்யா, சிவகங்கை ராஜேந்திரன், ராஜலிங்கம், ரங்கசாமி, நாராயணசாமி போன்றோர் பொதுவுடைமை இயக்கத்திற்குப் பின்னாளில் வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

1943 ஆம் ஆண்டு ஜூன் 14–இல் தமிழ்நாடு விவசாயிகள் சங்க அமைப்புக் குழு ஏற்படுத்தப்பட்டது. ஆர். கே. பாண்டுரங்கன், மோகனரங்கம், ஆர். அமிர்தலிங்கம், திருப்பத்தூர் மாணிக்கம் போன்றோர் இதில் உறுப்பினராக இருந்தனர்.

சேலம் மாவட்டம் ராமபுரம், மதுரை மாவட்டம் ஆயக்குடி, நெய்க்காரப்பட்டி, உத்தமபாளையம், பொதும்பு போன்ற ஊர்களில் நடைபெற்ற விவசாயிகளின் போராட்டத்திற்குப் பொதுவுடைமை இயக்கமான கம்யூனிஸ்டு ஆதரவளித்தது.

**தமிழ் உணர்வுப் போராட்டம்**

தமிழகத்தில் நிகழ்ந்த தமிழ்மொழி உணர்வுப் போராட்டங்களில் பொதுவுடைமைப் போராளிகளின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் அமைந்தது. மொழி வழி மாநிலம் கோரி, தமிழகத்தில் கம்யூனிஸ்டு கட்சி பெரும் இயக்கத்தை உருவாக்கியது. பி. ராமமூர்த்தி, ப. ஜீவானந்தம், எம். கல்யாண சுந்தரம், கே. டி. ராஜு, மணலி கந்தசாமி போன்றோர் சட்ட மன்றத்தில் குரல் கொடுத்தனர்.

சென்னை மாநிலத்திற்குத் தமிழ்நாடு எனப் பெயரிட வேண்டி, தேசபக்தர் சங்கரலிங்கனார் 1956 ஆம் ஆண்டு ஜூலை 27 ஆம் நாள் விருதுநகரில் உண்ணாவிரதம் இருந்தார். தமிழ்நாடு என்ற பெயர் சூட்டக் கோரி 77 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து அக்டோபர் 13 ஆம் நாளில் உண்ணாவிரதப் பந்தலிலேயே உயிர் நீத்தார்.

“1956 ஆம் ஆண்டு நவம்பர் முதல் தேதியன்று இந்தியா முழுவதும் மொழிவழி மாநிலங்கள் மலர்ந்தன. நெடுநாள் கனவு கைகூடியது. ஆனால் தமிழ்நாடு என்று பெயர் சூட்டும் கோரிக்கையை ஏற்க மறுத்து ‘சென்னை மாகாணம்’ என்றே அழைக்கப்பட்டது. இன்னும் சொல்லப் போனால் ‘மதராஸ் மாகாணம்’ என்றே அழைக்கப்பட்டது”[49] என்பார் சு.பொ.அகத்தியலிங்கம்.

புதிய தமிழகமாகச் சென்னை மாகாணம் உதயமான நாளை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கொண்டாடி மகிழ்ந்தது. ‘ஜனசக்தி’ சிறப்பு மலர் வெளியிட்டது. ஆசிரியர் ப. ஜீவனாந்தம் நவம்பர் 1 தேசியப் பெருநாள் என்ற தலைப்பில் சிறப்புக் கட்டுரை ஒன்றை எழுதினார்.

சென்னை மாகாணத்தின் பெயரை ‘தமிழ்நாடு’ என்று மாற்றக் கோரி மாநிலங்களவையில் 1961 ஆம் ஆண்டு ஒரு திருத்த மசோதாவை முன்மொழிந்தவர் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலங்களவை உறுப்பினர் பூபேஷ் குப்தா ஆவார்.

“உலகத்திலேயே மிகவும் தொன்மையான மொழிகளில் ஒன்று தமிழ். உலகத்தின் பல பாகங்களிலுமுள்ள மக்களின் பேச்சு மொழியே வளர்ச்சி அடையாதிருந்த பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ் இருக்கிறது.

உலகின் பல மொழிகள் வளர்ச்சியடைவதற்கு முன்னமேயே சிறப்பான இலக்கியங்களைப் படைத்தது தமிழ். நமது நாட்டின் கலாச்சார பாரம்பரியத்திற்கு அவ்வளவு சிறப்பாகவும், வளமாகவும் பங்களிப்புச் செய்த தமிழ்மக்களின் மேன்மை அத்தகையது. தமிழைப் பற்றிப் பேசும் போது நமக்கு மிகுந்த பாசம் உண்டாகிறது. ஏனெனில் நாம் இன்றைக்குப் பார்க்கிற இந்தியா ஏராளமான மொழிக் கூறுகளும், குழுக்களும் அடங்கியதாக இருக்கிறது. அவர்களில் தமிழ்நாட்டு மக்கள் சிறப்பான இடத்தைப் பெறுகிறார்கள். அவர்களின் கலாச்சாரத்தில், இலக்கியத்தில், பாடல்களில், இசையில், அவர்களின் வாழ்க்கை முறையில் நமது மக்களின் கலாச்சாரம் என்று நாம் கருதுகின்றவற்றின் தொன்மைப் பெருமை மிளிர்கிறது. ஆகவே எல்லா வகையிலும் இந்தியக் கலாச்சாரத்தின் மையமாகத் தமிழ்நாடு இருக்கிறது. எனவே தமிழ்நாட்டில் பெரும்பாலோர் நல்ல ஆங்கில அறிவு உடையவர்களாக இருந்தும் மெட்ராஸ் என்கிற இப்போதைய தமிழ்நாடு மாநிலத்தின் ஆட்சி மொழியாகத் தமிழே இருக்க வேண்டும் என்று வலியுறுத்தும் முதன்மை மாநிலமாக இருக்கிறது. அவர்கள் அவ்வாறு வலியுறுத்துவது மிகவும் சிறந்த ஒன்று ஆகும்''[50] என்ற கருத்து எண்ணத்தக்கது.

*1967*–இல் தி.மு.க ஆட்சிக்கு வந்த பிறகு அண்ணா முதல்வராக இருந்த வேளையில் தமிழ்நாடு என்ற பெயர் மாற்றத் தீர்மானம் தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. பிறகு மத்திய அரசும் ஒப்புதல் அளித்தது.

### பொதுவுடைமை வளர்ச்சிக்கு இந்தியக் கலை இலக்கியத்தின் பங்கு

*1934*–இல் சோவியத் நாட்டில் சோவியத் எழுத்தாளர் மாநாடு நடைபெற்றது. *1935*–இல் பாரீசில் உலக எழுத்தாளர் மாநாடு நடைபெற்றது. இவற்றைத் தொடர்ந்து *1936* ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் லக்னோவில் 'முற்போக்கு எழுத்தாளர் சங்கம்' (Progressive Writers Association) உதயமானது.

“இந்திய தேசிய காங்கிரசின் வருடாந்திரக் கூட்டத் தொடரை நடத்துவதற்காகத் தற்காலிகமாக உருவாக்கப்பட்ட நகரமான காங்கிரஸ் நகரில்தான் முற்போக்கு எழுத்தாளர் சங்கக் கூட்டம் நடைபெற்றது. இந்தக் கூட்டம் காங்கிரஸ் கொள்கைக்கே ஒரு இடதுசாரித் திருப்பத்தைக் கொடுத்தது''[51] என்பார் இ. எம். எஸ். நம்பூதிரிபாடு.

உலக அரங்கில் மார்க்சிம் கார்க்கி, ரோமன் ரொலண்ட், ஹென்றி பார்பஸ் போன்றோர் தூவிய பொதுவுடைமைச் சிந்தனையே இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தோன்றியதற்கான மூலமாகும்.

"பொருளாதார நெருக்கடி ஒருபுறம், ஜெர்மனியில் ஹிட்லர் வடிவில் புறப்பட்ட பாசிச அடக்குமுறை மறுபுறமாக உலகம் முப்பதுகளில் தத்தளித்த வேளையில் உலகெங்கும் ஒலித்த முற்போக்குக் குரல் இந்தியாவிலும் எதிரொலித்தது. சஜ்ஜாத் ஜாஹீர், முல்கராஜ் ஆனந்த், ரவீந்திரநாத் தாகூர், பிரேம்சந்த், சரோஜினி நாயுடு போன்ற எழுத்தாளர்கள் இக்குரலால் ஈர்க்கப்பட்டனர்"[52] என்பர்.

சர்வதேச மனிதநேயத்தை அடிப்படையாகக் கொண்டு இந்தியாவில் முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தொடங்கப்பட்டது. இச்சங்கம் தொடங்கப்பட்ட ஏழு ஆண்டுகள் கழித்து *1943*–இல் இந்திய மக்கள் நாடக மன்றம் (Indian People Theatre Association) மும்பையில் தோற்றுவிக்கப்பட்டது. கம்யூனிஸ்டு இயக்கம் தடைப்பட்ட காலத்திலும் (*1948—51*), இந்நாடக மன்றம் ஊர் ஊராகச் சென்று முற்போக்குக் கொள்கையை விதைத்தது குறிப்பிடத்தக்கதாகும்.

"*1930* முதல் *1940* வரையிலான ஆண்டுகளில் முற்போக்குக் கலாச்சாரம் சிறகு முளைத்துப் பறந்தது. *1936*ல் பிரேம்சந்த் எழுதிய 'கோதான்' என்ற புதினம் இந்திய விவசாயிகளின் பரிதாப நிலையைப் படம்பிடித்துக் காட்டியது. இப்புதினம் முற்போக்கு வெப்பத்திலும், வெளிச்சத்திலும் பிறந்தது என்பதில் ஐயம் இல்லை"[53] என்பர்.

இவ்வாறு இந்திய அளவில் பொதுவுடைமைச் சிந்தனை வளர கலை இலக்கியங்களும், நாடகங்களும் முற்போக்கு அமைப்புகளும் உறுதுணையாய் இருந்தன.

### பொதுவுடைமை வளர்ச்சியில் தமிழகக் கலை வடிவங்களும் இலக்கியங்களும்

பொதுவுடைமை வளர்ச்சிக்கு இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்களும், கலைகளும், இதழ்களும் பெரும்பங்காற்றின. பாரதியார், பாரதிதாசன், திரு.வி.க, ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், பெரியார் ஈவெரா, தமிழ் ஒளி, ஜீவபாரதி போன்ற இலக்கிய வாதிகளும், கைலாசபதி, சிவத்தம்பி, தொ.மு.சி.ரகுநாதன் உள்ளிட்ட பல இலக்கியத் திறனாய்வாளர்களும் பொதுவுடைமை வளர்ச்சிக்குத் துணைநின்றனர்.

தமிழகத்தில் 1937 ஆம் ஆண்டில் நவம்பர் புரட்சி தினத்தன்று காங்கிரஸ் சோசலிஸ்டுக் கட்சியின் பத்திரிகையாக ஜனசக்தி வெளிவந்தது. ஜனசக்தி வெறும் அரசியல் பத்திரிகையாக மட்டும் செயல்படவில்லை. கதைகளும் கவிதைகளும் கூட ஜனசக்தியில் இடம்பெற்றன. ஜனசக்தி முதல் இதழில் ஜீவா தலையங்கம் எழுதினார்.

“ஜனசக்தி மார்க்சிய வழியில் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரை நடத்தும் தொண்டிற்காகவே வாழும். பூரண சுயேச்சை பெறவும், சோசலிசத்தை ஸ்தாபிக்கவும் கடைசி மூச்சு உள்ள வரையில் ஜனசக்தி தயவு தாட்சண்யமின்றிக் கடும்போர் புரியப் போர்க்கோலம் கொண்டு நிற்கும்”[54] என்று சொல்லப்பட்டது.

1930 — 40 களில் முற்போக்குச் சிந்தனை பெருகிய போதும், பொதுவுடைமை இயக்கம் சார்ந்த இலக்கிய ஏடுகளுக்கு இணையாக வெளியே இருந்து பொதுவுடைமைக் கருத்தை விதைத்த ஏடுகள் அதிகமாகும். முற்போக்குக் கருத்துகளை இலக்கியத்தின் வாயிலாக வெளிப்படுத்திய புதுமைப்பித்தன், சங்கர் ராம், வ.ரா, பாரதி, பாரதிதாசன், திரு.வி.க போன்றோர் பொதுவுடைமை இயக்கத்திற்கு வெளியே நின்று இச்சிந்தனையை ஆதரித்து இலக்கியம் படைத்தனர்.

சுதந்திரச் சங்கு, காந்தி, மணிக்கொடி, கலா மோகினி, கிராம ஊழியன், தேனீ போன்ற இதழ்களும் பொதுவுடைமை இயக்கத்தில் இல்லாது முற்போக்குக் கொள்கைகளை விதைத்த இலக்கிய ஏடுகள் ஆகும்.

1947க்குப் பிறகு பொதுவுடைமை இயக்க இதழ்களாக விஜயபாஸ்கரனின் விடிவெள்ளி, குயிலனின் வாரம், தொ.மு.சி. ரகுநாதனின் சாந்தி, விந்தனின் மனிதன் போன்ற இதழ்கள் முற்போக்குச் சிந்தனையை விதைத்தன.

1959–இல் கம்யூனிஸ்டு இலக்கிய இதழாகத் தாமரை வெளிவந்தது. 1963 ஜூனில் தீக்கதிர் வெளிவந்தது. 1970ல் மார்க்சிய இதழாகச் செம்மலர் தோன்றியது.

பதிப்புத்துறையிலும் பொதுவுடைமைவாதிகள் சிறந்த தமிழ்ப் பங்காற்றினர். “ப.ரா மொழிபெயர்த்து வெளியிட்ட அன்னை (மார்க்சிம் கார்க்கி), புதுமைப் பித்தனும், ராம ரெத்தினமும் சேர்ந்து ஹிட்லரைப் பற்றி எழுதிய கப்சிப் தர்பார், புதுமைப்பித்தன் முசோலினியைப் பற்றி எழுதிய ஜடாமுனி, வெ. சாமிநாத சர்மா எழுதிய சோவியத் ருஷ்யா, ரூசோவின் சமுதாய ஒப்பந்தம், காரல் மார்க்ஸ் ஆகிய நூல்கள் அனைத்தும் நாற்பதாம் ஆண்டுகளில் வெளிவந்த முற்போக்குச் சிந்தனை நூல்கள் என்று குறிப்பிடுகிறார் தொ.மு.சி. ரகுநாதன்”[55] என்பார் ச.மாடசாமி.

இலக்கியம், கலை, இதழ், பதிப்பு என நில்லாமல் விடுதலை உணர்வு, சர்வதேச மனிதநேயம் போன்ற பொதுவுடைமைக் கருத்துகளையும், கொள்கைகளையும் எடுத்துச் செல்ல நாட்டுப்புற வடிவங்களையும், நாடகங்களையும் கையாண்டனர்.

**பொதுவுடைமை வளர்ச்சியில் கே.ஜீவபாரதியின் பங்கு**

தூத்துக்குடி மாவட்டத்தில் பூதலபுரம் என்ற கிராமத்தில் 15.06.1950 ஆம் ஆண்டு இரா.கந்தசாமித் தேவருக்கும், வைரம் அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தவர் இரா.க.இராமமூர்த்தி. எழுத்துப் பணிக்கு வந்ததற்குப் பிறகு இயற்பெயரை ஜீவபாரதி என்று மாற்றிக்கொண்டார். பொதுவுடைமைக் கவிஞர்களான ஜீவாவின் மேலும், பாரதியின் மேலும் கொண்ட பற்றின் காரணமாக ஜீவபாரதி என்று பெயரை மாற்றி முதன்முதலில் பொன்னடியானின் ‘முல்லைச் சரம்’ இதழில் கவிதை எழுதியுள்ளார். “கவியரங்கங்களில் என்னை அறிமுகப்படுத்துகின்ற போது,

ஜீவாவும் பாரதியும்
சேர்ந்து குரல்கொடுத்தால்
எப்படி இருக்குமோ? – தம்பி
ஜீவபாரதி குரல்
அப்படி இருக்கும்!

என்று கவிஞர் பொன்னடியான் குறிப்பிடுவது பழக்கம். அதனால் ஜீவாவின் தியாக வாழ்க்கையையும், பாரதி கவிதையின் ஆழ அகலங்களையும் நுனிப்புல் மேயாமல் நோக்கத் தொடங்கினேன்”[56] என்கின்றார் ஜீவபாரதி.

இவருடைய பெரியப்பா இரா.வேலுச்சாமித் தேவர், மேனாள் குடியரசுத் தலைவர் இரா.வெங்கட்ராமனுடன் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றுள்ளார். நெல்லை மாவட்ட கம்யூனிச இயக்கத்தை வளர்த்த தோழர் பாலதண்டாயுதம், தோழர் மாயாண்டி பாரதி, தோழர் நல்லசிவம், தோழர் நல்லகண்ணு போன்றோருடன் நெல்லை சதி வழக்கில் சிறைத்தண்டனை அனுபவித்துள்ளார். இவர்தம் பொதுவுடைமைப் பற்றே ஜீவபாரதியைப் பொதுவுடைமைப் பக்கம் வரவழைத்தது.

பொதுவுடைமை இயக்கச் சிந்தனைக்கேற்ப ஜீவபாரதி காமாட்சி என்பவரைக் கலப்பு மணம் செய்தார். சசிக்குமார் என்பவரை வளர்ப்பு மகனாகவும் கொண்டு பொதுவுடைமைச் சிந்தனைக்கு அரணாக உள்ளார். தோழர் பாலதண்டாயுதம் உதவியோடு, பொதுவுடைமைச் சிந்தனைமிக்க சென்னை நியூசெஞ்சுரி பதிப்பகத்தில் சேர்ந்து விற்பனையாளர், எழுத்தர், காசாளர், கணக்குப் பொறுப்பாளர், அச்சகப் பொறுப்பாளர் என்று பல நிலைகளில் பணியாற்றிப் பொதுவுடைமைச் சிந்தனையுடன் திகழ்ந்துள்ளார்.

திரைப்பட இயக்குநர் மணிவண்ணனிடம் *11* படங்களுக்குத் துணை இயக்குநராகப் பணியாற்றியுள்ளார். சில திரைப்படங்களுக்குப் பாடல்களும் எழுதியுள்ளார். 'இனி ஒரு சுதந்திரம்' என்ற திரைப்படத்தில் ஜீவபாரதி எழுதிய பாடல் பொதுவுடைமைச் சிந்தனையை வெளிப்படுத்துவதாக உள்ளது. 'கைகளிலே வலுவிருக்கு கம்மாக்கரை நெலமிருக்கு' என்று தொடங்கும் பாடலில்,

"வெட்டித் தனப் பேச்சுக்களால் வீணாய்ப்போச்சு நாடு

வெக்கங் கெட்ட மனுசனுக்கும் வெளஞ்சு தருது காடு"

என்று எழுதியுள்ளார் ஜீவபாரதி.

இந்தப் பாடல் குறித்து, "இந்தப் பாட்டை முழுவதுமாகப் பார்த்த போது விருட்சங்கள் வீழலாம்; எனினும் வேர்களில் இருந்து விருட்சங்கள் வீணாகிற அற்புதம் நடந்தேறிக் கொண்டுதான் இருக்கும் என்று எனக்குப்பட்டது. பட்டுக்கோட்டை, திருநெல்வேலியில் மீண்டும் பிறந்து இருக்கிறான் என்று சொல்லத் தோன்றுகிறது"[57] என்று விமர்சனம் செய்துள்ளார் வலம்புரிஜான்.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் மீது கொண்ட அளவற்ற பற்றினால் அவருடைய பாடல்கள் அனைத்தும் நாட்டுடைமையாக்கக் காரணமாக இருந்ததுடன், பட்டுக்கோட்டையில் கல்யாண சுதந்திரத்திற்கு வெண்கலச் சிலை நிறுவவும், நினைவாலயம் அமைக்கவும் பல்லாற்றானும் துணை நின்று தம் பொதுவுடைமைப் பணிக்கு வலுச்சேர்த்துள்ளார். தமிழகந்தோறும் சென்று கம்யூனிசத் தலைவர்களைச் சந்தித்து அவர்களின் பொதுவுடைமை வாழ்வை வரலாறாக்கியுள்ளார். ஜீவாவின் ஜனசக்தி இதழில் ஆறு ஆண்டுகள் கட்டுரைப் பகுதிகளின் ஆசிரியராகவும் (Future Editor), மேன்மை இதழில் ஓராண்டு ஆசிரியராகவும் பணியாற்றிப் பொதுவுடைமைச் சிந்தனைகளை விதைத்துள்ளார்.

1977 முதல் 2017 வரை கே.ஜீவபாரதி 104 நூல்களை வெளியிட்டுள்ளார். இவற்றுள் 49 நூல்கள் சுயபடைப்புகளாகும். ஏனைய 55 நூல்கள் ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் போன்ற பிரபலமானவர்களின் படைப்புகளைத் தொகுத்து நூலாக்கியுள்ளார். இவருடைய படைப்பு நூல்களுள் பொதுவுடைமைச் சிந்தனை மிக்க நூல்களாக கவிதை, புதினம், நாடகம், உரைநடை நூல்கள் எனப் பல தளங்களில் விரிந்து நிற்கின்றன.

## தொகுப்புரை

பொதுவுடைமை என்னும் சொல் இயல்பாகக் கம்யூனிச இயக்கச் சித்தாந்தமாகக் கொள்ளப்பெறுகிறது. சோசலிஸ்டுப் புரட்சி 1917–இல் ரஷ்யாவில் வெடித்தது என்றாலும் பொதுவுடைமைக் கருத்துகள் சங்க காலத்திலிருந்தே பேசப்பட்டு வந்துள்ளன.

மார்க்ஸ், எங்கெல்ஸ் என்ற இருவரின் சிந்தனை ஆராய்ச்சியே பொதுவுடைமையின் மூலாதாரமாகத் திகழ்கிறது.

பொதுவுடைமையை வலியுறுத்தும் மார்க்சியம் இதுவரை உள்ள அனைத்துத் தத்துவங்களையும் விட மேலானது. பொதுவுடைமை என்பது மதம், சமயம் சார்ந்த ஆன்மீகம் அல்ல. அது ஒரு சமுதாய விஞ்ஞானம்.

மனித குல வரலாறு வர்க்கப் போராட்டங்களினால் ஆனது. பொருள் முதல்வாதக் கோட்பாடு, பொருளாதாரக் கோட்பாடு, அறிவியல் சார்ந்த கோட்பாடு என்று பொதுவுடைமைக் கூறுகள் வகைப்படுத்தப்படுகின்றன. பொருள்முதல்வாதச் சிந்தனை இயங்கியல் பொருள் முதல்வாதம், வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என்று இரண்டு பிரிவாகப் பிரித்தறியப்படுகின்றன.

வரலாற்றுப் பொருள் முதல்வாதமானது புராதனப் பொதுவுடைமைச் சமூகம், அடிமை உடைமைச் சமூகம், நில உடைமைச் சமூகம், முதலாளித்துவச் சமூகம், விஞ்ஞான சோசலிசச் சமூகம் என்று ஐந்தாக வளர்ந்து வந்ததனை அறிய முடிகிறது. உழைப்பாளி வர்க்கம் சமுதாய மாற்றத்திற்கான தமது போராட்டத்தை பொருளாதாரப் போராட்டம், அரசியல் போராட்டம், தத்துவப் போராட்டம் என்று நடத்தியது. பொதுவுடைமைச் சிந்தனைக்கான களமாகச் சோவியத் புரட்சிக்கு முன்னரே இந்தியா பலவகைகளில் தயாராகி இருந்தது.

பொதுவுடைமைப் புரட்சிக்கு விவசாயிகளின் போராட்டம் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆதிவாசிகள், விவசாயிகள், தொழிலாளிகள் போன்ற எளிய மக்களின்

போராட்டங்களும், தியாகங்களும் பொதுவுடைமை இயக்கம் இந்தியாவில் காலூன்றக் காரணமாய் அமைந்தன.

இந்தியாவில் பொதுவுடைமை வளர கம்யூனிஸ்டுகள் அன்றியும் காங்கிரஸ், காங்கிரஸ் சோசலிஸ்டு, சுயராஜ்யக் கட்சி என்று எல்லாக் கட்சிகளும் ஆரம்ப காலத்தில் உதவின. தமிழகத்தில் பொதுவுடைமைக் கருத்துகளை மக்களிடம் பரப்பியதில் சிங்காரவேலருக்குப் பெரும்பங்குண்டு. *1933* ஆம் ஆண்டில் பெரியாருடன் குடியரசு ஏட்டில் உலகப் புகழ்பெற்ற கம்யூனிஸ்டு அறிக்கையின் தமிழ்மொழிபெயர்ப்பு 'சமதர்ம அறிக்கை' என்ற பெயரில் வெளியானது.

தலைசிறந்த பேச்சாளராகவும், எழுத்தாளராகவும், பத்திரிகையாளராகவும் திகழ்ந்த ஜீவா முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் பொதுவுடைமை இயக்கம் காலூன்றப் பாடுபட்டார்.

காந்தியடிகள் மீது அளவுகடந்த காதல் கொண்ட திரு.வி.க பொதுவுடைமை வளர்ச்சிக்கு இதழ்களின் வழியே கருத்துகளை வெளியிட்டார். தமிழகத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல்கிளை *1936* ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. பொதுவுடைமை வளர்ச்சியில் தமிழகக் கலை வடிவங்களும், இலக்கியங்களும் கணிசமாகப் பங்காற்றின.

கே.ஜீவபாரதி, இராமமூர்த்தி என்ற தம்பெயரை ஜீவாவின் மீதும் பாரதியின் மீதும் கொண்ட பற்றின் காரணமாக ஜீவபாரதி என்று மாற்றிக்கொண்டு தம்படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகளை விதைத்துள்ளார். நியூ செஞ்சுரி பதிப்பகத்தில் பணியாற்றிய போதும் பொதுவுடைமைச் சிந்தனை வளர பல நிலைகளில் பாடுபட்டுள்ளார். திரைப்படங்களில் பணியாற்றுகிற போதும் தம் கொள்கையான பொதுவுடைமைச் சிந்தனையை விட்டுவிடவில்லை. ஜனசக்தியில் கட்டுரைப்பிரிவின் ஆசிரியராகவும், 'மேன்மை' இதழில் ஆசிரியராகவும் செயல்பட்டு பொதுவுடைமைக் கொள்கைகளைப் பரப்பியுள்ளார்.

கவிதை, புதினம், நாடகம், உரைநடை என்று பல வகைமைகளில் இலக்கியங்களைப் படைத்தாலும் அவையனைத்திலும் பொதுவுடைமையை உணர்த்துவதே ஜீவபாரதியின் படைப்பியல் நெறியாகவும் கொள்கையாகவும் திகழ்கிறது.

**சான்றெண்விளக்கம்**


1. ஆர். பார்த்தசாரதி, பதிப்புரை, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், ப.3
2. மார்க்ஸ் எங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை, ப.20
3. மாஜினி, கம்யூனிசம் 5000 ஆண்டுகள், ப.7
4. சாமிநாத சர்மா, கார்ல் மார்க்ஸ், ப.78
5. மேலது, ப.79
6. நியூ செஞ்சுரி ஆசிரியர் குழு, மார்க்ஸ் என்பவர், ப.9
7. இரா. ஜவஹர், கம்யூனிசம், நேற்று, இன்று, நாளை, ப.20
8. மார்க்ஸ் எங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை, ப.21
9. மேலது, ப.22
10. கோ. தான்யா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம், ப.26
11. ஓ.யாக்தோத், முரண்தர்க்கப் பொருள்முதல் வாதம் என்றால் என்ன? ப.173
12. ந. முத்துமோகன், மார்க்சிய விவாதங்கள், ப.17
13. ந. முத்துமோகன், இயங்கியல் பொருள் முதல்வாதம் ஒரு அறிமுகம், ப.10
14. நியூசெஞ்சுரி ஆசிரியர் குழு, வரலாற்றுப் பொருள் முதல் வாதம், ப.5
15. மேலது, ப.11
16. தியாகு, மார்க்சியம் அனா ஆவன்னா, ப.33
17. கோ. தான்யா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.41
18. அ.கா.ஈஸ்வரன், சமூக வளர்ச்சியின் அடித்தளமும், மேற்கட்டமைப்பும் பற்றி மார்க்சியம், ப.70
19. தியாகு, மார்க்சியம் அனா ஆவன்னா, ப.28
20. இதயகீதன், வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.80
21. நிழல்வண்ணன் (மொ.பெ.ஆ), மார்க்சியத்தின் அடிப்படைகள், பக்.31–32
22. கோ. தான்யா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.43
23. அ. கா. ஈஸ்வரன், சமூக வளர்ச்சியின் அடித்தளமும், மேற்கட்டமைப்பும் பற்றி மார்க்சியம், ப.77
24. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.34

25. அருணன், காரல் மார்க்ஸ் வாழ்வும் சிந்தனையும், ப.183
26. என். எம். சுந்தரம், சூறாவளியாய்த் தாக்கும், உலக நிதி மூலதனம், ப.172
27. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.90
28. தியாகு, மார்க்சியம் அனா ஆவன்னா, ப.33
29. காரல் மார்க்ஸ் – பிரடெரிக் எங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை, ப.46
30. வி.இ.லெனின், தேசியக் கொள்கையும் பாட்டாளி வர்க்கச் சர்வ தேசியவாதமும் – சில பிரச்சனைகள், ப.174
31. இரா.பாஸ்கரன் (மொ.பெ.ஆ), பிரடெரிக் எங்கெல்ஸ், ப.356
32. இரா. ஜவஹர், கம்யூனிசம் நேற்று இன்று நாளை, பொருளாதாரம் என்றால் என்ன? ப.99
33. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.46
34. ஆலன் உட்ஸ் (நூ.ஆ), நிழல் வண்ணன் (மொ.பெ.ஆ), மார்க்சியத்தின் இன்றைய பொருத்தப்பாடு, ப.46
35. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.47
36. வி.இ.லெனின், கலாச்சாரமும், கலாச்சாரப் புரட்சியும், (மொ.பெ) விருத்தகிரி, ப.290
37. ஆர். பார்த்தசாரதி, பதிப்புரை, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், ப.3
38. என். இராமகிருஷ்ணன், தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப.23
39. ஹரிகிசன் சிங் சுர்ஜித், இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பெருமைமிகு வரலாறு (தமிழாக்கம் – ஜெகதீஸ்), ப.2
40. எல். நடராசன், இந்தியாவில் விவசாயிகளின் பேரெழுச்சி, (1850 – 1890), (மொ. பெ. ஆர். நல்லகண்ணு), ப.25
41. ச. மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், பக். 22–23
42. மேலது, ப.24
43. மேலது, ப.26
44. சு.மெய்யப்பன் (ப.ஆ), பாரதியார் கவிதைகள், ப.155
45. என். இராமகிருஷ்ணன், தமிழகத்தில் கம்யூனிஸ்டு இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப.69

46. சிங்காரவேலர், பொதுவுடைமை விளக்கம், ப.17

47. என்.இராமகிருஷ்ணன், தமிழகத்தில் கம்யூனிஸ்டு இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப.533

48. ம.ரா.போ.குருசாமி, இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை – திரு.வி.க. சாகித்ய அகாதெமி, ப.49

49. சு.பொ. அகத்தியலிங்கம், பொதுவுடைமை வளர்த்த தமிழ், ப.30

50. பூபேஷ் குப்தா, தமிழ்நாடு பெயர்மாற்ற மசோதா, ப.71

51. இ.எம்.எஸ். நம்பூதிரிபாடு, மார்க்சிய கலாச்சார இயக்கத்தில் அரை நூற்றாண்டு, ப.21

52. ச. மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், ப.31

53. மேலது, ப.32

54. மா.சு. சம்பந்தன், தமிழ் இதழியல் சுவடுகள், ப.203

55. ச. மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், ப.34

56. கே.ஜீவபாரதி, இந்தப்பாடல்களும் எனது திரையும், ப.116

57. கே.ஜீவபாரதி, கவிதை எழுதினேன் கடிதம் வந்தது, ப.67

# இயல் – 2

## ஜீவபாரதியின் சமூகச் சிந்தனையில் பொதுவுடைமை

சமுதாயம் என்பது பல்வேறு பண்பு நலன்களைக் கொண்டு விளங்குகிறது. அச்சமுதாயத்தில் வாழ்கின்ற மக்களிடையிலான உறவுகளும் பற்பலவாகக் காணக் கிடக்கின்றன. பல்வேறு சாதிப் பிரிவுகளும், மதப்பிரிவுகளும், இனப்பிரிவுகளும், வாழ்க்கை வசதியை ஒட்டிய பொருளாதார நிலையிலான பிரிவுகளும் இருப்பதன் காரணமாக வர்க்க வேறுபாட்டுணர்ச்சி நாளுக்கு நாள் முற்றி வருகிற நிலையினைக் கண்ணுறமுடிகிறது. இச்சமூகத்தில் மக்கள் தங்கள் அனுபவங்களுக்கு உட்பட்ட நிலையில் சமூகப் பார்வையோடு வாழ்வினைப் பார்க்கின்றனர். எனினும் பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் மக்களின் வாழ்க்கையில் காணப்படும் முரண்பாடுகளுக்குக் காரணம் வர்க்க வேறுபாடும், தனிச் சொத்துரிமை அரசுமே என்ற உணர்வோடும், அறிவியல் பார்வையோடும் இலக்கியத்தைப் படைக்கின்றனர்.

சமுதாய மாற்றத்துக்கான போராட்டக் கருவியாகவே இலக்கியத்தைப் பொதுவுடைமைவாதிகள் படைத்தனர். நடப்பியல் நிகழ்ச்சிகளுக்கு வர்க்கப் பார்வையுடன் விளக்கம் காட்டிக் கருத்துப் போராட்டமாகவே இலக்கியம் படைக்கும் பணியினை மேற்கொண்டனர். சமுதாயத்தில் நிலவுகிற காலனி அடிமைத்தனம், சர்வாதிகாரப் போக்கு, முதலாளித்துவம், சுரண்டல், கூலி என்ற பெயரில் அடிமைப்படுத்துதல் போன்ற முரண்பாடுகளைச் சுட்டிக் காட்டுவதனையே தங்கள் முதன்மை நோக்கமாகக் கொண்டனர்.

பொதுவுடைமைப் படைப்பாளியான கே. ஜீவபாரதியின் எழுத்துக்கள் பாமரன், பாட்டாளி, உழைப்பாளி போன்றோரின் வாழ்வியலையும், பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையும், இன–மதப் போராட்டங்களின் விளைவுகளையும், அலசி ஆராய்கின்றன. சாதி, சமயம் கடந்த மானுட அன்பின் மீது அக்கறை கொண்ட பொதுவுடைமைப் படைப்பாளியான கே. ஜீவபாரதி தம் கவிதைகளிலும், கட்டுரைகளிலும், புதினம், நாடகம் உள்ளிட்ட படைப்புகளிலும், புதிய மானுட அவதாரம் எடுக்கும் மனிதர்களை அடையாளப்படுத்தியுள்ளார். இயல்பாகவே சமுதாயத்தை மாற்றும் நோக்குடைய ஜீவபாரதி சாதி, மதம் தாண்டிய மனித நேயச் சிந்தனையைத் தம் படைப்புகளில் விதைத்துள்ளார். அவ்வகையில் ஜீவபாரதியின் சமூகச் சிந்தனைகளைப் பொருளியல் சிந்தனைகள், பண்ணையார்கள் மீதான எதிர்ப்பு, விவசாய முன்னேற்றம், மதங்கள் மீதான எதிர்ப்பு, கடவுள் கொள்கை, சாதிய எதிர்ப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, விழாக்கள் குறித்த பார்வை, விலைவாசி ஏற்றம் குறித்த பார்வை எனப் பகுத்து ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**பொருளியல் சிந்தனைகள்**

பொதுவுடைமை என்பது பொருள்முதல்வாதத் தத்துவம் சார்ந்தது. பழைய பொருள் முதல்வாதங்களை நிராகரிப்பது இயங்கியல் பொருள் முதல்வாதம் ஆகும்.

“மனிதன் தன் வாழ்வின் பெரும்பகுதியைப் பொருளியல் நடவடிக்கையில் செலவழிக்கிறான். வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் தீர்மானிக்கிற இறுதிக் காரணி மனிதனின் பொருளியல் வாழ்வாக இருப்பதைத் தைரியமாகச் சுட்டிக்காட்டுவது மார்க்சியம்”[1] என்பார் மார்க்சிய அறிஞர் அருணன்.

ஒரு சமூகத்தின முரண்பாட்டை, அந்தச் சமூகத்தின் உற்பத்தியில் இருந்து வருகிற உற்பத்தி சக்திகளுக்கும், உற்பத்தி உறவுகளுக்கும் உள்ள போராட்டத்தின் வழியாகவே விளங்கிக் கொள்ள முடியும் என்பார் மார்க்ஸ்.

“மார்க்சியம் ஒரு பொருள் முதல்வாதத் தத்துவம் என்ற வகையில் அது பொருளை முதன்மையான கருத்தாக்கமாகக் கொள்கிறது. அது சமூக வாழ்வை இயற்கையின் தொடர்ச்சியாகக் கருதுகிறது. சமூக வாழ்வின் இயற்கை அடிப்படையை நாம் முழுவதும் மீறிச் சென்றுவிட முடியாது. புணரமைக்கப்பட்ட வடிவிலாவது இயற்கை நம்மில் வாழ்கிறது. மனித வாழ்வின் முன் நிபந்தனையாக, சூழலாக இயற்கை உள்ளது. அதேபோல சமூக வாழ்வின் பொருள்முதல்வாத அடிப்படையாக மனிதர்களின் உழைப்பு, வாழ்க்கை, உற்பத்தி அமைந்திருக்கிறது. புற உலகை உழைப்பின் மூலம் உருமாற்றுவது நம்மை நாமே உழைப்பின் மூலம் உருமாற்றுவது சமூக வாழ்வின் பொருள் முதல்வாத அடிப்படைகளாக அமைகின்றன”[2] என்ற ந.முத்துமோகனின் சிந்தனை கருதற்பாலது.

பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டதுதான் நாம் வாழும் சமூக அமைப்பு என்ற புரிதல் ஜீவபாரதிக்கு உள்ளது. உழைப்பே அதற்கான முதற்காரணம் என்பதனையும் அவர் படைப்புகளில் அகலக் காணமுடிகிறது.

“உழைப்பவர் மேனி என்ற
மலையிலே சுரந்து வந்த
எனது துளிகளால் தான்
வெளச்சல் கூடலாச்சு”[3]

என்று உழைப்பாளிகளின் வியர்வைத் துளிகளே உற்பத்தியை உருவாக்குகின்றன என்பதனைத் தெளிவுபடக் கூறுகின்றார். ஆனால் அந்த உழைப்பாளிகளின் நிலை பரிதாபம் என்பதனை உணர்ந்த ஜீவபாரதி அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் குறித்து பல பதிவுகள் செய்துள்ளார்.

மூலதனத்தின் இறுதி நோக்கம் முதலாளித்துவப் பொருளாதாரத்தைத் தோலுரித்துக் காட்டுவதே என்றார் காரல் மார்க்ஸ். துணிகள் ஏராளமாக உற்பத்தி செய்யப்படும். ஆனால் மக்களுக்கு உடுத்தத் துணி இராது. உணவுப் பொருட்கள் அதிகமாக உற்பத்தி செய்யப்படும். ஆனால் ஏராளமான மக்கள் உணவின்றிப் பட்டினியால் வாடுவர். இதுதான் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் முரண்பாடாகக் கருதப் பெறுகிறது. இந்த அவலநிலையை எடுத்துக்காட்டி ஜீவபாரதி சாடுகின்றார்.

“ஐந்தடுக்கு வீடுகட்டி
அதுலவொரு மெத்தையிட்டு
அதற்குமேல ஒருருவம் தூங்குது! – அந்த
ஐந்தடுக்கு மாளிகைக்கு
அடுத்திருக்கும் சாலையிலே
ஐந்தாறு உயிர்களுமே தூங்குது – தன்
அவலநிலை கண்டுமனம் ஏங்குது!
ஐந்தறிவு நாய்களுக்கு
ஐந்தடுக்கு வீட்டுக்காரன்
அல்வாத் துண்டை நித்தம் நித்தம் போடுறான் – அந்த
அடுத்திருக்கும் குடிசையில
படுத்திருக்கும் சிறுவனவன்
பட்டினியால் காலமெல்லாம் வாடுறான்”[4]

என்று சமுதாயத்தில் நிலவுகிற ஏற்றத் தாழ்வுகளை மட்டும் சுட்டிக்காட்டினால் படைப்பாசிரியர் ஜீவபாரதியை பொதுவுடைமைச் சிந்தனையாளராக அடையாளப்படுத்த முடியாது. பிரச்சினைக்கான தீர்வுகளையும் அவர்தம் படைப்புகளில் எடுத்துரைக்கிறார்.

“பாடுபட நாமிருக்கப்

பங்குபோட, ஆளிருக்கும்

கேடுகெட்ட நாட்டிலிங்கே தோழனே – இந்தக்

கேடுநீங்க வேண்டுமடா தோழனே — நாம்

கூடுபோன்ற வீட்டிலின்று

குருவிபோல வாழுகின்றோம்

மாற்றமொன்று காணவேண்டும் தோழனே — புது

மாற்றத்திற்குப் பாடுபடு தோழனே”[5]

என்று கொடுமையை அழிக்கப் போராட்ட உணர்வு வேண்டும் என்றும், தோழமை உணர்வோடு கரம் கோர்க்க வேண்டும் என்றும் குரல் எழுப்பியுள்ளார். மார்க்சியத்தின் அடிப்படை உணர்வான தோழமையை வலியுறுத்தி வேதனையின் வெளிப்பாட்டைத் தோழனிடம் கூறுவதாகப் பாடியிருப்பது பொதுவுடைமைச் சிந்தனைக்குத் திறவுகோலாய் அமைகிறது.

**பண்ணையார்களின் அட்டூழியத்தை எதிர்த்தல்**

நிலப்பிரபுத்துவக்காரர்களின் அட்டூழியத்தையும், அக்கிரமத்தையும், பண்ணையார்களின் எதேச்சாதிகார வக்கிரப் போக்கையும் கண்டிப்பது ஜீவபாரதியின் தலையாய கடமையாக உள்ளது. இதனைக் கவிதைகளில் மட்டுமின்றிக் கட்டுரைகளிலும் பல இடங்களில் பிரதிபலிக்கின்றார்.

தர்மபுரி மாவட்டத்தில் பழமரத்துப்பட்டி என்ற கிராமத்தில் பண்ணையாளராக இருந்த கோவிந்த ரெட்டியின் அநியாயப் போக்கைத் தமது பங்குதாரரின் படைப்பு என்ற கட்டுரையில் வெளிச்சம் போட்டுக் காட்டியுள்ளார். பண்ணையாருக்கு எதிராக யார் சிறுநிலம் வாங்கினாலும் அவர்களைக் கொடுமைப்படுத்திக் கொன்று விடுவதே பண்ணையாரின் வழக்கமாக இருந்துள்ளது. அந்த ஊரில் ஒருசிறுநிலம் வாங்கியதற்காக வாத்தியார் சிவண்ணா என்பவர் பட்ட பாட்டைத் தம் கட்டுரையில் வெளிப்படுத்தியுள்ளார் ஜீவபாரதி.

“ஒருநாள் … விடிந்தும் விடியாத வேளை … வாத்தியார் சிவண்ணா வீட்டருகே துப்பாக்கிச் சத்தம் கேட்டது. அதைக் கேட்டு மரத்தில் குடியிருந்த

பறவைகள் எல்லாம் பதற்றத்துடன் கூடுகளிலிருந்து கூவியபடி வானத்தில் வட்டமிட்டன. காகங்கள் சிறகுகளை அடித்துக் கொண்டும் 'கார்கார்' என்று கரைந்து கொண்டும் ஓரிடத்தையே சுற்றிச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தன. ஆம், அங்கு நடக்கக் கூடாத ஒன்று நடக்கப் போகிறது. வாத்தியார் வீட்டு வாசலில் ஏழெட்டுத் தடியாட்கள் ஆயுதங்களுடனும் மற்றொரு கையில் சங்கிலியால் பிணைக்கப்பட்ட சீமை நாய்களுடனும் இருந்தனர். பண்ணையார் கையில் துப்பாக்கி! டேய் சிவண்ணா, வெளியில் வாடா என்றான் பண்ணையார்.

கதவை உடைத்து வாத்தியாரை அடியாட்கள் வெளியே இழுத்து வந்தனர். காரணம் புரியாத வாத்தியார், அய்யா என்னை எதுக்கு இப்படி அடிக்கிறீங்க என்றார். அழுது கொண்டே கீழே விழுந்த வாத்தியாரை அடியாட்கள் வேப்பமரத்தில் கட்டினர். எனக்குத் தெரியாமல் நீ நிலம் வாங்கியிருக்கியா என்று சொல்லிவிட்டுப் பண்ணையார் கொடுமையாகச் சிரித்தான். காரணம் புரிந்து வாத்தியார் கண் கலங்கினார். ஆனால் பண்ணையார் கோபம் அவனுடைய விழிகளில் தெரிந்தது. கட்டி வைத்த வாத்தியார் மீது நாய்களை ஏவினர். நாய்கள் வாத்தியாரைக் கடித்துக் குதறின. அடுத்து வாத்தியாரின் மனைவி சுகுணாவை நிர்வாணமாக்கினர். வாத்தியாரின் ஒன்பது மாதக் குழந்தை ராணியைப் பண்ணையார் பந்தை எறிவது போன்று வீசி எறிந்தான். வாத்தியாரின் ஏழுவயது மகன் பாலகனையும், நான்கு வயது சிவாவையும் நாய்கள் பதம் பார்த்தன. நிர்வாணமாக்கப்பட்ட வாத்தியாரின் மனைவி சுகுணாவை நாய்களும் பண்ணையாரின் அடியாட்கள் என்ற மனித நாய்களும் சூழ்ந்து நின்று சூறையாடின"[6] என்ற பதிவு பண்ணையார்களின் அட்டூழியத்திற்கு ஒரு சான்றாக அமைகிறது.

ஒரு கதை கூறும் போக்கில் கண்ணீரை வரவழைக்கும் ஒரு கிராமத்தில் நடந்த உண்மைச் சம்பவத்தை வெளிக் கொணர்ந்துள்ளார் ஜீவபாரதி. பண்ணையார்களின் எதேச்சாதிகாரப் போக்கும், ஆணவப் போக்கும் ஓர் ஆசிரியரின் குடும்பத்தையே பழிவாங்கி நசுக்கியுள்ள ஆதிக்க நிலையைச் சாடியுள்ளார். நிர்வாணமாக்கப்பட்டுப் பெண்ணின் கற்பு சூறையாடப்பட்டதற்குக் காரணமாகிய அடியாட்களை மனித நாய்கள் என்று கூறிக் கோபக் கனலைப் பாய்ச்சியுள்ளார். கல்விகற்ற வாத்தியாரின் குடும்பத்திற்கே இந்த நிலை என்றால் கல்வியறிவில்லாத பாமர மக்களின் அல்லல் நினைத்துப் பார்க்கத்தக்கது. முதலாளித்துவம் சார்ந்த பண்ணையார்கள் கல்வி கற்றோரைத் துன்புறுத்தியதன் பின்னணி ஆராயற்பாலது. முதலாளித்துவத்திற்கு எதிராக நிற்கும் கல்வியறிவைப் பண்ணையாளர்கள் எதிர்த்துள்ளதனை அறியமுடிகிறது. இதன் அடிப்படையில்தான் பண்ணையார் வாத்தியார் குடும்பத்தைப் பழிவாங்கியதன் காரணம் உணரப்படுகிறது.

‘‘மகனின் இறப்பும், பண்ணையாரும், அடியாட்களும் நிர்வாணமாக்கிச் செய்த கொடுமைகளும், அவமானமும் வாத்தியார் மனைவி சுகுணாவைத் தூக்கில் தொங்க வைத்தது. இத்தனை நடந்தும் காவல் துறை பண்ணையாருக்கே பாதுகாவலாக நின்றது’’[7] என்று ஜீவபாரதி குறிப்பிட்டிருப்பது பண்ணையார்களின் வசம் காவல்துறையும் கைகட்டி ஏவல் செய்த இழிநிலையை உணர்த்துகிறது.

இதில் பண்ணையார்களின் அடாவடித் தனத்துக்குப் பெண்களும் ஆளாகினர் என்ற சமூக நிலையினை ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார். பண்ணையார்கள் எத்தனை மனைவிகள் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம் என்பது எழுதப்படாத சட்டமாக இருந்துள்ளது. பண்ணையார்களின் பாலியல் பலாத்காரத்திற்கு உட்படுத்தப்படும் அபலைப் பெண்கள் வாய்பேசாத மௌனியாக இருக்க வேண்டும். எதிர்த்துப் பேசினால் அவர்கள் கொல்லப்படுவர் என்ற சமூக அவலத்தை ஜீவபாரதி அம்பலப்படுத்தியுள்ளார்.

‘‘இந்த வேளையில் இன்னொரு விபரீதம் நடந்துள்ளது. பண்ணையாருக்கு இரண்டு மனைவிகள். அது போதாதென்று பண்ணையாரிடம் வேலை பார்த்த கங்கையாவின் மனைவியையும் கைவைத்தார். அதைப் பார்த்துவிட்ட கங்கையா, தாயைப் போன்று நேசிக்கும் பண்ணையாரின் முதல் மனைவியால் செய்வதறியாது தவித்தார். அதே நேரத்தில் பண்ணையாரின் இரண்டாம் மனைவி வேலையாளுடன் தவறாக நடப்பதை கங்கையா பார்த்துவிட்டதால், பண்ணையார் சதிசெய்து கங்கையாவையும் கொன்று விட்டான்’’[8] என்று ஜீவபாரதி எழுதியுள்ளார்.

கங்கையாவின் சாவு அந்த ஊர் இளைஞர்களை மேலும் ஆத்திரம் கொள்ளச் செய்தது. பண்ணையாருக்கு முடிவுரை எழுத அந்த ஊர் இளைஞர்கள் புறப்பட்டனர். ஆனால் அதற்கும் முன்பே பண்ணையாரின் தலை துண்டிக்கப்பட்டு இறந்து கிடந்தான் என்று சொல்லப்படுகின்றது. அந்தப் பகுதி மக்களுக்கு அரணாக நின்ற இலட்சுமையா, கொம்பண்ணா, நரேந்திரன் ஆகியோர் இன்றும் இந்தப் பகுதி மக்களுக்காக உழைத்துக் கொண்டிருக்கின்றனர். இந்த மூவரில் ஒருவராகிய நரேந்திரன் என்ற நஞ்சப்பன் இந்த நிகழ்வுகளை ‘பனியில் பூத்த நெருப்பு’ என்ற தலைப்பில் புதினமாக எழுதியுள்ளார் என்று ஜீவபாரதி சுட்டுகின்றார்.

முதலாளித்துவத்தின் அடாவடித்தனத்தை ஒடுக்கிட கம்யூனிசச் சித்தாந்தமே சரியானது என்பதை ஜீவபாரதி இக்கிராமத்தில் நடந்த சம்பவத்தின் வாயிலாக நிறுவியுள்ளார்.

“முதலாளி வர்க்கமே தனக்குப் புதைகுழி தோண்டுவோரான தொழிலாளி வர்க்கத்தைத் தோற்றுவித்து விடுகிறது எனக் கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை குறிப்பிடுகிறது”[9] என்ற இதயகீதனின் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

தொழிலாளர்கள் சேர்ந்து நின்று குரல்கொடுத்தால் முதலாளி வர்க்கத்துக்குச் சாவு மணியாய் அது அமையும் என்கின்றார் ஜீவபாரதி.

“தூங்கித் தூங்கிக் கிடப்பதனால்
துயரங்களைப் பொறுப்பதனால்
தொடைகளிலே கயர்திரிக்கும்
சூழ்ச்சியிங்கே தொடருதடா
எழுந்து நின்று குரல்கொடுத்தால்
இமயம் கூடப் பொடிப்பொடிதான்
அந்த நாளும் தூரமில்லை
அணிவகுப்போம் தோல்வியில்லை”[10]

என்று ஜீவபாரதி எழுதிய கவிதை மாற்றத்தை உருவாக்கும் மார்க்சியச் சிந்தனைக்கு அழைத்துச் செல்கிறது. தொழிலாளர்கள் எழுந்து நின்று போராடினால் இமயமலையும் அச்சம் கொள்ளும் நிலை உருவாகும் என்று சொல்வது உழைப்பாளியின் பலத்தை ஊருக்கு உணர்த்தும் முன்னறிவிப்புச் செயலாகப் பிரதிபலிக்கிறது. அந்த நாளும் வெகுதூரத்தில் இல்லை என்று நம்பிக்கை இரத்தம் பாய்ச்சியுள்ளார்.

**விவசாய முன்னேற்றம் குறித்த சிந்தனை**

“விவசாயிகள் மண்ணோடு நடத்தும் வாழ்க்கைப் போராட்டமே இந்தியப் பொதுவுடைமை முற்போக்கு இலக்கியத்தின் வேர்ப்பகுதியாக உள்ளது”[11] என்பார் ச.மாடசாமி. பொறுமையும், சகிப்புத் தன்மையும் மிக்க விவசாயத் தோழர்களைச் சுரண்டல்வாதிகளே போராட்டத்திற்குத் தூண்டும் காரணிகளாக இருந்துள்ளனர். விவசாயிகளின் துயரத்தையும், உழவுத் தொழிலுக்காக அவர்கள் பட்ட ஆற்றொணா வேதனையையும் ஜீவபாரதி சொல்லத் தவறில்லை.

“கஞ்சிக்கும் கூழுக்கும் காலத்தை ஓட்டிடும்

காரணம் புரிகிறதா? — நாங்கள்

யாரென்று தெரிகிறதா? — எம்மை

வஞ்சித்து வாழ்கின்ற தொப்பைப் பயல்களின்

வாழ்வும் தெரிகிறதா? வளர்ந்த

வழியும் புரிகிறதா”[12]

என்ற கவிதை ஏழை உழைப்பாளிகளின் கூற்றாகவே எழுதப்பட்டது. தொழிலாளர்களே மக்களைப் பார்த்துத் தம் உள்ளக் குமுறலைக் கொட்டுவதாக அமைந்துள்ளது. இக்கவிதையின் மூலம் முதலாளித்துவச் சந்தையில் விலை போகும் ஏழைத்தொழிலாளிகளின் மன உளைச்சல் வெளிக்காட்டப்பட்டுள்ளது.

பழங்கால வழக்கப்படி உற்பத்திச் சாதனங்கள் எங்களுடையது என்று சொல்லிக் கொள்ளும் உடைமைக்காரர்கள், அந்த உற்பத்திச் சாதனங்கள் யாரால், எப்படிப் பயன்படுத்தப்படுகின்றன. எப்படி மதிப்புப் பெறுகின்றன என்பதை மறந்து விடுகின்றனர். உழைப்பாளர்களின் உழைப்பையும், உணர்வையும் மறந்து இலாபமே குறிக்கோளாய்ச் செயல்பட்டு ஏழையரை வஞ்சிக்கும் நிலையை மார்க்சியச் சிந்தனையோடு பாடியுள்ளார்.

“கூலி உயர்வு கேட்டமைக்காக, *1968* டிசம்பர் *25*ஆம் தேதி வெண்மணி கிராமத்தில் தொழிலாளர் வீடுகளுக்குத் தீ வைக்கப்பட்டது. இதில் 44 உயிர்கள் பலியாயின”[13] என்பர். இந்தச் சம்பவம் பொதுவுடைமைச் சிந்தனையாளர்களிடம் மிகப் பெரிய பாதிப்பை உருவாக்கியது.

“வெண்மணி உஞ்சனை

விழுப்புரம் போன்ற

வேதனைச் செயல்கள் எதனாலே

வெறிபிடித்தோரின்

செயல்களுக்கிங்கே

முடிவுரையில்லை அதனாலே!

இங்கே

ஒருசில பேர்கள் கொழுத்திடப் பலபேர்

ஓடாய்த் தேய்வதும் எதனாலே?

ஒரு சில பேரின் சுரண்டலுக்கிங்கே

ஒத்துழைக்கின்றார் அதனாலே!"[14]

என்ற கவிதையில் எதிரும், புதிருமாகத் திகழும் இரண்டு வர்க்க நிலையை உணரமுடிகிறது.

இரண்டு வர்க்கமும் ஒன்றுக்கொன்று மோதிக் கொண்டே இருக்கின்ற கருத்து மோதல்களும், பொருளாதாரச் சிக்கல்களும் நீங்க வேண்டும் என்கின்றார். பாட்டாளிகள் ஒன்றிணைந்தால்தான் சமூக மறுமலர்ச்சி கிடைக்கும் என்பதனைப் பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் உணர்ந்திருந்தனர். அதே கவிதையின் நிறைவுப் பகுதியில்,

"உலகம் முழுதும்

சிவப்பாய் மாறும்

ஒருநாள் அதுதான் திருநாளே

கலகம் சுரண்டல்

கணக்கைத் தீர்க்கும்

காலம் அதுதான் அதுதானே"[15]

என்று தீர்வு சொல்கின்றார். தேசத்தில் பொதுவுடைமை பூக்கும் சிவப்புக் கம்பளம் என்று விரிக்கப்படுகிறதோ அன்று தான் நியாயம் பிறக்கும் என்கின்றார்.

"தொழிலாளி வர்க்கமும், விவசாயிகளும்தான் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முதுகெலும்பு. இந்த இரண்டு வர்க்கங்களின் எழுச்சியும், ஒற்றுமையும் தான் ஒரு தேசத்தை புதிய திசை வழிக்கு இட்டுச் செல்லும் என்பது வரலாறு. அதனால் தான் இந்தியாவில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தோன்றிய போதே தொழிலாளர் அரங்கத்தையும், விவசாய அரங்கத்தையும் உருவாக்கி வளர்த்தது. தொழிலாளர்களுக்காகவும், விவசாயிகளுக்காகவும் இந்தியாவில் கம்யூனிஸ்டுகள் சிந்திய இரத்தமும் ஏராளம், சந்தித்த தாக்குதல்களும் ஏராளம்"[16] என்று தம் கட்டுரையில் ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார்.

உழைப்பாளிகளும், உழவர்களும் முன்னேறுவதே பொதுவுடைமைச் சித்தாந்தத்தின் முக்கியக் கூறு ஆகும். இவர்களின் உழைப்பை உறிஞ்சிக் குடித்தும், ஊழலில் கொழுத்தும் வாழும் முதலாளி வர்க்கம் தானாகத் திருந்த மாட்டார்கள். அவர்களைத் திருத்த வேண்டும் என்கின்றார்.

“ஆயிரமாயிரம் ஏழைகள் உணவுக்கு
அலைகின்றார் வீதியிலே – தினம்
அலைகின்றார் வீதியிலே – சிலர்
ஆயிரமாயிரம் மூட்டையை வீட்டினில்
அடுக்கி வைத்திடவா? – கொள்ளை
அடிக்க நினைத்திடவா?
காட்டிலும் மேட்டிலும் உழைப்பவரிங்கே
காலமும் நலிகின்றார் – தினம்
கண்ணீர் சொரிகின்றார் – இந்த
நாட்டைக் கெடுத்திடும் பதுக்கல் கூட்டம்
நாளும் வளர்ந்திடவா – வீணாய்
நாமும் இருந்திடவா? – இவர்கள்
திருந்த வேண்டுமடா – இல்லை – நாம்
திருத்த வேண்டுமடா”[17]

என்ற கவிதை மார்க்சியத்தை உள்வாங்கி முழுமையாகப் பிரதிபலிக்கின்ற சிந்தனையாக அமைந்துள்ளது. உணவை உற்பத்தி செய்யும் ஆயிரக்கணக்கான ஏழை உழவர்கள் பசியில் துடித்திட, சில முதலாளிகளின் பதுக்கல் இடத்தில் நெல் மூட்டைகள் குவியும் வேதனையை வெளிப்படுத்துகின்றார். காலந்தோறும் காடு மேடுகளில் உழைப்பவர்கள் உடல் காய்ந்து நலியும் போது நாட்டைக் கெடுத்து வாழும் வீணர்கள் சிலர் நாளும் வளர்கின்றார்கள் என்று சொல்வது நாட்டில் நிகழும் வர்க்க பேதத்தின் உச்சம் ஆகும்.

‘இவர்கள் திருந்த வேண்டுமடா – இல்லை நாம் திருத்த வேண்டுமடா’ என்ற கொள்கை வெளிப்பாட்டு அடிகள் “வசதி இருக்கிறவன் தரமாட்டான் – அவனை வயிறு பசிக்கிறவன் விடமாட்டான்”[18] என்ற பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் மறுபதிப்பாகவும் திகழ்கின்றன.

வறுமையில் உழலும் பாட்டாளி வர்க்கத்தின் வாழ்வியல் சிரமங்களைப் பல இடங்களில் ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார். துன்பங்களைத் தாங்கி நடைபோடும் ஏழைவர்க்கம் அதிலிருந்து விடுதலை பெற்று உய்யவும் வழிகள் கூறியுள்ளார்.

“ஒரு புதிய சமுதாயம் காணத் துடிப்பவனே முற்போக்கு எழுத்தாளன்; படைப்பாளி. தான் காண விரும்பும் சமுதாயத்தின் வேட்கைகள், உணர்ச்சிகள், அக்கறைகள், நம்பிக்கைகள், கருத்துகள் ஆகியவற்றை முற்போக்கான முறையிலே அவன் வெளிப்படுத்த வேண்டும்”[19] என்பர்.

உழைப்பவர்கள் உழைத்துக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் உண்ண உணவின்றியும், உடுத்த உடையின்றியும் அலைகின்றார்கள். இந்த அவல வாழ்வினை ஆங்காங்கே ஜீவபாரதி காட்டுகின்றார்.

“சிலுக்குச் சட்டை என்னுடம்பைத்
தொட்டதே இல்லை – நான்
சிரித்ததாக இதுவரைக்கும் ஞாபகமில்லை!
இழுத்து மூடிப் படுப்பதற்குப்
போர்வையும் இல்லை — என்
இடுப்பிலுள்ள அழுக்குத் துணி
போதவும் இல்லை!
காலமெல்லாம் பாடுபட்டேன்
கஞ்சியும் இல்லை – அந்தக்
காரணத்தைத் தெரிஞ்ச பின்பு
தூக்கமே இல்லை”[20]

என்று பாடுபடும் பாட்டாளி வர்க்கம் சாப்பாட்டுக்கே ஏங்கும் நிலையில் உள்ளது சமூகத்தின் இழிவு. முக்கியத் தேவையான உணவு, உடை, இருப்பிடம் அற்று அலையும் ஏழையின் மனக்குமுறல் ஜீவபாரதியின் இப்பாடலால் வெளிப்படுத்தப்படுகிறது.

“பாடுபடாதவன் முன்னேற வேண்டாம் பாடுபடுபவன் முன்னேறியிருக்கிறானா? அவனுடைய அடிப்படைத் தேவைகள் தாம் கிடைத்தனவா? உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க வீடும் பண்ணுகிறவன் அவன். ஆனால் இந்த நாட்டில் ஒன்றுமில்லாமல் போகின்றவனும் அவன்தானா? உழைப்பின் பயன் நாட்டிற்கும் போய்ச் சேரவில்லை. தனக்கும் திரும்பவில்லை. அப்படியென்றால் நடுவில் இருப்பவர் சுரண்டி விட்டார்”[21] என்பார் கி.செம்பியன்.

இச்சுரண்டல் நிலையை வேரறுக்கவே பொதுவுடைமைச் சிந்தனையாளர்களான பாரதி, பாரதிதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் உள்ளிட்ட பல கவிஞர்கள் வரிசையிலே ஜீவபாரதியும் குரல் கொடுத்தார். ஏழைத் தொழிலாளர்கள் விழிப்புப் பெற்று தமக்குள்ளாகவே கேள்விகள் கேட்கும் சிந்தனைக்கு என்று ஆட்படுகிறார்களோ? அப்போதே போராடத் துணிந்து விட்டார்கள் என்று பொருள் கொள்ளலாம்.

“துன்பமென்ற தொடர்கதைக்கு
முடிவுமில்லையா? – எங்கள்
துயரந்தன்னைத் தீர்ப்பதற்கு
வழியுமில்லையா?
இன்பமிங்கே ஒருசிலர்க்கே
என்றும் சொந்தமா? — அந்த
இயற்கை கூட எங்களுக்கு
என்றும் குந்தமா?”[22]

என்று தாங்கள் படுகிற துன்பத்திற்கு முடிவு இல்லையா என்று கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டார்கள் என்றால் முடிவு காணத் துணிந்து விட்டார்கள் என்று நோக்க முடிகிறது. இன்பம் என்பது ஒருசிலர்க்கு மட்டுமே சொந்தமா? என்ற

சிந்தனை தோன்றிவிட்டது என்றாலே பொதுவுடைமை நோக்கிப் பயணிக்கத் தொடங்கிவிட்டனர் என்ற பொருள் இதில் காணக் கிடைக்கிறது.

“கஞ்சி குடிப்பதற்கிலார் – அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்
பஞ்சமோ பஞ்சமென்றே – நிதம்
பரிதவித்தே உயிர் துடிதுடித்துத்
துஞ்சி மடிகின்றாரே”[23]

என்று பாரதி வறுமையின் காரணம் அறியாமல் துடிக்கும் ஏழையரை நினைத்துக் கவிதை படைத்தார்.

“காண்பதெல்லாம் தொழிலாளி செய்தான் அவன்
காணத் தகுந்ததும் வறுமையாம் – அவன்
பூணத் தகுந்ததும் பொறுமையாம்”[24]

தொழிலாளி வறுமையும், பொறுமையும் பூண வேண்டுமா? பொங்கி எழுங்கள் என்று பாவேந்தர் சொல்வார். மேலும் “கொலை வாளினை எடடா, மிகு கொடியோர் செயல் அறவே”[25] என்று கொடியோர்களை வீழ்த்துவது நோக்கமில்லை. கொடிய செயல்களை வேரறுப்பதே நோக்கம் என்பார்.

வறுமை என்றைக்கும் எங்களைத் தொடர்ந்து வாட்டினால் நாங்கள் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. பொறுமை ஒருநாள் புலியாய் மாறும் என்று தொழிலாளத் தோழர்களின் உரிமைக் குரலை ஒருமித்த குரலாக்குகின்றார் ஜீவபாரதி.

“வறுமை எமது
வீட்டை என்றும்
வாடிக்கையாகத் தொடர்ந்தால் – உரியோர்
வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் – எங்கள்
பொறுமை ஒரு நாள் புலியாய் மாறி

உரிய பதிலைக் கொடுக்கும் – அந்த

உலுத்தர் கூட்டத்தை அடக்கும்”[26]

என்கின்றார். ஏய்த்துப் பிழைக்கும் முதலாளி வர்க்கத்தை உலுத்தர் கூட்டம் என்றும் அதைத் தட்டிக் கேட்க உரிமை கொண்டுள்ள அரசாங்கம் அமைதியாக இருந்தால் பொறுமையாக இருக்கும் தொழிலாளர்கள் புலியாய் மாறுவார்கள் என்ற பொதுவுடைமைத் தத்துவத்தை முன்வைத்துள்ளார். விழிப்புணர்வின்றி கொட்டக் கொட்டக் குனியும் உழைப்பாளர்களின் உணர்வினைத் தட்டி எழுப்பிப் போராட்டத்திற்கு வழிவகை செய்துள்ளார்.

“காலமும் உழைத்துழைத்துக்

கைகட்டி நிற்கின்றாயே!

வாழ்விலே மாற்றம் இன்றி

வறுமையில் துடிக்கின்றாயே

வேலைகளின்றி விம்மி

வீதியில் திரிகின்றாயே!

எத்தனை காலம் இந்த

இழிநிலை பொறுப்பாய் தோழா”[27]

என்கின்றார். காலங்காலமாய் இழிநிலை பொறுத்தல் தவறென்று சுட்டிக்காட்டி இனியும் பொறுப்பது முறையில்லை, அதை மாற்ற வேண்டிய கால அவசியமும், பொறுப்பும் தொழிலாளிகளையே சார்ந்தது என்கின்றார்.

“ஏன் இப்படி இருக்கு? — உன்

வாழ்க்கை வீதியில் கிடக்கு? – இது

சுரண்டல் சமுதாய அமைப்பு – இதைத்

தூக்கி எறிவதுன் பொறுப்பு”[28]

என்று சுரண்டல் செய்தும், பதுக்கல் செய்தும் வாழும் இச்சமூக அமைப்பைத் தூக்கி எறிய உழைப்பாளிகளால் தான் முடியும் என்பது ஜீவபாரதியின் அசைக்க முடியாத நம்பிக்கையாக உள்ளது. வெற்றுப் புலம்பலும், வாய்விட்டு அலறுதலும்

தீர்வல்ல என்று கருதிய ஜீவபாரதி முதலாளித்துவ அட்டூழியங்களைத் தட்டிக் கேட்கத் தொழிலாளர்களை ஏவுகின்றார். பாட்டாளி வர்க்கத்தின் ஆத்ம வலிமையையும், போராட்ட வளத்தையும் தூண்டிப் போர்ப்பரணி பாட வைத்துள்ளார்.

"சோசலிசம் ஒரே அடிப்படையில் பெற்றுவிட முடியாது என்பதை ஒவ்வொரு அறிவுள்ள மனிதனும் உணருவான். அதை அடைவதற்குப் பூர்ஷ்வா வர்க்கம் பூராவையும், எல்லா அரசாங்கங்களையும் எதிர்த்து மிகக் கடுமையான ஒரு போராட்டத்தை நடத்த வேண்டும். எல்லாக் கிராம விவசாயிகளுடனும், நகரங்களிலுள்ள தொழிலாளர்களுடைய பிரிக்க முடியாத, உறுதியான கூட்டுறவு கொண்ட ஐக்கியத்தைக் காட்ட வேண்டும். இது மிகவும் மகத்தான ஒரு நோக்கம்"[29] என்பார் லெனின். அந்த அடிப்படையில் தனியுடைமை நீங்கிப் பொதுவுடைமைச் சமுதாயம் உருவாவதைத் தவிர இவ்வுலகிற்கு வேறு மார்க்கமோ, வழியோ இல்லை என்கிறார் ஜீவபாரதி.

"வலியோர்கள் எளியோரைச் சுரண்டும் போது
எளியோர்க்கு வளர்ச்சியெல்லாம் குதிரைக் கொம்பே!
தனியுடைமைச் சமுதாயம் தூள் தூளாகித்
தன்வீடு தன்மனைவி தன்சேய் என்ற
தன்னலத்துப் போக்குகளை வேரறுத்துப்
பொதுவுடைமைச் சமுதாயம் மலர்ந்தாலன்றிப்
போக்கில்லை மார்க்கமில்லை வளர்ச்சியில்லை
அதற்கிங்கே நாமெல்லாம் சபதமேற்றால்
அவ்வழியே நடப்போமென்று உறுதிகொண்டால்
அதுபோதும் இந்நாடு வளர்ச்சி காணும்"[30]

என்று வர்க்க நெறியில் தொழிலாளர் பக்கம் நின்று உறுதிமொழி ஏற்க வைக்கின்றார். இயற்கை பற்றியும், காதல் பற்றியும், இன்னும் பல பாடுபொருள் அமைத்துப் பாடுதற்குப் பல கவிஞர்கள் இருக்கலாம்; இன்னும் பிறக்கலாம். ஆனால் நாளும் உழைத்து நலிந்து போய்க் கிடக்கும் கரங்கள் உயர்ந்திடவே நான் குரல் கொடுப்பேன் என்றும் அவர்தம் தோழமை உணர்வைப் பாடுகின்றார்.

“இயற்கை பற்றியும்

இளநங்கை பற்றியும்

ஆயிரம் கவிதைகள் உண்டு — பாட

ஆயிரம் கவிஞர்கள் உண்டு — ஆனால்

உழைப்பவர் திருக்கரம்

உயர்ந்திட அவர்முகம்

மலர்ந்திட நான் கவி வடிப்பேன் – புது

மாற்றத்தைக் கவிதையில் கொடுப்பேன்”[31]

என்று உள்ளக் கிடக்கையில் உள்ளதை ஒளிவு மறைவின்றி உணர்ச்சிப் பெருக்கால் குமுறியுள்ளார்.

**மத எதிர்ப்பு குறித்த ஜீவபாரதியின் சிந்தனைகள்**

பொதுவுடைமைத் தாக்குறவுகளில் மத எதிர்ப்பு என்பதும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். மதங்கள்தான் பிரிவினை வாதத்திற்கு அடிகோலுவதாய் அமைகின்றன. ஜீவபாரதி படைப்புகளில் மத எதிர்ப்பு என்பது ஆங்காங்கே விரவிக் கிடக்கிறது. சாதி, கடவுள், சடங்கு, நம்பிக்கை போன்ற மன ஓட்டங்களே மதத்தை நிறுவுகின்றன என்பது ஜீவபாரதியின் நிலைப்பாடாக உள்ளது.

“மதம் அபின் போன்றது எனக் கார்ல் மார்க்ஸ் அறிவித்தார். அபின் மனிதன் மதியைக் கெடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாக உயிரைக் கொல்லும். ஆனால் இங்கு பலிபீடம் மனிதனைக் குற்றவாளியாக்கிக் கொன்று அதனை ஞாயப்படுத்திவிடும். உழைப்பவன் ஓடாய்த் தேய்வதற்கு மதம் சொல்லும் காரணங்களே போன ஜென்மத்தின் வினைவிதியே ஆகியனவெல்லாம்”[32] என்பார் கி.செம்பியன்.

ஆதிகால இனமக்கள் இயற்கையின் சக்திகளையும், திடீர் ஆபத்துகளையும் கண்டு அச்சமுற்றுக் கடவுளையும், பேய் பிசாசுகளையும் கற்பிதம் செய்து கொண்டனர். “வாழ்க்கைத் துயரங்களில் சலிப்படைந்த உழைப்பாளிகள் உழைப்பு அவமதிக்கப்பட்டு, உழைப்பாளிகள் தாழ்த்தப்பட்டிருக்கும் சமுதாயத்தில் தற்காலிகச் சமத்துவத்தையும், மனநிறைவையும் தருகிற மதத்தையும், ஆண்டவனையும் நம்பி

மயங்குகிறார்கள். இத்தற்காலிகச் சமத்துவத்தை விரும்பாமல் உண்மையான சுதந்திரத்தை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றல் தம்மிடம் இருக்கிறதென்பதை அவர்கள் உணரவில்லை என்பதையே அவர்களுடைய மதநம்பிக்கை உணர்த்துகிறது. அரசியல் – பொருளாதாரப் போராட்டங்களால் மட்டும் உழைப்பாளி விடுதலை பெற்றுவிட முடியாது. அவன் மனதில் அபினாகச் செயல்படும் போலிச் சுதந்திர உணர்விற்குக் காரணமான மதநம்பிக்கை, ஆன்மீகத் தத்துவங்களின் ஆதிக்கம் ஆகியவற்றினின்றும் விடுதலை பெற வேண்டியது அவசியமாகும்"[33] என்பார் நா.வானமாமலை.

"அல்லா ஏசு ராமருக்காக

அடிதடி இங்கே நடப்பதா? — நாம்

அனைவரும் இந்தியப் புதல்வர்கள் என்ற

அன்புப் பாலம் முறிவதா?

மதம் மொழி சாதிச் சண்டைகளாலே

மடிந்த உயிர்கள் கொஞ்சமோ? — எல்லா

மதங்களும் சிறிது மானுடம் பெரிது

என்ற உணர்வு தோன்றுமோ?"[34]

என்று மதங்களையும், கடவுள் கொள்கைகளையும் சாடி எழுதியுள்ளார் ஜீவபாரதி. மதங்களாலும், மதம் அடையாளப்படுத்துகின்ற கடவுள்களாலும் இந்த உலகத்தில் உயிர்கள் அதிகம் மடிந்துள்ளன. மானுட உணர்வுக்கு மதங்கள் வழி வகுக்கவில்லை என்று குற்றம் சாட்டுகின்றார். அல்லா, ஏசு, ராமர் என்று அவரவர்கள் பற்பல தெய்வங்களைக் கூறிக் கொண்டு அடிதடிகள் நடத்துகின்ற அராஜகப் போக்கை அடியோடு மாற்ற விழைகின்றார். ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிப்பதே மதங்கள் தான் என்றும் அடித்துச் சொல்கின்றார். இந்தச் சிந்தனை,

"சேசு முகம்மது என்றும் – மற்றும்

சிவனென்றும் அரியென்றும் சித்தார்த்தனென்றும்

பேசி வளர்க்கின்ற பேரில் – உன்

பெயரையும் கூட்டுவர் நீ ஒப்ப வேண்டாம்

காசைப் பிடுங்கிடு தற்கே — பலர்

கடவுளென்பார், இரு காதையும் மூடு!

கூசி நடுங்கிடு தம்பி! — கெட்ட

கோயிலென்றால் ஒரு காதத்தி லோடு!"[35]

என்ற பாரதிதாசனின் மத எதிர்ப்புக் கோட்பாட்டோடு ஒத்துப் போகிறது.

"அன்பே சிவம் ஓம் சாந்தி! ஓம் சாந்தி என்ற குரல்களுக்குப் பின் ஒளிந்திருக்கும் இந்து மத சனாதனிகள் நடத்திய திருவிளையாடல்கள் எண்ணில் அடங்காதது. ஏட்டில் கொள்ளாதது. இந்து முஸ்லீம் மக்களின் ஒற்றுமைக்காகக் குரல் கொடுத்த மெய்ஞானி கபீர்தாஸ் பெற்ற அவமானமும், துன்பமும் சொல்லி முடியாத துயரக் கதையாச்சே, நந்தனை நெருப்புக் குழியில் தள்ளிக் கொன்றது அன்பே சிவம் பேசித் திரியும் சைவ மத வெறிதானே. புத்ததரும், மகாவீரரும் அரச குடும்பத்தினர் என்பதாலேயே தப்பினார்கள்"[36] என்ற எம்.பி.மணிவேல் கருத்தும் இங்கே ஒப்பிட்டு ஆராயத்தக்கது.

மதத்தையும், மதத்தின் பேரால் சண்டையை உருவாக்கும் சுரண்டல் பேர்வழிகளையும் ஜீவபாரதி நிறைய இடங்களில் கண்டித்துக் குரல் கொடுக்கின்றார்.

"வீசும் காற்றும் வெண்ணிலாவும்

ஜாதி பார்த்த தில்லையே — அந்த

விண்ணில் தோன்றி மண்ணில் கொட்டும்

மழைக்கு மதங்கள் இல்லையே!

ஜாதி மதத்தால் மனிதர் போடும்

சண்டை ஓய வில்லையே – இங்கே

சகலரும் ஒன்றாய்ச் சேர்ந்து வாழும்

எண்ணம் ஏனோ இல்லையே"[37]

என்ற ஜீவபாரதியின் கவிதை சிந்தனையைத் தூண்டுவதாய் அமைகிறது. இவ்வுலகில் காற்று, நிலா, மழை போன்ற இயற்கை நிகழ்வுகள் சாதியைப்

படைத்ததுண்டா? இவற்றிற்கு மதப்பெயர்கள், சாதிப் பெயர்கள் உண்டா? மனிதன் மட்டும் சாதி, மதம் என்ற பேரில் சண்டையடித்து மண்டையினை உடைத்துக் கொள்கின்றனரே என்ற வேதனையின் வெளிப்பாடாக இக்கவிதையைப் பதிவு செய்துள்ளார். “இது இக்காலச் சூழ்நிலைக்கு ஏற்றதோர் கவிதை. தமிழகத்தின் சில பகுதிகளில் சாதி, மத சச்சரவுகளும், சண்டைகளும், தொடர்ந்து கொண்டுள்ள இந்நேரத்தில் பட்டி தொட்டிகளிலெல்லாம் இந்தக் கவிதை ஒலிபரப்பப்பட வேண்டும். முடிந்தால் இந்தியாவெங்கும் இந்தக் கவிதை மொழிபெயர்க்கப்பட வேண்டும்”[38] என்பார் ஸ்டாலின் குணசேகரன்.

மதங்களையும், மூட நம்பிக்கைகளையும், பெண் கொடுமையையும் எதிர்ப்பதையே நோக்கமாகக் கொண்டு செயல்பட்ட இராசாராம் மோகன்ராய் குறித்து, ‘மூடத்தனத்தை மோதிச் சாய்த்தார்’ என்று புகழாரம் சூட்டியுள்ளார். அந்தக் கட்டுரையில் மதங்களின் போக்கே மனித வளர்ச்சிக்குத் தடையாக உள்ளதனைத் தெளிவுபடுத்திய மோகன்ராயின் கருத்துக்களை மிக நுட்பமாகத் தீட்டியுள்ளார்.

“முஸ்லீம் மதமும், கிறிஸ்தவ மதமும் வெளியிலிருந்து இந்தியாவிற்குள் வந்த மதங்கள் என்று சொல்லப்பட்ட அதே நேரத்தில் இந்த மண்ணில் தோன்றியதாகச் சொல்லப்படும் இந்து மதம் பிராமணர்களின் மதமாக வளர்த்தெடுக்கப்பட்டது. அடித்தட்டு மக்களை இந்து மதம் எட்டிக் காயாகவே எண்ணி வந்தது”[39] என்று ஜீவபாரதி குறிப்பிடுகிறார். இது மோகன்ராயின் சிந்தனையை எளிமைப்படுத்திச் சொல்லப்பட்டதாகும்.

இந்து மதம் என்பது பார்ப்பனியக் கட்டுக்குள் புதைந்து கிடப்பதனை இக்கூற்று உறுதி செய்வதாகக் கொள்ளலாம். மற்றைய மதங்களையும், மனித வளர்ச்சிக்குப் பயன்படுவதாக இராசாராம் மோகன்ராய் கருதவில்லை.

“இந்து மதத்தின் பிற்போக்குத் தனத்தை எதிர்த்தது போன்றே கிறிஸ்தவ மதத்தின் பிற்போக்குச் சிந்தனைகளையும் எதிர்க்க இராசாராம் மோகன்ராய் தயங்கியதில்லை. இதனால் டியோக்கர் ஸ்மித் என்ற பாதிரியார், இராசாராம் மோகன்ராய் சமய நம்பிக்கையற்ற ஒரு அசாதாரணப் பிறவி என்றும், உண்மையான கோட்பாடுகளுக்கும், தெய்வக் கொள்கைகளுக்கும் இராசாராம் மோகன்ராய் எதிரானவர் என்றும் திட்டுவதையே தொழிலாகக் கொண்டிருந்தார்”[40] என்ற இராசாராம் மோகன்ராய் பற்றிய ஜீவபாரதி கருத்து ஆராயற்பாலது.

மதம் குறித்த இரண்டு பார்வைகள் சமூக வழக்கில் இருப்பதைக் காணமுடிகிறது. மதங்கள்தான் மனித நேயத்தைக் குழி தோண்டிப் புதைக்கிறது. ஆண்டான்–அடிமை, உயர்ந்தவன்–தாழ்ந்தவன் என்ற போக்கினை உருவாக்குகிறது என்பது ஒரு பார்வை. மதம், நில உடைமைக் கருத்தியல்களைக் கொண்டிருந்தாலும் அதன் மனிதநேய சாரத்தைப் புரிந்து அதனைச் சூழலுக்கு ஏற்பச் சமூக இயக்கங்களுக்குப் பயன்படுத்த வேண்டும். கீழைத் தேசங்கள் மத நம்பிக்கையின் தேசங்களாக உள்ளன. எனவே மதங்களை முற்றிலும் புறக்கணித்து இயக்கத்தின் நோக்கத்தை நிறைவேற்ற முடியாது. ஒட்டு மொத்தமான மதப்புறக்கணிப்பு சாதாரணமான நம்பிக்கையாளர்களை எதிர்முகாமிற்குத் தள்ளிவிடும் என்பது இரண்டாவது பார்வை ஆகும்.

இவ்விரண்டு பார்வைகளும் விவாதிக்கப்பட வேண்டிய ஆய்வு என்றாலும் பொதுவுடைமைச் சிந்தனைக்கு எதிராகவே பல இடங்களில் மதங்கள் ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிக்கின்றன. எனவே பொதுவுடைமைச் சிந்தனைக்கு மதம் என்பது தடைக்கல்லாகவே இருக்கிறது என்பது ஜீவபாரதியின் தெளிவான பார்வை ஆகும்.

“மதம் குறித்துத் தந்தை பெரியார் நடத்திய தீவிரச் செயல்பாடு தமிழகத்தில் அதிர்வலைகளை ஏற்படுத்தியது. மதவாதிகள் மருண்டனர். முரட்டுத் தனமாகக் கடவுளை மதத்தை நேரடியாக மோதி அழிப்பது பெரியாரின் பகுத்தறிவுப் பாதையாகும்.”[41] எனவே பெரியார் பற்றிய பல செய்திகளை ஜீவபாரதி தம் கட்டுரைகளில் பதிவு செய்துள்ளார்.

“பகத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகியோரை வெள்ளையர் அரசு தூக்கிலிட்ட போது பகத்சிங்கின் கொள்கைதான் என் கொள்கை. எனக்கு அத்தகைய சாக்காடு கிட்ட வில்லையே என்று குடியரசு பத்திரிகையில் பெரியார் தலையங்கம் எழுதினார். பகத்சிங் சிறையிலிருந்த போது அவரது தந்தைக்கு எழுதிய கடிதத்தை ‘நான் ஏன் நாத்திகன் ஆனேன்’ என்ற தலைப்பில் ஜீவா மொழிபெயர்த்துள்ளார். இந்த நூலை மொழி பெயர்த்தமைக்காக ஜீவாவையும், வெளியிட்டமைக்காகப் பெரியார், அண்ணாவையும், காவல் துறையினர் கைது செய்தனர்”[42] என்ற ஜீவபாரதியின் பதிவு பெரியார் மதத்தைத் தீவிரமாக எதிர்த்ததையும், சுயமரியாதை இயக்கத்திலே பெரியார் தம்மை முழுமையும் ஈடுபடுத்திக் கொண்டிருந்தாலும் பொதுவுடைமைக் கருத்தும், பொதுவுடைமைவாதிகளின் தொடர்பும் பெரியாரைப் பெரிதும் பாதித்தன என்பதை ஏற்க வேண்டியுள்ளது.

இதற்கு ஆதாரமாக, "1931 டிசம்பர் 13ல் ஐரோப்பிய நாடுகளுக்குப் பெரியார் பயணம் மேற்கொண்டார். பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களில் ஒருவரான இந்தியாவில் பிறந்த சகலத்வாலா மூலம் பெரியார் ரஷ்யாவிற்குச் செல்லவும் சிங்காரவேலர் ஏற்பாடு செய்தார். 1932 ஜனவரி 1 அன்று தமிழகம் திரும்பிய பெரியார் மார்க்ஸ் – எங்கெல்ஸ் எழுதிய கம்யூனிஸ்ட் அறிக்கை மற்றும் லெனின் எழுதிய 'மதத்தைப் பற்றி' ஆகிய ஆங்கில நூல்களை எஸ்.இராமநாதனைக் கொண்டு தமிழாக்கம் செய்து வெளியிட்டார்"[43] என்ற செய்தி மேலும் வலுச் சேர்ப்பதாக அமைகிறது.

தமிழகத்தில் சிங்காரவேலர் தொடர்பு, லெனின் பற்றிய மதக் கோட்பாடு, ரஷ்யப் பயணம் எல்லாமே பெரியாருக்கிருந்த பொதுவுடைமைச் சிந்தனையை வெளிப்படுத்துவதாக ஜீவபாரதி விளக்கியுள்ளார். மேலும் பெரியாரின் இதழ்களில் மார்க்சியச் சிந்தனைகள் அடங்கிய கட்டுரைகள் பலவற்றை வெளியிட்டுச் சிறை சென்ற வரலாற்றையும் காலம் நமக்கு உணர்த்துகிறது.

1934 ஜனவரியில் வெளிவந்த 'புரட்சி' இதழில் 'நாஸ்திகப் பிரச்சாரம் ஏன்?' என்ற கட்டுரையையும், ஜனவரி 24ல் 'குடியரசு' இதழில் 'இன்றைய ஆட்சி ஏன் ஒழிய வேண்டும்?' என்ற கட்டுரையையும், ஏப்ரலில் 'புரட்சி' இதழில் 'குருட்டு முதலாளித்துவமும் செவிட்டு அரசும்' என்ற கட்டுரையையும் ஜீவா எழுதியதை வெளியிட்டமைக்காக ஆங்கில அரசு பெரியார், பெரியாரின் தங்கை கண்ணம்மா, கட்டுரை ஆசிரியர் ஜீவா ஆகியோரைக் கைது செய்து சிறையில் அடைத்தது என்று ஜீவபாரதி குறிப்பிடுகின்றார்.

இந்தக் கருத்து பெரியாரின் பொதுவுடைமைச் சிந்தனையைப் புரிந்து கொள்ளவும், அவர்தம் இதழ்களான புரட்சி, குடியரசு போன்ற இதழ்களின் வாயிலாகப் பொதுவுடைமைக் கருத்துகளைப் பரப்பினார் என்பதை அறிந்து கொள்ளவும் உதவுகிறது.

மதம் என்பது நிலப் பிரபுத்துவத்தின் உச்சக்கட்ட வளர்ப்புக் குழந்தையாகச் சமூகத்தில் வளர்ந்து வந்ததனை வரலாறு உணர்த்துகிறது. முதலாளித்துவமும், நிலப்பிரபுத்துவமும் கைகோர்க்கும் குழந்தையாக உள்ள மதத்தால் உழைப்பாளிக்கு எந்த லாபமும் இல்லை. இதனால் தான் மதங்களின் தோற்றத்தையும், வளர்ச்சியையும், வரலாற்றையும் சமூகக் காரணிகளாகக் கொண்டு கண்டறிந்து மதத்தை அப்புறப் படுத்தவேண்டும் என்று காரல்மார்க்ஸ் விரும்பினார். மதம் எந்த வகையிலும்

தொழிலாளர்களை மோதி அழித்து விடக் கூடாது என்ற சிந்தனை பொதுவுடைமைவாதிகளுக்கு உண்டு. அந்த அடிப்படையிலேயே மத எதிர்ப்பு உள்ளவராக ஜீவபாரதி தம் படைப்புகளைப் பதிவு செய்கின்றார்.

**ஜீவபாரதியின் கடவுட் கொள்கை**

கே. ஜீவபாரதியின் படைப்புகளில் கடவுள் மறுப்புக் கொள்கையும், சமய எதிர்ப்புச் சிந்தனையும் அழுத்தமாகக் காணப்படுகின்றன. பொதுவுடைமைச் சிந்தனையாளர் சிங்காரவேலரைப் பற்றி எழுத முற்பட்ட கட்டுரையில் மதங்களை அழிப்பதற்கு முனைந்த தலைவர் சிங்காரவேலர் என்று குறிப்பிடுகிறார்.

“கடவுள் – இந்த நான்கெழுத்துச் சொல் பலகோடி மக்களைச் சோம்பேறிகளாக மாற்றியிருக்கிறது. இன்பம், துன்பம் எதுவானாலும் அது அந்தக் கடவுளால் ஏற்படுவதாக நம்புகின்றனர். அவன் எழுதியதை எவரால் மாற்றி எழுத இயலும்? ‘மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்’, ‘எல்லாம் அவன் செயல்’, ‘அவனின்றி ஓர் அணுவும் அசையா’ என்று பலவாறாக எண்ணிக் கொண்டு சுய சிந்தனைகளையும், சுய முயற்சிகளையும் நம்பாமல் வாழ்வோர் கொஞ்சமில்லை. உயிரோடிருக்கும் மனிதனை விட உயிரில்லாத வெற்றுச் சிலைகளை நம்பிக் கொண்டிருப்போர்க்கும் பஞ்சம் இல்லை. பல இலட்சம் செலவிட்டுச் சில ஆண்டுகள் பயின்று பட்டம் பெற்ற டாக்டர்கள் கூட தங்கள் தொழில் திறமையின் மீது நம்பிக்கை இல்லாமல் நோயாளிகளிடம் கடவுளை வேண்டிக் கொள்ளச் சொல்லும் பேதைமையும் நடக்கிறது. அனைத்தையும் தீர்க்கும் வல்லமை கடவுளுக்கு இருக்குமேயானால், இந்தத் தேசத்தில் மருத்துவர்களும், மருத்துவ மனைகளும், மருத்துவக் கல்லூரிகளும் எதற்கு என்ற கேள்விக்குப் பதில் சொல்லியாக வேண்டும். சிக்கல்கள் வருகின்ற போது தமது படிப்பறிவைப் பயன்படுத்த முயலாமல் கடவுளிடம் கையேந்துவது ஏன்? இந்தக் கடவுள் பற்றிய சிந்தனையின் ஆணி வேரையே சிங்காரவேலர் வெட்டிச் சாய்ப்பதை அவரது படைப்புகள் உணர்த்துகின்றன”[44] என்று சிங்காரவேலரின் படைப்புகள் குறித்து ஜீவபாரதி கூறுகிறார்.

வெற்றுச் சிலைகளுக்குக் கொடுக்கும் மரியாதை வறுமையில் வெந்து கொண்டிருக்கும் ஏழைகளுக்குத் தருவதில்லையே என்ற வேதனையும், படித்தவர்கள் கூட, கல்விக்குத் தரும் முனைப்பை விடக் கடவுளுக்குத் தரும் முனைப்பு அதிகம் என்ற வருத்தமும் ஜீவபாரதியின் எழுத்துக்களில் நிமிர்ந்து நிற்கிறது. எவற்றிலிருந்தெல்லாம் மனிதர்கள் விடுபட வேண்டும் என்பதனைச் சிங்காரவேலரின் சிந்தனைக் கோட்பாட்டில் நின்று நிறுவியுள்ளார்.

“இருபதாம் நூற்றாண்டு முடிந்துவிட்ட இந்தக் காலக் கட்டத்திலும் வாயிலிருந்து லிங்கம் வரவழைக்கும் சாமியான்; வெறும் கையிலிருந்து விபூதியை வரவழைக்கும் சாமியான்; தலையில் கொம்பு முளைத்த சாமியான்; பேயை விரட்டும் வல்லமை படைத்த பூசாரி; பில்லி சூன்யத்தை அகற்றும் சூத்திரம் தெரிந்த சூன்யக்காரன்; மந்திரவாதி எனப் பல வேடதாரிகள் உலவி வருகிறார்கள். அவர்களைத் தேவ தூதர்களாகவும் ஆண்டவனின் அவதாரங்களாகவும், கண்கண்ட தெய்வங்களாகவும், குறை தீர்க்கும் மகான்களாகவும், எண்ணுகின்ற மக்கள் அதிகரித்து வருகின்றனர். இந்தப் பித்தலாட்டக்காரர்களின் கால்களைக் கழுவி விடுவதற்கும், கால்களைத் தொட்டு வணங்குவதற்கும் பக்தர்கள் என்ற போர்வையில் மூடப் பட்டாளம் ஒன்று காத்துக் கிடப்பதையும் காண்கிறோம். இந்த மூடத் தனங்களிலிருந்து மக்கள் விடுபட வேண்டுமென்று சிங்காரவேலர் சிந்தித்தார்”[45] என்று சிங்காரவேலரின் சிந்தனைகளை அழுத்தமாக எடுத்துக்கூறும் ஜீவபாரதி அதே நிலைப்பாட்டில் தமது சிந்தனைகளையும் பதிவு செய்துள்ளது நோக்கத்தக்கது.

சாமியார் என்று கூட எழுதாமல் சாமியான் என்று சொல்வதால் போலிச்சாமியார்கள் குறித்த அவர்தம் கோபம் வெள்ளிடை மலையாகத் தெரிகிறது.

“ஆண்டவனில் ஆயிரம் பேர் இங்கே உண்டு
அன்றாடம் பூஜைகளும் நடப்பதுண்டு
ஆனாலும் எளியோரின் வாழ்வு மட்டும்
வீணாகப் போனதுண்டு! இனிமேல் இங்கே
ஆண்டவனை ஆள்வோனை நம்புகின்ற
வீண்போக்கை விட்டொழித்தால் விடியும் அன்று”[46]

என்று தமது கடவுள் மறுப்புச் சிந்தனையைத் தம் கவிதையிலும் படைத்துள்ளார் ஜீவபாரதி.

“இவ்வுலக நியதியை மாற்ற முடியாதென்றும், மறுவுலகச் சக்திகளால் அது ஆட்டுவிக்கப் படுகிறதென்றும் மதம் கூறுகிறது. இவ்வுலக வாழ்க்கையில் மக்களின் துயரங்களுக்கான காரணங்களைக் கண்டறிய விடாமல் மதம் மக்களை மயக்கி வைக்கிறது”[47] என்பார் ந.முத்துமோகன்.

இன்றைய விஞ்ஞானம் தோன்றுவதற்கு முன்னரே தத்துவத் துறையிலேயே உலகாயதக் கருத்துகள் இருந்து வந்திருக்கின்றன. ஆத்திகத்திற்கு அது தோன்றிய காலத்திலேயே நாத்திகக் கருத்து எதிர்ப்பாக எழுந்திருந்தது என்பதை அறிய முடிகிறது.

“கடவுள் இல்லை என்ற கருத்து இந்தியத் தத்துவார்த்த வரலாற்றில் மேலோங்கி இருந்த காலம் ஒன்று இருந்தது. எனவே கடவுளை அரியணை ஏற்ற வந்தவர்கள் கடவுள் மறுப்புக் கொள்கைகளை மூர்க்கமாக எதிர்த்துப் போராடத் தொடங்கினர். இந்தச் சூழ்நிலையில் தான் கடவுள் மறுப்பு என்ற கொள்கையை பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் உயர்த்திப் பிடிக்க வேண்டிய காலத்தின் கட்டாயம் தோன்றியது”[48] என்று தோழர் பாலதண்டாயுதம் சுட்டிக் காட்டுவார். தான் கண்டுபிடித்த கடவுள் முன் மனிதன் தானே மண்டியிட்டானே அதுதான் வரலாற்றுப் பிழை என்பார் ஜீவபாரதி.

“ஆதிகால மனிதன் அறிவு வளர வளரப் புதிய புதிய பொருட்களைக் கண்டுபிடித்தான். அதுபோன்ற முயற்சியின் விளைவால் மனிதன் கண்டுபிடித்த நெருப்பு, காற்று, மண்வளம், அருவி, கடல், வானம் ஆகியவற்றைத் தனது வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டான். காலப்போக்கில் அவற்றை அடக்கி ஆளவும் மனிதன் கற்றுக் கொண்டான். இதற்கு எத்தனையோ சான்றுகளைச் சொல்லலாம். ஆனால் மனிதன் தான் கண்டுபிடித்த ‘கடவுள்’ என்பதற்கு முன்னால் மண்டியிடத் தொடங்கியதுதான் மனிதகுல வரலாற்றின் பின்னடைவாகும்”[49] என்ற ஜீவபாரதியின் எண்ணம் கடவுள் என்பது மனிதனால் உருவாக்கப்பட்டதே. அதுவே மனித வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது என்பதைத் திட்ட வட்டமாகக் கூறிக் கடவுள் கொள்கைக்கு எதிரானவர் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

**சாதிய எதிர்ப்பில் ஜீவபாரதி**

பொதுவடைமைச் சமூகம் காணச் சாதி பெரிய தடைக்கல்லாய் நிற்கிறது. சாதியை ஒழிக்காமல் சமத்துவச் சமுதாயத்தை அமைக்க முடியாது என்பது மார்க்சியச் சிந்தனையாளர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாய் உள்ளது. அதற்காகச் சாதியை எதிர்த்துப் போராடினர்.

“செல்வத்தோடு செல்வம் சேருகிறது. செல்வந்தர்கள் மேலும் செல்வந்தர்கள் ஆனார்கள். கி.பி. எட்டாவது, ஒன்பதாவது நூற்றாண்டுகளில் நிலப்பிரபுத்துவ பிற்போக்கு அம்சங்கள் முன்னுக்கு வருகின்றன. ஜாதி அமைப்பை மீமாம்சம்

வலுப்படுத்திற்று. ஜாதிப் பழக்க வழக்கங்களை மீறினால் அதற்குக் கடுமையாகத் தண்டனை விதிக்கப்பட்டது. மரணத்தை விடப் பயங்கரமானதாகவும், கொடுமையானதாகவும் இருந்தது ஜாதிப் பிரதிஷ்டம். ஜாதியிலிருந்து விலக்கிவிட்டால் அவனுக்கு வாழ்வே இல்லை என்னும் நிலைமையைச் சமூகக் கட்டுப்பாடும் பகிஷ்காரமும் உண்டாக்கிற்று''[50] என்பர். அந்த அளவிற்குச் சமூகத்தில் சாதிப்பின்னல் பிரிக்க முடியாத சிலந்தி வலை போலப் பின்னிக் கிடக்கிறது.

''ஒரு சாதிக்குச் சலுகை. மற்றொரு சாதிக்குக் கட்டுப்பாடு. ஒருவன் உழைப்பவன். மற்றவன் ஏய்ப்பவன். ஒரு சாதிக்காரன் உயர் பதவியில். அவன் வேலை கொடுப்பது அவனது சாதிக்காரனுக்கு மட்டுமே. சாதி அடிப்படையில் தேர்தல். வாக்காளர் அதிகபட்சமாக உள்ள சாதிக்காரனே வேட்பாளர். அவன் திறமையற்றவன். வன்முறையாளன் என்றாலும் கூட அவனே நிறுத்தப்படுவான். இந்தக் கேவலங்கள் இன்றும் நடக்கின்றன. சாதிக்கொரு தெரு. சாதிக்கொரு கோயில். சாதிக்கொரு மொழி என்றெல்லாம் மனித இனத்தில் பாகுபாடுகளைப் பெருக்கியிருக்கிறார்கள்''[51] என்ற குடந்தையானின் கருத்துக்கள் சிந்திக்க வைக்கின்றன.

மனிதப் பண்புகளைக் குழிதோன்டிப் புதைத்து, பாகுபாட்டையும், வேறுபாட்டையும் விதைத்து, வர்க்கப் போரை உருவாக்கும் சாதியை ஒழிக்க வேண்டுமானால் அடக்கப்பட்டவர்களிடமும், ஒடுக்கப்பட்டவர்களிடமும் புரட்சி வெடிக்க வேண்டும் என்கின்றார் ஜீவபாரதி.

''ஒடுக்கப்பட்டவர் ஒதுக்கப்பட்டவர்
உரிமைக் குரல்வளை நெறிக்கப்பட்டவர்
அடக்கப்பட்டவர் அழுத்தப்பட்டவர்
ஆளும் வர்க்கத்தால் மிதிக்கப்பட்டவர்
கொடுமைப்பட்டவர் காலம் முழுமையும்
குனிந்து கொடுத்ததால் குட்டுப்பட்டவர்
அடிமைத் தளைகளை அறுக்க மறந்தவர்
முடிவிலாச் சோகம் முகத்தில் கொண்டவர்
எழுந்தார்! அது தான் புரட்சி

எழுவோம்! அது ஒரு மாட்சி"[52]

என்று புரட்சிக்கு உழைப்பாளிகளை அழைக்கும் மனநிலையை ஜீவபாரதியின் கவிதையில் காணமுடிகிறது. ஒடுக்கப்பட்டு ஒதுக்கப்பட்டவர்கள், சமூகத்தின் ஒரு பிரிவால் அடக்கப்பட்டு வாழ்வில் அழுத்தப்பட்டவர்கள், ஆளும் அரசியல் வர்க்கத்தால் மிதிக்கப்பட்டவர்கள், கொட்டக் கொட்டக் குனிந்த கோழைகளாய் வேலை பார்த்தவர்கள், தொடர்ந்து இத்தகைய இழிநிலையைச் சந்திக்க வேண்டுமா? அத்தகைய ஏழை எளிய வர்க்கங்கள் எல்லாம் கைகோர்த்து எழுந்துவிட்டார்கள். இன்னும் சிலர் யோசித்துக் கொண்டே இருப்பவர்களும், முழுமையாகப் போராடும் தகுதி பெற்று எழுதல் வேண்டும். அதுவே புரட்சி. அதுவே மாட்சி என்று சொல்வது பொதுவுடைமைக்கு வழிவகுக்கும் புதுப்பாதையாகும்.

"சாதிகள் இல்லையடி பாப்பா; — குலத்

தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்"[53] என்றார் பாரதி.

குழந்தைகளிடமிருந்தே சாதியைப் புகட்டும் சமூக மரபை உடைத்தெறிய வேண்டும் என்று பொதுவுடைமைவாதிகள் விரும்பினர். அதனால் தான் கவிஞர் ஜீவபாரதியும் குழந்தைகளுக்காகப் பாடல்கள் சிலவற்றை எழுதும் போதும் சாதி எதிர்ப்பை மையப்படுத்தி எழுதியுள்ளார்.

"ஏழுமலை என்ற பையன்

எட்டாம் வகுப்பு – அந்த

இஸ்மாயிலு எங்க கூட

ஒன்பதாம் வகுப்பு

அந்தோணியும் சுந்தரமும்

பத்தாம் கிளாசு — ஆகப்

பத்துப் பேரும் போய்வருவோம்

பத்து மைலு"[54]

எனச் சிறுவர்களுக்காக எழுதிய கவிதையில் மாணவர்கள் மத்தியில் சாதி வந்து விடக்கூடாது என்பதைப் பக்குவமாகப் பதியம் போட்டுள்ளார். மதங்கள், சாதிகள்

என்ற அடையாளத்தைத் தாண்டி நாம் மாணவர்கள் என்ற ஒருமித்த சிந்தனையே அவர்களிடம் வேண்டும் என்கின்றார். அதுமட்டுமல்ல வாழ்வியலில் மட்டும் வகுப்புபேதம் பார்த்தல் கூடாது என்பதில்லை. படிக்கின்ற வகுப்புகளில் கூட எங்களுக்குப் பேதமில்லை என்று மாணவர்களைச் சொல்ல வைக்கின்றார்.

"ஏழுமலை கைகளோடு
இஸ்மாயில் கையும் – அந்த
இஸ்மாயில் கைகளோடு
சுந்தரம் கையும்
ஆக மொத்தக் கைகளோடு
அந்தோணி கையும் – இந்தத்
தேசமொத்த கைகளோடு
சேரத் துடிக்கிறோம்!"[55]

என்று ஜீவபாரதி சொல்வது மாணவர் சமூகம் படிக்கின்ற வகுப்புகளில் மட்டும் கரங்கள் கோர்த்தால் போதாது. ஒருமித்த சமூகச் சிந்தனைக்காகத் தேசமே ஒன்றாய் நிற்றல் வேண்டும் என்பதை வலியுறுத்துவதாய் அமைகிறது.

"இந்திய நாடு ஒரு குறிப்பிட்ட மதத்திற்கோ, இனத்திற்கோ, வர்ணத்திற்கோ உரியது அல்ல. அப்படி நினைப்பதும், பேசுவதும், செயல்படுவதும் அறியாமையின் காரணமாக இருக்கலாம். அல்லது ஆதிக்க வெறியினால் இருக்கலாம். உண்மைகள் திட்டமிட்டே மறைத்து தேசத்தைச் சீர்குலைக்கும் கொடிய செயலாகும் இது"[56] என்று எம்.பி.மணிவேல் குறிப்பிடுவார்.

வருணாசிரமம் என்பதெல்லாம் இடைச்செருகலாய்ச் சில மனித நேயமற்ற மிருகத் தன்மை கொண்டவரால் கொண்டு வரப்பட்ட கொடும் பாவச் செயலாகும். கலப்பில்லாமல் ஒரு சமூக அமைப்பு உருவாகியிருக்கவே முடியாது. அதனால்தான் பொதுவுடைமைவாதிகள் வருணாசிரமத்தை எதிர்க்கின்றனர். அதனால்தான் காந்தியைக் கூட சில நேரங்களில் எதிர்க்க வேண்டிய சூழ்நிலை பொதுவுடைமைவாதிகளுக்கு ஏற்பட்டது. தீண்டாமைக்கு எதிராகக் காந்தி குரல் கொடுத்தாலும் சாதியை உருவாக்கக் காரணமாக இருக்கும் மதங்களை ஆதரிப்பவராகக் காந்தி இருந்தார் என்பதனை மறுக்க முடியவில்லை.

இவரிவர் இன்னின்ன தொழில்கள் செய்தல் வேண்டும் என்ற வர்ணாசிரமத்தை ஆதரிப்பவராகக் காந்தி இருந்துள்ளார். இந்தச் சூழ்நிலையில்தான் காந்தியின் மேல் பற்றுக் கொண்டிருந்த ஜீவா காந்தியின் முன்னாலேயே வர்ணாசிரமக் கொள்கைகளை எதிர்த்துப் பேச நேரிட்டது என்று ஜீவபாரதி குறிப்பிடுகின்றார்.

“சிறாவயலில் காந்திஜி பெயரில் தாம் ஆசிரமம் நடத்துவதாகவும் அதற்குக் காந்தியடிகள் வருகை தரவேண்டும் என்றும் ஜீவா கோரிக்கை வைத்தார். ஜீவாவின் கோரிக்கையை ஏற்று காந்திஜி சிறாவயல் ஆசிரமத்திற்குச் சென்றார். ஜீவாவின் இளமைத் தோற்றமும், வாதத்திறமையும் காந்திஜியை வியக்க வைத்தது. இறுதியில் காந்திஜி, ஜீவா உங்களுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது? என்று கேட்டார். இந்தத் தேசம்தான் எனக்குச் சொத்து – இது ஜீவாவின் பதில். ஜீவாவின் பதிலைக் கேட்டுக் காந்திஜி திகைத்து விட்டார். திகைப்பிலிருந்து விடுபட்ட காந்திஜி, இல்லை – இல்லை — நீங்கள் தான் இந்தத் தேசத்தின் சொத்து என்றார். அந்த ஆசிரமத்தில் நூற்கப்பட்ட ஐம்பதாயிரம் கெஜம் நூலை நினைவுப் பரிசாகக் காந்திஜிக்கு ஜீவா வழங்கினார். அதில் பத்தாயிரம் கெஜம் நூல் ஜீவாவே நூற்றதாகும். இங்கே காந்திஜிக்கு ஒரு வரவேற்பு மடலும் ஜீவா வாசித்தளித்தார். அதில் வர்ணாசிரமத்தைக் கண்டித்து எழுதியிருந்தார். ‘மானகிரி’ என்ற கிராமத்தில் காந்திஜி தங்கியிருந்தபோது ஜீவா அவரைச் சந்தித்து வர்ணாசிரம தர்மம் பற்றி விவாதித்தார். காந்திஜியின் வர்ணாசிரமக் கொள்கையும், பெண்கள் பற்றிய மதிப்பீடும் முற்போக்குத் தன்மை கொண்டதல்ல என்ற முடிவுக்கு ஜீவா வந்தார். அதனால் தேச விடுதலை, கதராடை, கைராட்டினம் ஆகியவற்றிற்கு காந்திஜியையும், சமூகச் சீர்திருத்தங்களுக்குப் பெரியாரையும் ஜீவா வழிகாட்டியாகக் கொண்டார்”[57] என்று எழுதும் ஜீவாபாரதியின் கட்டுரைச் செய்தி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும். தாங்கள் காண விரும்பும் பொதுவுடைமைச் சித்தாந்தத்திற்கு முரணாக இருக்கும் தலைவர் யாராக இருந்தாலும் தூக்கியெறியத் தயங்க மாட்டார்கள் என்ற நிலைப்பாட்டினை இந்தப் பதிவு நன்கு உணர்த்தும்.

பிற்காலத்தில் பெரியாரின் கொள்கைகளிலிருந்தும் மறைமலையடிகளின் கொள்கைப் பிடிப்பிலிருந்தும் ஜீவா விடுபட்டுள்ளதை, “காந்தியத்தால் கவரப்பட்டுப் பொது வாழ்க்கையில் நுழைந்த ஜீவா, காந்தியத்தின் வர்ணாசிரமக் கொள்கையைக் கண்டு சாடினார். பெரியாரின் சுயமரியாதைக் கருத்துக்களில் பற்றுக் கொண்ட ஜீவா, பெரியார் நிலை மாறியபோது எதிர்த்தார். மறைமலையடிகளின் தனித்தமிழில் தன்னை இழந்த ஜீவா மறைமலையடிகளின் ஆங்கில மோகத்தைக் கண்டு கொதித்தார். பொதுவுடைமை இயக்கத்தை உயிர் மூச்சாகக் கொண்ட ஜீவா இந்தியா மீது சீனா

போர் தொடுத்தபோது சமரசமின்றிக் கண்டித்தார். இது தமிழக அரசியல் வரலாற்றில் ஜீவா மேற்கொண்ட தேர்ந்த தெளிந்த சுயநலமற்ற வழிமுறையாகும்''[58] என்னும் குறிப்பில் ஜீவபாரதி விளக்குகிறார்.

சில காரணங்களுக்காகச் சில தலைவர்களை மனத்திலே பதிய வைத்து அவர்கள் வழியிலே நடந்தாலும் அவர்களின் கொள்கைத் தடம் சற்றுத் தடுமாறும் வேளையில் பொதுவுடைமைவாதிகள் கொதித்து எழுவர் என்பதனை இச்செய்தி வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. பொதுவுடைமைவாதிகள் வர்க்கப் போரில் எதிர் கொள்கிற மிக முக்கியப் பிரச்சினை சாதியாக உள்ளது. மதத்தை விட சாதியே மக்களை வாட்டி வதைக்கிறது. தமிழகத்திலும், இந்தியாவிலும் மதம் கூட மாறிக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. சாதி மாறிக் கொள்ள வாய்ப்பில்லை. சித்தர்களின் பாடல்கள், வள்ளலாரின் சிந்தனைகள், இராசாராம் மோகன்ராய், பெரியார் ஈ.வெ.ரா, பாரதி, பாரதிதாசன், அம்பேத்கார், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், ஜீவா, தமிழ் ஒளி போன்ற சாதிய மறுப்பாளர்களின் படைப்புகள் சாதியை அழிக்கப் பல வழிகளில் முயன்றுள்ளன. அந்த வரிசையில் ஜீவபாரதியும் பல முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்.

சாதியால் பொதுவுடைமைக் கவிஞர் ஜீவா பட்ட துயரங்களையும், சாதியை ஒழிக்க அவர் மேற்கொண்ட போராட்டங்களையும் ஜீவபாரதி பல இடங்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

“தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த தோழன் மண்ணடி மாணிக்கத்தைக் கோவிலுக்குள் அழைத்துச் சென்று அதனால் நண்பன் ஒருவனால் மூர்க்கத் தனமாக ஜீவா தாக்கப்பட்டார். தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஜீவா உழைப்பதை அவருடைய தந்தை எதிர்த்ததால் மேற்கொண்டு படிக்காமல் வீட்டை விட்டு ஜீவா வெளியேறினார். அதன்பின் சேரன்மாதேவியில் வ.வே.சு அய்யர் நடத்திய ஆசிரமத்தில் வேலைக்குச் சேர்ந்த ஜீவா அங்கும் சாதியப் பாகுபாடு கடைபிடிக்கப்பட்டதால் அங்கிருந்தும் வெளியேறினார். அதன் பின் வைக்கம் போராட்டம், சுசீந்திரம் தாணுமாலயன் ஆலயப் பிரவேசப் போராட்டம், வ.வே.சு ஆசிரமப் போராட்டம் எனத் தொடர் போராட்டங்களில் ஜீவா ஈடுபட்டார். இவற்றையெல்லாம் ஜீவா பத்தொன்பது வயதிற்குள் செய்து முடித்து விட்டார்''[59] என்ற ஜீவா பற்றிய ஜீவபாரதியின் பதிவு சிந்திக்க வைக்கிறது. பொதுவுடைமை மிக்க படைப்பாளிகளும், தலைவர்களும் சின்ன வயதிலேயே சாதி எதிர்ப்புப் போராட்டங்களில் குதித்துள்ளனர் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. சாதி எதிர்ப்பில் ஈடுபட்ட படைப்பாளிகளின் வாழ்வியலைத் தொடர்ந்து எழுதி வரும் ஜீவபாரதியின் எழுத்திற்கு இப்பதிவு வலுவாகவும், அரணாகவும் அமைகிறது.

திருநங்கைகளிடம் உள்ள பொதுமைப் பண்புகள் கூட மனிதர்களிடம் இல்லையே என்று வேதனைப்படுகிறார் ஜீவபாரதி. கூவாகத்திலே இவர்கள் ஆண்டுக்கொரு முறை நடத்தும் திருவிழாவில் சாதிமதம் கடந்து அவர்கள் கொண்டாடும் ஒற்றுமையைப் பலபடப் பாராட்டிப் பேசியுள்ளார். அவர்களிடம் உள்ள நேயமும், அன்பும், நெஞ்சை நெகிழச் செய்யும் ஒற்றுமையும் மற்றைய மக்களிடம் இல்லையே என்று கவலைப் படுகின்றார்.

‘‘இந்துக் கோயில்களுக்குக் கிறித்தவர் செல்வது அரிது. கிறித்தவர் தேவாலயங்களுக்கு இந்துக்கள் போவது அரிது. இந்துவும், கிறித்தவரும் பள்ளிவாசலுக்குச் செல்ல விரும்புவதில்லை. அதே போன்று முகம்மதியர் இந்துக்கோயிலுக்கோ, சர்ச்சுக்கோ செல்வது கிடையாது. தாழ்த்தப்பட்ட மக்களைக் கோயிலுக்குள் அனுமதிக்க மறுக்கும் கொடுமைகளும் நடக்கிறது. கிறித்தவ மதத்தைத் தழுவியர்களும் கூட உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி கடைப்பிடிக்கப்படுவதாக அண்மைச் செய்திகள் அறிவிக்கின்றன’’[60]. இப்படி மதங்களும், சாதிகளும் முண்டியடித்துக் கொண்டு மனிதப் பண்பைச் சீரழிப்பதைக் கவனத்தில் கொண்டே திருநங்கைகளின் சீரிய பண்பைப் பாராட்டிப் பேசுகின்றார்.

‘‘தமிழகத்தில் விழுப்புரம் மாவட்டத்தில் உளுந்தூர்ப் பேட்டைக்கு அருகில் கூவாகம் என்ற கிராமத்தில் ஒவ்வொரு ஆண்டும் சித்ரா பவுர்ணமி அன்று மிகப்பெரிய திருவிழா நடக்கிறது. இந்தத் திருவிழாவில் தான் சாதி கடந்து, மதம் கடந்து லட்சக்கணக்கான மக்கள் கலந்து கொள்கின்றனர். இதில் மும்பையைச் சேர்ந்தவரும் உண்டு. முதுகுளத்தூரில் பிறந்தவரும் உண்டு. இந்து மதத்தைச் சார்ந்தவரும் உண்டு. முகம்மதியரும் உண்டு. சித்ரா பவுர்ணமி அன்று இங்கு கூடி திருவிழாக் கொண்டாடி தங்கள் திறமைகளை வெளிப்படுத்தும் போட்டிகளில் கலந்து கொண்டு மகிழ்ச்சியோடு தங்கள் இடத்திற்குத் திரும்புவர்’’[61] என்ற நடைமுறை உண்மையை எடுத்துச் சொல்லும் ஜீவபாரதியின் பதிவு சிந்திக்கத்தக்கது.

சமூக அவலங்களைச் சந்திக்கும் திருநங்கையர்களிடம் இருக்கும் அன்பும், அறிவும், ஒருமித்த சிந்தனையும் கேடுகெட்ட மானுடத்திற்கு இல்லையே என்பது கண்டிக்கத்தக்கது. சாதி, மதம் மட்டுமின்றி இவர்களிடம் இனத்துவேசம் கூட இல்லை என்கின்றார். இவர்களைப் பற்றிய சமூகத்தின் பார்வை மாற வேண்டும் என்பதோடு அரசும் இவர்களின் கோரிக்கையைக் கவனத்தில் கொண்டு செயல்பட வேண்டும் என்கின்றார். அப்போதுதான் ஒற்றுமையின் சின்னமாக இருக்கும்

அவர்களின் புயல்போன்ற வாழ்க்கையில் தென்றல் வீசும் என்ற ஜீவபாரதியின் சிந்தனை கவனிக்கத்தக்கது.

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவனுமில்லை ஜாதியில்
இழிவுகொண்ட மனிதரென்பது
இந்தியாவில் இல்லையே"[62]

என்ற சமத்துவநிலை உருவாக வேண்டுமென்று ஆசைப்பட்டார் பாரதியார். ஆனால் அவருடைய தாசனாகிய பாவேந்தர் பாரதிதாசன் சமூகநிலையைக் கண்ணுற்று வெதும்பி,

"தாழ்ந்தவர் என்றொரு
சாதியுரைப்பவன் தீயன் – அவன்
தன்னுடலைப் பிறர் சொத்தில்
வளர்த்திடும்பேயன்"[63]

என்று சாதிக் கொடுமையின் பேரழிவைக் கனல் கக்கும் சொற்களால் கவிதை செய்தார்.

சாதி, மத, இன, மொழி, கடவுள் ஆகியவற்றின் பெயரால் தங்களுடைய உள்மன உணர்வுகளையும், ஆசைகளையும் நிவர்த்தி செய்ய இன்றைய விஞ்ஞான யுகத்தில் கூட மனிதர்கள் முயற்சிப்பது வியப்பையும், வேதனையையும் அளிக்கிறது என்கின்றார் ஜீவபாரதி. இத்தகைய இழிநிலைகளை நினைத்து மனம் பதைபதைத்த ஜீவபாரதி 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்ற தலைப்பில் தான் கண்ணுற்ற காட்சிகளைக் கருத்துருவாக்கம் செய்துள்ளார்.

"உயர்ந்த குடியில் பிறந்து, மிகச் சிறந்த வழக்குரைஞராகத் திகழ்ந்து அனைத்தையும் உதறிவிட்டுத் தேச விடுதலைக்காகப் பாடுபட்டுச் சிறையில் செக்கிழுத்து வரலாற்றில் 'கப்பலோட்டிய தமிழன்' என்று பதிவு செய்யப்பட்டிருக்கும் வ.உ.சிதம்பரம் பெயரைக் கூட 'வ.உ.சிதம்பரம் பிள்ளை' என்று சிதம்பரனாருக்கும் சாதிப் பட்டம் சூட்டிப் பார்க்கின்ற நிகழ்வுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

தமிழுக்காகப் பாடுபட்டு மொழி உணர்வை மக்கள் மனதில் விதைத்துச் சென்ற கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் பெயருக்குப் பின்னால் கூட சாதியைச் சேர்த்து 'கி.ஆ.பெ. விசுவநாதம் பிள்ளை' என்று குறிப்பிடுகின்ற இழிவுகளும் சமீபத்தில் நடக்கத் தொடங்கி இருக்கின்றன''[64] என்ற ஜீவபாரதியின் கூற்று நம்மைச் சிந்திக்க வைக்கிறது.

ஒரு காலத்தில் சமூக விழிப்புணர்வுக்காகவும் போராட்ட உணர்வுகளைத் தூண்டுவதற்காகவுமே இதழ்கள், துண்டுப் பிரசுரங்கள், சுவரொட்டிகள் போன்ற சாதனங்கள் பயன்பட்டன. இன்று சுய விளம்பரங்களுக்காகவும், தலைவர்களைத் துதி பாடுவதற்காகவும், சாதியத்தை மார்தட்டிச் சொல்லி விளம்பரம் தேடுவதற்காகவுமே பயன்படுத்தப்படுகின்றன. அவலம் மிகுந்த இத்தகைய சமூகச் சூழ்நிலை கண்டு கொதிப்படைந்த ஜீவபாரதி சில நடமுறைச் சம்பவங்கள் வாயிலாக எள்ளி நகையாடுகின்றார்.

''அண்மையில் தஞ்சையில் ராஜராஜசோழனின் சதயவிழா நடந்தது. இந்த விழாவின் போது தஞ்சையில் ஒட்டப்பட்டிருந்த சுவரொட்டிகளில் 'வீர வன்னிய ராஜராஜன்', 'ராஜராஜ தேவேந்திரன்', 'ராஜ உடையார்', 'கள்ளரின வேந்தர் ராஜராஜ தேவர்' என்று ராஜராஜ சோழனைத் தங்கள் சாதிக்காரனாக மாற்றிக் காட்டும் வாசகங்கள் இருந்தன. தங்கள் மனதில் இருக்கும் சாதி அழுக்குகளை மறைந்த மகத்தான மனிதர்கள் மீதும் பூசி வரலாற்றுப் பிழைகளைச் செய்யாமல் இருப்பது எதிர்காலத்திற்கு நல்லது''[65] என்கின்றார் ஜீவபாரதி.

இக்கூற்று மண்ணின் விடியலுக்காகவும் கலை, பண்பாட்டுக்காகவும் உழைத்த தலைவர்களைக் கூட இன்றைய கேடு கெட்ட சமூக அமைப்பு விட்டு வைக்கவில்லை. எல்லாச் செயல்பாட்டுக்கும் சாதிய வளையமிட்டுப் பேசுவது வர்க்க முரண்பாடுகளுக்கு வழிவகுப்பதாய் அமைகிறது. தங்கள் சுயநலத்திற்காகச் சாதியத்தை வலியப் பிடித்து அரணாக அமைப்பவர்களை இனம் கண்டு ஒடுக்குவதே எதிர்காலச் சமூகத்திற்கு உகந்தது என்பது ஜீவபாரதியின் சிந்தனையாகும்.

பள்ளிகளில் கூட மாணவர்களைச் சாதி பார்த்து உட்கார வைக்கும் நிலையை இன்னும் பல இடங்களில் காண முடிகிறது. அதற்கு அப்பள்ளியில் பணியாற்றும் ஆசிரியர்கள் மட்டும் காரணமில்லை. அந்த ஊரில் வாழும் அதிகார வர்க்கத்தின் ஆளுமைப் போக்கும் ஒரு காரணமாகும். அந்த அடிப்படையில் தென்னாற்காடு

மாவட்டத்தில் குளத்தூர் என்ற கிராமத்திலுள்ள அரசுப் பள்ளியில் நடந்த அநியாயம் பற்றியும், அதற்குத் தீர்வு கண்ட தலைமை ஆசிரியர் தனுஷ்கோடி ராமசாமி பற்றியும் ஜீவபாரதி தம் கட்டுரையில் வெளிப்படையாக எழுதியுள்ளார்.

“சாதிகள் இல்லையடி பாப்பா என்று சொல்லிக் கொடுக்கின்ற பள்ளியிலும் சாதிப் பாகுபாடா? இது தகுமா? இது தொடர்ந்தால் இந்தத் தேசம் உருப்படுமா? அனைவரையும் சமமாகப் பாவிக்கும் பழக்கம் இங்கே எப்போதுதான் வரும்? நம்மைப் போன்ற பாரதி பற்றாளர்களே இந்தக் கொடுமைகளைக் கண்டும் காணாமல் இருந்தால் பின் எவர்தான் இந்த இழிநிலையை மாற்றுவர்? போன்ற வினாக்கள் அந்தத் தலைமை ஆசிரியர் உள்ளத்தில் தொடர்ச்சியாக எழுகின்றன. இறுதியில் ஒரு முடிவுக்கு வருகிறார். அனைத்து மாணவர்களையும் ஒன்றாக அமர வைக்கிறார். தலித் மாணவர்களுக்கோ இது புதுமை. மற்ற மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் இது வெறுப்பான செயல். விளைவு? ஊர் உயர் சாதியினர் அந்தத் தலைமை ஆசிரியரின் இந்தச் செயலைக் கண்டிக்கின்றனர். இறுதியில் தாக்குவதன் மூலம் அந்தத் தலைமை ஆசிரியரைப் பணிய வைத்திடலாம் என்று ஆதிக்க சாதியினர் முயல்கின்றனர். அவர்களின் முயற்சியைத் தனி மனிதராக நின்று தகர்த்ததுடன் தன்னுடைய புதுமைச் செயலை நிலைநிறுத்திக் காட்டினார் அந்தத் தலைமை ஆசிரியர். அவர்தான் எழுத்துக்கும், செயலுக்கும் இடைவெளியில்லாமல் வாழ்ந்து சிறந்த தனுஷ்கோடி ராமசாமி”[60] என்று சாதியை ஒழிக்கப் போராடிய ஆசிரியரும், எழுத்தாளருமான தனுஷ்கோடி ராமசாமியைப் பற்றிக் கூறுகின்றார்.

இந்தப் பதிவு தனுஷ்கோடி ராமசாமி போன்று ஆசிரியர்கள் மத்தியில் சாதியை ஒழிக்கும் எண்ணம் வரவேண்டும் என்ற சிந்தனையை எழுப்புகிறது. ஊரே எதிர்த்தாலும் ஒன்றைச் சாதிக்கப் போராடும் குணம் வேண்டும் என்பதையும் இது பிரதிபலிக்கிறது. சமூகச் சழக்குகளை நீக்க ஆசிரியர் எவ்வாறு முன்வர வேண்டும் என்பது பற்றிப் பாடம் கற்பிக்கும் நிகழ்வாக இச்சம்பவம் அமைந்துள்ளதை இப்பதிவின் வாயிலாக அறிய முடிகிறது. அதிலும் குறிப்பாகப் பாரதியின் பற்றாளர்கள் என்றால் அவர்களுக்கிருக்கும் கடமை பற்றியும் எடுத்தியம்புவதாக இந்தப் பதிவு அமைந்துள்ளது.

பிராமணன் கடவுளின் வாயிலிருந்து பிறந்தான். சத்திரியன் தோளிலிருந்து பிறந்தான். வைசியன் தொடையிலிருந்து பிறந்தான். சூத்திரன் பாதத்திலிருந்து பிறந்தான் என்ற கட்டுக்கடங்காத கதைகள் எல்லாம் சமூகத்தில் அவிழ்த்து விடப்பட்டன.

“சூத்திரனுக்கு ஒரு நீதி – தண்டச்

சோறுண்ணும் பார்ப்புக்கு வேறு ஒரு நீதி

சாத்திரம் சொல்லிடுமாயின் – அது

சாத்திரம் அன்று – சதி என்று

கண்டோம்”[67]

என்பார் பாரதி. சில ஊர்களில் சாதியின் கோரத் தாண்டவத்தால் பிறந்த குழந்தைகளுக்குப் பெயர் வைப்பதில் கூட பிரிவினைவாதமும் அடக்குமுறையும் நிகழ்வதைக் காணமுடிகிறது. திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் கன்னியாகுமரிக்கு உட்பட்ட பகுதியில் அடக்கப்பட்ட மக்கள் பல்வேறு வேதனைகளைச் சந்தித்துள்ளனர்.

திருவிதாங்கூர் சமஸ்தானத்திற்கு உட்பட்ட குமரிப் பகுதியில் தாழ்த்தப்பட்டவர்கள் காலணி அணியக் கூடாது. பெண்கள் இடுப்புக்கு மேலே எந்தத் துணியும் அணியக் கூடாது. பசுமாடு வளர்க்கக் கூடாது. ஆண்கள் தலையிலே துண்டைக் கட்டக் கூடாது. அந்த மக்கள் வைத்திருக்கும் தடிக்கும் வரி. தாலிக்கும் வரி. தலைக்கும் வரி. வளர்க்கும் தாவரத்திற்கும் வரி. அரிவாளுக்கு வரி என எத்தனை வரி உண்டோ, அத்தனை வரிகளையும் திருவிதாங்கூர் மன்னன் விதித்து மகிழ்ந்தான் என்று ஜீவபாரதி வேதனையோடு குறிப்பிடுகின்றார்.

ஏழை, எளியவர்களையும் ஒடுக்கப்பட்டவர்களையும் துன்புறுத்திப் பார்ப்பது சமஸ்தான மன்னர்களின் பொழுதுபோக்காக இருந்துள்ளது என்பதனை ஜீவபாரதியின் கட்டுரை வாயிலாக அறிய முடிகிறது.

கன்னியாகுமரிக்கு அருகில் பூவண்டத் தோப்பில் எளிய குடும்பத்தில் பிறந்த முடிசூடிய பெருமாள் என்ற முத்துக்குட்டி இதற்கெல்லாம் மாற்று முரணாகத் தோன்றி அந்தக் கிராமத்தையே எழுச்சி மிக்க கிராமமாக மாற்றியுள்ளார். பெயர் கூட சமூகத்திற்கேற்ப வைக்கப்பட்ட இழிநிலை இங்கே நிலவி வந்ததனை ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார்.

முடிசூடிய பெருமாளுக்குப் பெற்றோர் இட்ட பெயர் ‘முத்துக்குட்டி’ என்று குறிப்பிட்டுள்ளார். அடித்தட்டு மக்களைத் தட்டி எழுப்பி அவர்களுக்குத் தன்னம்பிக்கை உணர்வூட்டி அவர்களை அடிமைத் தளையிலிருந்து விடுபட

வைத்தவன் முத்துக்குட்டி என்று எழுதியுள்ளார். சமூக மூடப் பழக்க வழக்கத்தையும் வேரறுத்த முத்துக்குட்டியின் வரலாற்றை ஜீவபாரதி தம் படைப்பில் எழுதியுள்ளது வரவேற்கத் தக்கதாய் உள்ளது.

“ஆடு கோழி ஆகியவற்றைத் தெய்வங்களுக்குப் பலியிடக் கூடாது. காணிக்கை செலுத்துதல் வேண்டாம். காவடி எடுப்பதும் தேவையில்லை என்று வழிபாட்டில் புதுமையைப் புகுத்தினான் முத்துக்குட்டி. சின்னஞ்சிறு கிராமங்களில் சிறிய கோயில் கட்டி அங்கே தீபத்தை மட்டும் ஏற்றி வைத்து உருவ வழிபாட்டை முன்னிலைப்படுத்தினான் முத்துக்குட்டி. அனைத்துச் சாதியினையும் இணைத்து ஒன்றாக அவர்களைக் கடலில் குளிக்க வைத்து, ஒன்றாகச் சாப்பிட வைத்துச் சாதித் தடைகளுக்கு முத்துக்குட்டி சமாதி கட்டினான். ஆம், அன்றே சமபந்தி போஜனத்தை முத்துக்குட்டி அறிமுகப்படுத்தினான். தாழ்த்தப்பட்டவர்கள் தலையில் துண்டு கட்ட ஆரம்பித்தனர். பெண்கள் உடல்முழுவதும் சேலை கட்டத் தொடங்கினர். இந்த எழுச்சி மேட்டுக் குடியினைத் திகைக்க வைத்தது”[68] என்கின்ற ஜீவபாரதியின் கட்டுரைக் கருத்து பொதுவுடைமைச் சிந்தனைக்கு உழைத்த மனிதரின் தூய பொதுவுடைமைப் பண்புக்கு வலுச் சேர்ப்பதாக உள்ளது.

ஜீவபாரதியின் கண்ணோட்டத்தில் சாதி, மதம், இறைக் கொள்கை போன்றவை மூடப்பழக்க வழக்கம் சார்ந்தவையே ஆகும். மூட நம்பிக்கைகளை அகற்ற விஞ்ஞான அறிவைப் பரப்பும் வேலையை விரிவுபடுத்த முயற்சிக்கின்றார். கல்வி நிலையங்கள் உள்ளிட்ட பெரிய நிறுவனங்களில் சாதியை அகற்ற நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்று தம் படைப்புகளில் கருதுகோள் விதிக்கின்றார். அதனால்தான் குழந்தைகளுக்குக் கவிதை நூல் ஒன்றை வெளியிட்ட ஜீவபாரதி அஃறிணை உயிர்களுக்கு இருக்கும் அன்பு கூட மனித வர்க்கத்திற்கு இல்லையே என்று வருத்தம் கொள்கின்றார்.

“ஜாதி சொல்லி எறும்புக் கூட்டம்
சண்டை போடல — தங்கள்
குலத்தைச் சொல்லி குரங்குக் கூட்டம்
குத்திச் சாகல!
மதங்கள் பேசி மாடுகளுக்குள்
மண்டை உடையல — தங்கள்

இனத்தைச் சொல்லி எந்த நாயும்
இரத்தம் சிந்தல
இவைகள் எல்லாம் பள்ளிக் கூடம்
போனதே இல்ல – ஆனா
எல்லாம் கற்ற மனிதனுக்குப்
புத்தியே இல்ல''[69]

என்று அங்கதம் செய்யும் இந்தக் கவிதை கோபத்தின் வெளிப்பாட்டில் குமுறுவதாக அமைந்துள்ளது. பள்ளிக்கூடம் என்னவென்றே தெரியாத ஆடு, மாடு, நாய், குரங்கு போன்ற கால்நடை உயிரினத்தில் சாதி, மதப் பிரிவினை உண்டா? என்ற கேள்வி மனித வர்க்கத்தின் போக்கைச் சம்மட்டி கொண்டு அடிப்பதாக உள்ளது. பள்ளி, கல்லூரிகளில் படித்துப் பட்டம் பெற்ற மனிதர்கள் தானே சாதி, மதப்பிரிவினால் உழல்கின்றனர். அவர்களுக்குப் புத்தியே இல்லை என்று கோபக்கணை வீசும் ஜீவபாரதியின் கவிதை சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது.

சாதி ரீதியாகத் தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களை – வர்க்க ரீதியாக ஒடுக்கப்பட்டுள்ள ஏழை மக்களைச் சாதிய ஆதிக்கத்திற்கு எதிராகவும், அதனை மறைமுகமாகத் தூண்டும் ஆளும் அதிகாரத்திற்கு எதிராகவும் கிளர்ச்சி செய்யும் ஓர் அணியாக உருவாக்க வேண்டும் என்று ஜீவபாரதி கருதுகின்றார். ஒடுக்கு முறையின் ஊற்றுக்கண் நிலவுடைமை சார்ந்த நிலப் பிரபுக்களிடமிருந்தே உருவாகின்றன என்பதை மார்க்சியக் கண்கொண்டு ஜீவபாரதி அணுகியுள்ளார்.

**மூடநம்பிக்கை குறித்த எதிர்ப்புச் சிந்தனை**

பொதுவுடைமைச் சமூக வளர்ச்சிக்குத் தடையாக மூட நம்பிக்கை திகழ்கிறது.

''நெஞ்சு பொறுக்குதில்லையே – இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்
அஞ்சியஞ்சிச் சாவார் – இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே
வஞ்சனைப் பேய்கள் என்பார் – இந்த

மரத்தில் என்பார்; அந்தக் குளத்தில் என்பார்

துஞ்சுது முகட்டில் என்பார் – மிகத்

துயர்ப்படுவார் எண்ணிப் பயப்படுவார்''[70]

என்பார் பாரதியார்.

''மூடப் பழக்க வழக்கம் தாங்கி நடைபெற்றுவரும்

ஊதையின் துரும்பு போல் அலைக்கழிப்போம்

பின்னர் ஒழித்திடுவோம் புதியதோர் உலகம் செய்வோம்''[71]

என்பார் பாரதிதாசன்.

''மார்க்சியக் கவிஞன் – மார்க்சியத் தாக்கம் பெற்ற கவிஞன் – பகுத்தறிவுக் கவிஞன் – மனித நேயக் கவிஞன் என்பவன் பொதுவாக மக்களைத் துன்பத்தில் ஆழ்த்தும் சமயம், சாதி, கடவுள், விதி, மூடநம்பிக்கை இவற்றை எதிர்த்துப் போராடுபவனாகவும் தான் இருப்பான்''[72] என்ற கருத்து சிந்திக்கத் தக்கது.

விதி, மூடப்பழக்க வழக்கம், சடங்கு, சாத்திரம் போன்றவற்றில் நம்பிக்கையில்லாதவராக ஜீவபாரதி திகழ்கிறார்.

''தலையெழுத்தே! தவப்பயனே

எனும் நிலை ஓட்டுவோம்

உழைப்பவர் வலிமையை

உலகுக்குக் காட்டுவோம்

விதிவிட்ட வழியென்ற

வீண்பேச்சை நீக்குவோம்!

மதிகொண்டு சமதர்ம

நிலையிங்கே ஆக்குவோம்!''[73]

என்ற கவிதையில் ஜீவபாரதி தலையெழுத்து, தவப்பயன், விதி என்று பேசித் திரிவதெல்லாம் வீண்பேச்சு என்று சொல்கின்றார். இவற்றைக் களையும் புத்திக் கூர்மையே சமதர்ம உலகைப் படைக்கும் என்கின்றார்.

“உலகிலேயே மூத்த குடி தமிழர்கள் என்றும், பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம் ஆகியவற்றிலும், கட்டடக்கலை போன்றவற்றிலும் ஆதித் தமிழர்கள் சிறந்தவர்களாகத் திகழ்ந்தனர் என்றும் தொல்பொருள் ஆய்வுகள் உணர்த்துகின்றன. உலகிலேயே தமிழர்களுக்கு இணையாக வேறு எந்த இனமும் இது போன்று வாழ்ந்ததாக எந்தச் சான்றும் இதுவரை கிடைக்கவில்லை”[74] என்று சொல்லும் ஜீவபாரதி இன்றைய தமிழினத்தை நினைத்துக் கொதிப்படைகின்றார். ஏமாளிகளாகவும், கோமாளிகளாகவும் இருக்கும் தமிழர்களை நினைத்து வேதனையை வெளிப்படுத்துகின்றார்.

“இன்றும் சென்னை பேருந்து நிறுத்தங்களில் சிறிது நேரம் நின்றால், யாராவது ஒரு மனிதர் நம் கையில் ஒரு அச்சிடப்பட்ட துண்டுக் காகிதத்தைக் கொடுப்பார். அதை விரித்துப் பார்த்தால் அதில் சுப்ரபாதம் போன்ற ஏதோ ஒன்று அச்சிடப்பட்டிருக்கும். அதன் கீழே ‘இந்த நோட்டிசைப் படிக்கும் நீங்கள் இதில் நூறு பிரதியை அச்சிட்டு வழங்க வேண்டும். இல்லையெனில் தெய்வக் குத்தம் ஏற்பட்டு உங்கள் தலை சுக்கு நூறாக வெடித்து விடும் என்றும் அச்சிடப்பட்டிருக்கும். சிலர் பயந்து கொண்டு அச்சிட்டுக் கொடுப்பதும் உண்டு”[75] என்று சொல்கின்ற இந்தப் பதிவு நடைமுறையில் நாம் கண்கூடாகப் பார்ப்பதாக அமைகிறது. இதில் இந்த மதம், சமயம் என்றில்லை. பல்வேறு மதத்தைச் சார்ந்தவர்கள் மக்களைக் குழப்பத்தில் தள்ளுகின்றனர். போலி நம்பிக்கைகளை விதைப்பதும், பொய்புரட்டுகளை அவிழ்த்து விடுவதும், மந்திர தந்திரங்களைச் சொல்லி மக்களை மயக்குவதுமான கேடுகெட்ட சமூக நிலையைப் பார்த்துத் தம் கட்டுரையில் இவ்வாறாக எதிர்ப்புக் குரல் விடுத்துள்ளார். இத்தகைய ஏமாற்றுப் பேர்வழிகள் காலந்தோறும் கடைவிரிக்கக் காத்திருப்பர். இவற்றிலிருந்து விடுபட வேண்டுமென்றால் சமூக விழிப்புணர்ச்சியும், போராட்டங்களைச் சந்தித்து எதிர்க்குரல் கொடுக்கிற துணிவும் வேண்டும் என்பதே அவர் நோக்கும் சிந்தனையாக உள்ளது.

**விழாக்கள் குறித்த பார்வை**

விழவு என்ற சொல்லின் அடிப்படையில் மகிழ்ச்சி என்பதனைக் குறிக்கவே விழாக்கள் கொண்டாடப்பட்டன. அனைவரும் நிறைவான இன்பம் பெறுவதற்காக வந்த விழாக்களில் கூட வர்க்க பேதம் உருவானது. பணக்கார வர்க்கத்திற்கு விழா மகிழ்ச்சியாகவும், அடிப்படை வசதி கூட இல்லாமல் அவதிப்படும் ஏழையர்க்கு விழா

துன்பமாகவும் உள்ளது. இதனால் ஜீவபாரதி விழாக்கள் மேல் நம்பிக்கை குறைந்தவராகக் காணப்படுகிறார்.

"சம்பளமோ வாங்குவது கொஞ்சம் – வீட்டுச்

சரக்குகளை வாங்குதற்கே பஞ்சம் – பெரும்

வம்புகளில் மாட்டி வைக்க

வந்ததையா — வந்ததையா

தீபாவளி – இந்தத் தீபாவளி"[76]

என்று பாடுகின்றார்.

அடித்தள மக்களின் ஊதியப் பிரச்னையும், நிறுவனங்களில் பணியாற்றும் ஊழியர்களின் ஊதியப் பிரச்னையும் விழாக்களுக்குத் தடையாக இருப்பதனை ஜீவபாரதி உணர்கின்றார். அதுவும் தீபாவளி என்பது காசுக்கு வேட்டு வைக்கும் அர்த்தமில்லாப் பண்டிகை என்பதால் வம்புகளில் மாட்டிவைக்க வந்ததையா என்கின்றார்.

தமிழர்களின் தன்னிகரற்ற பண்பாட்டின் அடையாளமாகத் திகழ்வது பொங்கல் திருநாள். மத உணர்வு, இன உணர்வு போன்றவற்றைத் தாண்டித் தமிழகத்தின் ஒரு பொதுமைத் திருவிழாவாகத் திகழ்வது பொங்கல் திருநாள்.

"உழவர் சமூகத்தின் வளமைத் திருவிழாவே பொங்கல். தமிழரின் வாழ்வோடும், வளத்தோடும் செழித்த உயரிய பண்பாட்டின் வெளிப்பாடே பொங்கல். எந்த மத வரையறைக்குள்ளும் அடங்காத வேளாண்மை வாழ்வின் உற்பத்தி சார்ந்த வளமைச் சடங்குகளின் தொகுப்பே பொங்கல். இதிலே அவதார அம்சங்கள் ஏதுமில்லை. நிறுவனப்படுத்தப்பட்ட கடவுள் தன்மை இல்லவே இல்லை. மறு உலக மேன்மை, ஆன்மீகத் தேடல் என்ற எதுவுமே இல்லை. தேடினாலும் கிட்டவே கிட்டாது"[77] என்ற தேவ.பேரின்பனின் சிந்தனை குறிக்கத்தக்கது.

இறைக்கோட்பாடு கடந்து இயற்கையையும், வேளாண்மையையும், உழவனையும், உழைக்கும் மாடுகளையும் கொண்டாடும் திருவிழாவே பொங்கல் திருநாள். புது அறுவடை, புதுநெல், புத்தரிசி, புதுப்பானை, புதுப்பொலிவு என்று தைப்பொங்கல், தமிழர் திருநாள் என்று அடையாளப்படுத்தப்படுகிறது. நலம் பொலிவதும், வளம் பொலிவதும், உறவுகளைச் சந்தித்து மகிழ்ச்சியை

வெளிப்படுத்துவதுமே பொங்கலின் அடிப்படைத் தத்துவம் என்றாலும் இன்றைக்கு நசிந்து வரும் வேளாண்மைத் தொழிலைக் கண்ணுற்ற ஜீவபாரதி பொங்கல் திருவிழாவையும் மறுத்துச் சில கவிதைகளை எழுதியிருப்பது ஆராயற்பாலது.

“வருடம் ஒருமுறை
வருகின்ற பொங்கலுக்கு
வாழ்த்தென்ன வேண்டிக் கிடக்கு – நம்
வாழ்க்கையோ ரோட்டோரம் நடக்கு – எத்தனை
வருடங்கள் ஆனாலும்
வறுமைக்கு முடிவில்லா
வாழ்க்கையில் பயனுண்டா நமக்கு? – சும்மா
வாழ்த்தினால் போதுமா? எதுக்கு”[79]

என்று கேள்வி எழுப்புகின்றார்.

இது பொங்கல் மீதான வெறுப்பு என்று தோன்றவில்லை. எளிய பண்பாட்டு அடையாளமாகத் திகழும் பொங்கலைக் கூட எளியோர்கள் மகிழ்ச்சியில் கொண்டாட இயலவில்லையே என்ற வேதனையின் வெளிப்பாட்டுச் சிதறலாகவே இந்தக் கவிதை பொருள் கொள்ள வைக்கின்றது.

“உண்பதற்கு ஓரினமும்
உழைப்பதற்கு ஓரினமும்
உள்ளவரை எங்கள்நிலை மாறுமா? – இங்கே
உண்டு தூங்கிக் காலந் தன்னை
ஓட்டுகின்ற கூட்டமெல்லாம்
உழைக்கவில்லை என்றால் சிறையில் பூட்டணும் – அதுவரைப்
பொங்கலென்ப தெங்களுக்கு இல்லையே – தைப்
பொங்கலென்ப தெங்களுக்கு இல்லையே”[79]

என்று பொங்கல் கொண்டாடப்பட வேண்டிய காலச்சூழலைத் தீர்வாகச் சொல்கின்றார். உழைப்பவராக ஓரினமும், உண்டு கொழுப்பவராக வேறினமுமாக இருக்கிற வர்க்கப் பாகுபாடு உள்ளவரை பொங்கல் விழா கொண்டாடுவதில் அர்த்தமில்லை என்ற வாதத்தை முன் வைக்கின்றார். வெறுமனே உண்பதும், உறங்குவதுமாக இருந்து கொண்டு அடுத்தவர்கள் உழைப்பையே உறிஞ்சி வாழும் எதேச்சாதிகாரக் கூட்டத்தை இனம் கண்டு சிறையில் பூட்டுகிற காலம் என்றைக்கு மலருமோ அன்றுதான் உழைப்பவர்களுக்கான உரிய ஊதியமும், உரிய அதிகாரமும், சரிசமமாகக் கிடைக்கும் என்று நினைக்கின்றார். இயற்கையைப் பாடவேண்டும். எழில் பூத்த வயல்வெளிகளைக் கவிதையாக எழுத வேண்டும் என்பதுதான் என் ஆசை என்றாலும் அந்நிலங்களில் பாடுபட்டு வாழும் உழைப்பாளிகளின் துயரத்தைச் சொல்வது அதைவிட முன்னுரிமையல்லவா என்ற பொருளில் கவிதையை வடித்துள்ளார்.

"வயல்வெளிப் பரப்பையும்
நெல்மணிக் கதிரையும்
வரைந்திட எழுதுகோல் பிடித்தேன் – புது
வரிகளைத் தேடி நான்துடித்தேன் – ஆனால்
வயல்களில் உழைப்பவர்
நெல்மணி கொடுப்பவர்
வாடிடும் நிலைகண்டு துடித்தேன் – புது
வரிகளால் கவிதையை வடித்தேன்"[80]

என்று தொழிலாளர்கள் படும் பாட்டைத் தன் பாட்டில் சுட்டுவதே தன் கடமை என்று முன்னிறுத்துகின்றார். சாமான்யனுக்கும் பொதுவுடைமைச் சித்தாந்தம் என்றைக்கு நடைமுறை வாழ்வியல் ஆகி சமநிலை வாழ்க்கை அமைகிறதோ அன்றைக்கே விழாக்களும், பண்டிகைகளும் அர்த்தமுள்ளதாகத் திகழும் என்பதே ஜீவபாரதியின் அழுத்தமான சிந்தனையாகும். அதுவரைக்கும் வெற்றுக் கோரிக்கைகளும், ஆடம்பர விழாக்களும், அர்த்தமற்ற பண்டிகைகளும் அவசியமில்லை என்பது ஜீவபாரதியின் விழாக்கள் குறித்த கொள்கையாகும்.

**விலைவாசி ஏற்றம் குறித்த பார்வை**

சமூகத்தில் வாழும் மனிதன் தன் உயிரைக் காக்கவே போராட வேண்டிய நிலையில் உள்ளான். "முதலாளித்துவம் மனிதனைச் சரக்காகவும், மனித உறவுகளைப் பணம், காசு, பட்டுவாடா உறவாகவும் மாற்றிவிட்டது என மார்க்சியம் குற்றம் சாட்டுகிறது. முதலாளித்துவம் என்ற பிரம்மாண்டமான உலகளாவிய வேலைப்பிரிவினை ஏற்பாட்டின் கீழ் மனிதன் சுதந்திர அடிமையாக மாற்றப்பட்டு விடுவதை மார்க்ஸ் – ஏங்கெல்ஸ் தமது அறிக்கையில் (1848) விளக்கினர்"[81] என்பர். மூலதனத்தின் நலனுக்கு உட்பட்டதாகவே தனிமனிதனின் முயற்சியையும், சுதந்திரத்தையும் உழைத்துச் சேர்த்த சொத்தையும் மார்க்சிய அடிப்படையில் வரையறுக்க இயலும்.

முதலாளித்துவப் போக்கிலேயே தனி மனிதன் உருவாவதாக இச்சமூகம் அமைக்கப்படுகிறது. அந்த அடிப்படையில் தான் முதலாளிகளின் சர்வாதிகார நோக்கிற்கு ஏற்றவாறே உற்பத்திப் பொருள்களின் விலையும் நிர்ணயிக்கப்படுகிறது. உழைத்து உருவாக்கிய அடிப்படைப் பொருள்களைப் பெறக் கூட வணிகச் சந்தையில் தொழிலாளர்கள் சிரமத்தை அனுபவிக்கின்றனர்.

"ஏறிடும் விலையின் ஏற்றத்தைக் கண்டு
எனக்கொரு சந்தேகம் – இனிப்
பாரிலே உழைப்போர் யாருமே உணவுப்
பண்டத்தை நாடாமல் – முன்பு
செடிகளைப் பிடுங்கி உணவெனக் கொண்ட
சீரிலா வாழ்வுதான் – மறு
படியும் வந்துதான் விடியுமோ என்று
எனக்கொரு சந்தேகம்"[82]

என்று இச்சமூக நிலையினை எள்ளி நகையாடுகின்றார் ஜீவபாரதி.

"எண்ணெய் விலை கூடிப் போச்சு
என்ன விலை குறையலாச்சு

கண்ணீர்தான் சொந்தமாச்சு

கவலைகள் துணையாய் ஆச்சு

எண்ணிலாக் குடும்பம் இங்கே

ஏழ்மையில் துடிக்க லாச்சு"[83]

என்று கவலை கொண்டு கவிதை படைத்துள்ளார். பொருட்களின் விலை ஏறுகிறதே ஒழியத் தரம் உயரவில்லை. அதிலும் ஊழல்வாதிகளின் அட்டூழியக் கலப்படம் தான் விஞ்சி நிற்கின்றது.

"அரிசியில் கல்லை

அதிகமாய்க் கலந்து

சிமிண்டோடு சாம்பலைச்

சேர்த்துக் கலந்து

கலப்படம் மூலமே

காசுகள் சேர்த்துக்

கறுப்புப் பணங்களால்

காரியம் செய்து

பாரத தேசத்தில்

பலபேர் இன்று

பெரும்புள்ளிக் காரராய்

பெருந்தகைக் காரராய்

சிலபேர்கள் இப்படி வளர்கிறார் – திருட்டுச்

செய்கையால் வாழ்க்கையில் உயர்கிறார்"[84]

என்று தரமில்லாத பொருளுக்குக் காசுகள் சேர்க்கும் கருப்புப் பணக்காரர்களின் முகமூடியைக் கிழித்துக் காட்டுகின்றார். இவர்களே சமூகத்தின் பெரும்புள்ளிகளாக இருப்பது சமூக அலங்கோலம் ஆகும். இதனால் அவதிப்படும் கூலித்

தொழிலாளர்களின் குடும்பநிலை எண்ணத் தக்கதாய் அமைகிறது. வீட்டில் உணவுக்கும், உடைக்கும் அல்லல்படும் அவர்களின் நிலை சிந்திக்கத்தக்கது.

''தட்டுமுட்டுச் சாமான் இல்லை
தாரத்தின் கழுத்தில் கூடப்
பொட்டுத் தங்கம் இல்லை
போகிற போக்கைப் பார்த்தால்
எட்டடிக் குழியைத் தவிர
எதுவுமே சொந்தம் இல்லை''[85]

என்று ஏழைத் தொழிலாளர்களின் குடும்பம் நாளும் வாடும் பரிதாப நிலையைப் பாட்டாகப் படம் பிடித்துள்ளார். அல்லல் படும் விவசாயிகளின் அவலம் நீங்கக் கூலியைக்கூட உயர்த்தித் தருவதில்லை; அதுவும் மறுக்கப்படுகிறது.

''கூலிதனைக் கொஞ்சம் கூட்டித் தாவென்றாலே
குடிசையிலே போட்டுக் கொளுத்துறான் – தான்
குற்றவாளி இல்லை என்கிறான் – அவன்
காலமெலாம் தூங்கும் காரணத்தாலிங்கே
கண்ட பயலெல்லாம் மிரட்டுகிறான்! — தன்
கத்தியைக் காட்டி உருட்டுறான்''[86]

கேள்வி கேட்கும் ஏழைத் தொழிலாளிகளைத் தீயிட்டுக் கொளுத்தியும், கொலை செய்தும் அச்சுறுத்தக்கூடிய இழிநிலையல்லவா இங்கே நீடிக்கிறது என்பதனைத் தன் கவிதை மூலம் தமிழ்ச் சமூகத்திற்குக் காட்டுகின்றார். இந்நிலை மாறப் புரட்சி தோன்றினால் ஒழிய சமூக மாற்றத்திற்கோ, பொதுவுடைமை தோன்றுவதற்கோ வாய்ப்பில்லை. எனவே உழைக்கும் வர்க்கத்தைத் தோழமை உணர்வோடு அழைக்கின்றார்.

''உன்னைநம்பி இருக்குதிந்த தேசமே – இதை
உணர்ந்துகொள்ள மறந்துவிட்டால் நாசமே!

எத்தனை காலம் தொட்டு இருப்பது வறுமைப் பட்டு

கண்களில் நெருப்பை மூட்டு! கைகளில் வலுவைக் காட்டு''[87]

என்று தோழர்களை அழைக்கின்றார். தொழிலாளர்கள் ஒன்று சேரும் வரை ஊதியமும் கிடைக்காது. உரிமையும் கிடைக்காது. இதுவே ஜீவபாரதியின் ஆழ்மனச் சிந்தனையாகப் பிரதிபலிக்கிறது. எனவேதான் தொழிலாளியின் குரலாகப் பாமரன் பாடுவதாய் உருவகம் செய்து தன் உள்ளக் குமுறலைக் கொட்டுகின்றார்.

``பாமரன் தான் பேசுகிறேன் கேளுங்க – இந்தப்

பாரதத்தின் நிலைமையினைப் பாருங்க!

கதிரறுக்க அரிவாள்களைக்

கைகளிலே எடுத்துவந்தோம்

இதுவரைக்கும் மாற்றமில்லை நாட்டிலே — ஒரு

மாற்றமில்லை இதுவரைக்கும் நாட்டிலே – இனி

கொடுமைகளை வேரறுக்க

குவலயத்தில் மாற்றம் வர

கைகளிலே அரிவாள்களை எடுப்போம் – புது

மாற்றமதை நாங்களிங்கே படைப்போம் – என்று

குரல்கொடுத்து எனது பேச்சை முடிக்கிறேன் – சேர்ந்து

குரல்கொடுக்க வாரீகளா பார்க்கிறேன்''[88]

என்று சொல்வது 'கொலை வாளினை எடடா மிகு கொடியோர் செயல் அறவே' என்ற பாரதிதாசன் சிந்தனையைப் பிரதிபலிப்பதாக அமைகிறது. கொடியவர்களை அழிப்பது நோக்கமல்ல. கொடியவர்களின் கொடுஞ்செயலை அழிப்பதே நோக்கமென்று பாரதிதாசன் எப்படிச் சொன்னாரோ, அதே கண்ணோட்டத்துடன் ஜீவபாரதியும் அணுகுகின்றார். 'குவலயத்தில் மாற்றம் வரக் கைகளிலே அரிவாள்களை எடுப்போம்' என்று சூளுரைக்கின்றார். மாற்றம் வரவேண்டும் என்கின்ற என் உரத்த குரலுக்கு

எத்தனைபேர் சேர்ந்து குரல் கொடுக்க வருகிறீர்கள் என்று பார்க்கிறேன் என்று சொல்வது அவருடைய ஆதங்கத்தை வெளிப்படுத்துவதாய் அமைகிறது.

தொழிலாளர் அனைவரும் ஒன்று சேர்ந்து குரல் கொடுக்க வேண்டும் என்பதை உணர்த்துவதாகக் கொள்ளலாம். ஒற்றுமையின்றி அவிழ்த்துவிட்ட நெல்லிக்காய் மூட்டைகளாய்ச் சிதறுகின்ற பலமிழந்த உழைப்பாளிகள் குறித்துக் கவலை கொள்வதாகவும் அமைகிறது.

சமூக மாற்றமும், பொதுவுடைமைச் சமூகமும் பூத்திடத் தொழிலாளர்களே முதன்மையாக அங்கம் வகிக்கும் விடியல் நாயகர்களாய் ஜீவபாரதிக்குத் தெரிகிறது.

"காலச் சக்கரம் சுழல்கிறது — பல
காரியம் காத்துக் கிடக்கிறது! — தோழா
சும்மா நீ தூங்காதே! — வரும்
துயரத்தில் மூழ்கி ஏங்காதே!
துணிந்தால் நமக்குத் துன்பமில்லை — என்றும்
துணியா மனிதர்க்கு இன்பமில்லை!
இனியும் கைகட்டி இருப்பதா? — நாட்டில்
ஏழ்மைக்கு இனி இடம் கொடுப்பதா?"[89]

என்று சொல்வதன் மூலம் கைகட்டி அடங்கி வாழ்வதால் மாற்றம் நிகழாது. துணிந்து போராடினால் தான் ஏழ்மையை அழிக்க முடியும். எல்லார்க்கும் எல்லாமும் பொது என்ற எழில்மிகுந்த சமூகத்தை உருவாக்க முடியும் என்ற கொள்கையுடைய கே.ஜீவபாரதி பொருளியல் சிந்தனை மிக்கவராகவும், கடவுள் மறுப்பாளராகவும், சாதி, மதப் பற்று இல்லாதவராகவும், வறுமைக்குத் தீர்வு காண்பவராகவும், மூடப் பழக்க வழக்கத்தை எதிர்ப்பவராகவும் திகழ்கின்றார்.

## தொகுப்புரை

சமுதாயம் என்பது பல்வேறு பண்பு நலன்களைக் கொண்டதாகவே விளங்குகிறது. சமுதாய மாற்றத்துக்கான போராட்டக் கருவியாகவே இலக்கியத்தைப் பொதுவுடைமைவாதிகள் படைத்தனர். பொதுவுடைமைப் படைப்பாளியான ஜீவபாரதி தம் எழுத்துக்களில் பாமரன், பாட்டாளி, உழைப்பாளி போன்றோரின் வாழ்வியல் சிக்கல்களைப் பொருளாதாரக் கண்கொண்டு நோக்கியுள்ளார். சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும், இன, மதப் போராட்டங்களையும் அக்கறையோடு அலசி ஆராய்ந்துள்ளார்.

தமிழகத்தின் பல்வேறு வட்டாரங்களில் நிகழும் சாதிப் பிரச்சினைகளின் கொடுமைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். சுயநலத்திற்காகச் சாதியைப் பயன்படுத்த நினைப்பவர்களை அடையாளம் கண்டு ஒடுக்குவதே எதிர்காலச் சமூகத்திற்கு உகந்தது என்பது ஜீவபாரதியின் சிந்தனையாகும்.

பண்ணையார்களின் முதலாளித்துவப் போக்கைச் சொல்லித் தொழிலாளர்களின் ஒற்றுமைக்குக் குரல் கொடுத்துள்ளார். உழைப்பாளிகளாகிய உழவர்களின் நிலையைக் கண்ணாடியாகப் படம்பிடித்துள்ளார். மதங்களையும், கடவுள் கோட்பாடுகளையும் தம் படைப்புகளில் சாடியுள்ளார். வர்ணாசிரமக் கொள்கைகளைக் காந்தியிடம் எதிர்த்துப் பேசிய ஜீவாவைத் தம் படைப்புகளில் உயர்த்திப் பிடித்துள்ளார். சமூகத்தில் புரையோடிப் போயுள்ள மூட நம்பிக்கைகளைக் களைய புதிய முயற்சி எடுத்துள்ளார்.

தலையெழுத்து, வினைப்பயன் போன்றவற்றை உடைத்தெறிந்துள்ளார். என்றைக்குப் பொதுவுடைமை பூக்கிறதோ அன்றைக்குத் தான் பொங்கல் திருநாள் கூடப் பொலிவு பெறும் என்று கூறியுள்ளார். விலையேற்றம் குறித்த சமூக விழிப்புணர்வைப் பொருளியல் சிந்தனையோடு வகைப்படுத்தியுள்ளார். சமூகக் கொடுமைகளிலிருந்து விடுபட வேண்டுமென்றால் விழிப்புணர்ச்சியும், போராட்டங்களைச் சந்தித்து எதிர்க்குரல் கொடுக்கிற துணிவும் வேண்டும் என்பதே ஜீவபாரதியின் தெளிந்த சிந்தனையாக உள்ளது.

மொத்தத்தில் பொதுவுடைமைக்கு எதிரான சமூகச் சாடல்களைக் கூறுவதோடு அவற்றிலிருந்து விடுபட்டுப் பொதுவுடைமைச் சமுதாயம் காண்பதற்கான தீர்வுகளையும் ஜீவபாரதி படைத்துள்ளார்.

**சான்றெண்விளக்கம்**

1. அருணன், மார்க்சிய அழகியல், ப.11.
2. ந.முத்துமோகன், இயங்கியல் பொருள்முதல்வாதம் ஓர் அறிமுகம், ப.19.
3. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத் தேடி, ப.49.
4. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.34.
5. மேலது, ப.47.
6. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, பக்.254–355.
7. மேலது, ப.256.
8. மேலது, ப.256.
9. இதயகீதன், வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.88.
10. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத் தேடி, ப.33.
11. ச.மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும், பயணமும், ப.146.
12. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.43.
13. ச.மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும், பயணமும், ப.148.
14. கே.ஜீவபாரதி, சொல்லுறதச் சொல்லிப்புட்டேன், ப.72.
15. மேலது, ப.73.
16. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.54.
17. கே.ஜீவபாரதி, கே.ஜீவபாரதி கவிதைகள், ப.54.
18. கே.ஜீவபாரதி (தொ.ஆ), பட்டுக்கோட்டையார் பாடல்கள், ப.176.
19. நா. முகம்மது செரீபு, பாரதியும் பொதுவுடைமையும், ப.24.
20. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.12.
21. கி.செம்பியன், பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம், பக்.144–145.

22. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.14.

23. ச.மெய்யப்பன் (ப.ஆ), பாரதியார் கவிதைகள், ப.152.

24. தமிழ்வேட்பன் (தொ.ஆ), பாரதிதாசன் கவிதைகள், ப.117.

25. மேலது, ப.131.

26. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.58.

27. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், பக்.3–4.

28. மேலது, ப.4.

29. வி.இ.லெனின், கிராம ஏழை மக்களுக்கு, ப.79

30. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.44.

31. மேலது, ப.75.

32. கி.செம்பியன், பட்டுக்கோட்டையின் பாட்டுத் திறம், ப.158.

33. நா.வானமாமலை, தத்துவ விமர்சனக் கட்டுரைகள், ப.18.

34. கே.ஜீவபாரதி, கே.ஜீவபாரதி கவிதைகள், ப.237.

35. தமிழ்வேட்பன் (தொ.ஆ), பாரதிதாசன் கவிதைகள், ப.108.

36. எம்.பி. மணிவேல், மகாகவிகள் பாரதியும் இக்பாலும், ப.80.

37. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, ப.54.

38. த.ஸ்டாலின் குணசேகரன், அணிந்துரை, (கே.ஜீவபாரதி – நூ.ஆ) மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, ப.54.

39. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.44.

40. மேலது, ப.46.

41. இதயகீதன், வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.169.

42. கே.ஜீவபாரதி, மலர்களுக்காக மலர்ந்தவை, ப.25.

43. மேலது, ப.25.

44. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், ப.81.

45. மேலது, ப.83.

46. கே.ஜீவபாரதி, சொல்லுறதச் சொல்லிப்புட்டேன், ப.60.

47. ந.முத்துமோகன், மார்க்சிய விவாதங்கள், ப.71.

48. கே.பாலதண்டாயுதம், மார்க்சிய ஞானரதம், ப.24.

49. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், பக்.82–83.

50. கே.பாலதண்டாயுதம், மார்க்சிய ஞானரதம், ப.61.

51. குடந்தையான், சாதிகள் இல்லாச் சமுதாயம், ப.136.

52. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, ப.120.

53. ச.மெய்யப்பன் (ப.ஆ), பாரதியார் கவிதைகள், ப.253.

54. கே.ஜீவபாரதி, அறிவை வளர்க்கும் சிறுவர் பாடல்கள், ப.63.

55. மேலது, ப.67.

56. எம்.பி. மணிவேல், மகாகவிகள் பாரதியும் இக்பாலும், ப.72.

57. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், ப.103.

58. கே.ஜீவபாரதி, நினைவு நாட்களும் நெஞ்சில் அலைகளும், பக்.31–32.

59. கே.ஜீவபாரதி, மலர்களுக்காக மலர்ந்தவை, ப.49.

60. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், ப.66.

61. மேலது, ப.66.

62. ச.மெய்யப்பன் (ப.ஆ), பாரதியார் கவிதைகள், ப.173.

63. தமிழ்வேட்பன் (தொ.ஆ), பாரதிதாசன் கவிதைகள், ப.527.

64. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், ப.147.

65. மேலது, ப.148.

66. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, பக்.120–121.

67. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.144.

68. கே.ஜீவபாரதி, அந்த நாள் ஞாபகம், ப.105.

69. கே.ஜீவபாரதி, அறிவை வளர்க்கும் சிறுவர் பாடல்கள், ப.99.

70. ச.மெய்யப்பன் (ப.ஆ), பாரதியார் கவிதைகள், ப.150.

71. தமிழ்வேட்பன் (தொ.ஆ), பாரதிதாசன் கவிதைகள், ப.113.

72. இதயகீதன். வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.192.

73. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.27.

74. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், ப.73.

75. மேலது, ப.74.

76. கே.ஜீவபாரதி, கே.ஜீவபாரதி கவிதைகள், ப.81.

77. தேவ. பேரின்பன், தற்காலப் பண்பாட்டுப் போராட்டத்தில் மார்க்சியத்தின் இடம், ப.48.

78. கே.ஜீவபாரதி, சொல்லுறதச் சொல்லிபுட்டேன், ப.66.

79. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.71.

80. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.72.

81. தேவ.பேரின்பன், தற்காலப் பண்பாட்டுப் போராட்டத்தில் மார்க்சியத்தின் இடம், ப.64.

82. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.74.

83. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.11.

84. மேலது, ப.42.

85. மேலது, ப.54.

86. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.78.

87. கே.ஜீவபாரதி, சொல்லுறதச் சொல்லிப்புட்டேன், பக்.34–35.

88. மேலது, ப.80.

89. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.12.

86. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.78.

87. கே.ஜீவபாரதி, சொல்லுறதச் சொல்லிப்புட்டேன், பக்.34–35.

88. மேலது, ப.80.

89. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.12.

# இயல் – 3

## ஜீவபாரதியின் அரசியல், தத்துவச் சிந்தனைகளில் பொதுவுடைமை

அரசியல் உணர்வு என்பது மக்கள் அனைவருக்கும் பொதுவானது. படைப்பாளர்களுக்கு அரசியல் சிந்தனை என்பது மிகத் தேவையான காரணியாகக் கருதப்படுகிறது. அரசாங்கத்தைச் சார்ந்தும், அரசு முறையின் அமைப்பை ஒட்டியுமே மக்கள் வாழ்வு தீர்மானிக்கப்படுகிறது. அரசாங்கம் உருவாக்கும் வர்க்கப் பண்புகளையும், அதனால் உருவாகும் போராட்டங்களையும், தொழிலாளிகளின் வாழ்க்கைத் தேவைகளையும் உணர்ந்து சொல்ல வேண்டியது படைப்பாளிகளின் கடமையாக உள்ளது. படைப்பாளிகளுக்கு அரசியல் விழிப்புணர்ச்சிச் சிந்தனை இருக்கும்போதுதான் தம் படைப்புகளின் மூலம் சமுதாயத்தை வளர்ச்சியின் பாதையில் இட்டுச் செல்லமுடியும். மக்கள் தொடர்புடைய படைப்பாளிகள் யாரும் அரசியல் பற்றி எழுதாமல் இருந்ததில்லை. சங்கப் புலவர்கள் தொடங்கி சமகாலப் புலவர்கள் வரை மன்னர்களைப் பற்றியும் ஒருநாடு எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும் எழுதியுள்ளனர். அந்த வரிசையில் கவிஞர்.கே.ஜீவபாரதியும் மார்க்சிய அடிப்படையில் அரசியல் சிந்தனைகளையும், புரட்சிக் கருத்துக்களையும் தமது படைப்புகளில் விதைத்துள்ளார். அவ்வகையில் ஜீவபாரதியின் வர்க்கப் போராட்டம் குறித்த சிந்தனைகள், அரசியல் நிலைமை குறித்த சிந்தனைகள், சுதந்திரம் குறித்த சிந்தனைகள், ருஷ்யப் புரட்சி பற்றிய சிந்தனைகள், மார்க்சியத் தத்துவச் சிந்தனைகள், பொதுவுடைமைக் கவிஞர்கள் குறித்த அரசியல் பார்வை, தமிழகப் பொதுவுடைமை அரசியல் தலைவர்கள் பற்றிய சிந்தனைகள், மொழி அரசியல் குறித்த சிந்தனைகள், தேர்தல் பற்றிய சிந்தனைகள் ஆகியவற்றை அவருடைய படைப்புகளிலிருந்து ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### வர்க்கப்போராட்டம் குறித்த சிந்தனைகள்

வர்க்கங்களின் அடிப்படையில் சமூக அமைப்பு மாறிய காலத்திலிருந்தே சுரண்டுவோருக்கும், சுரண்டப்படுவோருக்குமிடையே போராட்டம் நடந்து கொண்டுதான் உள்ளது. இது அரசியலைச் சார்ந்தே நிகழ்கிற காரணத்தால் பொருளாதாரத் தாக்கத்தையும், ஏற்றத்தாழ்வையும் உருவாக்குகிறது. முதலாளிகள், தொழிலாளிகளின் உழைப்பைச் சுரண்டுகின்றனர். உழைப்பு அதிகமாகிறது; கூலி குறைக்கப்படுகிறது; தொழிலாளிகள் அடிமைப்படுத்தப்படுகின்றனர்.

இதிலிருந்து மீள்வதற்குத் தொழிலாளர்கள் போராட்டத்தைச் சந்திக்கவும், வர்க்கப்போரினை உருவாக்கவும் வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இதனால் அரசியல் போராட்டம் உருவாகிறது.

"வர்க்கப் போராட்டத்தின் தலைமையான வடிவம் அரசியல் போராட்டமேயாகும். சமுதாய விடுதலை, முதலாளித்துவச் சுரண்டலை ஒழித்தல், மக்களாட்சி உரிமைகளை நிலைநாட்டுதல், அமைதியையும், நாட்டு விடுதலையையும் பாதுகாத்தல் ஆகிய குறிக்கோள்களுக்காக அரசியல் போராட்டம் நடக்கிறது. உற்பத்திச் சாதனங்களைக் கைப்பற்றுதல், அரசு அதிகாரத்தைப் பெறுதல் ஆகிய அடிப்படைச் செயல்களுக்கு அரசியல் போராட்டமே உதவுகிறது"[1] என்பார் ஆ.ஜெகந்நாதன்.

சமுதாயத்தில் நிலவும் குறைபாடுகளைக் களைய வர்க்கப் புரட்சியே வழிவகுக்கும் என்பதே பொதுவுடைமைவாதிகளின் நம்பிக்கையாகும்.

"வர்க்க வேறுபாடில்லாத கம்யூனிஸ்டு சமுதாயத்தை ஏற்படுத்துவது தான் தொழிலாளி வர்க்கத்தின் குறிக்கோளாகும். வர்க்க வேறுபாடுகளை ஒழிப்பதற்கு உற்பத்திச் சாதனங்களில் தனி உடைமையை அகற்ற வேண்டும்."[2] என்ற நா.வானமாமலையின் சிந்தனை ஒப்பு நோக்கத்தக்கது.

இந்த அடிப்படையில் கே. ஜீவபாரதியின் படைப்பிலக்கியச் சிந்தனையும் பாட்டாளி வர்க்கம் சார்ந்ததாகவே அமைகிறது. அவர்தம் கவிதைகளிலும், கட்டுரைகளிலும் அரசியல் விழிப்புணர்ச்சியை வர்க்கப் போராட்ட உணர்வோடு வெளிப்படுத்தியுள்ளார்.

"உழைக்கின்ற மக்களால்
தழைக்கின்ற பொதுவுடைமை
உருவாக்கப் பாடுவேன் நான்
துணிவோடு பணத்திற்கே
பணியாத தூயமிகு
தோழனைப் பாடுவேன் நான்
தனியுடைமை தனைப்பேசித்
தன்நலம் நாடிடும்

தருக்கரைச் சாடுவேன் நான்"[3]

என்று தன்னுடைய கொள்கை விளக்கமாகப் பாடியுள்ளது சிந்திக்கத் தக்கது. தனியுடைமையாக உழைப்பாளிகளின் உழைப்பினைச் சுரண்டி வாழும் முதலாளி வர்க்கத்தைத் தருக்கர்கள் என்று சாடியுள்ளார். பணத்திற்கு அடிபணியாமல் சுரண்டும் வர்க்கத்தை எதிர்ப்பவர்களைத் தோழர் என்று உறவு கொள்கின்றார். உழைக்கின்ற மக்களை ஒன்று திரட்டி வர்க்கப் போராட்டத்தை உருவாக்கிப் பொதுவுடைமை தழைக்கப் பாடுபடுவேன் என்றும் சபதம் மேற்கொள்கின்றார்.

சமூக நோக்கில் எதிர்ப்புரட்சி வெடிக்கும் போது தான் மாற்றம் உருவாகும் என்பது மார்க்சியவாதிகளின் அசைக்க முடியாத நம்பிக்கையாய் உள்ளது. அதே சிந்தனை ஜீவபாரதிக்கும் உண்டு.

"சுயநலத்தால் நமது நாட்டுச்
சொத்தையெல்லாம் திட்டமிட்டுச்
சுரண்டிவரும் கூட்டம் தனைத் தோழனே — நாம்
ஒன்றுபட்டு எதிர்த்திடுவோம் தோழனே!
குட்டக்குட்டக் குனிந்திருந்தோம்
கொடுமைக்கெலாம் பொறுத்திருந்தோம்
குனிந்ததிங்கே போதுமடா தோழனே — எதிர்த்துக்
குரல்கொடுப்போம்! பகை முடிப்போம்! தோழனே!"[4]

என்று சங்கநாதம் இசைக்கின்றார். கொட்டக் கொட்டக் குனிந்திருந்தால் கூலியும் உயராது. குவலயமும் உயராது என்பது ஜீவபாரதியின் சிந்தனைத் தெளிவு. எதிர்த்துக் குரல் கொடுக்கும் போது தான் சுரண்டல் கூட்டம் அரண்டு மிரளும் என்பதே இக்கவிதையின் உட்கருத்தாய் அமைந்துள்ளது.

உழைப்புச் சாதனங்களும், பொருட்களும் ஒரு சிலருக்கே சொந்தமாக இருந்தால் அது தனியுடைமை என்றும், அனைத்தும் ஒன்றாகி எல்லோருக்கும் பொதுவானதாக அரசு சார்ந்ததாக இருந்தால் அது பொதுவுடைமையென்றும் கொள்ளப்பெறும். ஆனால் பொதுவுடைமை பேண வேண்டிய அரசாங்கமே சுரண்டும்

வர்க்கமான முதலாளிகளுக்கு ஆதரவாக இருப்பதுதான் கண்டிக்கத்தக்கது. இதனைத் தகர்க்கத் தொழிலாளர்களின் குரலாக ஜீவபாரதி முழங்குகின்றார்.

“வம்பர் கூட்டம் வாயடைத்து
வலிமை குன்றிச் சாகவே
செம்படையின் போர்ப்பரணி
ஜெகம்முழுதும் கேட்கவே – நீ
கொடிபிடித்துக் கரமுயர்த்திக்
கோஷமிட்டு வா! வா!
தொடை நடுங்கி ஓடவே
சுரண்டி வைத்த பொருளையெல்லாம்
அரசுடைமை ஆக்கவே – நீ
கொடிபிடித்துக் கரமுயர்த்திக்
கோஷமிட்டு வா! வா!
ஆளுகின்ற கூட்டமெல்லாம்
அலறுகின்ற முறையிலே
நாளைவரும் வெற்றி தன்னை
நாடு இன்று காணவே – நீ
கொடிபிடித்துக் கரமுயர்த்திக்
கோஷமிட்டு வா! வா!”[5]

என்று தோழமை உணர்வைத் தொழிலாளிகளிடம் ஊட்டியுள்ளார். தொழிலாளர் ஒற்றுமையே முதலாளிவர்க்கத்தை அடக்கும் காரணி என்று ஜீவபாரதி நம்புகின்றார். வம்பர் கூட்டமாகிய சுரண்டல்காரர்களை எதிர்த்துச் செங்கொடி ஏந்திப் போராட்டப் பரணி பாடவேண்டும் என்பது கவிஞரின் நிலைப்பாடாக உள்ளது. சுரண்டல் காரர்களுக்குப் பக்கபலமாயுள்ள ஆளும் வர்க்கத்தையும் அலறச் செய்து சமதர்ம சமுதாயத்திற்கு அடிகோல வேண்டும் என்கின்றார்.

தொழிலாளர்களைப் பொருளாதாரப் போராட்டத்திற்கும், அரசியல் போராட்டத்திற்கும் ஜீவபாரதி தூண்டுகின்றார். வர்க்கப் போராட்டத்தினால் மட்டுமே சோசலிச சமுதாயத்தை உருவாக்க முடியும் என்பது அவருடைய நம்பிக்கை ஆகும்.

“இந்தத் தேசம் அன்னியரிடம் அடிமைப் பட்டிருந்த போது அடிமைத் தளையை அறுக்கப் பாடுபட்டவர்களில் காங்கிரஸ்காரர்களை விட அதிகமாகத் தியாகம் செய்தவர்கள் கம்யூனிஸ்டுகள் தான். தொழிலாளி வர்க்கத்தைத் தேசபக்தப் போரில் ஈடபடச் செய்ததில் பெரும்பங்கு கம்யூனிஸ்டுகளுக்கே உண்டு”[6] என்கின்றார் ஜீவபாரதி.

வர்க்கப் போரில் பங்கு கொண்டு தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டு போராட்டத்திற்கு மெருகேற்றிய பல கம்யூனிஸ்ட் தோழர்களைப் பற்றி ஜீவபாரதி தம் கட்டுரைகளிலும் கவிதைகளிலும் பதிவு செய்துள்ளார்.

“வரலாற்றில் கி.மு., கி.பி. என்று குறிப்பிடுவது போன்று கம்யூனிஸ்டுகளின் தியாக வரலாற்றை சு.மு (சுதந்திரத்திற்கு முன்பு), சு.பி (சுதந்திரத்திற்குப் பின்பு) என்று குறிப்பிடும் அளவிற்கு இந்தத் தேசம் முழுவதும் கம்யூனிஸ்டுகளின் தியாகம் படர்ந்திருந்தது. ஆனால் இந்தத் தியாகங்களை முழுமையாகப் பதிவு செய்யாததனாலும், சுய விளம்பரங்களைக் கம்யூனிச இயக்கம் அறவே வெறுத்ததனாலும் இன்றைய சமூகத்தில் எவரெவரோ மாவீரர்களாகப் போற்றப்படுகின்ற அவலமும், அசிங்கமும் இங்கே நடந்து கொண்டிருக்கின்றது”[7] என்கின்றார்.

சுதந்திரம் வாங்கியதற்குப் பிறகும் முறையான வாழ்க்கை முறையும், பொருளாதாரச் சமநிலையும் வாய்க்கப் பெறாததால் நேரு தலைமையிலான இந்திய அரசை மாற்ற ஆயுதம் ஏந்திப் போரிடவும் தயாராகக் கம்யூனிஸ்டுகள் இருந்தனர். இந்தச் சூழ்நிலையில் கம்யூனிஸ்ட் தலைவர்களும், தொழிலாளத் தோழர்களும் காங்கிரஸ் அரசால் வதைக்கப்பட்டனர். இந்த நிலையில் கம்யூனிஸ்டு தோழர்களின் நிலையை ஜீவபாரதி, “கம்யூனிஸ்டுகள் தலைமறைவாயினர். போலீஸ் வேட்டை தொடங்கியது. சிக்கியவர்களைச் சுட்டுக் கொன்றனர். சிலரைச் சிறையில் வைத்து அடித்தே கொன்றனர். இன்னும் சிலரை விஷம் கொடுத்துக் கொன்றனர். சிலரைத் தூக்குக் கயிற்றில் தொங்கவிட்டனர். ஆம், இந்தக் காலக்கட்டத்தில் காங்கிரஸ் ஆட்சி கம்யூனிஸ்டுகள் மீது நடத்திய கொடூரத் தாக்குதலை இந்தியாவில் வேறு எந்த இயக்கமும் இன்று வரை சந்தித்தது இல்லை என்பது வரலாறு. தேசம் முழுவதும்

கம்யூனிஸ்டுகளின் ரத்தம் மண்ணில் சிந்தி இந்திய தேசம் சிவந்தது"[8] என்று வேதனையோடு குறிப்பிட்டுள்ளார்.

இந்திய மண் சிவந்ததற்குக் காரணமே கம்யூனிஸ்ட் தோழர்களின் இரத்தம் தான் என்பது கம்யூனிசத் தலைவர்களின் தன்னலமற்ற தியாகத்தை நெஞ்சு நிமிர்த்திச் சொல்வதாக அமைகிறது. தமிழகம் மற்றும் இந்தியா முழுவதிலுமுள்ள பொதுவுடைமைச் சிந்தனை மிக்க தோழர்களின் ஈடிணையற்ற பங்களிப்பை ஜீவபாரதி மிகத் தெளிவாகத் தம் படைப்புகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

கம்யூனிசத் தோழர்கள் பாடுவதற்காகவே எழுச்சிப் பாடல்களைத் தந்த மணவாளனும், சமத்துவ வாலிபர் சங்கக் கொடியைக் காங்கிரஸ்காரர்கள் அறுக்க முயன்ற போது அதை விரட்டியடித்த பெருமைமிக்க தோழரான மாரியும், மதுரைப் பகுதியில் இணைந்து பணியாற்றிய வீர வரலாறுகளை எடுத்துக் கூறும் ஜீவபாரதி காவல்துறையினால் அந்தப் போராளிகள் சுட்டுக் கொல்லப்பட்ட அவல நிலையையும் படிப்போர் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார்.

*1949*–இல் நகைக்கடை ஒன்றில் நடந்த கொள்ளையில் இவர்களை வேண்டுமென்றே இணைத்துச் சில கயவாளிகளால் காட்டிக் கொடுக்கப்பட்டுக் காவல்துறையில் இருவருமே ஒரே நேரத்தில் சுட்டுக் கொல்லப்பட்ட கோர நிலையைப் பதிவு செய்துள்ளார்.

"மாரியையும், மணவாளனையும் தனித்தனி மனிதர்களாய் எண்ணிப் பார்க்க விரும்பாமல் காவல் நாய்கள் ஒரே நேரத்தில் ஒரே வடிவத்தில் இருவரையும், கொலை செய்தனர். அதனால் தான் 'மாரி மணவாளன்' என்று இருவரும் இணைந்தே உச்சரிக்கப்படுகின்றனர். வெள்ளையர் எதிர்ப்பில் தூக்குமேடை ஏறிய பகத்சிங் இறுதியாக முழங்கியது 'இன்குலாப் ஜிந்தாபாத்' என்ற முழக்கம்தான். உழைக்கும் வர்க்கம் உலகில் உள்ள வரை 'இன்குலாப் ஜிந்தாபாத்' என்ற முழக்கம் ஒலித்துக் கொண்டே இருக்கும். இந்த முழக்கம் ஒலிக்கும் போதெல்லாம் மாவீரன் மாரி, மகா கலைஞன் மணவாளன் பெயர்களும் ஒலிக்கும். ஆம். வர்க்கப்போரில் வீழ்ந்த மலர்களான மாரியும் மணவாளனும் என்றென்றும் நம்மிடையே வாழ்ந்து கொண்டிருப்பர்"[9] என்று ஜீவபாரதி சொல்வது பொதுவுடைமை பூக்கும் வரை வர்க்கப் போர்கள் ஓயாது; தோழர்களின் ஒற்றுமை குறையாது என்பதனைப் பிரதிபலிக்கும்.

**அரசியல் நிலைமை குறித்த சிந்தனைகள்**

முதலாளித்துவம் சார்ந்த நடைமுறைத் தன்மையை அரசியலமைப்பு வெளிப்படுத்துவதாக உள்ளது. முதலாளித்துவம் சார்ந்த அரசியலால் சமூகத்திற்குப் பல்வேறு கேடுகள் விளைகின்றன. வறுமை, வேலையின்மை, பதுக்கல், கறுப்புப் பணம், லஞ்சம், நாகரிக, பண்பாட்டுச் சீரழிவுகள் போன்றவை முதலாளித்துவ அரசியலால் விளைகின்றன. அரசியல் பற்றிய மார்க்சியச் சிந்தனை சமூக மாற்றத்திற்கு வழிவகுக்கும் புதிய ஆயுதமாகும்.

"சமூக மாற்றத்தை விளக்குவதில் முக்கியத்துவம் பெற்ற மார்க்சியத்தின் வளர்ச்சியிலேயே மார்க்சியத்தின் தாக்கம் தொழிற்பட்டுள்ளது. இதைப் புரிந்துகொள்ள வேண்டும். விதி வாதத்தை நிராகரிக்கும் நாம், மார்க்சியத்தையே ஒரு மதமாகக் கொண்டுவிடக்கூடாது. மார்க்சியம், மெய்யியல் நிலையில் பகுப்பாய்வுக்கான ஒரு கருவியாகும். கருவி சரியென்ற நிலையிலேயே தான் உலகை மாற்ற முடியும்"[10] என்பார் கார்த்திகேசு சிவத்தம்பி.

முதலாளித்துவச் சமுதாயம் மாற்றியமைக்கப்பட்டு சோசலிச ஆட்சி மலர்வதற்கு அரசியல் பாதையை மார்க்சியம் தெளிவாக வரையறுக்கிறது.

"முதலாளித்துவமற்ற பாதையில் நாடு முன்னேற தேசிய ஜனநாயக ஆட்சி அவசியம்; தேசிய ஜனநாயக ஆட்சி வெறும் முதலாளித்துவ ஆட்சியன்று; அந்த ஆட்சியில் முதலாளி வர்க்கத்திற்கும் இடமுண்டு. ஏனெனில் அவர்கள் நிலவுரிமை ஏகாதிபத்திய எதிர்ப்பு அணியுடன் இணைந்திருக்கிறது. ஆனால் அதில் பிரதானமாக இருப்பது தொழிலாளி வர்க்கமும், விவசாய வர்க்கமும் ஆகும்"[11] என்பார் கே.பாலதண்டாயுதம்.

இங்கு மன்னராட்சி ஒழிந்தாலும், முதலாளித்துவ ஆட்சி ஒழியவில்லை. பழைய மன்னர்களுக்குப் பதிலாகப் புதிய முதலாளிகள் காட்சி தருகின்றனர்.

"மன்னர்களை ஒழித்துவிட்டோம்
மான்யத்தை நிறுத்திவிட்டோம்
இந்நாளில் மன்னர் என்று
எவருமே இல்லை என்று
சொன்னால் சரியாய்ப் போச்சா?

சுதந்திர நாட்டில் பழைய

மன்னர்கள் இல்லை! புதிய

மன்னர்கள் இருப்பதுண்மை”[12]

என்று புதிய அரசுடைமைவாதிகளாகத் திகழும் முதலாளிகளையே ‘புதிய மன்னர்கள்’ என்று ஜீவபாரதி அடையாளப்படுத்துகின்றார். ஆள்பவர்கள் யாராக இருந்தாலும் பாதிக்கப்படுபவர்கள் மக்களாகவே இருக்கின்றனர். அரசியல்வாதிகளின் சுயநலப்போக்கு அடித்தட்டு மக்களையே பாதிப்பதாக இருக்கிறது.

“அவராண்டார் இவராண்டார்

எல்லோரும் ஆண்டார் – ஆனால்

அத்தனைபேர் ஆட்சியிலும்

ஜனங்களே மாண்டார்”[13]

என்ற கவிதை அரசியல்வாதிகளின் அடக்கு முறையை அம்பலப்படுத்துவதாக அமைகிறது. மக்களிடம் எழுச்சியும், எதிர்த்துக் கேட்கும் துணிச்சலும் இல்லாதவரை இந்த இழிநிலையே தொடரும் என்பதனையும் சிந்தித்துச் சொல்கின்றார்.

“உரிமைக்காகக் குரல் கொடுத்தால்

உதை கொடுக்கின்றான் – இங்கே

உழைக்கும் வர்க்கம் தூங்குவதால்

கயிறு திரிக்கின்றான்”[14]

என்பதிலிருந்து உழைக்கும் வர்க்கம் ஏமாளியாய் இருக்கும் வரை அரசியல்வாதிகளின் உதைபந்தாகவே இருக்கும் சூழ்நிலை ஏற்படும். தூங்குவதை விட்டொழித்துத் துடிப்போடு போராட வேண்டும் என்ற மார்க்சியக் கொள்கையை இது பிரதிபலிக்கிறது. இன்றைய அரசியல் நிலையின் அவலங்களை ஜீவபாரதி ஒன்றுவிடாமல் பட்டியலிடுகின்றார்.

“கொடுமைகளெல்லாம் ஒன்றாய்க் கூடி

கூட்டணி காண்கிறது
கொள்கை நீதி நேர்மையெல்லாம்
கூண்டுக்குள் நிற்கிறது.
கதவுகள் இல்லாச் சிறைகளைப் போன்று
தேசம் இருக்கிறது
கண்டவனெல்லாம் சுரண்டிச் சேர்க்க
நாசம் தொடர்கிறது
அறிவு தியாகம் திறமை சேவைக்கு
மரியாதை கிடையாது
அடிதடி இன்றி இந்தப் பூமியில்
அரசியல் நடக்காது"[15]

என்று அருவருக்கத்தக்க அரசியல் நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார். நல்லவர்களின் கூட்டணிதான் நாட்டுக்கு உதவுமேயன்றி கொடுமைகளின் கூட்டணி நாட்டுக்கு உதவாது என்கின்றார். இலட்சிய வேள்விகளாக இருக்க வேண்டிய நீதி, நேர்மை, கொள்கை, கோட்பாடு போன்றவை கூண்டுக்குள் அடைபட்டுக் கிடப்பதாகவும், கதவில்லாச் சிறைத்துறை போல் தேசம் பாழ்பட்டுக் கிடப்பதாகவும் சொல்வது இன்றைய சமூகத்தின் அப்பட்டமான உண்மையாகத் தோன்றுகிறது. உருட்டல், மிரட்டல், அடிதடிகள்தான் இன்றைய அரசாங்கத்தை நடத்துவதாக இருக்கிறது என்ற அரசியல் சூழ்நிலையை ஜீவபாரதி துணிச்சலோடு வெளிப்படுத்தியுள்ளார்.

**சுதந்திரம் குறித்த சிந்தனைகள்**

சுதந்திரம் கிடைத்தும் சுதந்திரத்தின் பலன் சாதாரண மக்களுக்கும் வந்து சேரவில்லை என்பது ஜீவபாரதியின் கவலையாக உள்ளது. முதலாளிகளின் சுரண்டல் தன்மை ஏழைகளின் தேவையைக் கெடுத்திருக்கிறது என்பது இவர்தம் பதிவாக உள்ளது.

"1947–இல் நாம் விடுதலை பெற்ற பிறகும் நமது நம்பிக்கைகளும், கனவுகளும் நிறைவேறவில்லை என்பதுதான் நமது கசப்பான அனுபவம். நமது

தேசத்தை நம்மவர்களே ஆளத் தொடங்கிய பிறகும் பெரும் முதலாளிகள் சுதந்திரமாக மேலும் மேலும் கொழுத்தனர். பெரிய நிலச் சுவான்தார்களும், அந்நிய முதலாளிகளும் ஆனந்தப் பள்ளுப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். வறுமையும், வேலையின்மையும் தீர்ந்த பாடில்லை"[16] என்கின்றார் மார்க்சியச் சிந்தனையாளர் வி.பி. சித்தன்.

சுதந்திரமே பேசுவதுபோல் ஜீவபாரதி ஒரு கவிதையைப் படைத்துள்ளார். அதில் தியாகத்தின் தீயிலே பிறந்தேன். இன்று நோயிலே விழுந்தேன் என்று சுதந்திரமே கண்ணீர் வடிப்பது போல் ஒரு கவிதையைப் படைத்திருப்பது சிந்திக்கத்தக்கது.

"பாரதத்துப் பூமியிலே
பகத்சிங்கைப் போன்று சிலர்
வந்து இங்கே பிறந்ததனாலே — அவர்
தந்து சென்ற தியாகத்தினாலே – இந்தப்
பாரதத்தை அன்னியரா
ஆள்வதென்ற கேள்விக்குறி
பார்முழுதும் கேட்டுவிட்ட தாலே — அந்தப்
பரங்கியர் ஓடிவிட்ட தாலே – இங்கே
நான் பிறந்தேன் தியாகத் தீயிலே இன்று
நலிந்துவிட்டேன் துரோகிகளால் நோயிலே
வீர திலக் வ.உ.சி
காட்கே தீர அஜய்குமார்
பேரணியாய்த் தாம்திரண்டு நின்றார் – அந்தச்
சீரமைதிக் காந்தியுடன் நின்றார் – அந்த
ஆரவாரப் போர்க்குரலில்
நேருவுடன் போய்ப் புகுந்தார்
பாரதமே போர்ப்பரணி பாட – அந்தப்
பரங்கியரைத் துரத்தினார்கள் ஓட – இங்கே

நான்பிறந்தேன் தியாகத்தின் தீயிலே – இன்று

நலிந்துவிட்டேன் துரோகிகளால் நோயிலே"[17]

என்று விடுதலைக்குப் பாடுபட்டு வேள்வித் தீயிலே குதித்துச் சுதந்திரம் பெற்ற தேசத் தலைவர்களை நினைவு கூர்கிறார். அவர்களின் கனவு வீணாகிச் சுதந்திரத்தாய் நலிந்து போயுள்ளதாய் உருவகம் செய்திருப்பது இன்றைய சமுதாயப் போக்கைக் கண்ணாடியாய்க் காட்டுகிறது.

"முப்பத்து இரண்டாண்டு

முடிந்த பின்னும் சுதந்திரதேவி

வளர்ந்தாளே தவிர

வயதுக்கு வரவில்லை

வயதுக்கு வராததால்

வரன்தேடி வரவில்லை

வரன்தேடி வராததால்

வளர்ச்சிக்கு மார்க்கமில்லை

பாரத வளர்ச்சியே இப்படி இருக்கையில்

பாமரர் வளர்ச்சி எப்படி இருக்கும்?"[18]

என்கின்றார். சுதந்திரம் பெற்று முப்பத்திரண்டு ஆண்டுகள் ஆன பிறகு 1979–இல் கவிஞர்.கே.சி.எஸ். அருணாசலம் தலைமையில் மதுராந்தகம் இலக்கிய விழாக் கவியரங்கில் இந்தக் கவிதையை ஜீவபாரதி பாடியுள்ளமை கருதத்தக்கது. பாரதமும் வளரவில்லை. பாமரனும் வளரவில்லை என்பது வேதனையின் புலப்பாடாக அமைகிறது. இன்னும் ஏழை, எளியவர்கள் கல்வியறிவு பெறவில்லை. கல்வி பெற்றாலும் வாழ்வு மலரவில்லை என்ற நிலையைப் பிரதிபலிப்பதாகவே இக்கவிதை அமைந்துள்ளது. இதையே,

"எம் சுதந்திரச் சீதை

மீட்பின் பின்னும்

சிறையிலிருக்கிறாள்''[19]

என்பார் கவிஞர் வைரமுத்து.

''ஓ ... ஓ... சுதந்திரமே – இங்கே
உன்னையடைந்திட என்றனின் தோழர்கள்
உயிரைக் கொடுத்தனரே — பலர்
உதைபட்டுச் செத்தனரே — அட
இன்றைய நாளிலும் என்றனின் தோழர்கள்
உயிரைக் கொடுப்பதுவா? தினம்
உதைபட்டு வாழ்வதுவா''[20]

என்ற ஜீவபாரதியின் பாடல் வரிகள் மேலும் சிந்தனையைத் தூண்டுவதாக அமைகின்றன. சுதந்திரம் வாங்குவதற்கு அடிபட்டும், உதைபட்டும், உயிர்விட்டும் தியாகம் புரிந்தனர். அத்தியாகத்தை மறந்து வாழும் இன்றைய நிலையை நினைத்து கவலை கொள்ளும் ஜீவபாரதி தன் வேதனையின் வெளிப்பாட்டைப் பாரதத் தாய்க்குப் பகிரங்கக் கடிதமாக எழுதுகின்றார்.

''பாரதத் தாயே — நீ
வெள்ளைக்காரத் தொப்பிகளிடமிருந்து
விடுதலையானாய்! ஆனால் உன்
செல்லக் குழந்தை சுதந்திர தேவியோ
கொள்ளைக்காரத் தொப்பைகளோடு
கும்மாளமடிப்பதை ...
பாரதத் தாயே! — நீ
பார்த்ததில்லையா? – இல்லை
பார்த்தும் பாராதிருக்கின்றாயா?''[21]

என்று அங்கதம் வெளிப்பட எழுதியிருப்பது கருதற்பாலது. வெள்ளைக்காரத் தொப்பிகளிடமிருந்த சுதந்திரமும், செல்வமும் இப்போது பாரதத்தில் கொள்ளைக்காரத் தொப்பிகளிடம் சென்றுவிட்டதாகச் சொல்வது எண்ணிப் பார்க்கத் தக்கது. சுரண்டிச் சுரண்டியே கொள்ளைக்காரர்களின் வயிறு கூடத் தொப்பையாகச் சரிந்து விட்ட நிலையை மிகத் தெளிவாகக் கூறுகின்றார்.

பொதுவுடைமை பூக்கவில்லையென்றால் சுதந்திரம் பெற்றும் பயனில்லை என்பதனை ஜீவபாரதி உணர்ந்து பேசியுள்ளார். சுதந்திரம் எதற்குக் கிடைத்தது? என்ற வேதனையின் வெளிப்பாட்டில் வார்த்தைகளாய் வெடிக்கின்றார்.

“ஓலைக் குடிசையில் ஒண்டிக் கிடப்போரின்
வேதனை தீர்ந்ததுவா?
கூழுக்கும் கஞ்சிக்கும் காலத்தை ஓட்டுவோர்
குறைகள் தீர்ந்ததுவா?
சாலையின் ஓரத்தில் வாழ்க்கை நடத்துவோர்
சஞ்சலம் தீர்ந்ததுவா?
நாளைய சிங்கங்கள் இன்றைய செல்வங்கள்
வாழ்க்கை சிறந்ததுவா?
இதற்குத் தானா காலமெல்லாம்
ஏங்கினோம் – நாம்
இதற்குத் தானா சுதந்திரத்தை
வாங்கினோம்!”[22]

என்ற கேள்வி பொருள்பொதிந்த பொதுவுடைமைவாதத்தை முன்னெழுப்புவதாய் அமைகிறது. ஓலைக் குடிசைகள் ஒழிந்து உணவுக்கான சிரமம் அழிந்து ஏழையர்கள் வாழ்வில் இனிய சமத்துவம் பூக்காதவரைச் சுதந்திரம் வாங்கி என்ன பயன்? இதற்காகவா பாடுபட்டு சுதந்திரத்தை வாங்கினோம் என்று கூறுவது தலையில் சம்மட்டி கொண்டு தாக்குவதாய் அமைகிறது.

இந்தச் சுதந்திரத்தை வாங்க எத்தனை தலைவர்கள் இன்னுயிர் நீத்தனர். தேவகோட்டை பகுதியில் சுதந்திரப் போராட்டத் தியாகி பாலபாரதி என்ற செல்லத்துரை

வென்னியூர் முனியப்பத் தேவர், சித்தூர் சிவஞானத் தேவர், விளாங்காட்டூர் முத்திருளப்பன் சேர்வை, காவதுகுடி நன்னி போன்றோர் ஆகஸ்டுப் புரட்சியை முன்னெடுத்துச் சென்ற போராட்டச் செய்தியினை ஜீவபாரதி பதிவிடுகின்றார்.

திருவாடானை, திருவேகம்பத்தூர்க் காவல்நிலையம், அரசுக் கருவூலம் போன்றவை தகர்க்கப் பெற்றும், தேவகோட்டை நீதிமன்றம் அழிக்கப்பட்டும் தேசபக்தர்களால் திணறிய ஆங்கில அதிகாரிகள் விடுதலைப் போராட்ட வீரர்களைச் சுட்டுத் தள்ள முற்பட்டனர். பாலபாரதி வெள்ளையர்களிடமிருந்து தப்பித்து மாறுவேடத்தில் வைக்கம் சென்றுவிட்டார். எனவே பாலபாரதியின் வீடு கொளுத்தப்பட்டது என்ற குறிப்பினை ஜீவபாரதியின் கட்டுரைக் குறிப்புகளில் அறிய முடிகிறது.

“பாலபாரதியின் தம்பி சின்னத்துரை தேவரையும், அபிராமம் முத்தையாவையும், கைது செய்து, மொட்டை அடித்து, கரும்புள்ளி, செம்புள்ளி குத்தி, செருப்பு மாலை போட்டு, கழுதை மேல் ஏற்றி திருவேகம்பத்தூர் வீதிகளில் ஊர்வலம் நடத்தினர். பாலபாரதி பற்றிச் சொல்ல மறுத்ததால் கடுமையாகத் தாக்கினர். இதில் முத்தையாவின் பார்வை பறிபோனது. சின்னத்துரைத் தேவரின் எலும்புகளை முறித்ததுடன் ஆயுள் தண்டனையும் விதித்தனர்”[23] என்கின்றார் ஜீவபாரதி.

பாலபாரதி மேலுள்ள கோபத்தால் இன்னும் பல தண்டனைகளை அவரோடு இணைந்து செயல்பட்ட விடுதலை வீரர்களுக்கு ஆங்கில அதிகாரிகள் விதித்தனர்.

“வெள்ளையரின் தேடுதல் வேட்டையில் பள்ளத்தூர் காட்டில் சித்தூர் சிவஞானத் தேவர் சிக்கினார். பனை மரத்தில் அவரைக் கட்டி வைத்து, ‘உன்னுடைய கடைசி ஆசை என்ன?’ எனறனர். இந்த நாட்டைக் குட்டிச் சுவராக்கும் அயோக்கிய நாய்களே, என்னைச் சுடப் போகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். சாகும் போதாவது நான் சுதந்திரமாகச் சாக வேண்டும். என் கைகளை அவிழ்த்து விட்ட பின் என்னைச் சுடுங்கள்! என்றார் சிவஞானத் தேவர். கைக் கட்டுகள் அவிழ்க்கப்பட்டதும் ஜிப்பாவைக் கிழித்து நெஞ்சை நிமிர்த்தி சிவஞானத் தேவர் காட்டினார். வெள்ளையரின் துப்பாக்கிக் குண்டு நெஞ்சைத் துளைத்து சிவஞானத் தேவரை மண்ணில் சாய்த்தது. அடுத்து ஊனையூர் காட்டில் வென்னியூர் முனியப்பத் தேவர் வெள்ளையர்களிடம் சிக்கினார். அவரையும் மரத்தில் கட்டினர். அப்போது முனியப்பத் தேவர் சிரிப்பதைக் கண்டு வெள்ளையர்கள் காரணம் கேட்டனர். ‘என் கைக் கட்டுகளை அவிழ்த்துவிட்ட பின் சுடு என்றார். முனியப்பத் தேவரின் கைக்கட்டுகள் அவிழ்க்கப்பட்டன. நெஞ்சை நிமிர்த்தி தன் பெரிய

மீசையைத் திருகியபடி ‘சுடு’ என்றார் முனியப்பத் தேவர். அவரும் கொடியவர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார்”[24] என்ற ஜீவபாரதியின் பதிவு சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட வீரத்தலைவர்களின் தியாக உணர்வைப் பறைசாற்றுகிறது. ஆனால் அந்தச் சுதந்திரத்தின் பொருளுணர்ந்து இன்றைய தலைவர்கள் செயல்படவில்லை என்பதுதான் ஜீவபாரதியின் ஆழ்மனத்துச் சிந்தனையாக வெளிப்படுகிறது.

**ருஷ்யப் புரட்சி குறித்த சிந்தனைகள்**

*1917* ஆம் ஆண்டு நடந்த நவம்பர் புரட்சி உலக வரலாற்றில் ‘யுகப்புரட்சி’ என்று பேசப்பட்டது. வரலாற்றில் கண்டறியாத புதியதொரு புரட்சியாக ருஷ்யப் புரட்சி பதிவு செய்யப்பட்டது. இதற்கு முன் பல புரட்சிகள் நிகழ்ந்திருந்தாலும் சோவியத் மக்களின் அடிப்படை வாழ்வில் திருப்பத்தைக் கொண்டு வந்த மாபெரும் வரலாறு இப்புரட்சிக்கு அமைந்தது.

“ருஷ்யப் புரட்சி ஏகபோக முதலாளித்துவ நாடுகளின் தொழிலாளி வர்க்கத்துக்குப் புதியதொரு உலகம் படைப்பதற்கான போராட்ட உணர்வை ஊட்டி விட்டது. காலனி நாடுகளின் மக்களுக்குத் தங்கள் சுதந்திரத்தின் உடனடித் தேவையைப் புரிய வைத்தது. விடுதலை இயக்கப் போராட்டத்திற்கான மன எழுச்சியைத் தூண்டிவிட்டது. மக்களின் நல்வாழ்வுக்கு சோசலிச ஜனநாயகமே தேவை என்ற பாட போதனையைக் கற்பித்தது. தேசிய வாதிகளுக்குப் புதியதொரு முற்போக்குப் பார்வையை வளர்த்தது”[25] என்பார் கோ.தான்யா.

தமிழ்ப் படைப்பாளிகளில் சோசலிசப் புரட்சியின் பாதிப்பு பாரதியின் பாடலில் தான் முதலாவதாக உணர்ச்சி வடிவத்தில் தெறித்தது. பின் வழிவந்த கவிஞர்கள் பலரும் சோசலிச சமுதாய அமைப்பு மக்களுக்கு வேண்டுமென்ற விருப்பத்தை வெளிப்படுத்தினர். சோசலிசப் புரட்சிக்கு வித்திட்ட ரஷ்யப் புரட்சியை,

“ஆகாவென் றெழுந்ததுபார் யுகப்புரட்சி
கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்
வாகான தோள்புடைத்தார் வானமரர்
பேய்களெலாம் வருந்திக் கண்ணீர்
போகாமற் கண்புதைந்து மடிந்தனவாம்
வையகத்தீர் புதுமை காணீர்”[26]

என்று யுகப்புரட்சியாக ருஷ்யப் புரட்சி பாரதியால் வருணிக்கப்பட்டது. மேலும் அதனை வையகத்தில் புதுமை என்று கூவிச் சொன்னார் பாரதி.

ரஷ்யப் புரட்சி பற்றி ஜீவபாரதி எழுதும் போது அப்புரட்சிக்குத் தலைமைப் பாத்திரம் வைத்த தலைவர்களையும் பதிவு செய்ய மறந்துவிடக் கூடாது என்கின்றார்.

‘‘சோவியத் ரஷ்யாவில் நடந்த நவம்பர் புரட்சிதான் உலக வரலாற்றில் ஒடுக்கப்பட்ட மனித குலத்திற்காக நடந்த உன்னத நிகழ்ச்சியாகும். இந்தப் புரட்சி வெற்றி பெறுவதற்குத் தோழர் லெனின் வழிகாட்டுதலின் கீழ், அங்கிருந்த கம்யூனிஸ்ட் கட்சியும், அதன் தோழர்களும் அயராது பாடுபட்டதன் விளைவுதான் இந்தப் புரட்சியைச் சாத்தியமாக்கின. இந்தப் புரட்சியை மக்களிடம் கொண்டு செல்லும் பணியைப் படைப்பிலக்கியக் கர்த்தாக்களும் தங்களின் உயிர்மூச்சாகக் கொண்டிருந்தனர். இதற்கு கார்க்கியையும், மாயகோவ்ஸ்கியையும் மிகச் சிறந்த சான்றுகளாகக் கொள்ளலாம்’’[27] என்கின்றார் கே. ஜீவபாரதி.

இதன்மூலம் ரஷ்யப் புரட்சிக்குப் பெரும்பங்கு வகித்தவர் லெனின் என்பதை உணர முடிகிறது. அத்துடன் அவருக்கு ஒத்தழைத்த தோழர்களையும் நினைவு கூர்வது எண்ணிப் பார்க்கத் தக்கது. தோழமை உறவுகள் கைகூடிக் குரல் கொடுப்பது ஒன்றே பொதுவுடைமைக்கு வழி வகுக்கும் என்பதையும் உணர வாய்ப்பளிப்பதாய் அமைகிறது.

ரஷ்யாவில் நடைபெற்ற ஜார் மன்னனின் கொடுங்கோல் ஆட்சியினை,

‘‘இரணியன் போல் அரசாண்டான் கொடுங்கோலன்
ஜாரெனும் பேரிசைந்த பாவி’’[28]

என்றார் பாரதி.

‘‘தானென்ற அகங்ககாரம்
தலைக்கேறிக் கிறுகிறுக்க
ஏனென்றும் எதற்கென்றும்
எண்ணிமிகப் பாராமல்
வீணான விளம்பரத்தால்
வெறியாட்டம் போடுகின்ற

ஜாரென்ற கொடுங்கோலன்''[29]

என்கின்றார் ஜீவபாரதி. தானென்று தலைக்கேறிய ஆணவமும், விளம்பர வெறியாட்டமும் கொண்ட கொடுங்கோலன் ஜார் என்று கூறியுள்ளார்.

ஜார் மன்னனின் கொடுங்கோல் ஆட்சியினை வீழ்த்திடத் தோழர்களோடு கைகோர்த்து உழைத்திட்ட லெனினைப் பற்றியும் தம் படைப்பினிலே எழுதியுள்ளமை கருதத்தக்கது.

''பலபேர்கள் பாடுபட்டுப்
பலனின்றி வாடுவதும்
சிலபேர் தம் மெத்தையிலே
செழிப்பாக வாழுவதும்
தலையெழுத்தே தவப்பயனே
என்றிருந்த சூழ்நிலையில்
உழைக்கின்ற மக்களுக்கு
ஒளிவிளக்காய்! எத்திப்
பிழைக்கின்ற மடையருக்குப்
பேரிடியாய்! சுரண்டிக்
கொழுக்கின்ற திருடருக்குத்
தீச்சுடராய்! வந்த
தோழராம் எங்கள் லெனின்''[30]

என்று ஜீவபாரதி பாடியிருப்பது சோவியத் புரட்சியில் லெனினைப் பற்றிய அடையாளத்தைக் காட்டுவதாக அமைகிறது. பாடுபடும் பலருக்குப் பலன் இல்லாமலும், சுரண்டி வாழும் சிலர் பஞ்சு மெத்தையிலே அலங்கார வாழ்வு வாழ்வதுமாக இருக்கும் இழிநிலையை மாற்ற வந்த புரட்சிப்போரில் லெனினின் பங்கு மகத்தானது. எத்திப் பிழைப்பவர்க்குப் பேரிடியாகவும் சுரண்டிக் கொழுக்கும் சுரண்டல் வாதிகளுக்குத் தீச்சுடராகவும், உழைக்கின்ற மக்களுக்கு ஒளிவிளக்காகவும் லெனின்

திகழ்ந்தார் என்ற ஜீவபாரதியின் கவிதை பொதுவுடைமைச் சித்தாந்த வரலாற்றில் கவனிக்கத்தக்கதாகும்.

வெம்பிக் கிடந்தவர்களும், வேதனையின் உச்சத்தைத் தொட்ட தொழிலாளர்களும் சோகத்தைக் கண்ட உழைப்பாளிகளும் எழுந்து நின்று போராடக் காரணம் தோழர் லெனின் தலைமையே என்பதனை,

“விழுந்து கிடந்தவர் வெம்பித் தவித்தவர்

தொழுதல் ஒன்றையே தொழிலாய்க் கொண்டவர்

புலம்பல் ராகத்தைப் பொழுதும் இசைத்தவர்

எழுந்து நடக்கவே இயலாதிருந்தவர்

துன்பச் சுமைகளைச் சுமந்து ஓய்ந்தவர்

வறுமைக் கொடுமையால் வாழ்வை வெறுத்தவர்

உரிமை இழந்தவர் ஒன்றுமிலாதவர்

துணிந்தார்! எழுந்தார்! எதனாலே

தோழர் லெனினாம் அவராலே”[31]

என்று லெனினின் தலைமைக்கு மகுடம் சேர்க்கின்றார் ஜீவபாரதி.

மரபுக் கவிதை வடிவிலேயே கவிதை இயற்றும் ஜீவபாரதி ரஷ்யச் சுதந்திரத்திற்கு வித்திட்ட லெனினைப் பாடும் போது, தான் எழுதும் கவிதைக்கும் சுதந்திரம் தந்து புதுக்கவிதை வடிவிலும் ஒரு கவிதை எழுதி லெனினுக்குப் புகழாரம் சூட்டுகின்றார்.

“ஓ ... தோழனே ... லெனினே

ஆயிரம் கோடி ஆண்டுகள் இங்கே

ஆன பின்னாலும்

ஆயிர மாயிரம் தலைவர்கள்

இங்கே வந்து போனாலும்

உலகில் உழைப்பவன் இருக்கும் வரை

அவனுடம்பில்

ஒருதுளி ரத்தம் சுரக்கும் வரை

உலகில் செங்கொடி பறக்கும் வரை

ஓ ... லெனினே ... என் தோழனே

உனது பெயர் நிலைக்கும்!

என்றும் உனது கொள்கை தழைக்கும்''[32]

என்ற லெனினியப் பதிவு, கவிஞர் சார்ந்திருக்கும் கம்யூனிசச் சிந்தனைக்கு வலுவூட்டுவதாக அமைகிறது. ஆனாலும் லெனின் விரும்பிய சோவியத் ரஷ்யா இன்றைக்கு இல்லாத நிலையையும் ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார்.

''லெனின் கண்ட புதிய ரஷ்யா இன்று இல்லை. அதே தேசத்தில் லெனின் சிலையைச் சிதைக்கும் இழிசெயல்களும் நடந்தன. அதனால் உலக மேதாவிகள் சிலர் லெனினியம் முடிந்துவிட்டதாக முழங்கினர். ஆனால் இவற்றையும் தாண்டி லெனின் வாழ்வார். ஏனெனில் லெனின் என்பது ஒரு தனி நபரின் பெயர் மட்டும் அன்று. அது மானுட எழுச்சியின் மறு பெயர். புரட்சியின் புதிய பெயர். லெனின் சின்னஞ்சிறு குன்றில் தோன்றி ஓடி வற்றிப் போகும் ஓடை அன்று, லெனின் ஒரு ஜீவநதி. உலகத்தை மாற்ற நினைப்பவர்களும், ஒடுக்கப்பட்ட மக்களை நேசிப்பவர்களும். ஆதிக்க சக்திகளைத் தோற்கடிக்க விரும்புவர்களும், 'லெனின்' என்ற ஜீவநதியில் முக்குளிக்காமல் முன்னேற முடியாது. ஆம். லெனின் என்ற ஜீவநதி உலகில் மனிதகுலம் உள்ளவரை ஓடிக் கொண்டே இருக்கும்''[33] என்ற ஜீவபாரதியின் எழுத்து லெனின்பால் இவர் கொண்ட ஆழ்ந்த நம்பிக்கைக்குச் சான்றாகும். மார்க்சியச் சிந்தனைகளை உள்வாங்கிய லெனினியம் காலத்தால் அழிக்க முடியாத கலங்கரை விளக்கம் என்பதனைத் தன் எழுத்து மூலம் உறுதிப்படுத்தியிருக்கிறார் ஜீவபாரதி.

**மார்க்சியத் தத்துவச் சிந்தனைகள்**

மார்க்சியத்தின் உள்ளடக்கமே தத்துவம் தான். இயற்கை அதன் கிளைபோல் பரவிய மனித சமுதாயம், சிந்தனைத் தோன்றல்கள், பார்வைகள் அடங்கிய கண்ணோட்டம் இவற்றைத் தத்துவம் என்று அழைக்கின்றனர்.

“வரலாற்றுச் சூழலே ஒரு தத்துவத்தின் தோற்றத்திற்குக் காரணியாக அமைகிறது. தேவையின் அடிப்படையிலேயே பல தத்துவங்கள் உலகில் தோன்றின. வரலாற்றுத் தேவை முடிந்தவுடன் அத்தத்துவம் மறைந்து போதல் இயல்பானது. இவ்வடிப்படையில்தான் மார்க்சியமும் தோன்றி இன்றும் புறக்கணிக்க முடியாத ஒரு தத்துவமாக உலகம் முழுவதும் விளங்கி வருகிறது”[34] என்பார் சு.துரை.

உலகத் தொடக்கத்திலிருந்தே தத்துவம் இரண்டு நிலைகளில் பிரிந்து காணப்படுகின்றன. கடவுளை முதன்மைப்படுத்துவதைக் கருத்து முதல்வாதம் என்றும் பொருளினை முதன்மைப்படுத்துவதைப் பொருள் முதல்வாதம் என்றும் அறிஞர்கள் கூறுவர்.

“பண்டைய பௌத்தம், சமணம், மார்க்சியம், பெரியாரியம், அம்பேத்காரியம், ஆகியவை பொருள் முதல்வாதத் தத்துவத்தைப் பற்றியவையாகும்”[35] என்பர்.

ஜீவபாரதி மார்க்சியப் பொதுவுடைமைத் தத்துவத்தின் அடிப்படையில் பொருள் முதல்வாதக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டவராகிறார். கருத்து முதல் வாதமான கடவுள், மூட நம்பிக்கை ஆகியவற்றையும் தம் படைப்புகளின் மூலமாக எதிர்த்துப் பேசுகின்றார். அதனாலேயே மார்க்சியக் கொள்கையின் மூலவரான மார்க்சைப் பற்றிப் பலவிடங்களில் தம் எழுத்து மூலமாக வெளிப்படுத்துகின்றார்.

“காரல் மார்க்ஸ் வரலாற்றை முதன்முதலில் தமிழில் எழுதியவர் அறிஞர். சாமிநாத சர்மா தான். இந்த நூலுக்கு இணையாக இதுவரை தமிழில் வேறு எந்த நூலும் வெளிவரவில்லை. இந்த நூலில் மார்க்ஸ் இல்லாவிட்டால் எங்கெல்ஸ் இல்லை. எங்கெல்ஸ் இல்லாவிட்டால் மார்க்ஸ் இல்லை. இருவரும் இல்லாவிட்டால் உழைப்பாளிகள் உழைத்துக் கொண்டே இருக்க வேண்டியது தான். சுரண்டுபவர்கள் சுரண்டிக் கொண்டிருக்க வேண்டியது தான் என்கின்றார் சாமிநாத சர்மா. அவரின் இந்த முடிவு முழுமையான முடிவன்று”[36] என்ற கூற்று புரட்சியின் மீது ஜீவபாரதி கொண்ட நம்பிக்கைக்கு அரணாக அமைகிறது. எந்த அளவுக்கு மார்க்ஸ் மேல் ஜீவபாரதி பற்று வைத்துள்ளாரோ அதே நேரம் மார்க்ஸ் இல்லையென்றால் சுரண்டல்வாதிகளை அடக்க முடியாது என்ற கூற்றை மறுத்துள்ள பாங்கும் சிந்திக்கத் தக்கது. இந்த உலகில் புரட்சிக்காரர்கள் தோன்றிக் கொண்டே இருப்பர் என்பது இக்கூற்றை மெய்ப்பிப்பதாக அமைகிறது.

மார்க்ஸ் எங்கெல்ஸ் உழைப்புடன் மார்க்ஸின் மனைவி ஜென்னியின் உழைப்பையும், தியாகத்தையும் வரலாறு மறந்து விட முடியாது. மூலதனம் என்ற நூல் உருவாக ஜென்னியின் தியாகம் அளவற்றதாய் அமைகிறது.

"1836–இல் பெர்லின் பல்கலைக் கழகத்தில் பயில்வதற்காக மார்க்ஸ் தயாரானார். அப்போது மார்க்ஸின் தந்தை ஹென்றி மார்க்ஸின் முயற்சியினால் ரகசியமாக மார்க்ஸ் – ஜென்னியின் திருமண நிச்சயம் நடந்தது. இது ஜென்னியின் தந்தைக்குக் கூடத் தெரியாது. இது பற்றி எழுதிய ரஷ்ய எழுத்தாளர் நி.இவனேவ் அறிவுக் கூர்மையும், இயல் திறமையும், அழகும் வாய்ந்த ஜென்னி, பொதுவான ஆன்மீகத் தேவைகளாலும், நலன்களாலும் மார்க்சுடன் பிணைப்புக் கொண்டிருந்தார். போதிய நிதி வசதிகளும், சமுதாயத்தில் ஓர் அந்தஸ்தும் இல்லாத ஒரு மாணவனுடன் தனது வாழ்க்கையை இணைத்துக் கொள்ள முடிவு செய்ததன் மூலம் ஜென்னி பொருளாயத சுபீட்ச வாழ்க்கையைத் தயக்கமின்றித் துறந்தார். மார்க்சுடைய இயல்பின் அசாதாரண ஆழத்தை முதன்முதலில் உணர்ந்தவர் ஜென்னியே என்று குறிப்பிடுகின்றார்"[37] என்ற பதிவு கருதத்தக்கதாய் அமைகிறது.

பொருள்முதல் வாதத் தத்துவத்தை ஏற்றுக் கொண்ட ஜென்னி, மார்க்ஸைப் பின்தொடர்ந்திருக்கிறார். கணவன் – மனைவியின் இல்லற வாழ்வே பொதுவுடைமைச் சித்தாந்தத்திற்கு எடுத்துக்காட்டாக அமைந்தது சிந்திக்கத்தக்கது.

உழைக்கும் மக்களுக்கு உயிர் போன்றவர் மார்க்ஸ். அவருக்கு எங்கெல்சும், ஜென்னியும் இருவிழி போன்றவர்கள். இதில் எவருடைய தியாகமும் இளைத்ததன்று. மார்க்சும், எங்கெல்சும், ஜென்னியும் உழைக்கும் மக்களுக்கான மும்மூர்த்திகள் என்கின்றார் ஜீவபாரதி.

அதனால் தான் தோழர் நல்லகண்ணு தலைமையில் நடைபெற்ற நவம்பர் புரட்சி தின விழாவில் லெனினைப் பற்றிப் பாடும்போது கூட மார்க்ஸின் ஆளுமையைச் சொல்லியே லெனினை அடையாளப் படுத்துகின்றார்.

"மூலதனத்தை
ஒரு தாடிக் காரன் எழுதி முடித்தான்
ஒரு தாடிக் காரன் பேணிக் காத்தான்
குறுந் தாடிக் காரன் நீயோ — அந்தக்
கொள்கைத் தேரை ருஷ்ய வீதியில்

பவனி வரச் செய்தாய்!

வெடிகுண்டுகளை வியட்நாம் பூமியில்

விதைத்துப் பார்த்த போதும் – அந்தக்

கடலில் கூடக் கண்ணி வெடியைக்

கயவர் விதைத்த போதும் – அங்கே

ஏகாதிபத்திய இடுப்பொடித்திட

எப்படி? எப்படி? முடிந்தது? — நீ

வாழ்ந்துகாட்டிய வழிதான்! — அந்த

மார்க்ஸியம் தந்த ஒளிதான்!”[38]

என்று ஜீவபாரதி பாடுவது லெனினின் வெற்றிக்கும் மார்க்சிய வழியே காரணமாய் அமைந்தது என்பதை உணர முடிகிறது. பலபேர் இன்னும் மார்க்சியத்தைப் புரிந்து கொள்ளவில்லை. பல எதிர்ப்புகளைத் தாங்கியே மார்க்சியம் வாழ்ந்து கொண்டிருக்கிறது என்பதனை,

“வரலாற்றில் பலபேரின்

எதிர்ப்புக்கு இடையில்தான்

வளர்ந்தது மார்க்ஸிசமே — உலகில்

தழைத்தது மார்க்ஸிசமே – இந்த

மாருதி முதலாளி

நமைப்பற்றி இழிவாக

ஏதேதோ பேசட்டுமே — சேற்றை

எடுத்திங்கே வீசட்டுமே

துரும்பெல்லாம் இரும்பாகுமா? – இந்தத்

துரும்பெல்லாம் இரும்பாகுமா?”[39]

என்கின்றார்.

மார்க்சியத்தைப் புரியாமல் சேற்றை வாரி வீசினாலும் புரியாமல் ஏதேதோ உளறினாலும் பொதுவுடைமைக் கொள்கையை யாரும் அழித்துவிட முடியாது என்கின்றார். துரும்புகள் எல்லாம் இரும்பு போன்ற பொதுவுடைமைச் சித்தாந்தத்தை அழித்துவிட முடியாது என்கின்றார்.

**பொதுவுடைமைக் கவிஞர்கள் குறித்த அரசியல் பார்வை**

தமிழ்க் கவிதை வரலாற்றில் பொதுவுடைமைச் சிந்தனையை அரசியல் நோக்கோடு விதைத்த கவிஞர்களான பாரதி, பாரதிதாசன், ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் போன்ற கவிஞர்களையும் தம் படைப்புகளில் போற்றி எழுதியுள்ளார் ஜீவபாரதி.

புதுயுகக் கவிஞனும், புதியவன் குரல்களும் என்ற நூலில் மகாகவி பாரதியாரைப் பல கோணங்களில் போற்றிப் பாடியுள்ளார். கண்ணனை குருவாக, தாயாக, தந்தையாக, காதலனாக, காதலியாக, சேவகனாக, தோழனாக, சீடனாக இப்படிப் பல தலைப்புகளில் பாரதி பாடியது போல பாரதியை நண்பனாக, காதலனாக, காதலியாக, அமைச்சராக, எம்.எல்.ஏவாக, தாயாக, நிர்வாகியாக, குருவாக, மனைவியாக, சேவகனாக, குழந்தையாகப் பல நிலைகளில் ஜீவபாரதி அனுபவ உண்மைகளை வைத்து மார்க்சியக் கண்கொண்டு பாடியுள்ளார்.

“பட்டங்கள் பெறுவதற்காய்

பாட்டுக்கள் எழுதாமல்

துட்டுக்குப் பாட்டெழுதி

சுரணை கெட்டுப் போகாமல்

பட்டமரம் போன்றிருந்த

பாரதத்து மக்களெலாம்

கொட்டாவி தனைநிறுத்தி

கோழையெலாம் வீரம்பெற

எட்டைய புரத்தான்கவி

எழுதியதால் புகழடைந்தான்”[40]

என்று பாரதி புகழ் பாடியுள்ளார் ஜீவபாரதி. பாரதிக்கு முந்தைய கவிஞர்கள் பலர் ஜமீன்தார்கள், அரசர்கள், முதலாளிகள், பிரபுக்கள் போன்றோரின் பொய்யான புகழைப் பாடியும், பாலியல் கீழ்மைகளைப் பாடியும், பட்டங்களும், பரிசுகளும் பெற்றுச் சுய உணர்வின்றி சொரணை கெட்டு அலைந்தனர். ஆனால் பாரதி மட்டும் தான் பட்ட மரங்களைக் கூட துளிர்க்க வைக்கும் கவிதைகளையும், கொட்டாவி விட்டுக் கொண்டிருக்கும் சோம்பேறிகளையும், கோழைகளையும் வீரமிக்க புரட்சியாளர்களாக மாற்றிக் காட்டிய கவிதைகளையும் எழுத முடிந்தது என்று குறிப்பிடுகின்றார்.

“பாரதக் குதிரையில்
பரங்கியர் சவாரி
செய்ததால் தான் – இந்தப்
பாரதக் குதிரை
மெலிந்து போனதாய்ப்
பாரதி கூறினான் – ஆனால் இந்தப்
பாரதக் குதிரையில்
பாரத புத்திரர்
பயணம் தொடர்ந்ததும்
குதிரை மெலிந்து
கழுதையைப் போன்று
காட்சி தருவதை – அந்தப்
பாரதிக் கவிஞன்
வந்து பார்த்தால்
கவிதையா வடிப்பான்?
இல்லை இல்லை
கண்ணீர் வடிப்பான்”[41]

என்று கவலை கொள்கின்றார். பாரதத்தைக் குதிரையாக உருவகம் செய்து வெள்ளையரின் சவாரியால் மெலிந்த குதிரையாக மாறியது என்கின்றார். மெலிந்த குதிரையாக இருந்த பாரதக் குதிரை விடுதலை பெற்றவுடன் பாரத புத்திரர்கள் சவாரி செய்ததால் அது கழுதையாகவே மாறிவிட்டது என்று கிண்டல் செய்யும் ஜீவபாரதியின் அங்கதத் திறன் கருதற்பாலது.

“பாரதியோ ஆதிக்க இருளின் அந்தகாரத்தில் ஒளிமயமான கனவு கண்டான். ஜீவபாரதிக்கோ ஒரு உதயத்துக்குப் பின் கறுப்புக் கனாக் காணுமாறு வாழ்க்கை தீர்மானிக்கப்பட்டு விட்டது. சுதந்திரமே எம் தோழர்களுக்கு விலங்கானதே! எனவே இந்தக் கவிஞன் தேசிய விடுதலையுடன் திருப்தி அடைகிறவனல்ல”[42] என்று இளவேனில் குறிப்பிடுகிறார்.

இதிலிருந்து ஜீவபாரதியின் தேசம் குறித்த மார்க்சிய நிலைப்பாட்டைப் புரிந்து கொள்ள முடிகிறது. இன்னும் பாரதச் சுதந்திரத்தால் பயன் முழுமையும் கிடைக்கவில்லை என்பதே இவரின் வெளிப்பாட்டுச் சிந்தனையாக உள்ளது.

பாரதியின் சிந்தனையைப் புரிந்து கொள்ளாத பாரத தேசத்தைப் பற்றி எள்ளி நகையாடுகின்றார் ஜீவபாரதி.

“சிங்களத் தீவினுக்கோர் பாலம் கட்ட – அந்தச்
சேதுவை உயர்த்திட வழிகள் சொன்னீர் – நம்மவர்
சிங்களச் சண்டையில் லாபம் ஈட்ட – பல
செய்கைகள் செய்திட வழிகள் கண்டார்!
ஆடைகள் நெய்திட வேண்டுமென்றீர் – நெய்தவர்
ஆடையில் ஆயிரம் ஓட்டையுண்டு – உழு
படைகள் செய்திட வேண்டுமென்றீர் – அந்த
உழுபவர் கஞ்சிக்கு வாடுகின்றார்!
சந்திர மண்டலம் காணச் சொன்னீர் – அந்தச்
சந்திரனை பாம்பு விழுங்குதென்றார் – இங்கே
காவியம் ஓவியம் செய்யச் சொன்னீர் – அந்தக்

காவியப் பெண்களைக் கற்பழித்தார்!

என்றன் குருவே மகாகவியே – இங்கு

எழுதிக் குவித்திட்ட தேன்கவியே – இங்கே

உன்றன் கனவுகள் கனவுகளாய் – இன்றும்

உள்ளது உள்ளது பெருங்கவியே''[43]

என்ற கவிதை பாரதியின் கனவுகள் எல்லாம் தவறும் கனவு**க**ளாக இருந்தால் கூட மன்னிக்கலாம். கனவுகள் எல்லாம் களங்கப்படுத்தப்படும் அவலநிலையை எடுத்துச் சொல்லி ஆதங்கப்படுகிறார் கே. ஜீவபாரதி.

''ஆறறிவு படைத்த மனித சாதியும் கூட மகாகவி பாரதியின் பாடல்களில் உள்ள மெய்ப்பொருளை அறியாததனால்தான் இந்தத் தேசம் இத்தனை சீரழிவுகளில் சிக்கித் தவிக்கிறது என்பது மெய். பாரதியை நினைக்க நினைக்க இந்தப் பாரதம் எழும்; இல்லையெனில் விழும்''[44] என்று உறுதிபடச் சொல்கின்றார்.

மகாகவி பாரதியை நேசிப்பதைப் போலவே கவிஞர் ஜீவாவையும் நேசித்து ஜீவபாரதி தூக்கிப் பிடிக்கின்றார். தியாகத்தின் மாற்றுப் பெயரே ஜீவா என்கின்றார். 20.01.1978–இல் ஜீவா நினைவு நாளை தாமரை வாசகர் வட்டம் கொண்டாடிய விழாவில் கவிஞர் ஜீவாவின் புகழை ஜீவபாரதி பாடியுள்ள பாங்கு எண்ணத் தக்கது.

''ஏழையின் தோழனாய்

எமக்கெல்லாம் தலைவனாய்

இலக்கிய உலகிலே

இணையிலா மேதையாய்

அரசியல் வானிலே

அதிசய மனிதனாய்

குரலிலே சிங்கமாய்

கொள்கையில் தங்கமாய்

வாழ்ந்து முடிந்திட்ட ஜீவா – இங்கு

எல்லாமே நீயாக இருந்தாய் – நம்

இயக்கத்தின் ஜீவனாய் வாழ்ந்தாய்''[45]

என்று சென்னை சோவியத் கலாச்சார மாளிகையில் கவிஞர். செவ்வியன் தலைமையில் நடைபெற்ற கவியரங்கில் ஜீவாவைப் பற்றி ஜீவபாரதி கவிதை வடித்துள்ளார். ஜீவாவைப் பற்றிய ஜீவபாரதியின் அரசியல் பார்வை முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. தேச விடுதலைக்குப் பின் ஜீவா ஒரு முழுமையான கம்யூனிஸ்டாக நின்று இந்தத் தேச வளர்ச்சிக்குப் பாடுபட்டார் என்கின்றார்.

''தமிழகச் சட்ட மன்றத்தில் ஆட்சி மொழியாகத் தமிழை அரியணை ஏற்ற வேண்டும் என்று குரல் கொடுத்தவர் ஜீவா. பாரதி பாடல்களை நாட்டுடைமை ஆக்க வேண்டும் என்று முதன் முதலாக முழங்கியவர் ஜீவா; தமிழகத்தில் பிரிவினை கோசம் ஓங்கி ஒலித்தபோது அதை எதிர்த்துக் குரல் கொடுத்தவர் ஜீவா. இந்தியா மீது சீனா போர் தொடுத்தபோது சீனாவைக் கண்டித்து முழங்கியவர் ஜீவா. தாம் மறைவதற்கு ஒரு மாதத்திற்கு முன் தமிழக அரசு நடத்திய பாரதி விழாவில் பாரதியார் பெயரில் ஒரு பல்கலைக்கழகம் ஏற்படுத்த வேண்டும் என்று கோரிக்கை வைத்தவர் ஜீவா. அறிவில் விசாலம், ஆவேச முழக்கம், இணையில்லாத தியாகம், ஈடற்ற தொண்டு, எளியோருடன் தோழமை, ஏற்றமிகு செயல்கள், தூய உள்ளம், கொள்கையில் பற்று, கொடுமைக்கு எதிரி, மனித நேயத்தின் மகுடம், மண் வாசனையோடு மார்க்சியம் பேசிய மானுடப் பறவை, பாரதி மீது பக்தி, பாரதத்தின் மீது பாசம் இவை எல்லாவற்றின் ஒட்டுமொத்த உருவமாக வாழ்ந்து காட்டியவர் ஜீவா''[46] என்கின்றார் ஜீவபாரதி.

ஜீவாவின் அரசியல் பயணங்களையும், அவர்கண்ட தத்துவார்த்த கம்யூனிச வாழ்வையும் தெரிந்து கொள்ள ஜீவபாரதியின் இந்தப் பதிவு பேருதவியாக இருக்கிறது.

இவர்களைப் போல அரசியல் பார்வைமிக்க கவிதைகள் மட்டுமல்லாமல் திரைப்படப் பாடல்கள் வழியாகவும் பொதுவுடைமைச் சிந்தனைகளை மக்களிடம் எடுத்துச் சென்றவர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம். 'மக்கள் கவிஞர்' என்று அனைவராலும் அழைக்கப்பெறும் பேறு பெற்றவர். மூடப் பழக்க வழக்கங்களையும், சமூகச் சீர்கேட்டையும் துணிந்து எதிர்த்தவர். திரைப்படப் பாடல்கள் எழுதும் போதும் சுயநலத்திற்காக யாருடனும் சமரசம் செய்து கொள்ளாதவர். அவரைப் பற்றிய ஜீவபாரதியின் சிந்தனைகள் மிகவும் வலிமை வாய்ந்ததாகக் கருதப் பெறுகிறது.

“ஒருவரது மறைவிற்குப் பிறகும் அவரது வாழ்வை எதிர்காலச் சந்ததியினர் மத்தியில் நிலைநிறுத்த ஒருவர் வேண்டும். அந்த அற்புதப் பணியை நண்பர் திரு.ஜீவபாரதி அவர்கள் அனைவரது சிந்தனையையும் தொடும் வகையில் சிறப்புறச் செய்துள்ளார்கள்”[47] என்கின்றார் முன்னாள் அமைச்சர் க.ராசாராம். அந்த அளவிற்குப் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் புகழ்பரப்ப ஜீவபாரதி எடுத்த முயற்சி வலிமையானதாகும்.

“தங்களை நிலைப்படுத்திக் கொள்ள நினைக்கின்ற கவிஞர்கள் கவிதைகளை உமிழ்வார்களே தவிர தொகுப்பாளர்களாகவோ, பொறுப்பாளர்களாகவோ தங்களை ஆக்கிக் கொள்ள மாட்டார்கள். ஆனால் பட்டுக்கோட்டையார் மீது கொண்ட ஈடுபாட்டால், சமுதாயத்தின் மீது உள்ள கரிசனத்தால் தானே கவிஞராகத் தலைநிமிர்ந்த ஜீவபாரதி வேறு நிலைகளிலும் தன்னைத் தானே வேலைக்கு அமர்த்திக் கொள்ளுகிற விந்தையைப் பார்த்துப் பூரிப்பு அடைகிறேன்”[48] என்ற வலம்புரிஜான் கருத்தும் பட்டுக்கோட்டையார் மீது கொண்ட ஜீவபாரதியின் பற்றுக்கு அரண் சேர்ப்பதாக அமைகிறது.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் மேல்கொண்ட அளவுகடந்த கொள்கைப் பிடிப்பு ‘காலமறிந்து கூவிய சேவல்’ என்ற நூல் எழுத ஜீவபாரதிக்கு உந்து சக்தியாய் அமைந்தது. அவர் மேல் உள்ள கொள்கை ஈடுபாட்டால் சுயநலக் கவிஞர்கள் சிலபேரைக் கோபக் கணை கொண்டு சாடுகின்றார்.

“எத்தனையோ கவிஞரிங்கே
பிறந்ததுண்டு
எத்தனையோ கவிஞரிங்கே
வளர்ந்ததுண்டு
எத்தனையோ மனிதரிங்கே
கவிஞர் என்ற
எண்ணத்தில் குளிர்காயும்
நிலைமையுண்டு
பித்தளையைத் தங்கமென

நினைத்துக் கொண்டு

பேரிரைச்சல் போடுகின்ற

மனிதருண்டு! ஆனால்

கல்யாண சுந்தரம் போல் கவிதையாக்க

வல்லவர்கள் இல்லையென்ற வரலாறுண்டு''[49]

என்று போலிக் கவிஞர்களின் முகத்திரையைக் கிழிக்க முயல்கின்றார். பித்தளையைத் தங்கமாகப் புகழும் சுயநலக் கவிஞர்களின் போக்கைக் கண்டிக்கின்றார். இன்றைய அரசியல் நிலைமையில் பதவிக்காகவும், சுகத்திற்காகவும் பொய்யாகத் தலைவர்களைப் புகழ்ந்து பாடும் கவிஞர்களை ஏளனம் செய்கின்றார். இந்தச் சிந்தனை கவிஞர், முடியரசனாரின் கவிதையோடு ஒப்பு நோக்கத்தக்கது.

''காசுக்குப் பாடுபவன் கவிஞன் அல்லன்

கைம்மாறு விழைந்துபுகழ் பெறுதல் வேண்டி

மாசற்ற கொள்கைக்கு மாறாய் நெஞ்சை

மறைத்துவிட்டுப் பாடுபவன் கவிஞன் அல்லன்

தேசத்தைத் தன்னினத்தைத் தாழ்த்தி விட்டுத்

தேட்டையிடப் பாடுபவன் கவிஞன் அல்லன்

மீசைக்கும் கூழுக்கும் ஆசைப்பட்டு

மேல்விழுந்து பாடுபவன் கவிஞன் அல்லன்''[50]

என்ற முடியரசனாரின் கவிதைச் சிந்தனையும், ஜீவபாரதியின் கவிதைச் சிந்தனையும் ஒரே நேர்கோட்டில் சந்திப்பதாக அமைகிறது. இரண்டு கவிஞர்களும் குறிப்பிடுவதைப் போல, போலிக் கவிஞர்களாய்ப் பொய்முகம் காட்டாதவர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம். அவர்தம் கவிதைகள் சமூக மாற்றத்திற்கு வித்திட்டவை என்கின்றார் ஜீவபாரதி.

''இவன் கவிதைகள்

வேப்பமரப் பேய்களுக்கு

ஆப்புகள் அடித்ததுண்டு
சோம்பேறித் தம்பி மார்களுக்குச்
சுறுசுறுப்புக் கொடுத்ததுண்டு
வறுமைக்குப் பயந்து; திருட
வழிகாணும் பாப்பாவுக்கு
அறிவுரை கொடுப்பதுண்டு
தொழிலாள வர்க்கத்தாரின்
துயரங்கள் தூள்தூளாகச்
சுரண்டிடும் கூட்டத்தாரின்
சூழ்ச்சிகள் அழிந்துபோகத்
துணையாக இருப்பதுண்டு
அநியாயக் கூட்டத்துக்கு
அடிமேல் அடிகள் உண்டு
இவன் பாதையில் தொடர்வதே நமக்கு நன்று''[51]

என்று பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பற்றிய தம் சிந்தனைத் தெளிவை வெளிப்படுத்தியுள்ளார்.

''ஒடுக்கப்பட்டவர்களுக்காக அனுதாபப்பட்டு எழுதாமல் ஒடுக்கப்பட்டவர்களின் குரலாகவே ஒலித்தவர் மக்கள் கவிஞர்''[53] என்பதே பட்டுக்கோட்டை பற்றிய ஜீவபாரதியின் மதிப்பீடாக அமைகிறது. எனவே தான் பட்டுக்கோட்டையில் இவருக்கு மணிமண்டபம் அமைக்கப் பல்வேறு முயற்சிகளை எடுத்துள்ளார்.

''மகாகவி பாரதி அடிமைப்பட்ட தேசத்தின் விடுதலைக் குரலாகவும், பாவேந்தர் பாரதிதாசன் விடுதலை பெற்ற தேசத்தின் தடைகள் சிலவற்றைத் தகர்க்கும் குரலாகவும் மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் உழைக்கும் வர்க்கத்தின் ஓங்காரக் குரலாகவும் ஒலித்ததனால்தான் மூவரும் காலம் தெரிந்து

கூவிய சேவல்களாகக் கருதப்படுகிறார்கள்”[53] என்று ஜீவபாரதி, துணிந்து கூறுகின்றார்.

**தமிழகப் பொதுவுடைமை அரசியல் தலைவர்கள் பற்றிய சிந்தனைகள்**

கவிஞர்கள் வரிசையிலே பாரதி, பாரதிதாசன், ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் போன்ற கவிஞர்களைப் பற்றி எழுதிய ஜீவபாரதி, சிங்காரவேலரின் சீரிய கொள்கைகளைப் பற்றி நிறைய எழுதியுள்ளார்.

“மதம், அரசியல், மூடத்தனம் ஆகிய அனைத்தையும் பகுத்தறிந்து மக்களுக்கு உணர்த்திச் சென்ற சிங்காரவேலர் சென்னையில் ஒரு மீனவக் குடும்பத்தில் பிறந்தார். இவர் பிறந்த பகுதி மயிலாப்பூர். தந்தையின் பெயர் வெங்கடாசல செட்டியார். தமது பிறந்த பகுதியின் முதல் எழுத்து ‘ம’ வையும், தமது தந்தையின் பெயருக்குரிய முதல் எழுத்து ‘வெ’வையும் இணைத்து ம.வெ.சிங்காரவேலர் ஆனார்”[54] என்று அவர் தம் வாழ்வியல் உண்மைகளைக் கூறும் ஜீவபாரதி அவர்தம் உயரிய கோட்பாடுகளையும் வரையறுத்துப் பேசுகின்றார்.

தமிழகத்தில் பொதுவுடைமைச் சிந்தனை உருவாக மூலகாரணமாக இருந்து பல புரட்சிப் போராட்டங்களை நடத்தியவர் சிங்காரவேலர். அதற்கு மணிமகுடமாக அவர் தலைமை தாங்கிய கான்பூர் மாநாட்டை இவர் நினைவு கூர்கின்றார்.

“1925இல் கான்பூர் நகரில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் மாநாடு நடந்தது. இந்த மாநாட்டிற்குச் சிங்காரவேலர் என்ற தமிழர் தலைமை ஏற்றார் என்பது ஒவ்வொரு தமிழனும் தலைநிமிரும் செய்தியாகும்”[55] என்று சிங்காரவேலரின் பெருமையை எடுத்துரைக்கின்றார் ஜீவபாரதி.

அதுபோல கம்யூனிஸ்ட் கட்சியின் கறைபடியாத கரம் தோழர் நல்லக்கண்ணு என்று புகழ்ந்துரைக்கின்றார். நல்லக்கண்ணு, தா.பாண்டியன் போன்ற கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களிடம் நடத்திய நேர்காணலைத் தொகுப்பு நூலாக வெளியிட்டுள்ளார் ஜீவபாரதி. அவை போக கேள்வி – பதிலை குறுநூலாகவும் வெளியிட்டுள்ளார். தம் கவிதை நூல்களிலும் நல்லகண்ணு போன்ற பொதுவுடைமையாளர்களைப் புகழ்ந்தேத்தியுள்ளார்.

நல்லகண்ணு அவர்களின் 80ஆம் பிறந்தநாள் விழாவுக்காக எழுதிய கவிதையில் ஜீவா இல்லாத குறையை இவர் மூலம் கண்டு மகிழ்கிறேன் என்கின்றார் ஜீவபாரதி.

“வெள்ளையர் எதிர்ப்பில் அன்று
வீரனாய்க் களம் புகுந்தாய்
வெள்ளையர் கதைமுடிந்து
விடுதலை கண்டபின்பும்
கொள்ளையர் எதிர்ப்பில் சற்றும்
குறையாமல் போர்தொடுத்தாய்
வெள்ளை மனசுக்காரா – இந்த
வித்தையை எங்கே கற்றாய்
கம்பீரத் தோற்றம் – ஆனால்
கசங்கிய வேட்டி சட்டை
கருணை சூழ் விழிகள், தலை
கலைந்தும் கலையாக் கோலம்
பதவிக்கு அலைந்ததில்லை
பணத்திற்குப் பணிந்ததில்லை
எதுவந்த போதும் உண்மை
இயம்பிட மறந்ததில்லை
தியாகத்தின் மாற்றுப் பெயரே
ஜீவாதான் என்பேன்! அந்த
ஜீவாவைக் காணா நாங்கள்
ஜீவாவை உன்னில் கண்டோம்”[56]

என்று எழுதியுள்ளார். இக்கவிதை ஜீவாவிற்கும், நல்லகண்ணுவிற்கும் உள்ள பொதுப்பண்புகளை விளக்குவதாகவும் இருவரின் எளிமை, நேர்மை, கொள்கைப் பிடிப்பு போன்ற ஒத்த குணங்களை ஒப்பிடுவதாகவும் அமைகிறது.

நல்லகண்ணுவிடம் நேர்காணல் செய்து திரும்புகிற போது எண்ணிப் பார்த்த ஜீவபாரதி, ‘‘எளிமை … எதற்கும் ஆசைப்படாத உள்ளம் … அதிர்ந்து பேசாத பேச்சு… அனைவர் மீதும் தாயுள்ளம் கொண்ட பாசம் … எது வந்த போதும் கொள்கையை விட்டுக் கொடுக்காத போக்கு … இன்னும் எத்தனையோ நற்பண்புகளுக்கு உதாரணமாக வாழ்ந்து கொண்டிருக்கும் எளிமையின் சிகரமான *90* வயதைத் தொடப்போகும் தோழர். ஆர்.நல்லகண்ணுவிடம் நேர்காணலை முடித்துவிட்டு அவர் குடியிருக்கும் அரசுக்குச் சொந்தமான வாடகை வீட்டை விட்டு வெளியே வருகிறேன். வீதியில் விதவிதமான கார்கள் அணிவகுத்துச் செல்கின்றன. அப்போது தனக்கென்று சொந்தமான ஒரு வீடோ, ஒரு காரோ வைத்துக் கொள்ளாத தோழர் நல்லகண்ணுவை நினைத்தேன். ஆம். இத்தகைய மனிதர்கள் சிலரால் தான் இன்னும் இந்தத் தேசம் வாழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை இன்றைய தலைமுறை எப்போது அறியும்? அறிந்தால் இந்தியா எழும்’’[57] என்று ஆதங்கப்படுகிறார்.

வாடகை வீட்டிலே மிக எளிமையாக வாழ்ந்த தலைவர்கள் சிலரால் தான் இந்த உலகம் நிலைபெற்றிருக்கிறது. இது போன்ற சூழ்நிலைகள் உருவாக இந்தத்தலைமுறை மாற வேண்டும். அதற்குப் பொதுவுடைமைச் சித்தாந்தமே தீர்வு என்று கூறுகின்றார்.

**மொழி அரசியல் குறித்த சிந்தனைகள்**

பொதுவுடைமைவாதிகள் தமிழுணர்வுக்கு அப்பாற்பட்டவர்கள் என்ற சிந்தனைப் போக்கு முரண்பட்டதாகும். பொதுவுடைமைப் பார்வைமிக்க பாரதி, பாரதிதாசன், ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், திரு.வி.க. உள்ளிட்ட பல படைப்பாளிகள் தமிழ் வளர்ச்சி குறித்த சிந்தனைகளை விதைத்துள்ளனர்.

‘‘மொழிப்பற்றில் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல பொதுவுடைமைவாதிகள். பதவிக் கனி பறிக்கும் ஏணியாக மட்டும் மொழியைப் பார்க்காமல், மக்களின் வாழ்வோடும், வளமோடும் பின்னிப் பிணைந்த இயல்பான உணர்ச்சியாகவே மொழிப்பற்றை உணர்ந்தவர்கள் பொதுவுடைமைவாதிகள்’’[58] என்பார் சு.பொ.அகத்தியலிங்கம்.

மொழியும் அரசியல்வாதிகளின் கட்டுப்பாட்டிற்குள் இயங்குவதாகவே அமைந்திருப்பது வேதனையளிப்பதாகும். மொழிக்குச் சுதந்திரம் தேவை என்பது பொதுவுடைமைவாதிகளின் தீவிரச் சிந்தனை ஆகும். தாய்மொழிப் பாடத்திலேயே

அனைத்துக் கல்வியையும், பட்டங்களையும் சுதந்திரமாகப் படித்துப் பெறச் சட்டங்கள் இங்கே தடையாக இருக்கின்றன.

“பி.ஏ பட்டப் படிப்புக்கான சகல பாடங்களையும், தமிழிலேயே கற்றுத் தருவதற்கு ஏற்ற முறையில் ஆசிரியர்களுக்குத் தகுந்த பயிற்சி அளிக்க வேண்டும். அதோடு இதற்கான பாடப்புத்தகங்களையும் சிறந்த முறையில் தயாரிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். பலவித விஞ்ஞானங்கள், கணிதம், பொருளாதாரம் முதலியவை சம்பந்தப்பட்ட கலைச் சொற்களையும் தாமதமின்றித் தயாரிக்க வேண்டும். இது போன்ற நடவடிக்கைகளை இப்போதிருந்தே சுறுசுறுப்பாக மேற்கொண்டால் தான் *1963 – 64*ஆம் வருட வாக்கில் கல்லூரிகளில் பி.ஏ பட்டப் படிப்பிற்குத் தமிழைப் போதனா மொழியாக்க இயலும். இதற்கும் மேலே மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி, சட்டக்கல்லூரி போன்றவற்றிலும் தமிழே போதனா மொழியென்ற உன்னத நிலை ஏற்பட வேண்டும். அப்போது தான் நமது செந்தமிழ் அதற்குரிய உயரிய இடத்தை அடைந்ததாக நாம் கருத முடியும என்று தாமரை *14.04.1959* தேதியிட்ட இதழில் வரவேற்கிறோம் என்ற தலைப்பில் இலக்கியப் பேராசான் ஜீவா தலையங்கம் எழுதியிருக்கிறார்”[59] என்ற ஜீவாவின் சிந்தனையை தாமரை என்ற இலக்கிய ஏட்டிலிருந்தது எடுத்து அவர்தம் மொழிச் சிந்தனையை எடுத்தியம்புவதோடு தன்னுடைய தாய்மொழிச் சிந்தனையையும் வெளிப்படுத்தியுள்ளார்.

அதன்பின் பல அரசியல் தாக்குறவுகள் மாறி மாறி வந்திருப்பினும் தமிழுக்குரிய தனி இடம் இன்னும் சரிவரக் கொடுக்கப்படவில்லை என்பதே ஜீவபாரதியின் சிந்தனைத் தாக்கமாக அமைகிறது. தாமரை இதழில் ஜீவா எழுதியதைப் பதிவிட்டதோடு நின்றுவிடாமல் ‘தாமரை வளர்ச்சியும் இலக்கியத்தின் உயிரும்’ என்ற தமது கட்டுரையில், “ஜீவா எழுதி அரை நூற்றாண்டு கடந்த பின்னாலும் கூட முழுமையாகத் தமிழகத்தில் தமிழ் அரசோச்சவில்லை. செம்மொழி மாநாடுகளும், தமிழ் முழக்கங்களும் தனிநபர் துதிப் பாடல்களாகவே நடந்து முடிந்ததே தவிர தமிழுக்கு உரிய இடம் இன்று வரை கிடைக்கவில்லை என்பது வேதனை மிக்க செய்தியாகும். தமிழைச் சொல்லியே ஆட்சி அதிகாரத்திற்கு வந்தவர்களால் தான் தமிழக வீதிகள் தோறும் ஆங்கிலப் பள்ளிகள் முளைத்தன. அதன் விளைவு வளர்கின்ற சந்ததி அம்மா, அப்பா என்ற வார்த்தைகளை மறந்து மம்மி, டாடி என்று அழைத்து இன்று மா, டா என்று அழைக்கும் நிலைக்கு வந்து விட்டது”[60] என்று இன்றைய சமூக அரசியல் நிலை கண்டு கொதிப்படைகின்றார் ஜீவபாரதி.

அரசியலில் தனிநபர் துதியும், போலி மேடை முழக்கங்களுமே நிகழ்த்துகின்ற அரசியல்வாதிகளை நையப்புடைப்பதோடு இன்றைய ஆங்கிலப் பள்ளிகளின் அவல நிலையையும் அம்பலப்படுத்தியுள்ளார். பெற்ற தாய், தந்தையைக் கூடத் தமிழில் அழைக்காத அவமானம் மிக்க தமிழகத்தின் நிலையை எள்ளி நகையாடுகின்றார். ஒரு மொழியின் வளர்ச்சி என்பது பண்டைய இலக்கியங்களை வைத்து மட்டுமே மதிப்பிட முடியாது. இன்றைய இலக்கிய வடிவங்கள், படைப்புகள், ஆய்வுகள் போன்றவையும் மொழி வளர்ச்சிக்கான காரணிகளாய் அமையும். அந்த வகையில் மொழி வளர்ச்சியில் கம்யூனிசச் சிந்தனை மிக்க படைப்புகளின் தாக்கங்களும் உரம் சேர்க்கின்றன.

ஆய்வுலகில் புதுமையைச் சேர்த்த தொ.மு.சி ரகுநாதன் பற்றி எழுதும் போது ‘பன்முகத்திறன் கொண்ட படைப்பாளி’ என்று எழுதியுள்ளார். தமிழக இடது சாரி இயக்கங்களில் எத்தனையோ படைப்பாளிகள் இருந்திருக்கின்றனர். இப்போதும் இருக்கின்றனர். எதிர்காலத்திலும் இருப்பர். ஏனெனில் ஒரு படைப்பாளி என்பவன் இடது சாரிச் சிந்தனையோடும், எளியோர் வாழ்வோடும் இணைந்திருந்தால் தான் அவனுடைய படைப்புகளுக்கு மகத்துவம் உண்டு என்கின்றார் ஜீவபாரதி.

“இடதுசாரி இயக்கப் படைப்பாளிகளில் பலருக்குக் கவிதை கைவரப் பெற்றால் கதை எழுத வராது. கதை எழுதுவோருக்கு கவிதை கைகொடுக்காது. கவிதை எழுதவும், கதை வடிக்கவும் தெரிந்தவர்களுக்கு ஆய்வு செய்யத் தெரியாது. கவிதை, கதை, ஆய்வு என மூன்றிலும் தேர்ச்சி பெற்றவர்களுக்கு மேடையில் சிறப்பாகப் பேச முடியாது. இவை அனைத்திலும் சிறந்து விளங்கியதுடன், ஆங்கிலத்திலிருந்து பல நூல்களைத் தமிழாக்கம் செய்து மொழிபெயர்ப்பாளராகவும், ‘மருது பாண்டியர்’, ‘சிலைபேசிற்று’ ஆகிய நாடக நூல்களை எழுதி நாடக ஆசிரியராகவும், ‘தினமணி’, ‘சக்தி’, ஆகிய பத்திரிகைகளில் துணை ஆசிரியராகவும் ‘முல்லை’, ‘சாந்தி’, ‘சோவியத் செய்தித் துறை’ ஆகியவற்றில் ஆசிரியராகவும் திகழ்ந்து இலக்கியத்தில் பன்முகத் திறன் கொண்ட படைப்பாளியாக வாழ்ந்து சிறந்தவர் தொ.மு.சி ரகுநாதன்”[61] என்று தொ.மு.சியைப் பற்றி தம் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

அத்துடன் ஒரு உண்மைச் செய்தியையும் பதிவிட்டுள்ளார். “மார்க்சிம் கார்க்கி எழுதிய ‘மதர்’ என்ற ரஷ்ய நாவல் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது. அதை ‘அம்மா’ என்ற தலைப்பில் ஒருவர் தமிழாக்கம் செய்திருந்தார். அதே நாவலை தொ.மு.சி ரகுநாதன் ‘தாய்’ என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்தார்.

தொ.மு.சி ரகுநாதன் தமிழாக்கம் செய்த ‘தாய்’ தான் தமிழர்கள் மத்தியில் அதிகம் பேசப்பட்டது; இப்போதும் பேசப்பட்டு வருகிறது”[62] என்று கூறியுள்ளார்.

இதிலிருந்து பொதுவுடைமைச் சிந்தனைமிக்க படைப்பாளிகளும், ஆய்வாளர்களும் மொழியை கருத்து விளக்கக் கருவியாகப் பயன்படுத்தியதை அறியமுடிகிறது.

**தேர்தல் குறித்த சிந்தனைகள்**

இப்போது இந்தியாவில் அமைந்துள்ள மக்களாட்சி முறையில் தேர்தல் முக்கியப் பங்கு பெறுகிறது. ஐந்தாண்டுக்கு ஒருமுறை வரும் தேர்தல் அதிகாரப் போக்குடைய அரசியல்வாதிக்கே சாதகமாய் அமைகிறது. அது ஒரு முதலாளித்துவப் போக்கே ஆகும்.

“முதலாளித்துவ சமுதாயத்தில் சோசலிச வாழ்வோ, ஜனநாயக ஆட்சியோ இருக்க முடியாது. ‘ஜனநாயக சோசலிசம்’ என்ற சொல்லை முதலாளிகளே உருவாக்கித் தங்கள் வர்க்கத்துக்குச் சாதகமான அரசியல் சட்டதிட்டங்களைத் தோற்றுவித்துக் கொண்டு பயனடைகின்றனர்”[63] என்பார் கோ. தான்யா.

சட்டத்தையும், அரசையும் தனக்குச் சாதகமாகப் பணத்தால் விலைபேசுபவர்களே பலம் படைத்த அரசியல்வாதிகளாக உலா வருகின்றனர். அவர்களே தேர்தல் களத்திலும் வெற்றி வாகை சூடுகின்றனர். அவர்கள் கையிலே செல்லும் அரசாட்சி மக்களுக்கு நன்மை பயப்பதில்லை என்பது ஜீவபாரதியின் எண்ணம்.

ஐந்தாண்டுக்கு ஒருமுறை நடத்தப்படும் இந்த நிகழ்வை மக்களுக்குப் பயன்படாத திருவிழா என்றே குறிக்கின்றனர்.

“தமிழகக் கிராமங்களில் ஆண்டுக்கு ஒருமுறை ஏதோ ஒரு சாமியை முன்னிட்டுத் திருவிழாக்கள் நடப்பதுண்டு. அந்தத் திருவிழாவைக் காணச் சுற்று வட்டாரக் கிராம மக்கள் எல்லாம் அங்கே கூடுவதுண்டு. புதிதாக அங்கு முளைத்த கடைகளில் இருக்கும் பொருட்களையும், வேடிக்கை விளையாட்டுக்களையும் மக்கள் ஆர்வத்துடன் பார்ப்பதுண்டு. புத்தாடை சரசரக்க, பொன் நகைகள் மினுமினுக்க, கண்கள் விரிந்திருக்கக் கூட்டத்தில் பெண்கள் மிதந்து கொண்டிருப்பர். கூட்டத்தை வாய்ப்பாகக் கொண்டு ஜேப்படித் திருடர்களும், நகைகளைப் பறித்துச் செல்லும் கேடிகளும் கூட்டத்தில் கலந்து அடித்துச் செல்வர். இந்தக் கிராமத்

திருவிழாக்களைப் போன்றுதான் இந்தியாவில் ஐந்தாண்டுக்கு ஒருமுறையும், சில சமயங்களில் முன்னதாகவும் நடக்கும் பொதுத்தேர்தல்கள். அதனால் இந்தத் தேர்தல்களைத் தமிழர்கள் ‘தேர்தல் திருவிழா’ என்று சொல்லி மகிழ்கின்றனர். கிராமத் திருவிழாக்களைப் போன்றே தேர்தல் திருவிழாக் காலங்களிலும் மக்கள் ஒருவித போதை மகிழ்ச்சியில் திளைப்பர்”[64] என்கின்றார் ஜீவபாரதி.

இவ்வாறு கிராமத் திருவிழாவையும், தேர்தல் திருவிழாவையும் ஒப்பிட்டுக் கவிஞர் நோக்குவது சிந்திக்க வைக்கிறது. திருவிழாக் கூட்டத்தில் திருடர்களும், கேடிகளும் கொள்ளை அடித்துச் செல்லவும் தயங்க மாட்டார் என்பது தேர்தல் நேரத்திலும் சில கொள்ளையர்களால் மக்கள் ஏமாற்றப்படுவதை அரசியல் கண்கொண்டு அலசியுள்ளார். ஐந்தாண்டுக்கு ஒருமுறை வரவேண்டிய தேர்தல் சில நேரங்களில் முன்னதாகவும் வரக்கூடும் என்று சொல்வதிலிருந்து இங்கே நடக்கும் ஆட்சிக் கவிழ்ப்பை சனநாயக அநீதி என்று மறைமுகமாகத் தெரிவிக்கின்றார். தேர்தல்களைத் தமிழர்கள் தேர்தல் திருவிழா என்று கொண்டாடுகின்றனர் என்று கூறுவதிலிருந்து வழிபாட்டிலும் சரி, ஆட்சியாளர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் சரி தமிழர்கள் சரியான நிலைப்பாட்டைக் கையாளவில்லை என்று புரிய வைக்கின்றார். நிறைவாகத் தேர்தல் காலத்திலும், கிராமத் திருவிழா போன்றே போதையில் திளைக்கின்றார் என்று சொல்லியிருப்பது மேலும் சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது.

பொதுவாக அரசியல் சித்தாந்தம் என்பது அனைவருக்கும் பொருந்துவதாகவும், அனைத்து மக்களின் நலன்கள் அடிப்படையில் உருவானதாகவும் உள்ளது என்று ஆளும் வர்க்கம் தெரிவிப்பது வெறும் ஏமாற்று வித்தையே என்பது நன்றாக விளக்கப்படுகிறது.

“ஒவ்வொரு அரசியல் சித்தாந்தமும் அந்தந்த வர்க்கத்தின் நலன்களைப் பிரதிபலிக்கிறது. அதனால் தான் எல்லா வர்க்கமும் தமக்கென்று தனித்தனியான அரசியல் சித்தாந்தத்தைக் கொண்டவையாக இருக்கிறது. முதலாளித்துவ வர்க்கத்தின் சித்தாந்தம் சனநாயகம், சுதந்திரம், மனித உரிமைகள் என்ற சொல் அலங்காரத்திற்குள் ஒளிந்திருக்கிறது. ஏன் இது வெறும் அலங்காரம் என்று சொல்லப்படுகிறது என்றால் இவற்றை அந்தச் சமுதாயத்தில் நிறைவேற்றுவது சாத்தியம் இல்லாமையேயாகும்”[65] என்பார் அ.கா. ஈஸ்வரன்.

சனநாயகம் என்ற பெயரில் நடத்தும் தேர்தல் முறையே ஒரு ஏமாற்று வேலைதான் என்பதை ஜீவபாரதி நிறுவுகின்றார். இங்கே நடக்கும் தேர்தல் முறையின்

அவலங்கள் குறித்துப் பேசும் ஜீவபாரதி “தேர்தல் ஆணையத்தின் அத்தனை விதிகளையும் காலில் போட்டு மிதித்து விட்டு வெற்றியை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு வேட்பாளர்கள் தேர்தலைச் சந்திப்பர். இத்தகைய தீய செயல்களைச் செய்ய விரும்பாத கட்சிகள் தோற்கடிக்கப்படுவது தொடர்ந்து நடப்பதால்தான் அறிவாளிகள் அரசியலுக்கு வர அஞ்சுகின்றனர். அதனால்தான் சட்ட மன்றங்களிலும் நாடாளுமன்றத்திலும் கிரிமினல்கள் அதிகரித்து வருகின்றனர்”[66] என்கின்றார்.

நல்லவர்கள் அரசியலுக்கு வர மறுக்கின்றனர் என்று சொல்வதிலிருந்து அரசியலில் முதலாளித்துவச் சர்வாதிகாரப் போக்கு தலைவிரிப்பதை உணரமுடிகிறது. ஏமாற்றுவோரும், ஏமாற்றப்படுவோரும் சமூகத்தில் நிலைத்திருப்பதை இன்றைய அரசியல் சூழ்நிலை அப்பட்டமாகத் தெரிவிக்கிறது.

அதனால் தான் இன்றைய பாரத தேசத்தின் நிலையினைக் கவிதையாக வடிக்கின்றார்.

“ஆயுள் முழுவதும் ஓட்டுப் போடலாம்
அதற்குப் பின்னாலே உதையும் வாங்கலாம்
ஓட்டுக் கேட்கையில் இருந்த பணிவெலாம்
கோட்டை சென்றபின் மறந்து போகலாம்”[67]

என்ற கவிதை அடிக்கடி தேர்தல் வரும் அவலத்தையும், அரசியல்வாதிகளின் சுயநலப்போக்கையும் தெளிவு படுத்திப் பேசுகிறது. இந்த நிலை மாறுதற்கும் பொதுவுடைமை பூப்பதற்கும் அரசியல் நிலை இன்று தடையாக இருக்கிறது என்பதே ஜீவபாரதியின் அரசியல் சிந்தனையாக உள்ளது.

**தொகுப்புரை**

அரசியல் உணர்வு என்பது மக்கள் அனைவருக்கும் பொதுவானது. படைப்பாளர்களுக்கு அரசியல் சிந்தனை என்பது மிகத் தேவையான காரணியாகக் கருதப்படுகிறது. மக்கள் தொடர்புடைய படைப்பாளிகள் யாரும் அரசியல் பற்றி எழுதாமல் இருந்ததில்லை. அரசியல் நோக்கில் எதிர்ப்புரட்சி வெடிக்கும் போதுதான் மாற்றம் உருவாகும் என்று மார்க்சியவாதிகள் நம்பினர். அரசியல் மாற்றம் வர, தொழிலாளர்கள் ஒன்று கூடிக் குரல் கொடுக்க வேண்டும் என்பதே ஜீவபாரதியின் சிந்தனையாக

உள்ளது. சுதந்திரம் வாங்கியதற்குப் பிறகும் முறையான வாழ்க்கை முறையும், பொருளாதாரச் சமநிலையும் வளர்க்கப்பெறவில்லை. இந்திய மண் சிவந்ததற்குக் காரணமே கம்யூனிஸ்ட் தோழர்களின் இரத்தம் தான் என்பது வரலாறு என்கின்றார். மன்னராட்சி ஒழிந்தாலும் முதலாளித்துவ ஆட்சி ஒழியவில்லை. ஆள்பவர்கள் யாராக இருந்தாலும் பாதிக்கப்படுபவர்கள் மக்களாகவே உள்ளனர் என்கின்றார்.

உழைக்கும் வர்க்கம் ஏமாளியாய் இருக்கும் வரை அரசியல்வாதிகளின் உதைபந்தாகவே இருக்கும் சூழ்நிலை ஏற்படும். பொதுவுடைமை பூக்கவில்லை என்றால் சுதந்திரம் பெற்றும் பயனில்லை என்கின்றார். தமிழ்ப் படைப்பாளிகளில் சோசலிசப் புரட்சியின் பாதிப்பு பாரதியின் பாடலில்தான் முதலாவதாக ஆரம்பித்தது. ருஷ்யப் புரட்சிக்குப் பெரும்பங்கு வகித்தவர் லெனின் என்பது வரலாற்று உண்மை. தமிழகத்தில் பொதுவுடைமைச் சிந்தனை உருவாக மூலகாரணமாக இருந்து பல புரட்சிப் போராட்டங்களை நடத்தியவர் சிங்காரவேலர். கம்யூனிஸ்ட் கட்சியின் கறைபடியாத கரம் தோழர் நல்லகண்ணு என்கின்றார்.

மொழியும் அரசியல்வாதிகளின் கட்டுப்பாட்டிற்குள்ளேயே இயங்குகிறது. அரசியலில் தனி நபர் துதியும், போலி மேடை முழக்கங்களுமே நடந்து கொண்டிருக்கிறது. சட்டத்தையும், அரசையும், தனக்குச் சாதகமாகப் பணத்தால் விலை பேசுபவர்களே பலம் படைத்த அரசியல்வாதிகளாக உலா வருகின்றனர். கிராமத் திருவிழா போன்று தேர்தல் திருவிழாவும் அடிக்கடி வருவது சுயநலப்போக்கின் உச்சம் என்கின்றார். பொதுவுடைமை பூக்கத் தடையாக இருக்கும் இன்றைய மக்கள் விரோத அரசியல் போக்கு மாற்றப்பட வேண்டும் என்பது ஜீவபாரதியின் அரசியல் கொள்கையாக உள்ளது.

## சான்றெண்விளக்கம்

1. ஆ. ஜெகந்நாதன், பாரதிதாசனில் மார்க்சியம், பக்.32–33.
2. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.53.
3. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.10.
4. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.56.
5. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.17.
6. கே.ஜீவபாரதி, நினைவு நாட்களும், நெஞ்சில் அலைகளும், ப.70.
7. மேலது, ப.70.
8. மேலது, ப.71.
9. மேலது, ப.75.
10. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழ்ப்பண்பாடும் இலக்கியமும், ப.112.
11. கே.பாலதண்டாயுதம், மார்க்சிய ஞானரதம், பக்.100–101.
12. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.8.
13. மேலது, ப.56.
14. மேலது, ப.56.
15. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, ப.100.
16. வி.பி.சிந்தன், ரஷ்யப் புரட்சி வரலாறு, ப.5.
17. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், பக்.70–71.
18. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.40.
19. வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப.27.
20. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.42.
21. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.10.

22. மேலது, ப.53.

23. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.36.

24. மேலது, பக்.36–37.

25. கோ. தான்யா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம், ப.72.

26. ச.மெய்யப்பன் (தொ.ஆ), பாரதியார் கவிதைகள், ப.209.

27. கே.ஜீவபாரதி, மலர்களுக்காக மலர்ந்தவை, ப.11.

28. ச.மெய்யப்பன் (தொ.ஆ), பாரதியார் கவிதைகள், ப.209.

29. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.84.

30. மேலது, ப.85.

31. கே.ஜீவபாரதி, மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி, ப.119.

32. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.15.

33. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.30.

34. சு.துரை, தமிழ் இலக்கிய ஆய்வில் மார்க்சிய நோக்கு, ப.1.

35. இதயகீதன், வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.137.

36. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.31.

37. மேலது, ப.32.

38. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.69.

39. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.39,

40. கே.ஜீவபாரதி, புதுயுகக் கவிஞனும், புதியவன் குரல்களும், ப.50.

41. மேலது, ப.54.

42. இளவேனில்(அணிந்துரை), கே.ஜீவபாரதி (நூ.ஆ), புதுயுகக் கவிஞனும், புதியவன் குரல்களும், ப.7.

43. கே.ஜீவபாரதி, புதுயுகக் கவிஞனும் புதியவன் குரல்களும், ப.26.

44. கே.ஜீவபாரதி, இந்தப் பாடல்களும் எனது திரையும், ப.159.

45. கே.ஜீவபாரதி, களத்தில் பிறந்த கவிதைகள், ப.24.

46. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், பக்.118–119.

47. கே.ஜீவபாரதி, (பட்டுக்கோட்டையார் புகழ்பரப்பும் பணியில் கே.ஜீவபாரதி), காலமறிந்து கூவிய சேவல், ப.151.

48. மேலது, ப.151.

49. கே.ஜீவபாரதி, கவிதை எழுதினேன் கடிதம் வந்தது, ப.50.

50. பாரிமுடியரசன், (தொ.ஆ), முடியரசன் கவிதை முத்துக்கள், ப.42.

51. கே.ஜீவபாரதி, கவிதை எழுதினேன் கடிதம் வந்தது, பக்.50–51.

52. கே.ஜீவபாரதி, காலமறிந்து கூவிய சேவல், ப.35.

53. மேலது, ப.37.

54. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், பக்.86–87.

55. மேலது, ப.87.

56. கே.ஜீவபாரதி, கே.ஜீவபாரதி கவிதைகள், பக்.238–239.

57. கே.ஜீவபாரதி, நல்லகண்ணு, ப.39.

58. சு.பொ.அகத்தியலிங்கம், பொதுவுடைமை வளர்த்த தமிழ், ப.1.

59. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.101.

60. மேலது, ப.102.

61. கே.ஜீவபாரதி, நினைவு நாட்களும், நெஞ்சில் அலைகளும், பக்.148–149.

62. மேலது, ப.152.

63. கோ.தான்யா, இருபதாம் நூற்றாண்டு தமிழ்க் கவிதைகளில் மார்க்சியத் தாக்கம், ப.182.

64. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், ப.77.

65. அ.கா.ஈஸ்வரன், சமூக வளர்ச்சியின் அடித்தளமும், மேற்கட்டமைப்பும் பற்றி மார்க்சியம், ப.47.

66. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், பக்.77–78.

67. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள், ப.4.

# இயல் – 4

## ஜீவபாரதியின் பெண்ணியப் பதிவுகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்

பொருளியல் மேலாண்மை, வர்க்கம், கல்வி, வேலைவாய்ப்பு உரிமை போன்றவை வெவ்வேறு வகையான பெண்ணியங்களை உருவமைக்கின்றன. பெண்களுக்கான சிக்கல்கள் எல்லாம் பெண்ணியப் பிரச்சினையாகக் கணக்கிட முடியாது. பெண்கள் மீது ஆண்கள் கொண்டுள்ள ஆதிக்க உணர்வுகளையும், பாலியல் ஏற்றத் தாழ்வுக்கான காரணங்களையுமே பெண்ணிய ஆய்வு மையப் பொருளாகக் கொள்கிறது. மார்க்சியச் சிந்தனை மிக்க பொதுவுடைமையாளர்கள் பெண்களுக்கும், ஆண்களுக்குமான உறவு சாா்ந்த பிரச்சினைகளைப் பெரிதாக ஆய்வு செய்வதைக் காட்டிலும், பெண்களுக்கும், ஆண்களுக்குமான பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை முன் வைத்தே ஆய்வு செய்கின்றனர்.

வாழ்க்கை நிலைகளில் சமத்துவமற்ற நிலை, கணவனாகிய ஆடவனிடம் சுதந்திரமற்ற நிலை, தான் பெற்றோர் வீட்டிலிருந்து கொண்டுவரும் சீதனமாகிய அனைத்துப் பொருள்களையும் கணவன் பேரில் ஒப்படைக்கும் அடிமைநிலை, தம் குழந்தைகள் மீது முழு உரிமையின்மை, குழந்தைகளின் கல்வியில் கூடத் தன் கருத்தைச் சொல்ல முடியாமை போன்றவை பெண்களுக்கான ஒடுக்குமுறைகளாகக் காலங்காலமாக இம்மண்ணில் நிலவி வருகின்றன. இதிலிருந்து விடுபடவே பெண்ணியச் சிந்தனை உருவானது. அவ்வகையில் பெண்ணியம் குறித்த அறிஞர்களின் சிந்தனைகளையும், பெண்ணிய வரலாற்றினையும், பெண்ணியமும் மார்க்சியமும் உறவு கொள்கிற நிலையினையும், வேலுநாச்சியார் புதினத்தின் வழியே பெண்ணியம் குறித்த பொதுவுடைமைக் கருத்துகளையும் வரலாற்றில் மறைக்கப்பட்ட பெண் போராளிகளின் பொதுவுடைமைச் சிந்தனைகளையும் கே.ஜீவபாரதியின் படைப்புகள் வழி ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### பெண்ணியம் குறித்த அறிஞர்கள் பார்வை

பெண்ணியம் குறித்துப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துகளை வரையறுத்துக் கூறியுள்ளனர். ''பெண்ணியம் என்றால் தான் என்ன? 'நான் பெண் என்பதாலேயே பாரபட்சம் காட்டப்படக் கூடாது என்பதுதான் அதன் அடிப்படைக் கூறு. ஆணும், பெண்ணும் நிகரானவர்களாகக் கொள்ளப்பட வேண்டும் என்பது தான் இதன் மையக் கருத்து. மனித குல வரலாற்றை ஆண்களின் வரலாறாக்குவதை – ஆணும், பெண்ணும் நிகராக இருக்க முடியாது என்கிற சமூகக்

கண்ணோட்டத்தைப் பெண்ணியம் கேள்வி கேட்கிறது''[1] என்ற வாசகியின் சிந்தனை கருதற்பாலது.

ஆணைப் போலவே பெண்ணுக்கும் தனித்த குணம் உண்டு என்ற நிலையில் வாழ்பவர்களாகவும், இயற்கை மீதான கற்பனைகள் மூலம் சுரண்டும் நிலை அற்றவர்களாகவும், இணையான பொருளாதார உயர்வு பெற்றவர்களாகவும் பெண்கள் திகழவேண்டும் என்பதனைப் பெண்ணியச் சிந்தனையாளர்கள் முன்வைக்கின்றனர்.

``பெண்ணியம் என்பது பெண்விடுதலையை மையப்படுத்திப் பல்வேறு நாடுகளில், பல்வேறு காலக் கட்டங்களில், பல்வேறு தளங்களில் போரிட்ட இயக்கத்தின் சித்தாந்த வெளிப்பாடு ஆகும். பெண்ணை ஓர் உயிருள்ள மனுஷியாகப் பார்க்கச் சொல்லும் ஒரு கருத்தாக்கமாகும். ஏனெனில் பெரும்பாலான ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்கள் ஒரு நுகர்பொருளாகப் பார்க்கப்படுகின்ற சூழலில் தான் தொடர்கிறது''[2] என்ற அரங்க.மல்லிகாவின் சிந்தனை ஒப்பு நோக்கத்தக்கது.

இதே கருத்தை அடியொற்றி வரும் சில கருத்துக்களும் பெண்ணியச் சிந்தனைக்கு வலுச் சேர்ப்பதாக அமைகின்றன. ``பெண்ணியம் என்பது பெண் ஓர் உயிரி எனச் சமூகம் அங்கீகரித்து அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும், சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கையாகும்''[3] என்பார் இரா.பிரேமா.

பெண் விடுதலை பெற வேண்டுமானால் பெண்களின் போராட்டம் மட்டும் வெற்றியைத் தந்து விடாது. ``சீமான் வகுப்பைச் சேர்ந்த பெண் ஓர் எளிய ஆணைவிட அதிகமான சமூக–பொருளாதார ஆற்றலை அனுபவித்திருக்கலாம். ஆனால் அவளது வகுப்பைச் சேர்ந்த ஓர் ஆணுக்கு இருந்த ஆற்றல் அவளுக்கு இருந்ததில்லை. அந்தந்த வர்க்க, சமூகப் பொருளாதாரத் தளங்களில் பெண், ஆணுக்கு அடுத்தபடியில் தான் இருந்தாள்''[4] என்பர். பெண் முன்னேற்றம் குறித்து ஆணுக்கு உளப் பூர்வமான புரிதல் உணர்வு வரவேண்டும். 'ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவில் ஓங்கி வையம் தழைக்கும் என்ற பாரதியச் சிந்தனை ஆணுக்கு ஏற்பட வேண்டும்.

``பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை
பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு

மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே"[5]

என்று சொல்லும் பாரதிதாசனின் உறுதிப்பாட்டுத் தெளிவை ஆண் பெறுதல் வேண்டும்.

**பெண்ணிய வரலாறு**

பெண்ணியம் என்பது உலகம் முழுவதும் பரவலாகப் பேசப்படும் சொல்லாகத் திகழ்கிறது. Feminism என்ற ஆங்கிலச் சொல் Femina என்ற இலத்தீன் சொல்லிலிருந்து மருவி வந்ததாக அறியப்படுகிறது. பெண்களின் பாலியல் குணாதிசயங்களை மையமிட்டுப் பேசப்பட்ட இச்சொல் நாளடைவில் பெண்களின் உரிமை குறித்துப் பேசுவதாக வளர்ந்தது.

"*1889* வரை Womanism என்ற சொல் பெண்களின் உரிமைப் பிரச்சினையையும், அதன் அடிப்படையிலான போராட்டத்தையும் உணர்த்தப் பயன்படுத்தப்பட்டது. *1890* ஆம் வருடம் 'Womanism' என்ற சொல்லினிடத்தை 'Feminism' என்ற சொல் பெற்றது. *1894* ஆம் ஆண்டு வெளிவந்த ஆக்ஸ்போர்ட் ஆங்கில அகராதியில் முதன்முதலில் இச்சொல் எடுத்தாளப்பட்டது. Feminism என்ற இச்சொல்லுக்குத் தன் வாழ்வின் மூலம் அர்த்தம் ஏற்படுத்திக் கொடுத்தவர் 'ரே ஸ்ரேசே' (Ray Strachay) என்ற பெண்மணி ஆவார்"[6] என்று குறிப்பிடும் இரா.பிரேமா அவர்களின் கூற்று குறிப்பிடத்தக்கது.

பெண்ணியம் என்பது ஆண் மேலாதிக்கத்தை எதிர்ப்பதாகவும், பெண்கள் தனித்துவமாகச் செயல்படப் போராடுவதாகவும் அமைகிறது. இச்சிந்தனை தத்துவ நிலையிலும், கோட்பாட்டு அடிப்படையிலும், இயக்கம் என்ற செயல்பாட்டிலும் இயங்குவதாக அமைகிறது. பார்பரா ஸ்மித் (Barbara Smith), டோனா ஹாக்ஸிஸ்ட் (Donna Hawhurst), சூ மாரோ (Sue Morrow), சார்லட் பன்ச் (Charlet Bunch) போன்ற ஆராய்ச்சியாளர்கள் பெண்ணியச் சிந்தனைக்கு வலிமை சேர்த்தனர்.

பொதுவாகப் பெண்ணியத்தைத் தீவிரவாதப் பெண்ணியக்கம் (Radical Feminism), தாராளவாதப் பெண்ணியக்கம் (Liberal Feminism), சமதர்மவாதப் பெண்ணியக்கம் (Socialist Feminism) என மூன்றாகப் பிரித்துப் பார்க்கின்றனர்.

பெண் குடியுரிமையையும், சமூகச் சீரமைப்பையும் மையமாகக் கொண்டு அமெரிக்காவில் ‘Now’ (National Organisation for Women) என்ற சுருக்கப் பெயருடன் ஆரம்பிக்கப்பட்ட தேசியப் பெண்கள் அமைப்பு 1960–களில் ஒரு குறிப்பிட்ட எழுச்சியை ஏற்படுத்தியது. இதன் தலைவராகச் செயல்பட்டவர் பெண்ணியல்பு புதிர்நிலை (Femimine mystique) என்ற நூலை எழுதிய பெட்டி ஃபிரைடன் (Betty Friden) ஆவார்.

1967–இல் சிகாகோவில் தேசிய மாநாடு ஒன்றை நடத்தினர். இதில் ஜோப்ரிமேன் (Joe Freeman), சுபோமித் ஃபயர் ஸ்டோன் (Shlowmith fire Stone) என்ற இரு பெண்களுக்கும் பெண் குறித்த பிரச்சினைகளைப் பேச அனுமதி மறுக்கப்பட்டது. இதன் தாக்கத்தால் ‘சிகாகோ வெஸ்ட்சைட் குரூப்’ (Chicago Website Group) என்ற ஒரு அமைப்பை ப்ரீமேன் தொடங்கினார். தீவிரவாதப் பெண் அமைப்பு (Redical Women) ஒன்றை நியூயார்க்கில் ஃபயர்ஸ்டோன் (Fire Stone) தொடங்கினார். பின்னர் அமெரிக்க நகரங்களில் சிறுசிறு அளவில் பெண் போராட்ட அமைப்புகள் தோன்றின.

1969இல் நியூயார்க் தீவிரவாதப் பெண்ணிய இயக்கம் (Newyork Feminist Organisation) தங்களைச் சிவப்புக் காலுறையாளர்கள் (Red Stocking) என்று அழைத்துக் கொண்டனர். சுலாமித் பயர் ஸ்டோன் (Shlowmith Fire Stone) என்பவரே இவ்வமைப்பையும் தோற்றுவித்துள்ளார். இதே ஆண்டில் இலண்டனில் தொடங்கப்பட்ட ‘லண்டன் மகளிர் விடுதலைப் பயிற்சிப் பட்டறையும் (London Women’s Liberation Workshop) பெண்கள் எழுச்சிக்கு உந்துதலாக அமைந்தது.

1971ல் பெட்டி ஃப்ரைடன் (Betty Friden), பெல்லா அப்சக் (Bella Abzug), ஷெரிலி சிஸ்ஸோம் (Shery Chissom) மற்றும் பலரும் தேசிய மகளிர் அரசியல் குழு (National Womens Polotical Caucus) என்ற ஒரு அமைப்பை நிறுவிப் பெண்களின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்தினர்.

1972 ஸ்பேர் ரிப் (Spare Rip), பெண்களின் குரல் (Womens Voice), 1974இல் தேடல் (Quest), 1975ல் அடையாளம் (Sign) போன்ற இதழ்கள் வெளியாகி பெண்ணியச் சமதர்மம் உருவாகப் பாடுபட்டன.

பெண்ணிய இயக்கங்கள் வளரவளர அவற்றினுள் பிரிவினைகளும் வளர்ந்துள்ளன. "1975க்குப் பின் வந்த ஆண்டுகளில் பெண்ணிய இயக்கங்களின் நடவடிக்கைகளை ஆராயும்போது, இக்காலக் கட்டத்தில் பெண்ணியத்திற்குள் மிகப்பல பிரிவுகள் இருந்தன என்பது அறியப்படுகிறது. அப்பிரிவினைகள் தங்களுக்கென்று தெளிவான கொள்கைகளைக் கொண்டிருக்கவில்லை. ஒருசாரார் இன்னொரு சாராரோடு முழுவதுமாக ஒத்துப் போகாமல் ஒரு பாதி ஒத்துப் போகும் நிலை காணப்பட்டது"[7] என்பார் இரா.பிரேமா.

பெண்ணிய இயக்கத்தில் தோன்றிய பல அமைப்புகள் அவ்வியக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளில் பாதிப்பை ஏற்படுத்தின. எனவே பெண்ணிய அமைப்புகளை வேறு விதத்தில் கட்டமைக்கும் சூழ்நிலைகள் ஏற்பட்டன. 1980களில் பெண்ணியம் உலகளாவிய இயக்கமாக உருப்பெற்றது. 1981இல் இஸ்ரேல் ஹபியாவில் அனைத்துலகப் பெண்ணியக் கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் ஐரோப்பா, இந்தியா, ஆப்பிரிக்கா, மத்திய கிழக்கு நாடுகள், ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளிலிருந்தும் பெண்ணியக் கல்வியாளர்கள் கலந்து கொண்டதை அறியமுடிகிறது.

இதன் தொடர்ச்சியாகப் பெண்ணியச் சிந்தனையாளர்கள் பலர் பல்வேறு போராட்டங்களை நடத்திப் பெண்ணியச் சிந்தனைகளை உலகளாவிய அளவில் எடுத்துச் சென்றுள்ளனர்.

**இந்தியப் பெண்ணியம்**

வேதகாலப் பெண்கள் தாய்வழிச் சமூக மரபுடையவர்களாகவே திகழ்ந்துள்ளனர். பெண்களும் குருகுலக் கல்வி கற்றவர்களாகவே திகழ்ந்துள்ளனர். பதினாறு வயதிற்குப் பின்னே திருமணம் நடந்தது. கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெண்ணுக்கு இருந்தது. விவசாயம், நெசவுத் தொழில், மண்பாண்டம் வனைதல் போன்ற தொழில்களில் ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் ஈடுபட்டனர். வில், அம்பு போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்தினர். தாய்வழிப் பெயரையே சூட்டும் பழக்கத்தினராக இருந்தனர்.

ரிக்வேத காலத்தில் சில சமுதாயச் சீர்கேடுகள் நடந்தன. சதி என்ற உடன்கட்டை ஏறும் பழக்கமும், முகமூடி அணியும் பழக்கமும் இருந்தது. இதிகாச காலத்தில் பெண்களின் நிலை தரம் குறைந்தே காணப்பட்டுள்ளது. வீட்டிலே தங்கி, குடும்ப வாழ்க்கையினைச் செவ்வனே நடத்தி எல்லாக் குடும்ப உறுப்பினர்களையும்

நன்கு கவனித்த பெண்களே சிறந்த பெண்ணாகக் கருதப்பட்டார். இதையே மனு சாத்திரம் வலியுறுத்தியுள்ளது.

"மனுவின் கூற்றுப்படி ஒரு பெண் வீட்டு நிர்வாகத்தைச் செவ்வனே நடத்த வேண்டும். கணவனின் சொத்து தொடர்பான வசூலையும், செலவையும் பராமரிக்க வேண்டும். தர்ம விதிமுறைகளை நன்கு பூர்த்தி செய்ய வேண்டும் என்று புலனாகிறது"[8] என்பார் ஜெயபாலன்.

பெண்களின் திருமண முறைகளே வித்தியாசமாக இருந்துள்ளன. ஒரு ஆடவனுக்குத் தந்தையே விரும்பித் தன் மகளைத் தரும் பிரம்ம மணம் (Brahma form), தந்தை விருப்பத்துடன் சமயத் தலைவர் முன்னிலையில் ஒருவனுக்குப் பெண்ணைத் தரும் தெய்வமணம் (Deiva form), அற நெறிப்படி பசுவையோ, காளை மாட்டையோ பெற்றுக் கொண்டு பெண்ணைப் பெறும் ஆர்ஷ மணம் (Arsha form), தருமத்தோடு வாழுங்கள் என வாழ்த்திப் பெண்ணை தந்தை வழங்கும் பிரஜாபத்ய மணம் (Prajapatya form), உறவினர் இன்றி மணம் புரியும் காந்தர்வ மணம் (Gandharva form), மணமகனின் தந்தைக்கு மணமகள் பரிசுப்பணம் வழங்கும் அசுரமணம் (Asura form), கன்னியைக் கவர்ந்து கடிமணம் புரியும் ராட்சச மணம் (Rakshasha form), முறையற்ற தன்மையில் பெண்ணைப் பலாத்காரம் செய்து இணங்க வைக்கும் பைசாச மணம் (Paishasha form) என்றும் திருமணங்களே இதிகாச காலத்தில் கொச்சைப் படுத்தப்பட்டன.

மேற்சொன்ன எவற்றினுள்ளும் பெண்களின் விருப்பத்திற்கிணங்கிய திருமணங்கள் நடந்ததற்கான சான்றுகள் இல்லை.

பெண்களுக்கேற்பட்ட இழிநிலைகளை எதிர்த்துப் பல்வேறு சீர்திருத்த இயக்கங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றின. 1828இல் ராஜாராம் மோகன்ராய் தோற்றுவித்த பிரம்ம சமாஜம் (Brahma Samaj), 1875இல் சுவாமி தயானந்த சரஸ்வதி ஏற்படுத்திய ஆரிய சமாஜம் (Arya Samaj), பிளவாட்ஸ்கி அம்மையார் மற்றும் கர்னல் ஆலகாட் (Blavatski & Algot) ஆகிய இருவரும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தோற்றுவித்த அமைப்பைச் சென்னை அடையாற்றில் 1879இல் ஏற்படுத்திய பிரம்ம ஞான சபை (Theosphical Society), 1897இல் விவேகானந்தரால் ஏற்படுத்தப்பட்ட இராமகிருஷ்ண மடம் (Ramakrishna Mission)

போன்ற சீர்திருத்த இயக்கங்கள் பண்பாட்டு மறுமலர்ச்சி இயக்கங்களாகவும், பெண்களுக்கான சுதந்திரத்தை வலியுறுத்தும் அமைப்புகளாகவும் செயல்பட்டன. இதன் நீட்சியாக இந்திய அளவில் பெண்கள் அமைப்புகளும் தோன்றின.

1917இல் இந்தியப் பெண்கள் கூட்டமைப்பும் (Womens Indian Association), 1925இல் இந்திய தேசியப் பெண்கள் குழுவும் (National Council of Women in India), 1926இல் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் (All India Womens Conference) ஏற்படுத்தப்பட்டுப் பெண்கள் தங்கள் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு போராட்டத்தை நடத்தினர்.

**தமிழகத்தில் பெண்ணியம்**

தொல்காப்பியம், சங்க இலக்கிய காலங்களில் ஆண், பெண் பிரிவினைகள் சுட்டப்பட்டன. தலைமைப் பண்பு ஆண்களுக்கும், அச்சம், நாணம், மடம் போன்றவை பெண்களுக்கும் உரிய குணங்களாகக் காட்டப்பட்டன. தொடர்ந்து வரும் காலங்களில் பெண்களின் நிலை மேலும் பின்னுக்குத் தள்ளப்பட்டது. காப்பிய காலத்தில் பெண்கள் அடிமையாக இருந்தனர். நீதிநெறிக் காலத்தில் பெண்கள் தீயவர்களாகக் காட்டப்பட்டனர்.

சாதிப் பிரிவுகள், இளம் வயதுத் திருமணம், பாலியல் தொந்தரவு, பெண் சிசுக்கொலை, பலதாரமணம், தேவதாசி முறை, வரதட்சணை, பெண்கல்வி மறுப்பு, கைம்மை நோன்பு, தனிமைப்படுத்துதல், உடன்கட்டை ஏறுதல் போன்ற சமூகச் சழக்குகள் புரையோடிக் கிடந்தன.

பெண்கள் போகப் பொருளாகவும், கற்பனைப் பாத்திரமாகவும், கவர்ச்சிப் புனைவுகளாகவும் பார்க்கப்பட்ட நிலையை மாற்ற இருபதாம் நூற்றாண்டில் தான் பெண்களுக்கான விழிப்புணர்வு தட்டி எழுப்பப்பட்டது.

தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம் பெண் விடுதலைக்கு வித்திட்டது. வீரம், துணிச்சல் என்பது ஆணின் குணமாகவும், மென்மை, அச்சம் பெண்களின் குணமாகவும் வரையறுக்கப்பட்டதைப் பெரியார் தீவிரமாக எதிர்த்தார்.

“பெண்களின் மீது சுமத்தப்பட்டிருக்கும் அடிமைத் தளையை உடைக்க வேண்டுமானால் பெண்ணை முழுக்க முழுக்க போகப் பொருளாக, ஆணின் அடிமையாக, பிள்ளை பெறும் இயந்திரமாக, விளம்பரப் பொருளாகப் பயன்படுத்துவதை எதிர்த்துக் குரல் கொடுக்கப் பெண்ணினமே முன்வர வேண்டும்

என்று அறைகூவல் விடுத்தார். ஆணைவிடத் தாழ்வான, பலகீனமான பிறவியாக இயற்கை தம்மைப் படைத்துள்ளது என்ற மூடநம்பிக்கையிலிருந்து பெண்கள் விடுபட வேண்டும். ஆண்மை என்ற சொல் அகராதியிலிருந்தே விடுபட வேண்டும் என்று போர்முரசு கொட்டினார் பெரியார்”[9] என்பார் கு.மா. இராமாத்தாள்.

தலைவர்கள் வரிசையிலே பெரியார் மட்டுமின்றி நாகம்மையார், மணியம்மையார், அம்புஜம்மாள், டாக்டர்.முத்துலெட்சுமி, திரு.வி.க, அண்ணா போன்றோரின் பணிகளும் குறிப்பிடத்தக்கன.

கவிஞர்கள் வரிசையில் பாரதியார், பாரதிதாசன், ஜீவா, தமிழ்ஒளி, முடியரசன் போன்றோரின் கவிதைகளும், படைப்புகளும், பெண்ணியச் சிந்தனைகளும் உலகறியச் செய்தன. “ஒரு காலத்திலே, ஆண்களுக்கு அடிமைகளாக ஆக்கப்பட்டிருந்த பெண்கள் சமுதாயம், பாரதி போன்றவர்களால், தமிழ்த் தென்றல் திரு.வி.க. போன்றவர்களால், பெண்ணுரிமைக்காகப் பாடுபட்ட தந்தை பெரியார் போன்றவர்களால் பெண்களுக்கு விடுதலை தேவை என்று முழங்கிய பேரறிஞர் அண்ணா போன்றவர்களால் இன்றைக்குத் தலை நிமிர்ந்து வாழ்கின்ற நிலையை நாம் நாட்டிலே காண்கின்றோம்”[10] என்ற கலைஞர் மு.கருணாநிதியின் கருத்தும் எண்ணிப் பார்க்கத்தக்கது. அந்த வரிசையில் கவிஞர் ஜீவபாரதியின் படைப்புகளிலும் பெண்ணியக் கூறுகள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றைப் பொதுவுடைமைச் சித்தாந்தமாகிய மார்க்சியக் கண்கொண்டு ஆராய்வது இன்றியமையாததாகும்.

**பெண்ணியமும் மார்க்சியமும்**

பெண் என்பவள் தாயாகவும், மனைவியாகவும் பார்க்கப்படும் சமூகத்தில் குடும்பம் என்ற நிறுவனத்திலிருந்து பிரிக்க முடியாத நிலையில் தான் அவளது வாழ்க்கை வடிவமைக்கப்பட்டுள்ளது. பொருளாதார நிலையில் தனித்தியங்கும் ஒரு நபராகப் பெண் பார்க்கப்படுவதில்லை.

“இந்தியச் சமூகத்தில் பெண்குழந்தை, வரப்போகிற ஒரு கணவனுக்காக வாழப்போகிற ஓர் அடிமை. அதற்காகத் தான் நாம் தயாரிக்கப்படுகிறோம் என்ற மனோபாவத்தை அப்பெண் சிறுமியாக இருக்கும்போதே அடையும்படியாகக் குடும்பத்தின் நிர்வாக அமைப்புகள் அமைந்துள்ளன. எனவே ஓர் இந்தியப் பெண் முன்பின் பழக்கமில்லா ஏதோ ஒரு ஆடவனுடன் திருமணத்தன்றே மனைவியாக, அடிமை வேலை செய்யத் தயாராகி விடுகிறாள். இந்த அடிமைப் பதவியும் அவளுக்குச் சாதாரணமாகக் கிடைத்து விடுவதில்லை”[11] என்பார் க. பஞ்சாங்கம்.

பெண்களின் அடிமைத்தன வாழ்க்கையிலிருந்து விடுபட மார்க்சியமே நிரந்தரத் தீர்வு கூறுகிறது. பெண்களுக்கும் ஆண்களுக்கு இணையான ஜனநாயகம், சமத்துவம், பெண் விடுதலை என்ற மூன்று அடிப்படை அம்சங்களை மார்க்சியம் முன்னிறுத்துகிறது.

பாலின ரீதியாகவும், வர்க்க ரீதியாகவும், சாதீய ரீதியாகவும், பெண் சுரண்டப்படுகிறாள். இதற்குப் பின்னே முதலாளித்துவ, நிலப்பிரபுத்துவச் சுரண்டல் அமைப்பு உள்ளது. இச்சுரண்டல்களிலிருந்து பெண் விடுதலை பெற வேண்டுமானால் சமூக மாற்றம் நிகழ வேண்டும். தீவிரவாதப் பெண்ணியக்கம், தாராளவாதப் பெண்ணியக்கம், சமதர்மவாதப் பெண்ணியக்கம் எனப் பெண்ணியலாளர்கள் பிரிக்கும் அமைப்புவாதப் பெண்ணியக்கமே பொதுவுடைமை சார்ந்ததாக அமைகிறது.

பெண் விடுதலை பெறுதல், தந்தை வழிச் சமூகத்தின் மூலத்தை அழித்தல், தன்னலவாதிகளின் சுயநலப் போக்கைக் களைதல், ஆண் – பெண் சமூகப் பாகுபாடுகளைச் சமூக நெறியிலிருந்து விரட்டுதல் போன்றவை இதன் உள்ளார்ந்த தத்துவமாக அமைகிறது.

“முதலாளியச் சமூகக் குடும்பங்களில் பெண்கள் தங்கள் எசமானர்களுக்கு ஊழியம் செய்து, ஒரு தார மண ஒழுக்கத்தைக் காத்து, குடும்பச் சொத்துகளுக்கு வாரிசுகள் பெற்றெடுக்கிறார்கள். தொழிலாளி வர்க்கக் குடும்பங்களில் தனிச் சொத்து இல்லாததால் அங்கு பெண்கள் ஒடுக்கப்படுவதில்லை. கூலி உழைப்பின் வளர்ச்சியானது, சிறு நில உழவர்களை அழித்துப் பெண்களையும், சிறுவர்களையும் தொழிலாளர் அணியில் ஆண்களோடு ஒன்றாக இணைத்துக் கொண்டது. இதனால் குடும்பத் தலைவனான ஆணின் அதிகாரம் பலவீனமடைந்து, ஆணாதிக்க உறவுகள் அழிந்து விட்டது என்று எங்கெல்ஸ் வாதிட்டார்”[12] என்பர்.

பெண்கள் தொழிலாளர்களாக மாற்றம் பெற்றால் பெண்விடுதலை விரைவாகக் கிடைக்கும் என்பது எங்கெல்ஸ் கருத்தாக அமைகிறது. இதன் அடிப்படை நோக்கம் பெண்கள் பொருளாதார ரீதியில் ஆண்களைச் சாராமல் இருக்கவும், பாட்டாளி வர்க்கப் புரட்சியில் ஆண்களுக்கு இணையாகப் பல்வேறு நிலைகளில் பங்கெடுக்கவும் காரணமாய் அமையும் என்றும் பொதுவுடைமைவாதிகள் நம்பினர். சுருங்கச் சொல்ல வேண்டுமெனில், ஆண்களைப் போலவே பெண்களும் தொழிலாளர்களாக மாறவேண்டும். முதலாளித்துவத்திற்கு எதிராக நடக்கும் போராட்டங்களில் ஆண்களோடு பெண்களும் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்

என்பது அடிப்படை நோக்கமாக அமைகிறது. தொழிலாளர்கள் மீதான சுரண்டலுக்கு முதலாளித்துவம் காரணமாக இருப்பதைப் போல மூலதனம், தனிச்சொத்து ஆகிய இரண்டுமே பெண்கள் மீதான ஒடுக்குமுறைக்குக் காரணமாய் அமைவதை அழிக்க வேண்டும் என்றும் பொதுவுடைமைவாதிகள் வாதிட்டனர்.

பெண்களின் உழைப்புச் சக்தியைக் கட்டுப்படுத்துகிற ஆணாதிக்கப் பொருண்மையையும், அவசியமான உற்பத்தி வளங்களிலிருந்து பெண்களை விலக்கி வைக்கும் பிற்போக்குத் தனத்தையும், பெண்களின் பாலியலைக் கட்டுப்படுத்தும் சர்வாதிகாரப் போக்கையும், கண்டிப்பதும் தேவையாக அமைகிறது.

**பெண்கள் பற்றிய ஜீவபாரதியின் படைப்புகள்**

பொதுவுடைமைச் சிந்தனைமிக்க ஜீவபாரதி பெண்ணியப் பார்வையோடு சில படைப்புகளை வெளியிட்டுள்ளார். வெள்ளையரை எதிர்த்துக் களம் கண்ட வீரமங்கை வேலுநாச்சியர் குறித்த புதினம் ஒன்றினையும், நாடகம் ஒன்றினையும் எழுதியதோடு, வரலாற்றுக் கட்டுரைகள் பலவற்றிலும் வீரமங்கையின் வாழ்வியல் குறித்த அரிய தகவல்களை வெளிக்கொணர்ந்துள்ளார்.

லெட்சுமி அம்மாள், கடலூர் அஞ்சலையம்மாள், பத்மாசினி அம்மையார், அருணா ஆஸப் அலி, வெள்ளையம்மாள், பிரபாவதி தேவி, டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி, ருக்மணி லெட்சுமிபதி, காமா அம்மையார், அன்னிபெசன்ட் அம்மையார் போன்றவர்களின் அரிய வரலாற்றுச் செய்திகளையும், பெண்ணியப் பார்வையோடும், பொதுவுடைமைச் சிந்தனையோடும் ‘மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள்’ என்ற பெயரிலே நூலாக்கியிருப்பது இவர் பெண்களின் பங்களிப்பு குறித்து ஆவணப்படுத்துவதை அறியமுடிகிறது. மேலும் காரல் மார்க்சின் மனைவி ஜென்னி, லெனின் மனைவி குரூப்ஸ் காயா போன்றவர்களின் தியாக வாழ்வு குறித்துத் தம் படைப்புகளில் நிறைய எழுதியுள்ளார். இதுபோல விடுதலை வரலாற்றில் தங்கள் இன்னுயிர் ஈந்த எத்தனையோ வீரப்பெண்மணிகளின் வரலாற்றை உலகிற்கு வெளிக்கொணர்ந்து சாதனை நிகழ்த்திய ஜீவபாரதியின் பங்கு குறிப்பிடத்தக்கது.

**வீரமங்கை வேலுநாச்சியார்**

பெண்கள், பெண்உரிமை, போராட்டத்தில் பங்களிப்பு என்ற பன்முகப் பார்வையில், ஜீவபாரதி வீரமங்கை வேலுநாச்சியாரின் வீரவாழ்வை முதன்மைப்படுத்தியுள்ளார். “கிட்டூர் ராணியும், ஜான்சிராணியும் வெள்ளையரை எதிர்த்துக் களம் செல்லவில்லை. வாரிசு உரிமையில் வெள்ளையர்தான் கிட்டூர்

கோட்டையின் மீதும், ஜான்சி கோட்டையின் மீதும் போர் தொடுத்தனர். கிட்டூர் ராணி சிறையிலும், ஜான்சிராணி களத்திலும் மடிந்தனர். கிட்டூர் ராணி சிறையில் மடிவதற்கு 57 ஆண்டுகளுக்கு முன்பும், ஜான்சிராணி களத்தில் மடிவதற்கு 86 ஆண்டுகளுக்கு முன்பும் தமிழச்சி ஒருத்தி வெள்ளையர் எதிர்ப்பில் களத்தில் கணவனைப் பலிகொடுத்தாள். வெள்ளையர் எதிர்ப்பில் களத்தில் மடிந்த முதல் இந்திய மன்னர் முத்துவடுகநாதர் தான். இவருடைய மனைவி தான் வேலுநாச்சியார்''[13] என்ற பதிவு வேலு நாச்சியாரிடம் ஜீவபாரதி கொண்ட பற்றினை எடுத்தியம்பும்.

''வெள்ளையரிடம் தோல்வியுற்று மரணத்தைத் தழுவிய வடநாட்டு ஜான்சி ராணியை அறிந்த அளவுக்கு வெள்ளையரை வெற்றி கண்ட ஒரு தமிழச்சி பற்றித் தமிழர்கள் அறியாமல் இருப்பது தமிழர்களின் வரலாற்று அறியாமையை வெளிப்படுத்துகிறது''[14] என்ற கருத்தும் சிந்தனையைத் தூண்டுவதாக அமைகிறது.

வடநாட்டு ஜான்சிராணியை அறிந்த அளவுக்கு தமிழச்சி வேலுநாச்சியாரை அறியவில்லையே என்று ஜீவபாரதி எழுதுவது ஜான்சிராணிமேல் உள்ள கோபமாக எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. வரலாற்றுப் பெருமையை முறைப்படிக் கூறத் தவறும் தமிழர்களின் மேலான கோபமாகவே கொள்ள வேண்டும். பிறிதொரு கட்டுரையில் ஜான்சிராணியை வாளேந்திய வளைக்கரம் என்றும் ஜீவபாரதி வர்ணித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

''எங்கோ இருந்து இந்தியாவிற்குள் நுழைந்து, இந்த மண்ணில் பிறந்தவர்களை அடக்கி ஆளவும், அரசாளும் உரிமையைத் தட்டிப் பறிக்கவும் முயன்ற வெள்ளையரை ஜான்சிராணி எதிர்த்தாள். களத்தில் எதிரிகளைச் சந்தித்தாள்; தன்னுடைய போர்த்திறத்தால் வெள்ளையரைக் குலை நடுங்கச் செய்தாள்; இறுதியில் இந்த மண்ணிற்காகப் போராடி இந்த மண்ணிலேயே இரத்தம் சிந்தி ஜான்சிராணி மடிந்தாள். இந்தியர்களின் இதயத்தில் இடம் பிடித்தாள். அதனால் தான் வெள்ளையர் எதிர்ப்புக்காக நேதாஜி பெண்கள் படை உருவாக்கிய போது அதற்கு 'ஜான்சிராணி ரெஜிமெண்ட்' என்று பெயரிட்டார்''[15] என்று சொல்வதன் மூலம் வேலுநாச்சியாரைப் போலவே ஜான்சிராணியும் ஜீவபாரதியைப் பாதித்துள்ளார் என்பது தெளிவாகும்.

எனினும் ஜீவபாரதியின் விடுதலைச் சிந்தனையில் தமிழக வீராங்கனை வேலுநாச்சியாரின் மேல் ஏற்பட்ட பற்றுதலே புதினத்தையும் நாடகத்தையும் எழுத வைத்தது. சிவகங்கை ராணி வேலுநாச்சியாரின் விருப்பப்படி சிவகங்கை குளத்தங்கரையில் சேடிப்பெண் பழையனூர் இருளாயி கட்டிய ஆனைமுகக் கடவுள்

ஆலயத்திற்குக் கிழக்கே வேலுநாச்சியாரின் உடல் அடக்கம் செய்யப்பட்டது. காலப்போக்கில் வரலாறு தெரியாத கண்மூடித்தனமான மக்களால் அது கழிப்பிடமாகப் பயன்படுத்தப்பட்ட கேவலத்தைக் கண்டு கொதிப்படைந்த ஜீவபாரதி கட்டுரை ஒன்றினைத் தினமணிக்கு எழுதியுள்ளார். தமிழக அரசின் கவனத்திற்கும், அப்போதைய சிவகங்கை நாடாளுமன்ற உறுப்பினர் சுதர்சன நாச்சியப்பன் கவனத்திற்கும் கொண்டு சென்ற கடமையும், பொறுப்புணர்ச்சியும் ஜீவபாரதிக்கே உரியது. காலங் கடந்தாலும் தொடர்ந்து வலியுறுத்திய ஜீவபாரதியின் குரல் கவனத்திற் கொள்ளப்பெற்று நாடாளுமன்ற உறுப்பினரால் நினைவிடம் புதுப்பிக்கப்பட்டது. இது ஜீவபாரதியின் ஓங்கிய எழுத்திற்கும், குரலுக்கும் கிடைத்த பெருமையாகும்.

“வேலுநாச்சியாருக்கு அஞ்சல் தலை வெளியிட வேண்டுமென்று ஒரு கட்டுரை எழுதினேன். காலப் போக்கில் அதுவும் நடந்து விட்டது. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சிவகங்கைத் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் தோழர்.சு.குணசேகரனிடம் வேலுநாச்சியாருக்கு மணிமண்டபம் கட்ட, சட்டப் பேரவையில் வலியுறுத்தும்படி வேண்டினேன். அவருடைய கோரிக்கையை ஏற்று மாண்புமிகு தமிழக முதல்வர் ஜெயலலிதா தலைமையிலான தமிழக அரசு சிவகங்கையில் வேலுநாச்சியார் மணிமண்டபமும், அதனுள்ளே குயிலி நினைவுத் தூணும் அமைத்திருக்கிறது. அந்த வகையில் என்னுடைய கோரிக்கைகள் நிறைவேறியிருப்பது எனக்கு மன நிறைவைத் தருகிறது”[16] என்ற பெருமிதம் ஜீவபாரதி வேலுநாச்சியார் பெருமையையும், புகழையும் வரலாற்று ரீதியாக வெளிக்கொணர்வதில் கொண்டுள்ள நாட்டத்தை அறிய முடிகிறது. மார்க்சியவாதிகளுக்கே உரிய போராட்டக் குணம் இவருக்கும் இருப்பது வெள்ளிடை மலை. வேலுநாச்சியாருக்குத் துணையாக நின்ற குயிலி, உடையாள் போன்ற வீரப் பெண்மணிகளைப் பற்றி எழுதவும் அவர் தவறவில்லை.

**வேலுநாச்சியார் புதினத்தின் பின்புலக் கூறுகள்**

சிவகங்கை மன்னர் முத்துவடுகநாதரையும் அவர்தம் இளைய மனைவி கெளரி நாச்சியாரையும் ஆங்கிலேயர்கள் காளையார்கோவிலில் வழிபாட்டின்போது மறைந்திருந்து தாக்கினர். அதன்பிறகு சிவகங்கையை மீட்டெடுக்கப் பல்வேறு உத்திகளைக் கையாண்டு ஆங்கிலேயர்களிடம் நேருக்கு நேர் போர்புரிந்தவர் வேலுநாச்சியார்.

கம்யூனிசச் சிந்தனையாளரான பொதுவுடைமையாளர் ஜீவபாரதி மணிமுடி தரித்த மன்னர்களைப் போற்றிப் புகழ்ந்து நாடகமும், புதினமும், கட்டுரைகளும்

எழுதியுள்ளாரே என்று எண்ணுதற்கு இங்கே இடம் தோன்றுகிறது. அதற்கும் விடை கிடைக்கும் வகையில் வேலுநாச்சியார் புதினத்தின் முன்னுரைப் பகுதி அமைகிறது.

“பெண் என்பவள் ஒரு போகப் பொருள். பிள்ளை பெறும் எந்திரம். வசதி வாய்ப்புள்ளவன் எத்தனை எந்திரங்களையும் வாங்கி வைத்துக் கொள்ளலாம் என்கிற பெண்களைப் பற்றிய ஆணாதிக்கச் சிந்தனை வேலுநாச்சியாரையும் விட்டுவைக்கவில்லை. ஆனால் கணவனின் காலடியே மனைவியின் சொர்க்கம் என்று போதித்துப் போதித்துப் பெண்ணைக் குனிய வைத்துவிட்ட இந்தச் சமூக அமைப்பில் வாழ்வின் சுவை என்பது படுக்கை அறையிலும், கணவன் பாதங்களிலும் இல்லை. போரிடுவதிலும், சக மனிதர்களின் தோழமையிலும்தான் இருக்கிறது என்று பெண்ணின் பேருருவாய்ச் சிறகை விரித்த சிம்புட் பறவை என்பதை நான் கண்டேன். சாதி, மத, மோதல்களால் மானுடம் காயப்பட்டுக் கிடக்கும் இன்றைய சூழலில் வேலு நாச்சியாரின் கதையில் இதற்கொரு மருந்து இருப்பதாக எனக்குத் தோன்றியது. வேலுநாச்சியாரின் கதை என்பது உடையாளின் கதை. குயிலியின் கதை. உணர்வுகளால் கறைபடியாத மானுடப் பூக்களின் கதை.”[17] என்று வேலுநாச்சியார் நூல் எழுதக் காரணமான செய்தியைத் தன்னிடத்திலே தெரிவித்ததாக இளவேனில் தெரிவித்திருப்பது ஆழமாகச் சிந்திக்கத்தக்கது.

“தாய் மண்ணிற்கும், பெண் இனத்திற்கும் பெருமை சேர்த்த வீரமங்கை வேலுநாச்சியாரின் மறைக்கப்பட்ட காலச் சுவடுகளை நாடகமாக உருவாக்கம் செய்து கதை, வசனம், பாடல்கள் எழுதி முக்கிய நகரங்களில் அரங்கேற்றி, தற்போது நூலாகவும் படைத்து வரலாற்றிற்குப் பெருமை சேர்த்த எழுத்துலக வேந்தர் ஜீவபாரதியின் பணி வெல்க! அவரது படைப்புத் திறனுக்கு முன்னுரை எழுதும் வாய்ப்பு கிடைத்ததைப் பெருமையாகக் கொள்கிறேன்”[18] என்று இனியன் சம்பத் சொல்கின்றார். இந்தக் கூற்றும் வேலுநாச்சியாரின் நாட்டுப்பற்றையும், பெண்ணின் மாண்பையும், ஜீவபாரதி எடுத்துக் கொண்ட படைப்பாக்கத் திறனையும் விளக்குவதாக அமைகிறது.

**வேலுநாச்சியார் வழியில் மகளிர் கல்வியும் பொதுவுடைமைக் கூறுகளும்**

ஆண்களுக்கு இணையான கல்வியைப் பெண்களும் பெறுவதே சமத்துவ நிலையாகும். இன்றைய சூழ்நிலையில் பெண் கல்வி உயர்ந்துள்ளது எனினும், பல குடும்பங்களில் இன்னும் தாம் விரும்பும் கல்வியைப் பெண்கள் பயில முடிவதில்லை.

“வேதகாலத்தில் பெண்கள் போதிய அளவுக்குக் கல்வி பெற்றிருந்தார்கள். நாகரிகமுடையவர்களாகவும் இருந்தார்கள். ஆண்களைப் போலவே கல்வி கற்றிருந்தனர். ஆண்களைப் போலவே தத்துவப் போட்டிகளில் அடிக்கடி பங்கு பெற்றனர் என்று வேதகாலச் சான்றுகள் பகர்கின்றன. பல விவாதங்களிலும் ஆண்களுடன் பங்கு பெற்றனர். ஆண்களைப் போலவே பெண்களும் தவத்தில் ஈடுபட்டனர்”[19] என்பார் நா. ஜெயபாலன்.

பின்னர்தான் பெண்கள் அடக்கப்பட்டுக் கல்வி மறுக்கப்பட்ட நிலை ஏற்பட்டுள்ளது. தமக்குத் தாமாகவே சில விதிமுறைகளை விதித்துக் கொண்டு ஆண் பலசாலி என்றும், பெண் வலிமையிழந்தவள் மற்றும் மென்மையானவள் என்றும் போதிக்கப்பட்டது.

“பெண்களின் கல்வி வளர்ச்சியில் இந்நிலை நிலவுவதற்குப் பல காரணங்கள் உள. அவற்றில் பெரும் பங்கு வகிப்பது பண்பாட்டுக் காரணிகளே ஆகும். ஆண் படித்தால் போதும் என்ற மனப்பான்மை. இளமைத் திருமணம் முதலியவை பெண்கல்வியின் தேக்க நிலைக்கு முக்கியக் காரணங்கள் ஆகும்”[20] என்பார் க.பஞ்சாங்கம்.

பெண்கல்வியின் தேக்கநிலைக்கு மேலும் பல அறிஞர்கள் பல்வேறு காரணங்களைக் குறிக்கின்றனர். “பெண்களின் உலகம், குடும்பமும் அதைச் சார்ந்த உலகமும்தான் என்ற வரையறை வலிமை பெற்றிருந்ததால் பெண்களுக்குக் கல்வியறிவு மறுக்கப்பட்டது. இளம் வயதிலேயே திருமணங்கள் நிகழ்ந்தமையால் பெண்களின் வாழ்க்கையில் குடும்ப வாழ்க்கைக்குரிய பயிற்சிகளைப் பெறுவதே நோக்கமாக இருந்தது”[21] என்பார் முத்துச் சிதம்பரம்.

சிவகங்கை மன்னர் முத்துவடுகநாதர் காலத்திலும் பெண் அடிமைப்படுத்தப்பட்ட நிலையே காணப்பட்டாலும், பொய்யாக விதிக்கப்பட்ட மரபுச் சட்டங்களை உடைத்தெறிந்த பெருமை வேலுநாச்சியாருக்கு உண்டு என்பதனை ஜீவபாரதியின் புதினம் உணர்த்துகிறது.

சிவகங்கை மன்னர் முத்துவடுகநாதர் வேட்டையாடச் செல்வது, மீதி நேரத்தில் விருந்தினர்களை வரவேற்பது, எஞ்சிய நேரத்தில் வேலுநாச்சியாரோடு பேசி மகிழ்வது என்று மன்னரின் காலம் சிறகடித்துப் பறந்தது என்று சொல்லும் ஜீவபாரதி நாச்சியாரைப் பற்றி உயர்வாகப் பேசுகிறார்.

“ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் தமிழ் இலக்கியங்களைப் புரட்டிப் பார்ப்பது... கற்ற பிற மொழிகளைக் கசடறக் கற்பது... சேடிப் பெண்களிடம் தமிழர்களின் வீரத்தைப் பற்றி விவரிப்பது... அமைச்சர் தாண்டவராயன் பிள்ளையிடம் நாட்டு நிலைகைளை அறிந்து கொள்வது என வேலுநாச்சியாரின் நேரம் முழுவதும் கரைந்து சென்றது”[22] என்று ஜீவபாரதி குறிப்பிடுவதிலிருந்து வேலுநாச்சியார் கல்வியில் மேலோங்கியிருந்த நிலையோடு தமிழ் இலக்கியங்களையும் பழுதறக் கற்ற நிலையை உணர முடிகிறது. ஆண்களுக்கு இணையாகக் கல்வி, கேள்வியில் பெண்கள் மேலோங்கியிருக்க வேண்டும் என்ற பெண்ணியக் கோட்பாட்டிற்கும், பொதுவுடைமைக் கோட்பாட்டிற்கும் அரண் சேர்ப்பதாக இதை உணரமுடிகிறது.

“மலையாளம், கன்னடம், தெலுங்கு, சமஸ்கிருதம், உருது, ஆங்கிலம் ஆகிய ஆறு மொழிகளில் தேர்ச்சியும், வளரி என்ற ஆயுதத்தைக் கையாளுதல், வாள்வீச்சு, குதிரை ஏற்றம், சிலம்பம் போன்ற வீர விளையாட்டுகளில் தேர்ந்த பயிற்சியும், மகாபாரதம், கம்பராமாயணம், சிலப்பதிகாரம், சங்க இலக்கியம் போன்ற தமிழ் இலக்கியங்களில் மேன்மை மிகு புலமை மிக்கவளாக அந்த வீரத் தமிழச்சி சிறந்து விளங்கியிருக்கிறார். தமது கணவனை வெள்ளையரின் வெறிச்செயலுக்குப் பலி கொடுத்திருக்கிறாள். எட்டாண்டு காலம் தவமிருந்து, படை நடத்தி, ஆயுதம் ஏந்தி, களம் கண்டு ஆங்கிலப் படைத்தளபதிகள் ஜோசப் ஸ்மித், பான்ஜோர் ஆகியோரை அந்தத் தமிழச்சி தோற்கடித்திருக்கிறாள். ஒன்பது ஆண்டுகள் தமது நாட்டைத் தமது தேர்ந்த ஞானத்தால் வழிநடத்தியிருக்கிறாள். தமது ஐம்பதாவது வயதிற்கு மேல் ஜோஸ் – டி – பிரே என்ற பாதிரியாரிடம் பிரெஞ்சு மொழியையும் கற்று, கல்வி பெற வயது ஒரு தடையில்லை என்பதை அவள் நிரூபித்து வாழ்ந்து காட்டியிருக்கிறாள். இத்தனை சிறப்புகளுக்கும் சொந்தக்காரி சிவகங்கைச் சீமையின் ராணி வேலுநாச்சியார்”[23] என்கின்றார் ஜீவபாரதி. இது வேலுநாச்சியாரின் கல்வித் திறனையும், ஞானத்தையும் உணர்த்துவதாக அமைகிறது.

வேலுநாச்சியாரின் பன்மொழித் திறனை ஜீவபாரதி பல இடங்களில் புகழ்ந்து பேசுகின்றார். சிவகங்கை அரண்மனை ஆலோசனைக் கூடத்தில் கவர்னர் லாட்டீகாட் என்பவன் மொழிபெயர்ப்பாளன் துவாஷ் என்பவனுடன் சென்ற போது ஓர் அதிசயம் நிகழ்ந்ததனை ஜீவபாரதி விளக்குகின்றார். வரி கட்டாததன் காரணத்தையும், எங்களை அவமானப்படுத்துவதன் நோக்கத்தையும் கூற வேண்டிக் காரணம் கேட்டபோது அமைச்சர் தாண்டவராயன் அப்போது அங்கு இல்லாததால் மொழிபெயர்ப்பாளரின் முகத்தை முத்துவடுகநாதர் பார்க்கின்றார். உடனே கவர்னர் மன்னரைப் பார்த்து

ஏளனமாகச் சிரிக்கின்றார். அந்த நேரத்தில் ஆலோசனைக் கூடத்தில் நுழைந்த வேலுநாச்சியார், "உனது மொழி எனது கணவருக்குத் தெரியவில்லை என்பதற்காக நீ அலட்சியமாகப் பேசியதை நான் அறிவேன். எங்கள் தாய்மொழியை நாங்கள் அறியாதிருந்தால்தான் நாங்கள் வெட்கப்பட வேண்டும். உனது மொழி, கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றை நாங்கள் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமில்லை. ஆனால் எங்கிருந்தோ வந்து எங்களை நத்திப் பிழைக்கும் நீதான் எங்கள் மொழியை அறிந்திருக்க வேண்டும் என்பதை உனது கவனத்திற்குக் கொண்டு வருகிறேன் என்று ஆங்கிலத்தில் பிளந்து கட்டினாள் வேலுநாச்சியார். அவரது சரளமான ஆங்கில நடையையும், உச்சரிப்புத் தெளிவையும் கண்டு கவர்னர் லாட்டீ காட்டின் விழிகள் ஆச்சரியத்தால் இமைக்க மறந்தன"[24] என்ற செய்தி வேலுநாச்சியாரின் ஆங்கில அறிவையும், துணிச்சலையும் வெளிக்காட்டி நிற்கிறது. இதைத் தான் தமது நாடக நூலில்,

"பன்மொழிப் புலமை

பார்வையில் புதுமை

வேலுநாச்சியார் அவள் பேரு – இந்தப்

பாரத தேச

விடுதலைப் போரில்

வேலுநாச்சியார் புகழ் கூறு"[25]

என்பார் ஜீவபாரதி.

மனைவியின் ஆங்கில அறிவை அவர்தம் கணவர் மன்னர் முத்துவடுகநாதர் அங்கீகரித்து மகிழ்ந்துள்ளார் என்பது பெண் கல்வியின் அவசியத்தையும், அதனால் ஏற்படும் பலனையும் அறிவுறுத்துவதாக உள்ளது. அத்துடன் ஆண், பெண் பேதத்தை அகற்றிப் பொதுவுடைமைப் பாதைக்கு வழி வகுக்கிறது.

**சாதீய மறுப்புப் பெண்ணியமும் பொதுவுடைமைச் சிந்தனையும்**

ஆணாதிக்கத்தின் வாயிலாகவே சாதியும் பின்னப்படுகிறது. மேல் சாதி, கீழ் சாதிப் பாகுபாட்டினால் பல இன்னல்கள் பெண்களுக்கு இழைக்கப்படுகின்றன. உயர் சாதி என்ற ஆதிக்கப் போர்வையில் கீழ்நிலையில் உள்ள விளிம்பு நிலை மக்களைக் கொடுமைக்கு ஆட்படுத்துகின்றனர். உழைப்பு ரீதியாகச் சுரண்டப்படுவதுடன் பாலியல்

வன்கொடுமை, உரிமை மறுப்பு போன்ற நிலைகளிலும் அநீதிகள் இழைக்கப்படுகின்றன. இவற்றைக் களைய முற்பட்ட பெண்ணியம் சார்ந்த தகவல்களைத் தர வேலுநாச்சியார் புதினத்தின் வழியே ஜீவபாரதி முனைகின்றார்.

“ஆசிரியர் தான் படைக்கும் பாத்திரங்கள் மூலம் தன் கொள்கையைச் சிறிதளவாவது வெளிக்காட்டுவர் என்பதை வேலுநாச்சியார் பாத்திரத்தின் மூலம் உணரமுடிகிறது”[26] என்பார் மு. கீதா.

ஜீவபாரதியின் வேலுநாச்சியார் புதினத்தில் பல இடங்களில் பெண்ணியச் சிந்தனைகள், பொதுவுடைமைச் சிந்தனைகளோடு உறவு கொள்கின்றன. மன்னர் முத்துவடுகநாதர். வேலுநாச்சியார் மகப்பேற்றிற்காகத் தந்தையின் அரவணைப்பில் இராமநாதபுரம் அரண்மனைக்குச் சென்று விடுகிறாா். அந்த நேரத்தில் மன்னருக்கும், காளையார்கோயிலைச் சார்ந்த கௌரி என்பவருக்கும் தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. மகளை ஈன்றெடுத்த வேலுநாச்சியார் சிவகங்கை வந்ததற்குப் பிறகு சில நாட்களில் இந்தத் தொடர்பு தெரியவருகிறது. மற்றைய பெண்களைப் போல் புலம்பாத வேலுநாச்சியார், தன் மனதை உறுதிப்படுத்திக் கொண்டு இராஜராஜேஸ்வரி கோயிலில் தன் கணவருக்கும், கவுரிக்கும் திருமணத்தை நடத்தி வைத்த புரட்சிப் பெண்ணாகத் திகழ்கின்றார்.

இதைச் சற்றும் எதிர்பாராத அமைச்சர் தாண்டவராயன் வேலுநாச்சியாரிடம் பேசிய தகவல்கள் அன்றைய சமூக அமைப்பை விளக்குவதாக அமைகிறது.

“மன்னர்கள் தங்கள் மனைவியிருக்க மற்றொரு மங்கை மீது மையல் கொள்வது வாடிக்கை தான் ... ஆசைப்பட்டவர்களை மன்னர்கள் தங்களின் அந்தரங்க நாயகிகளாக அலங்கரித்துக் கொள்வதும் வழக்கம் தான். தாங்கள் பிறந்த இராமநாதபுரம் சீமையின் மன்னரும், தங்களின் முன்னோடிகளில் ஒருவரான பெரியவர் கிழவன் சேதுபதிக்கு ஐம்பத்தாறு மனைவிகள் இருந்ததும் உண்மைதான். ஆனால் சிவகங்கைச் சீமைக்கு இது புதிது. இந்தச் சீமையின் முதல் மன்னர் சசிவர்ணத் தேவர் இதற்குச் சான்று. அவரது மகனும், நம் சீமையின் மன்னருமான தங்கள் கணவர் ஒரு பெண்ணின் அழகில் மயங்கியது குற்றமன்று ... அவரோடு மன்னர் பொழுதைக் கழித்ததும் பிழையன்று ... அந்தப் பெண்ணையே இரண்டாம் தாரமாக நம் மன்னர் ஏற்றுக் கொள்வதும் சரியே ... ஆனால் இந்தத் திருமணத்தைத் தாங்கள் தலைமையேற்று நடத்தியதும், மாங்கல்யத்தைத் தாங்களே மன்னர் கையில் எடுத்துக் கொடுத்து அதை அந்தப் பெண் கழுத்தில் கட்டச் சொன்னதும் தான்

எனக்கு வேதனை அளிக்கிறது. இதுபற்றி நீங்கள் என்னிடம் விவாதித்திருந்தால் இதுபோன்று நடக்க நான் அனுமதித்திருக்க மாட்டேன்.. ஏனெனில் அந்தப் பெண் இசைவேளாளர் வகுப்பைச் சார்ந்தவர் என்பதைக் கூட அறியாமல், அறிய முயற்சிக்காமல் நீங்கள் அவசரப்பட்டு விட்டீர்கள்''[27] என்று அமைச்சர் தாண்டவராயன் சொல்வதாக ஜீவபாரதி எழுதுகின்றார்.

இதன் மூலம் அன்றைய மன்னராட்சியில் பலதார மணத்தை ஏற்றுக் கொண்ட அவலத்தை அறியமுடிகிறது. திருமணம் என்று வரும் போது சாதி பார்க்கும் சிந்தனை புரையோடிக் கிடந்ததையும் அறியமுடிகிறது. அமைச்சரின் கருத்தை மறுத்துப் பேசிய வேலுநாச்சியார் பெண்ணியச் சிந்தனையின் பிரதிநிதியாக உள்ளதோடு மார்க்சியத்தின் முன்னோடியாகவும் திகழ்ந்துள்ளார்.

``என் கணவர் அந்தப் பெண்ணின் அழகில் தன்னை இழந்த போது சாதி தெரியவில்லை. அவள் நினைவில் இரவெல்லாம் தூங்காமல் என் கணவர் துடித்த போதும் சாதி தெரியவில்லை. அந்தப் பெண்ணின் மடியில் என் கணவர் தஞ்சம் புகுந்தபோதும் சாதி தெரியவில்லை. நான் தாலி எடுத்துக் கொடுத்தபோதும், அவள் கழுத்தில் தாலி கட்டும்படி என் கணவரை நான் பணித்தபோதும் தான் சாதி தலை தூக்குகிறது என்றால், அதற்காக நான் வெட்கப்படுகிறேன். இரண்டு மனங்கள் இணைகிறபோது, அங்கே சாதி, பேதங்களுக்குச் சமாதி கட்டப்படுகிறது என்பதுதான் வரலாறு. இந்தத் திருமணத்தின் வழியாக இந்த நாட்டிற்கு வரவிருந்த விபத்தை நான் தடுத்திருப்பதாக எண்ணுகிறேன்''[28] என்று வேலுநாச்சியார் வேகத்தோடும், விவேகத்தோடும் பதில் கூறியதாக ஜீவபாரதி எழுதியுள்ளார்.

இரண்டு மனங்கள் இணைகிறபோது சாதி, பேதங்கள் சமாதி கட்டப்படுகின்றன என்பது பொதுவுடைமைச் சிந்தனையின் உச்சம். ஆண் – பெண் பேதத்தையும், சாதீய பேதத்தையும் தரைமட்டமாக்கிச் சமத்துவத்திற்கு இட்டுச் செல்லும் தன்மையாக இது அமைகிறது. அழகில் மயங்குகிற போது தெரியாத சாதி, திருமணப் பேச்சு வந்ததற்குப் பிறகுதான் தெரிகிறதா என்ற கேள்வி ஆணாதிக்கத்திற்குக் கொடுக்கப்படும் சம்மட்டி அடியாக உள்ளது.

ஜீவபாரதியின் வேலுநாச்சியார் புதினத்தில் வரலாற்று உண்மைப் பாத்திரங்களோடு கதையின் வளர்ச்சிக்காகச் சில கற்பனைப் பாத்திரங்களும் படைக்கப்பட்டுள்ளன. ஆனாலும் வரலாற்றுக்கு முரண்பாடு இல்லாமல் பின்னப்பட்டிருப்பதாக நூலாசிரியர் கூறுகின்றார். அப்படிப் படைக்கப்பட்ட ஒரு

கதாப்பாத்திரம் மருதாணி. தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்தவராகப் படைக்கப்பட்ட அப்பாத்திரத்தின் மூலம் சமூக மேம்பாட்டிற்கு வழி வகுக்கின்றார்.

மன்னர் அரண்மனையில் ராணியாக இருக்கும் வேலுநாச்சியார் பொதுமக்களின் முகத்தைப் பார்த்துக் குறை களைபவளாக இருக்கின்றார். ஏற்கனவே அறிமுகமான மருதாணியை மீண்டும் சந்திக்கிறபோது அந்தப் பெண்மணியின் முக வாட்டத்தின் காரணத்தைக் கேட்கின்றார். சொல்ல மறுத்த போதும் அழுத்திக் கேட்டதால் மருதாணி பேசத் தொடங்குகின்றாள்.

‘‘தாயே நான் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்தவள் என்பது உங்களுக்குத் தெரியும். எங்கள் சமூகத்திற்கு இழைக்கப்படும் கொடுமைகள் ஏராளம். நாங்கள் வாழ்வது ஊர்களின் ஒதுக்குப்புறத்தில், சந்து பொந்துகளில், சாக்கடை ஓரங்களில், அது பற்றியெல்லாம் நாங்கள் கவலைப்பட்டதில்லை. கோவில்களைக் கட்டுவதற்குப் பயன்படும் நாங்கள் கோவிலுக்குள் செல்வதற்கு அனுமதி இல்லை. பல்லக்கைச் செய்வதிலும், அதைத் தூக்கிச் செல்வதிலும் பயன்படும் நாங்கள் மறந்தும் பல்லக்கில் இருப்பவரைத் தொட்டுவிடக் கூடாது. இவைகள் போதாதென்று எங்களுக்கு இருந்த உரிமையையும் பறித்துக் கொள்வது என்ன நியாயம் தாயே’’[29] என்று கேட்டாள் மருதாணி.

எந்த உரிமை பறிக்கப்பட்டது என்று வேலுநாச்சியார் கேட்டார். சிவகங்கை நகரில் இருக்கும் சசிவர்ண ஈஸ்வரர் ஆலயத்தில் நடக்கும் கொடுமை தங்களுக்குத் தெரியாதா தாயே என்றாள் மருதாணி.

‘‘தாயே எங்கள் சமூகம் உழைக்கத் தெரிந்த அளவுக்கு உரிமையைப் பறித்துக் கொள்ள முயற்சித்ததில்லை. கிடைத்த உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முயன்றதும் இல்லை. அனுமந்தக்குடிப் போரில் கூட எங்களவர் போரிட்டு மடிந்தனர். எதிரிகளைப் புறமுதுகிட்டு ஓடவும் செய்தனர். ஆனால் நடந்த வெற்றித் திருவிழாவில் கலந்து கொள்ள விரும்பாமல் தங்கள் வீடுகளுக்குச் சென்றுவிட்டனர். அவர்களுக்கு உழைக்கத் தெரியும். அதற்குரிய பலனை அறுவடை செய்யத் தெரியாது’’[30] என்றும் வேலுநாச்சியாரிடம் மனம் விட்டுச் சொன்ன செய்தியினை ஜீவபாரதி பதிவு செய்துள்ளார். இதன் மூலம் அடக்கப்பட்ட சமூகத்தின்பால் வேலுநாச்சியார் காட்டிய அக்கறை வெளிப்படுகிறது. ராணியிடம் பேசுகிறோம் என்ற பயம் மருதாணிக்கு இருந்தாலும் வேலுநாச்சியாரின் பரிவும், பாசமும் அந்தப் பயத்தை நீக்குகிறது. ஆட்சி செய்பவர்கள் அன்பாக இருந்தால் அல்லல் படுபவர்கள் தம்

சிரமத்தை ஆள்பவர்களிடம் துணிச்சலாக எடுத்துச் சொல்ல முடியும் என்பதற்குக் காட்டாக இது அமைகிறது.

மருதாணியின் சமூகத்தைச் சார்ந்த பெரியவர்களை மன்னரின் அரண்மனைக்கு வரச்செய்து நடந்தவற்றை மன்னரிடம் கூறி மன்னர் வாய்மொழியிலேயே அச்சமூகத்திற்கு நிகழ்ந்த அவலங்களைத் துடைத்துள்ளார் வேலுநாச்சியார்.

“சசிவர்ண ஈஸ்வரர் ஆலயத்தில் நடக்கும் சீர்கேடு வேலுநாச்சியார் வழியாக என் கவனத்திற்கு வந்தது. எனது தந்தையும், சிவகங்கைச் சீமையின் முதல் மன்னருமான சசிவர்ணத் தேவரின் காலத்தில் உங்களுக்கு என்ன உரிமைகள் இருந்து வந்ததோ, அதில் எள்முனை அளவுகூட உங்களுக்குப் பங்கம் ஏற்பட நான் அனுமதிக்க மாட்டேன். உங்களைக் கோவில் பணிகளில் ஈடுபட விடாமல், ஆகமத்தைக் காரணம் காட்டிய அய்யர்களை நாடு கடத்த உத்தரவிட்டிருக்கிறேன். நீங்கள் வழக்கம்போல அந்தக் கோவில் திருப்பணிகளில் ஈடுபடலாம்”[31] என்று மன்னர் முத்துவடுகநாதர் வழியாகப் பாதிப்புக்குள்ளான தாழ்த்தப்பட்ட சமூகத்தின் நீதிக்குப் போராடியவராக வேலுநாச்சியார் படைக்கப்பட்டுள்ளார்.

மன்னர் தம் மனைவியான வேலுநாச்சியாரின் கூற்றுக்குச் செவிசாய்த்தார் என்பது பெண்மையைப் போற்றிய செயலாகும். ஆகமத்தைக் காரணம் காட்டி வெளியேற்றிய அய்யர்களை நாடுகடத்த உத்தரவிடுகிறேன் என்று மன்னர் கூறியதாகச் சொல்லும் ஜீவபாரதியின் கூற்று சிந்திக்க வைக்கிறது. மேலும் நீங்கள் வழக்கம் போல் அந்தக் கோவில் திருப்பணிகளில் ஈடுபடலாம் என்று சொல்வது வேலுநாச்சியாரின் புரட்சித் திறனை மேலோங்கிக் காட்டுகிறது. ஆகமங்கள், வேதங்கள் யாவும் பின்னே வந்தவை என்பதையும், தாழ்த்தப்பட்ட சமூகம் என்று பின்னர் சொல்லப்பட்ட அச்சமூகம் கோவில் திருப்பணிகளில் ஈடுபட்டிருந்த நிலையையும் உணரமுடிகிறது.

மன்னராட்சியில் சில சாதுர்யத்தாலும், சூதுவாதத்தாலும் அய்யர்கள் முன்னுக்கு வந்துள்ளனர். “சமூகப் பழக்க வழக்கங்களைப் பொறுத்த மட்டில் இவர்களே வேத விளக்கம், கோவில் சடங்குள் போன்றவற்றை நடத்துவதோடு சமூகத் துறையிலும், பிறப்பு முதல் இறப்பு வரையிலும் இவர்களது தீர்ப்பும், வழிகாட்டுதலும் முக்கிய இடம் பெற்றன. எனவே சமூகத் துறையிலும் மேலான இடத்தை இவர்கள் பெற்றனர். அரசியல் அதிகாரமும், சமூகத்தில் அந்தஸ்தும் கிட்டியதால் நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தில் நிலவுடைமையைப் பெற்றுக் கொள்வது எளிதாக இருந்தது அல்லது நிலத்தை வளைத்துப் போட்டுக் கொண்டனர். இவர்கள் வகுத்ததே சாத்திரம் என்று

இருந்ததால் இவர்களது தலைமைப் பாத்திரம் எப்பொழுதும் நன்கு காக்கப்பட்டது"[32] என்ற தா. பாண்டியன் சிந்தனை ஒப்பு நோக்கத்தக்கது.

அய்யர்களின் தலைமைப் பாத்திரப் பண்பினை உடைத்தெறியப் பல வகைகளில் போராடிய வீரமங்கை வேலுநாச்சியார் மிகச் சிறந்த பொதுவுடைமைப் பெண்ணியவாதியாகத் திகழ்ந்துள்ளார். வேலுநாச்சியார் பல்வேறு போராட்டங்களைச் சந்தித்து மன்னர் கொல்லப்பட்ட எட்டு ஆண்டுகளுக்குப் பின் அரசியாகப் பதவியேற்றபோதும் புதுமை செய்தார். சாதீயமற்ற சூழலுக்கு வித்திட்டார். அமைச்சர் தாண்டவராயன் இறந்துபட்டதால் மகுடம் சூட்டி அரசாட்சி செய்து வைப்பது யார் என்ற எதிர்பார்ப்பு மேலோங்கியது. இராஜராஜேஸ்வரி ஆலயத்தில் அம்பாளின் காலடியில் வைத்துப் பூசை செய்து இந்த மணிமகுடத்தை எடுத்து வந்திருக்கிறேன் என்று ஓர் அந்தணர் வந்துள்ளார். சமயோசிதச் சிந்தனைமிக்க ராணி வேலுநாச்சியார் "மதமும் அரசியலும் எப்போதும் இணைந்துவிடக் கூடாது. அப்படி இணைந்து கொள்வதற்கு நாமே இடம் கொடுத்துவிட்டால் எதிர்காலத்தில் பல இன்னல்களிலிருந்து நாம் தப்ப இயலாது. இதையெல்லாம் கருத்தில் கொண்டு கவிஞர் வைரவன் இந்த மணிமகுடத்தை என் தலையில் சூட்ட வேண்டுகிறேன்"[33] என்று சொன்னார் என்ற பதிவு வேலுநாச்சியாரின் பார்ப்பனிய எதிர்ப்பைப் பகிரங்கப்படுத்துவதாக அமைகிறது. மேலும் தனக்குச் சூட்டப்படும் மணிமகுடம் ஒரு கவிஞரால் நிகழட்டும் என்று நினைத்தது அவர்தம் தமிழ்ப்பற்றையும் காட்டுவதாக அமைகிறது.

**தந்தை வழிச் சமூகமும் பெண் திருமண அடக்குமுறையும்**

தந்தை வழிச் சமூகம் பெண்களின் திருமணத்திற்கு மிகப்பெரிய தடையாக உள்ளது. தான் விரும்பிய ஆடவனைத் தேர்ந்தெடுக்கவோ அல்லது பெற்றோர் பார்த்த ஆடவனைப் பற்றிய செய்திகளை அறியவோ கருத்துச் சுதந்திரம் இல்லாத நிலையைப் பெண்ணுக்குத் தந்துள்ளது. இதை மார்க்சியமும், பெண்ணியமும் எதிர்த்து நிற்கிறது. வேத, இதிகாச காலத்திலிருந்தே பெண் சுதந்திரம் மறுக்கப்பட்டுள்ளது. ஆணாதிக்கத்தின் ஒரு வளர்ந்த கட்டமே தந்தை வழிச் சமூகமாகக் கோலோச்சி நின்றது.

"தந்தை வழிச் சமூகம் என்பதற்குத் 'தந்தையின் ஆட்சி' (Rule by the father) என்பது பொருளாகும். ஆனால் தீவிரப் பெண்ணியவாதிகள், பெண்களை அடக்கி ஆளும் ஆணின் ஆளுகை (Dominance of men over women)

என்பதைக் குறிக்க இச்சொல்லைப் பயன்படுத்தி வருகின்றனர். ஆணின் மேலாண்மை என்பது மிகவும் தொன்றுதொட்ட ஒன்றாகும். எல்லா ஆண்களுமே பெண்களை அடக்கி ஆண்டதாகத்தான் வரலாறு. எனவே பெண்களுக்கு ஆண்கள் எதிரி என்று சுட்டிக் காட்டப்படுகிறார்கள்''[34] என்பார் இரா. பிரேமா.

தந்தை வழிச் சமூக அமைப்பில் தந்தை சொல்லும் மணமகனைப் பிடித்தோ, பிடிக்காமலோ மகள் ஏற்றுக் கொள்ள வேண்டும். எதிர்க்கும் வல்லமையைச் சமூகம் வெகுகாலமாக வழங்கவில்லை. ''பெண்ணின் திருமணம் தொடக்கம் முதல் இறுதிவரை பண்பாட்டு வன்முறைக்குள்ளாகிறது. தன் திருமணத்தைத் தானே தேர்ந்தெடுக்கும் உரிமையைக் குடும்பங்கள் இன்னும் பெண்ணுக்குக் கொடுக்கவில்லை. செல்வச் செழிப்போடு வாழ்கிற குடும்பத்திலும் இதே நிலைமைதான். அடிபட்டுக் காய்ப்பேறிய குடும்பத்திலும் இதே நிலைமைதான்''[35] என்பார் ச. மாடசாமி.

வேலுநாச்சியார் திருமணத்திலும் தந்தையின் ஆதிக்கம் இருந்ததை ஜீவபாரதி விளக்கியுள்ளார். இராமநாதபுரம் மன்னரும் வேலுநாச்சியாரின் தந்தையுமான செல்லமுத்து சேதுபதி சிவகங்கை மன்னர் சசிவர்ணத்தேவரும், அவர்தம் மனைவி பூதக்கா நாச்சியாரும் பெண் கேட்டவுடன் முத்துவடுக நாதருக்குத் தம் மகளைக் கொடுக்க ஒத்துக் கொண்டார். இது மன்னராட்சிக் காலத்திலும் விரவியிருந்த தந்தைவழிச் சமூக மரபைப் பிரதிபலிப்பதாக உள்ளது. வேலுநாச்சியார் இதைத் தகர்த்தெறிந்துள்ளார்.

''என்னை மணமுடிக்கப் போகிற அவரிடமும், அவரோடு வாழப் போகிற என்னிடமும் ஒரு வார்த்தை கூடக் கேட்காமல் சிவகங்கை மன்னரும், நீங்களும் உங்கள் விருப்பத்திற்கு எப்படி ஒரு முடிவுக்கு வர முடிந்தது''[36] என்ற வேலுநாச்சியாரின் கேள்வி பெண்ணியப் பொதுவுடைமைச் சிந்தனையாளராக அவரை அடையாளப்படுத்துகிறது.

''வேலு நான் தெரியாமல் சொல்லிவிட்டேன் ... அதற்காக இப்போது வருந்துகிறேன் ... முத்து வடுகநாதரைக் கட்டிக் கொள்ள உனக்கு விருப்பம் இல்லையென்றால் சொல் ... அவர்களை வேறிடத்தில் சம்பந்தம் பேசும்படித் தகவல் கொடுத்து விடுகிறேன் ... உனக்கு விருப்பம் இல்லாத எதையும் செய்ய எனக்குத்

தைரியம் கிடையாது”[37] என்ற செல்லமுத்து சேதுபதியின் பதில் பெண்மைக்கு முக்கியத்துவம் தரும் அவர்தம் பண்பை வெளிக்காட்டுவதாய் அமைகிறது.

“அப்பா நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. என் விருப்பத்தையும் கேட்டிருக்கலாமே என்று தான் கூறினேன். நான் வயதில் இளையவள் என்பதனாலேயும், பெண் என்பதனாலேயும் எனது சம்மதம் அறியப்படவில்லையே என்ற ஆதங்கம் மட்டுமே எனக்கு உண்டு. அதற்காக இந்தத் திருமணத்தில் எனக்கு உடன்பாடு இல்லையென்று நீங்கள் முடிவுக்கு வரவேண்டாம்”[38] என்ற வேலுநாச்சியாரின் கூற்று மேலும் பெண்ணியப் பொதுவுடைமைக்கு வழிவகுக்கிறது. தனக்கு மணமகனைப் பிடித்திருந்தும், உரிமைக்காகப் போராடிய போராட்டக் குணமும், தந்தைமேல் அளவு கடந்த பாசம் இருந்தும், பெண்ணியக் குரலாகத் தந்தையிடம் கேட்கும் கேள்வியும், இங்கே மேலிட்டு நிற்கிறது. இளையவர், மூத்தவர், பெண், ஆண் பேதமின்றிக் கருத்துச் சுதந்திரம் தேவை என்பதே பொதுவுடைமைக் கோட்பாட்டின் குரலாகத் தொனிக்கிறது.

**வேலுநாச்சியார் வழி சமூகப் பெண்ணியமும் பொதுவுடைமைச் சிந்தனையும்**

சமூக வாழ்விலும், அரசியல் சார்ந்த வாழ்விலும் பெண்களின் நிலை மிகவும் வருந்தத்தக்கதாய் உள்ளது. இந்தியச் சமூகத்தில் பெண் என்பவள் தாய் அல்லது மனைவி என்ற நிலையில்தான் அடையாளப்படுத்தப்படுகிறாள்.

“அனைத்து உயிரினங்களும் ஆண், பெண் என்ற இரு நிலைகளாக இருந்தாலும் சமமாகக் கருதப்பட வேண்டியவையாக இயற்கையில் இருக்கின்றன. ஆண்மையும், பெண்மையும் இரண்டறக் கலந்து ஒன்றிணைந்து இயங்குவதன் காரணமாகத் தான் உயிர்த்தோற்றம் உருப்பெறுகின்றது. இவ்விரண்டில் எது உயர்ச்சி – எது தாழ்ச்சி என்பதற்கே இடமில்லை”[39] என்பார் சு. அறிவுக்கரசு.

சமூக, அரசியல் நிலையில் பெண்களின் நிலை மேம்படப் போராடிய வேலுநாச்சியாரின் வாழ்வினை ஜீவபாரதி பலகோணங்களில் பதியமிட்டுள்ளார்.

“பெண்கள் முன்னேற்றமடைந்துள்ளனர் எனக் கருதப்பெறும் இக்காலக் கட்டத்திலும் கருவில் இருப்பது பெண்குழந்தை என அறிந்த உடனே அழிக்கும் நிலையை இன்றும் காணமுடிகிறது. பிறந்தவுடன் பெண்ணாக இருந்தால் கள்ளிப்பால் கொடுத்து அல்லது நெல்மணியிட்டுக் குழந்தையைக் கொன்று விடுவோம் எனச் சாதாரணமாக இன்றும் மதுரை, சேலம் போன்ற மாவட்டங்களில்

மக்கள் கூறுகின்றனர். பெண்ணே, பெண்ணைக் கொன்று விடக்கூடிய அவல நிலையிலேயே பெண்குழந்தை பிறப்பு உள்ளது”[40] என்பார் மு. கீதா.

இதற்கு விதி விலக்காக வேலுநாச்சியாரின் தாய் இறந்ததற்குப் பிறகும் செல்லமுத்து சேதுபதி தன் ஒற்றை மகளை ஆண் மகனுக்கு இணையாக வளர்த்துச் சாதனை படைத்துள்ளார்.

“சின்னஞ்சிறு வயதிலேயே தாயைப் பறிகொடுத்த வேலுநாச்சியாருக்கு, மன்னர் தந்தையென்ற பொறுப்போடு தாய் ஸ்தானத்திலிருந்தும் அவளைப் பேணி வந்தார். இந்த ஒரு பிள்ளை போதும்; இந்த உலகை ஆள்வதற்கு என்ற எண்ணம் மன்னருக்கு இருந்ததனால் தான் மனைவி மறைந்த பின்னும் மறுதாரம் கட்டிக் கொள்ள அவர் மனம் ஒப்பவில்லை. வேலுநாச்சியார் பெண்ணாகப் பிறந்தாலும், ஒரு ஆண்மகனைப் போன்றே அவளை வளர்த்து வந்தார். அதனால் தான் ‘வேலுநாச்சியார்’ என்று அவளுக்கு அவர் பெயர்சூட்டியிருந்த போதும் ‘வேலு’ என்று அழைப்பதையே அவர் வழக்கமாக்கிக் கொண்டார்”[41] என்பதிலிருந்து வேலுநாச்சியாரின் தந்தை செல்லமுத்து சேதுபதி பெண்களை மதிக்கத் தெரிந்தவர் என்பதும், ஆளும் அரச பதவி என்பது ஆண், பெண் இருவருக்கும் பொதுவானதே என்ற பொதுவுடைமை விதி புரிந்தவர் என்பதும் தெளிவாகிறது. வேலுநாச்சியாரை ‘வேலு’ என்று பெயர் சொல்லி அழைத்தார் என்பதும் சமூகத்தில் இழிவாகப் பார்க்கப்பட்ட பெண்ணினத்தை ஆணுக்கு இணையாகப் பார்த்ததும் சிந்திக்கத்தக்கதாக அமைகிறது.

ஆணாதிக்கச் சமூகத்தில் எத்தகைய பெண்கள் என்றாலும் தன்னிச்சையாக எப்போதும் தனியே இயங்கத் தகுதியற்றவராகவே பார்க்கப்பட்டுள்ளனர். சிறுவயதில் தந்தையும், கல்யாணமான பிறகு கணவனும், விதவையானால் மைந்தர்களும் பாதுகாக்கும் நிலையிலேயே பெண் இருக்கும் அவலநிலை இச்சமூகத்தில் நிலவி வந்தது. இதை உடைத்தெறிந்த பெண்ணியச் சிந்தனைவாதியாகவும், பொதுவுடைமைவாதியாகவும் வேலுநாச்சியார் திகழ்ந்துள்ளார்.

திருமணம் முடிந்து முத்துவடுகநாதரும், வேலுநாச்சியாரும் குற்றாலத்திற்குச் சுற்றுலா சென்றிருந்த போது மலைப்பகுதியில் மன்னரைத் தாக்கிய புலியை வேலுநாச்சியார் தடுத்துத் தாக்கியுள்ளார். இதில் கணவரைக் காப்பாற்றினார் வேலுநாச்சியார் என்பதை விட ஆணுக்கும் கூடுதல் பலம் படைத்தவளாக வேலுநாச்சியார் திகழ்ந்துள்ளமை கருதத்தக்கது.

“முத்துவடுகநாதர் மீது கால்வைத்திருந்த புலியின் அடிவயிற்றில் ஓங்கி உதைவிட்டார் வேலுநாச்சியார், உதையால் நிலைகுலைந்த புலி வேலுநாச்சியார் மீது விழி பதித்தது. முத்துவடுகநாதரை விடுத்து, வேலுநாச்சியார் மீது வெறியோடு பாய்ந்தது. இதை எதிர்பார்த்திருந்த அவர் ஒதுங்கிக் கொள்ள வேகத்தோடு பாய்ந்து வந்த புலி ஒரு மரத்தின் மீது மோதி மண்ணில் சாய்ந்தது. அதன் கழுத்தைப் பற்றிய வேலுநாச்சியார் புலியின் முதுகில் அமர்ந்தார். அதன் கீழ்த்தாடையை ஒரு கையாலும், மேல் தாடையை மறுகையாலும் பற்றிப் பலம்கொண்ட மட்டும் இழுத்தார். வலி பொறுக்கமுடியாமல் புலி துடித்தது”[42] என்று எழுதும் ஜீவபாரதியின் புதினக் குறிப்பு வரலாற்றுப் போக்கில் வேலுநாச்சியாரின் வீரத்தைப் பறைசாற்றி நிற்கிறது.

பெண்ணியலாளர்கள் ஆண்கள் குறித்துப் பேசும் குற்றச் சாட்டுகள் பெரும்பாலும் அனைத்து வளங்களும் ஆண்கள் கட்டுப்பாட்டில் இருக்கின்றன என்பதாகும். தொடங்குவதிலிருந்து முடிவுகளைத் தீர்மானிப்பது என்பது வரை ஆண்கள் எடுப்பதே முடிவு. இதனை மாற்றிக் காட்டிய பெண்மணியாக வேலுநாச்சியார் வாழ்ந்துள்ளார்.

கூர்மையான கண்களையும், விரைத்த காதுகளையும், முறுக்கேறிய கால்களையும், வாளிப்பான தேகத்தையும் உடைய குதிரையை அடக்கி அக்குதிரையில் சவாரி செய்யும் எழுச்சிப் பெண்ணாக வேலுநாச்சியார் திகழ்வதனை ஜீவபாரதி கூறியுள்ளார்.

அழுவதும், தொழுவதும் தான் பெண்களின் நிலை என்ற பெண்ணடிமைத் தனத்தைச் சவுக்கடியால் விரட்டியவர் வேலுநாச்சியார். முத்துவடுகநாதரின் தந்தையும், தன் மாமானாருமாகிய சசிவர்ணத்தேவர் இறந்ததனால் அவர்தம் மனைவி பூதக்கா நாச்சியார் கவலையில் தோய்ந்திருந்தார். அவர்தம் வருத்தத்தையும் மாற்றும் கலங்கரை விளக்கமாக வேலுநாச்சியார் திகழ்ந்துள்ளார்.

“அத்தை! மாமா இல்லாத இப்போதுதான் நீங்கள் மிகவும் தைரியமாக இருக்க வேண்டும். நீங்கள் கண்ணீர் விடுவதைக் கண்டு உங்கள் மகனும் கண்ணீர் வடிக்கின்றார். அவர் இப்போது உங்கள் மகன் மட்டுல்ல. எனக்குக் கணவர் மட்டுமல்ல. இந்த சிவகங்கைச் சீமைக்கே மன்னர். இது நம் அனைவர் கவனத்திலும் இருந்தாக வேண்டும். இல்லையெனில் நாட்டு நலனில் நமது கவனம் பதியாது”[43] என்று வேலுநாச்சியார் சொல்வது தக்க நேரத்தில் ஆலோசனை கூறும் ஒரு துணிச்சல் மிக்க பெண்ணாக அடையாளப்படுத்தப்படுவதுடன் சிந்தனைத் திறன்

என்பது ஆண் – பெண் என்ற இருவருக்கும் பொதுவானதே என்ற சோசலிசச் சிந்தனையை மையப்படுத்துவதாகவும் அமைகிறது.

சமூகச் சிந்தனை மிக்க போராட்டத்தில் வேலுநாச்சியாரின் தொடர் பயணத்தில் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த குயிலியின் பங்களிப்பும் போற்றுதற்குரியது. வேலுநாச்சியார் அமைத்த பெண்கள் படைப்பிரிவில் குயிலி தன்னை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டதாக ஜீவபாரதி காட்டுகின்றார். வேலுநாச்சியாருக்குச் சிலம்பு வாத்தியராக இருந்த வெற்றிவேலனின் கபடப் பண்புகளை அறிந்தபோது அவரைக் கொலைசெய்து வேலுநாச்சியாருக்கு உற்ற துணையாக இருந்ததனை ஜீவபாரதி புதினத்தில் கண்ணுற முடிகிறது. வேலுநாச்சியாருக்கும், வெள்ளையர் படைக்கும் நடந்த உச்சக்கட்டப் போரில் குயிலி தன் உடம்பெல்லாம் எண்ணெய் பூசிக் கொண்டு தன் உடம்பில் தீவைத்துக் கொண்டு வெள்ளையாரின் ஆயுதக் கிடங்கில் குதித்துத் தன்னை மாய்த்துக் கொண்டார்.

“அரண்மனை சுற்றுச் சுவர் … அரண்மனை வெளிப்புற வலது பக்கத்தில் இருந்த வெள்ளையர் ஆயுதக் கிடங்கு வெந்து தணிந்திருந்தது … தாம் பாஞ்சோரை எதிர்க்க மாடிக்கு ஓடியபோது தீப்பந்தமாகி வெள்ளையரின் ஆயுதக்கிடங்கில் குதித்தது யார்? என்று யோசிக்கத் தொடங்கினார் வேலுநாச்சியார். விடுதலை வீரர்கள் எரிந்துபோன ஆயுதக் கிடங்கைக் கிளறிப் பார்த்தனர் … அங்கே கரிக்கட்டையாகக் குயிலி”[44] என்று ஜீவபாரதி எழுதியுள்ளது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த வரிகளாகும். தேச விடுதலைப் போரில் சாதி, மதம் பாராமல் ஒன்றாக நின்று போராடினர் என்பதற்கு இது தக்க சான்றாக அமைகிறது.

“பாட்டாளி வர்க்கத்தைச் சேர்ந்த பெண்கள் புரட்சிகரமான சக்திகளாவர். இதற்கு இந்த வர்க்கம் முதலாளியப் பொருளாதாரத்திற்கு விளிம்பு நிலையில் இருப்பது காரணமல்ல. அந்த வர்க்கம் முதலாளிய வர்க்கத்திற்கு அவசியமானதாகும். அதுதான் காரணம். இதே விதத்தில் பெண்கள் இன உற்பத்திச் செயலில் விளிம்பு நிலையில் இல்லை. அவர்களே இங்கு மையமானவர்கள்”[45] என்ற கருத்து இங்கே ஒப்பு நோக்கத்தக்கது.

குயிலி எப்படி வேலுநாச்சியாரின் வெற்றிக்குத் துணை நின்றாரோ அதைப்போல ஆடு மேய்க்கும் பெண்ணாக இருந்த உடையாளின் பங்கும் குறிப்பிடத்தக்கது. தம் கணவர் முத்துவடுகநாதரும், இளைய நாச்சியார் கௌரியும் கொல்லப்பட்ட பிறகு வேலுநாச்சியார் காளையார் கோவிலிலிருந்து நாட்டரசன் கோட்டையை நோக்கி

விரைந்து குதிரையில் செல்கிறார். விரட்டிக் கொண்டே ஆங்கிலேயப்படை வருகிறது. இடையில் அரியாக்குரிச்சி என்ற இடத்தில் ஆடுமேய்த்துக் கொண்டிருந்த உடையாள் என்ற பெண்ணிடம் விசாரிக்கிறார்கள். வேலுநாச்சியார் சென்ற திசை எதுவென்று கேட்கின்றனர். சென்ற திசையைக் காட்டிக் கொடுக்க மறுத்தார் உடையாள். வெட்டினாலும் சொல்ல முடியாது என்றார்.

“வைராக்கியம் உடையாள் நெஞ்சில் வளர்ந்து நின்றதால் அந்தக் கொடியவர்களைக் கண்டு சிரித்தாள் … இவளிடமிருந்து உண்மையை வரவழைக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்ட ஒருவன் வாளை உருவினான் … கண்ணிமைக்கும் நேரத்தில் வாளை உடையாள் கழுத்தில் வீசினான் … தலைவேறு முண்டம் வேறாக உடையாள் மடிந்து மண்ணில் சாய்ந்தாள் … உண்மையை அறிய முடியாத ஆத்திரத்தில் வெட்டுப்பட்ட உடையாள் முகத்தில் கூட ஒரு வித கம்பீரம் காட்சி தந்தது”[46] என்கின்றார் ஜீவபாரதி.

தேச விடுதலைப் போரில் ஈடுபட்ட பாட்டாளி மக்களின் அளவிடற்கரிய பணியை இது முன்னிறுத்தி நிற்கிறது. எட்டாண்டுகளுக்குப் பிறகு வெற்றிமுகத்தோடு வந்த வேலுநாச்சியார் வெட்டுப்பட்ட உடையாளுக்கு நடுகல் நிறுவிக் கோயில் எழுப்பிய வரலாறும் நினைத்துப் பார்க்கத் தக்கது. வெற்றி பெற்றுத் திரும்பிய போது விடுதலை வீரர்களிடம், “வீரர்களே வெள்ளையர் எதிர்ப்பில் களப்பலியான முதல் மன்னர் என் கணவர் என்றால் தேசபக்த எழுச்சியோடு என்னைக் காட்டிக் கொடுக்க மறுத்துக் களப்பலியான முதல் பெண்மணி உடையாள் தான். என் கணவரின் இழப்பை விட உடையாள் இழப்பு என் ஆவேசத்தை அதிகமாக்கியது. அதனால் தான் நம் பெண்கள் படைக்கு ‘உடையாள் படை’ என்று பெயரிட்டேன். இந்த வீரமங்கையை நினைக்கின்ற போதெல்லாம் என்னை விழிநீர் சூழ்ந்து கொள்கிறது… வீரத்தைப் போற்றாத தேசம் வெற்றி பெற்றதாகச் சான்றுகள் இல்லை”[47] என்று வேலுநாச்சியார் வீரர்களிடம் பேசுவதாக ஜீவபாரதி எழுதியுள்ளார். அந்த இடத்தில் பூசை செய்யக் காரைக்குடியில் இருந்த கருப்ப வேளாளரையும், காரி வேளாளரையும் நியமித்துள்ளார். அதற்காக உடைவயல், கொல்லங்குடி, அரியாக்குரிச்சி ஆகிய கிராமங்களைத் தானமாக வழங்கியுள்ளார்.

“வீரர்களே என் கணவர் மறைந்த பின்பும் அவர் என் கழுத்தில் கட்டிய வைரத் தாலியை நான் இதுவரை கழற்றவில்லை. இதன் காரணம் பலருக்குப் புரியாமல் இருக்கலாம். ஆம், உடையாள் வெண்டுண்ட செய்தி எனக்குக் கிடைத்த

அன்றே, இழந்த நாட்டை மீட்டு, இந்த அரியாக்குரிச்சியில் என் கால்படுகிறபோதுதான் என் கழுத்துத் தாலியைக் கழற்றுவேன் என்று அன்று நான் சபதம் ஏற்றேன். இன்று அது நடந்துவிட்டதால், எனது கழுத்தில் கிடக்கும் வைரத் தாலியை வீரமங்கை உடையாளுக்குக் காணிக்கையாக்குகிறேன் என்று கூறிவிட்டு கழுத்தில் கிடந்த வைரத் தாலியைக் கழற்றி காணிக்கையாக்கினாள் வேலுநாச்சியார்''[48] என்ற செய்தி வெறும் புதினப் புனைவுக்காக எழுதப்பட்டதல்ல. இது ஒரு வரலாற்று நிகழ்வாக உள்ளது.

காளையார் கோவிலிலிருந்து சிவகங்கை செல்லும் வழியில் கொல்லங்குடிக்கு அருகில் அரியாக்குரிச்சி உள்ளது. உடையாள் வெட்டப்பட்ட இடத்தில் தற்போது வெட்டுடையாள் காளி அம்மன் என்ற கோவில் இருக்கிறது. இந்தக் கோவிலில் வேலுநாச்சியார் வழங்கிய வைரத் தாலி இன்றும் பாதுகாப்பாக உள்ளது.

''வெள்ளையர் எதிர்ப்பில் வெட்டுப்பட்டுச் செத்தாள் உடையாள். அதனால் 'வெட்டுடையாள்' என்று அழைக்கப்பட்டாள். காலப்போக்கில் 'வெட்டுடையாள்' என்பது 'வெட்டுடையாள் காளி'யாக்கப்பட்டு தங்கள் இன்னல்கள் தீர காசு வெட்டிப்போடும் வழக்கம் தமிழர்களிடம் வந்து சேர்ந்தது''[49] என்பதை வரலாற்றுப் பார்வையில் பார்ப்பது அவசியமாகிறது.

கணவர் இறந்தபிறகும் தாலியைக் கழற்ற வேண்டும் என்ற சடங்கு முறையை உதறிவிட்டுக் கணவரை விட தனக்காகவும், தன் நாட்டுக்காகவும் உயிர்நீத்த உடையாளுக்காகத் தாலியைச் சுமந்திருந்த புரட்சி வாழ்வை வேலுநாச்சியார் வழி அறிய முடிகிறது.

**வேலுநாச்சியார் புதினத்தில் அரசியல் சிந்தனையும் பொதுவுடைமைக் கூறுகளும்**

புராதனப் பொதுவுடைமைச் சமூக அரசியலில் ஆண்களும், பெண்களுமாக மொத்த மனித குலமுமே தங்கள் இனத்தைக் காத்துக் கொள்ள வாழ்க்கைப் போராட்டத்தில் ஒன்றாகப் பங்கெடுத்தனர். அடுத்து வந்த அடிமை உடைமைச் சமூக அரசியல் அமைப்பில் ஆண்களும், பெண்களும், கால்நடைகளும், நிலங்களும் வெற்றிபெற்ற குலத்தலைவனின் உடைமையாகக் கொள்ளப்பட்டன. பின்னர் வந்த நிலப்பிரபுத்துவச் சமுதாய அமைப்பில் பெண்கள் முழுமையுமே வீட்டிற்குள் அடங்குவதை மும்முரமாக நடைமுறைப்படுத்தியது. பெண்களைப் பூட்டி வைத்துப் பெண்ணைச் சுற்றி அவளது நடை, உடை பாவனைகளுக்கு நெறிமுறைகளைக் கற்பித்துச் சிறை வைத்தது. சுயமாகச் சிந்திக்க முடியாதவாறு கல்வியறிவு

புகட்டாமல் பெண்ணைக் கிணற்றுத் தவளையாக்கியது. அதற்குப் பின் வந்த முதலாளித்துவச் சமுதாயம் பெண்களின் கூலியைக் குறைத்தது. உடல் வலிமையற்றவர்கள் பெண்கள் என்று கூறி கூலி நிர்ணயம் செய்தது. சோசலிசச் சமுதாயம் பெண்ணடிமைத் தனம் முழுவதையும் நீக்குவதற்காகப் போராடி வருகிறது. பெண்ணடிமைத் தனத்தையும், ஆணாதிக்கத்தையும் எதிர்த்துப் போராடி ஓரளவு வெற்றிப் பாதையில் பயணித்து வருகிறது. எனினும் சோசலிசம் விரும்பும் இச்சமூக அமைப்பிலும் பெண்களுக்கான சட்டங்கள் வரையறுக்கப்படுவது கவனிக்கத்தக்கது.

“சமுதாயத்தில் அங்கீகரிக்கப்பட்ட குணநலன்களோடு வளர்வதுதான் ஒரு பெண்ணுக்குப் பாதுகாப்பு; இல்லையென்றால் ஆபத்துத்தான் என்ற உணர்வு சமூகத்தில் பரப்பப்பட்டிருக்கிறது. அமைதி, உழைப்பு, பணிவு, நன்னடத்தை எல்லாவற்றிற்கும் மேலாகத் தன் முனைப்பு அற்ற தன்மை உடையவளாகப் பெண் விளங்க வேண்டும் என்று மட்டுமே சமூகம் எதிர்பார்க்கிறது”[50] என்பார் க.பஞ்சாங்கம்.

இதில் மன்னராட்சிக் காலத்திலேயே பெண் விடுதலைக்கும், மண்விடுதலைக்கும் போராடிய வேலுநாச்சியாரின் அரசியல் விழிப்புணர்வுச் சிந்தனை ஜீவபாரதி படைப்பின் வழி நிறுவப்படுகிறது.

வேலுநாச்சியாரின் மகள் வெள்ளச்சி நாச்சியாரை வெள்ளையன் ஒருவன் கடத்திச் சென்றபோது வேலுநாச்சியாரின் வளரியால் வெட்டப்பட்டு அவன் இறந்து படுகிறான். வெள்ளைக்காரனின் தலை சூலாயுதத்தில் விழுந்து இரத்தம் வடிகிறது. இதைக் கேள்விப்பட்ட கைக்கூலி மல்லாரி ராயன் என்பவன் தளபதி ஜோசப் ஸ்மித், தளபதி பாஞ்சோர் உள்ளிட்ட ஆங்கிலேயர்களிடம், “பிரபுக்களே ஒரு பொட்டச்சி நம் துரை ஒருவரைத் துவம்சம் செய்திருக்கிறாள் … தலையை வெட்டிக் கோவில் சூலாயுதத்தில் குத்தி வைத்திருக்கிறாள் – அவள் பெண் அல்ல. கொடிய பேய். நம் துரையை வெட்டியது போல வேலுநாச்சியாரின் தலையை வெட்டி நம் சிவகங்கை அரண்மனையில் தொங்கவிடவேண்டும். இனியும் பொறுத்துக் கொண்டிருந்தால் நம்மை ஆண்மக்கள் தானா என்று சிவகங்கைச் சீமையே கைகொட்டிச் சிரிக்கும் … இதற்கொரு முடிவு கட்டியாக வேண்டும்”[51] என்று சொல்லியிருப்பதை உற்றுநோக்க வைக்கிறார் ஜீவபாரதி.

பெண்ணைப் பொட்டச்சி என்று இழிவுபடுத்திய நிலையும், ஒரு ஆணை எந்தச் சூழ்நிலையிலும் பெண் வெற்றி பெறுதல் கூடாது என்ற ஆணாதிக்கச் சமுதாய அரசியல் நிலை இருந்ததையும் உணர முடிகிறது. இவற்றை

மாற்றியமைத்த பெண்ணியச் சிந்தனையாளராகவும் பொதுவுடைமைச் சிந்தனையாளராகவும் வேலுநாச்சியார் அறியப்படுகிறார். வீரர்களுக்கு முன்பு வேலுநாச்சியார் உரையாற்றும் போது “மனித குலத்தில் இரண்டு பிரிவுகள் தாம் … அவை ஆண் பெண் மட்டுமே. இதிலும் ஆண்கள் – பெண்களை அடக்கியாள நான் அனுமதிப்பதில்லை. ஐந்தறிவு நாய் கூட தங்களுக்குள் சாதி பார்த்துப் பேதம் கொள்வதில்லை. அதனால் மனிதர்கள் சாதியால் பிரிவதும், சண்டைகள் போடுவதும் எனக்கு உகந்ததல்ல”[52] என்று பேசியதாக ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார்.

இதன் வழி ஆண் பெண் பேதம் பொதுவுடைமைச் சிந்தனைக்குத் தடைக்கல் என்பதனை வேலுநாச்சியார் வாயிலாக ஜீவபாரதி அறிவுறுத்துகின்றார்.

அடக்கம் என்பது பெண்மைக்கே உரிமையாக்கப்பட்டுள்ளது. ஆண் எது செய்தாலும் கேள்வி கேட்காமல் அடங்கியிருப்பது பெண்ணுக்கு அழகு என்று கூறப்பட்டது. விட்டுக்கொடுப்பது என்பது பெண்ணுக்கான குணம் என்று வரையறுக்கப்பட்டது. இதிலிருந்து வேலுநாச்சியார் விலகி நின்றதாக ஜீவபாரதி கூறுகின்றார்.

தஞ்சை மன்னன் பிரதாப்சிங் சிவகங்கைக்கு உட்பட்ட அனுமந்தக் குடியைக் கைப்பற்றியபோது எதிர்த்தாக்குதல் நிகழ்த்த மன்னர் முத்துவடுகநாதர் முற்பட்ட வேளையில் தகுந்த ஆலோசனையாக இராமநாதபுரம் மன்னரிடம் கலந்து பேசி அனுமந்தக்குடிக் களத்தைச் சந்திக்கலாம் என்கின்றார் வேலுநாச்சியார். காரணம் கேட்ட தளபதியிடம், “தளபதி அவர்களே, நான் வீரர்களின் மீது நம்பிக்கை இழக்கவில்லை. இது இரண்டு நாட்டின் உரிமை சம்பந்தப்பட்ட பிரச்சினை. இராமநாதபுரத்திலிருந்து சிவகங்கைச் சீமை தனியாகப் பிரிக்கப்பட்ட போது அனுமந்தக்குடி இரண்டு நாட்டிற்கும் சொந்தமானது என்றுதான் முடிவு செய்யப்பட்டது. அதனால்தான் அனுமந்தக்குடியில் நடந்திருப்பது இராமநாதபுரத்துக்கும் தெரிய வேண்டும். அதுவே சரியான அணுகுமுறையாகும். இல்லையெனில் பகை நாட்டோடு நம் பாரம்பரிய நாட்டின் அன்பையும் இழந்துவிட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டாலும் ஏற்படலாம்”[53] என்ற வேலுநாச்சியாரின் ஆலோசனை பெண்ணுக்குப் பேச்சுரிமையைத் தடுத்த அரசியல் அவலத்தை நொறுக்கியுள்ளது. ஆணுக்கு இணையாக மட்டுமல்ல. ஆலோசனை சொல்லும் அற்புதப் பெண்மணியாக வேலுநாச்சியார் திகழ்ந்துள்ளார்.

போர்க்களத்தில் தஞ்சை மன்னரைச் சிவகங்கை மன்னர் படை வெற்றி கொள்கிறது. இதற்காகச் சிவகங்கை அரண்மனை வாசலின் முன் நடைபெற்ற

வெற்றிவிழாக் கூட்டத்தில் மன்னர் முத்துவடுகநாதர் பேசியதோடு தன் மனைவி வேலுநாச்சியாரையும் பேச வைத்தார். இது அரசியல் வாழ்வில் மன்னர் முத்துவடுகநாதர் செய்துகாட்டிய பொதுவுடைமையாகும். “இந்த வெற்றி நம் மண்ணின் வெற்றியோ அல்லது அமைச்சரின் வெற்றியோ அல்ல. இந்த வெற்றியின் புகழ் எந்தத் தனி நபரை விடவும், சிவகங்கைச் சீமையின் அடித்தட்டு மக்களின் வீரத்திற்குக் கிடைத்ததாகும். ஒரு நாட்டில் வாழுகின்ற மக்களின் எழுச்சிதான் அந்த நாட்டை வழிநடத்தும் … வாகை சூடும் … வரலாற்றில் பதிவு செய்யும் … அந்த வகையில் இந்த வெற்றியைச் சிவகங்கைச் சீமை மக்களுக்குக் காணிக்கையாக்குகிறோம் … சிவகங்கைச் சீமை எழுந்தால் எதிரிகள் வீழ்வர்”[54] என்று வேலுநாச்சியார் முழங்கியதாக ஜீவபாரதி குறிப்பிடுவது கருதத்தக்கது. ஆணுக்கிணையான சுதந்திரத்தை முத்துவடுகநாதர் வழங்கியதும் வேலுநாச்சியார் அந்த வெற்றியை மக்கள் சக்தி என்று புகழ்ந்ததும் பொதுவுடைமைக் கொள்கையின் நெறியாக நிமிர்ந்து நிற்கிறது.

பெண்ணடிமைத் தனத்தில் சொத்துரிமை மறுக்கப்பட்டது. ஆணாதிக்கச் சமூகத்தில் பரம்பரைச் சொத்தில் பெண்ணுக்கு உரிமை மறுக்கப்பட்டது.

“பெண் அடிமை என்பதற்கு உள்ள காரணங்கள் பலவற்றில் சொத்துரிமை இல்லாதது என்பதே மிகவும் முக்கியமான காரணம் என்பது நமது அபிப்ராயம். ஆதலால், பெண்கள் தாராளமாகவும், துணிவுடனும் முன்வந்து சொத்துரிமைக் கிளர்ச்சி செய்ய வேண்டியது மிகவும் அவசியமும், அவசரமுமான காரியமாகும்”[55] என்பார் தந்தை பெரியார்.

பெண்களின் போராட்டம் இல்லாமல் பெண்ணுக்குச் சொத்துரிமை கிடைக்காது என்பது பெரியாரின் கூற்றாக அமைகிறது. ஏராளமான போராட்டங்களுக்குப் பின்னே பெண்களுக்கான சொத்துரிமை தற்போது வழங்கப்பட்டு வருகிறது. “பெண்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய மிக முக்கியமான உரிமைகளில் சொத்துரிமையும் ஒன்றாகும். தேஷ்முக் (Deshmukh) என்பவர் பெண்களுக்குச் சொத்துரிமை தரப்படுதல் வேண்டும் என்று தீவிரம் காட்டினார். அதன் விளைவாக இந்துப் பெண்களின் சொத்துரிமைச் சட்டம் என்பது *1937*ல் கொண்டுவரப்பட்டது”[56] என்பர். இதற்கு முன்பு மன்னராட்சிக் காலங்களில் பெண்ணுக்கான சொத்துரிமை மறுக்கப்பட்டதை ஜீவபாரதி, வேலுநாச்சியார் புதினத்தில் குறிப்பிட்டு எழுதியுள்ளார்.

இரண்டாம் மனைவியாக கௌரி நாச்சியாரை முத்துவடுகநாதர் மணந்ததற்குப் பிறகு உங்களிடம் பிள்ளைபெறும் எண்ணம் மட்டும் என்னிடத்தில் இல்லை என்றார் கௌரி நாச்சியார். மன்னர் காரணம் கேட்டபோது, ‘‘என் வயிற்றிலிருந்து உங்கள் வாரிசு வெளிவந்தால், அது இந்தச் சிவகங்கைச் சீமைக்கு வாரிசாகி விடும். அது அக்காள் குழந்தைக்குப் போட்டியாகி விடும் ... அது போன்ற துரோகத்தைச் செய்ய என் மனம் இடம் கொடுக்காது.

கவுரி முட்டாள் தனமாக உளறாதே! வேலுவுக்குப் பெண் குழந்தை தான் இருக்கிறது ... எனக்கு ஓர் ஆண்வாரிசு அவசியம் தேவை ... இல்லையெனில் இந்தச் சிவகங்கைச் சீமைக்கு வாரிசு இல்லாமல் போய்விடும் ...

ஏன் அக்காவுக்கு அடுத்த குழந்தை ஆணாகப் பிறக்காதா?’’[57] என்று மன்னரும், கௌரி நாச்சியாரும் உரையாடியதாக ஜீவபாரதி காட்டுவதிலிருந்து ஆண்வாரிசே அரசாளும் ஆணாதிக்கச் சமூக நிலை இருந்ததை உணரமுடிகிறது. அதை மாற்றி வைத்துப் பெண்ணும் அரசாள முடியும் என்ற இலக்கணம் படைத்தவர் வேலுநாச்சியார்.

இராமநாதபுரம் மன்னரும், வேலுநாச்சியாரின் தந்தையுமான செல்லமுத்து சேதுபதி இறந்த பின் நாட்டிற்கு மன்னராக யார் பொறுப்பேற்பது என்று அமைச்சர் முத்து இருளப்பன் கேட்டபோது வேலுநாச்சியார், என் தந்தைக்கு நான் வாரிசு என்றாலும் பிறந்த நாட்டில் நான் ராணியாக இருப்பதை விட, புகுந்த நாட்டில் மருமகளாக இருப்பதையே நான் பெருமையாகக் கருதுகிறேன் என்று சொல்லி ‘‘என் அத்தை மகன் முத்துராமலிங்க சேதுபதிக்கு முடிசூட்ட ஏற்பாடு செய்யுங்கள் ... அவன் ஆறு வயது நிரம்பாத பாலகன் என்பதை நானறிவேன். அவன் சார்பில் என் அத்தை முத்து திருவாயி நாச்சியார் அரசாளுவார். இதன் மூலம் வாரிசுப் போரும் தடுக்கப்படும். இந்த நாட்டின் வரலாறும் புதுப்பிக்கப்படும் ... முத்துராமலிங்க சேதுபதிக்கு முடிசூட்டும் நாளன்று என் மகளுக்குப் பெயர்சூட்டும் விழாவும் ஏற்பாடு செய்யுங்கள்’’[58] என்று வேலுநாச்சியார் சொல்லியது அன்றைக்கே வாரிசுரிமைக்குப் பெண்ணும் தகுதியானவர் என்பதனை உறுதி செய்து வேலுநாச்சியார் போராடியதை அறிய முடிகிறது. மேலும் பெண் குழந்தையைப் பாராட்டிப் பெயர்சூட்டு விழாவைக் கோலாகலமாக நடத்த நினைத்தது பெண்ணுரிமைக்கான உந்துதல் சக்தியாக அமைந்துள்ளது.

ஜீவபாரதி, வேலுநாச்சியார் புதினத்தில் மட்டுமல்லாமல் பொதுவுடைமைச் சிந்தனைமிக்க பிற படைப்புகளிலும் பெண்களின் போராட்டங்களை விளக்கியுள்ளார். ஜீவாவின் மனைவி பத்மாவதி அம்மையார், அகரம் குளப்பாடு மணியம்மை, செங்கொடி காத்த சிகப்பி, அகுஸ்தினா பூசிக், கிளாரா ஜெட்கின், ஜென்னி மார்க்ஸ், குரூப்ஸ் காயா ஆகியோரின் பொதுவுடைமை வாழ்வியல் போராட்டங்களை பெண்ணியச் சிந்தனையோடு பதிவு செய்துள்ளார்.

**ஜீவாவின் மனைவி பத்மாவதி அம்மையாரும் பொதுவுடைமையும்**

இந்தியாவில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தோன்றி எண்பது ஆண்டுகள் ஆனதைச் சிறப்பிக்கும் வகையில் ஜீவபாரதி தமிழகம் முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்டு கம்யூனிச இயக்கத்தின் மூத்த தோழர்களைச் சந்தித்து ஜனசக்தியில் வாராவாரம் தொடராக எழுதினார். அவற்றைத் தொகுத்து 'வரலாறு பேசுகிறது' என்று நூலாக வெளியிட்டார்.

அதில் கம்யூனிசத் தோழர் மே. முனியாண்டி என்ற மூத்த தோழரிடம் ஜீவபாரதி கலந்துரையாடல் நிகழ்த்திய போது பல அரிய தகவல்களும், பொதுவுடைமைச் சிந்தனை தழைக்க உழைத்திட்ட பெண்களின் தியாகமும் சுட்டப் பெற்றுள்ளன.

கம்யூனிஸ்ட் கட்சிக்காகத் தங்கள் உயிரையே தியாகம் செய்த ஐ.வி.சுப்பையா, மணவாளன், மாரி, தில்லைவனம் போன்றோரின் தன்னலமற்ற இயக்கப் பணிகளை மே. முனியாண்டி கூறியுள்ளமை கவனிக்கத் தக்கது. இதில் ஐ.வி. சுப்பையா மட்டுமே சிறையில் இறந்தவர். மற்றவர்கள் போலீசாரின் துப்பாக்கிக் குண்டுகளுக்கு இரையானவர்கள். மைக்செட் கடை நடத்தியதுடன் இயக்கப் பணிகளில் தீவிரமாகச் செயல்பட்ட மே. முனியாண்டி என்ற கம்யூனிசத் தோழரின் கடைக்கு ஒருநாள் பொதுவுடைமைத் தலைவர் ஜீவாவின் மனைவி பத்மாவதி சென்று வரலாற்றுப் புதுமையை நிகழ்த்தியுள்ளார்.

உங்கள் மனைவி இறந்ததற்குப் பிறகு வேறு ஒரு கல்யாணம் ஏன் செய்யவில்லை. உங்கள் கடையில் வேலைபார்க்கும் வாசு என்பவரின் அக்கா கமலம்மாள் கம்யூனிசத் தோழர் ஐ. சுப்பையாவின் மனைவி; வேலூர் சிறையில் இறந்த அவருடைய மனைவி கணவனை இழந்துள்ளார். நீங்கள் மனைவியை இழந்துள்ளீர்கள். இருவரும் திருமணம் செய்து கொள்ளலாமே என்ற புதுமைச் சிந்தனையை விதைத்தார். ஆனால் முனியாண்டி தந்தையிடம், கூறியபோது பெண் யாரென்று கேட்டுத் தெரிந்துள்ளார். 'ஒரு கைம்பெண்டாட்டி இந்த வீட்டுக்கு

மருமகளா வருவா, அவ முகத்தில தினசரி நான் விழிப்பதா' என்று கூறியதாக முனுசாமி தெரிவித்த தகவலை ஜீவபாரதி நூலில் பகிர்ந்துள்ளார்.

முனியாண்டி மறுமணம் செய்வதில் தந்தையிடம் மறுப்பில்லை. பெண் கைம்பெண்ணாக இருப்பதே தந்தையின் மறுப்புக்கான காரணமாய் அமைந்தது.

"உலக இன்பத்தை நுகர்ந்து அலுத்துப் போயிருக்கும் பழுத்த கிழவனாயினும் தம் மனைவியர் இறந்து பட்டவுடன் மறுமணம் புரிய முயலுகின்றான். அதுவும் தக்க பருவமும், எழிலும் பொருந்திய இளங் கன்னியர்களைத் தன் துணைவியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். ஆனால் ஒரு பெண்மகள் கொழுநன் இறந்து விட்டால் பதினாறு வயதுக் கட்டழகியேயாயினும், உலக இன்பத்தைச் சுவைத்தறியாத வனிதா ரத்னமாயினும் தன் ஆயுள் காலம் முழுவதும் அந்தோ! தன் இயற்கைக் கட்புலனை வலிய அடக்கிக் கொண்டு மனம் நைந்து வருந்தி மடியும்படி நிர்ப்பந்திக்கப்பட்டு வருவது என்னே அநியாயம்"[59] என்பார் தந்தை பெரியார்.

இந்த இழிநிலைதான் மே. முனியாண்டி இல்லத்திலும் நடந்தேறியது. தந்தையின் முடிவை பத்மாவதி அம்மையாரிடம் தெரிவித்தபோது, "உங்களுக்கு அப்பா அம்மா பாசம் மட்டும் தான் இருக்கா? கட்சி மீதும், கட்சிக் குடும்பங்கள் மீதும் இந்தச் சமூகத்தின் மீதும் உங்களுக்குப் பாசமே இல்லையா? இதற்கு மேல் நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியது எதுவும் இல்லை. அடுத்தமுறை நான் மதுரைக்கு வரும்போது உங்கள் திருமணத்தை ரிஜிஸ்டர் ஆபீசில் பதிவு செய்யனும். இது என்னோட உத்தரவு. இது பற்றி தோழர் ஜீவாவிடம் நான் பேசிக் கொள்கிறேன்"[60] என்று கூறியிருக்கிறார். இது பத்மாவதி அம்மையாரின் துணிச்சல் மிக்க பேச்சு மட்டுல்ல. முனியாண்டியையும் கமலம்மாவையும் பல எதிர்ப்புகளையும் தாண்டி இணைத்து வைத்த மந்திரச் சொல்லாக அமைந்தது.

உலகில் மனித வர்க்கத்திற்கு உள்ளேயிருக்கும் அடிமைத் தன்மை ஒழிய வேண்டுமானால், பெண்ணுலக அடிமையாகக் கருதி நடத்தும் அகம்பாவமும், கொடுமையும் அழிய வேண்டும். அது அழிந்த நிலையே சமத்துவம் என்ற கோட்பாட்டை மெய்ப்பித்துக் காட்டியவர் பத்மாவதி அம்மையார் என்று அறியமுடிகிறது.

ஜீவாவின் மனைவி தோழியர் பத்மாவதி அம்மையார் கூறியது போல கணவனை இழந்த கமலம்மாவும், மனைவியை இழந்த மே.முனியாண்டியும்

திருமணம் செய்து கொண்டனர். இது சமூக மாற்றத்திற்கான பெண்ணியப் பொதுவுடைமைச் சிந்தனையாக அமைகிறது.

**அகரம் குளப்பாடு மணியம்மை**

தன் முதல் கணவர் வேலூர் சிறையில் அடைக்கப்பட்ட போது தானும் அதே சிறையில் பல இன்னல்களை அனுபவித்தார் கமலம்மா. அவரை அந்த இன்னலிலிருந்து காப்பாற்றியவர் மணியம்மை என்ற நாகப்பட்டினத்துக்கருகிலுள்ள அகரம் குளப்பாடு கிராமத்தைச் சேர்ந்த தோழி ஆவார்.

தோழியர் கமலம்மாவை சிறை அதிகாரிகள் கொடுமையான முறையில் தாக்கி, தண்ணீர்த் தொட்டியில் மூழ்கடித்தனர். அப்போது சிறையில் தோழியர் மணியம்மை தோழியர் கமலம்மாவைக் காப்பாற்றி அவர் இருந்த வார்டுக்கு அருகில் கொண்டு சென்று பாதுகாத்துள்ளார். தோழியர் மணியம்மை கவனிக்கவில்லையென்றால் சிறையிலேயே தோழியர் கமலம்மாவின் உயிர் பிரிந்திருக்கும் என்கின்றார் ஜீவபாரதி. கமலம்மாவைக் காப்பாற்றிய தோழி மணியம்மை ஒன்பது வயதிலேயே நாகப்பட்டினம் வழக்குரைஞர் குஞ்சிதபாத அய்யர் என்பவருக்கு இரண்டாம் தாரமாகத் திருமணம் செய்யப்பட்டுள்ளார் என்ற வரலாற்றைச் சொல்கின்றார் ஜீவபாரதி.

‘‘திருமணம் பெண்களுக்குச் சிறுவயதிலேயே, பருவம் அடைவதற்கு முன்னரே செய்து வைக்கப்பட வேண்டும் என்று சமயச் சாத்திரங்கள் கூறும். பராசரஸ்மிருதி பிராயச்சித்த காண்டம் நான்காவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டவாறு பெண்கள் நான்கு வகையாக வயதின் அடிப்படையில் பிரிக்கப்பட்டனர். *8* வயதுடையவள் கௌரி, *9* வயதுடையவள் ரோகினி, *10* வயதுடையவள் கன்னிகை, *10* வயதிற்கு மேற்பட்டவள் ரஜஸ்வலை என்பவை அப்பிரிவுகள். கவுரி, ரோகினி, கன்னிகை ஆகிய முப்பிரிவினர்தான் திருமணம் செய்விப்பதற்குத் தகுந்தவர்கள். தகாதவளான ரஜஸ்வலையைத் திருமணம் செய்விப்பவர்கள் நரகத்தை அடைவர். கவுரியைத் திருமணம் செய்பவன் சுவர்க்கலோகத்தையும், ரோகினியைத் தானம் செய்பவன் வைகுந்தத்தையும், கன்னிகையைத் தானம் செய்பவர்கள் பிரமலோகத்தையும் அடைகின்றனர் என்றும் அச்சுறுத்தப்பட்டுள்ளது. அதனாலேயே குழந்தை மணம் நடைபெற்று குழந்தை விதவைகளும் உண்டாயினர்’’[61] என்பார் சு.அறிவுக்கரசு.

இந்த இழிநிலையே தோழி மணியம்மை வாழ்விலும் ஏற்பட்டுள்ளதைத் தெள்ளிதின் பதிவு செய்கிறார் ஜீவபாரதி. தோழியர் மணியம்மைக்கு 21 வயது நடந்த போது அவருடைய கணவர் இறந்ததனால் தாய்வீட்டிற்கு வந்துள்ளார்.

“ரவிக்கை போடக் கூடாது. பூ வைக்கக் கூடாது. நல்ல காரியங்களில் கலந்து கொள்ளக் கூடாது என்று விதவைகள் மீது அன்று இருந்த அனைத்துத் தடைகளும் தோழியர் மணியம்மை மீதும் திணிக்கப்பட்டது. இதை விரும்பாத தோழியர் மணியம்மை வீட்டை விட்டு வெளியேறி, நான்கு முழ வேட்டி, அரைக்கை ஜிப்பா, மேல் துண்டு, முரட்டுச் செருப்பு என ஆடைகளில் மாற்றம் செய்தார். தலைமுடியை கிராப்பாக வெட்டிச் சீவி விட்டுக் கொண்டார். சிலம்பம் விளையாடவும் கற்றுக் கொண்டார். தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் பகுதியிலேயே வாழத் தொடங்கினார்”[62] என்று கூறும் ஜீவபாரதியின் கட்டுரைப் பகுதியிலிருந்து மணியம்மையின் பொதுவுடைமைச் சிந்தனையையும், தியாகத்தையும், துணிச்சலையும் அறிய முடிகிறது. சமூகப் போலிக் கொள்கைகளைத் தகர்ப்பதுடன் சோசலிசக் கொள்கைக்கு வித்திடும் விதத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்துள்ளார். 1949இல் காங்கிரஸ் அரசு கைது செய்து பாதுகாப்புக் கைதியாக வேலூர் சிறையில் மணியம்மையை அடைத்த போதுதான் அச்சிறையில் கொடுமைகளுக்கு ஆட்பட்ட கமலம்மாவைக் காப்பாற்றியுள்ளார் என்ற ஜீவபாரதியின் பதிவு முக்கியத்துவம் வாய்ந்தது.

**செங்கொடி காத்த சிகப்பி**

சிவகங்கை மாவட்டக் கம்யூனிஸ்ட் தோழர் எஸ்.குணசேகரன் மற்றும் மானாமதுரை சட்டமன்ற மேனாள் உறுப்பினர் தோழர் தங்கமணி போன்றவர்களுடன் ஜீவபாரதி கீழப்பசலைத் தோழர் ஆதிமூலம் அவர்களையும், அவர்தம் துணைவியார் சிகப்பி அவர்களையும் சந்தித்து நேர்காணல் நிகழ்த்தும் போது சிகப்பிக்கும் பொதுவுடைமைச் சின்னமான செங்கொடிக்கும் உள்ள போராட்டத் தொடர்பினைத் தெளிவாக விளக்கியுள்ளார். செங்கொடி காத்த சிகப்பி என்று உங்கள் மனைவிக்குப் பெயர் வரக் காரணம் என்ன? என்று ஜீவபாரதி வினவிய போது தோழர் ஆதிமூலம் பல தகவல்களைக் கூறியுள்ளார்.

“கீழப்பசலையில் இயங்கிய விவசாய சங்கம், கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்பாடுகள் பக்கத்துக் கிராமங்களையும் பாதித்தது. இந்த வளர்ச்சியைக் கண்டு இனாம்தாரிகளும் காங்கிரஸ்காரர்களும் திகைத்தனர். 1946 செப்டம்பர் 7 அன்று காங்கிரஸ்காரர்கள் அடியாட்களுடன் கீழப்பசலையில் புகுந்தனர். செங்கொடி செருப்படி என்று வீதியில் கோசம் போட்டனர். மாவட்டக் கட்சித் தலைமை ஆண்கள் தலையிடாது ஒதுங்கியிருக்க வேண்டும் என்று சொல்லியதால் கம்யூனிஸ்டுகளும் விவசாய சங்கத்தினரும் இதைக் கண்டு கொள்ளாமல் ஒதுங்கி இருந்தோம். வெளி ஆட்கள் ஐந்நூறு பேருடன் உள்ளூர் இனாம்தாரிகளின் அடியாட்களும் இணைந்து

கீழப்பசலையில் பறந்து கொண்டிருந்த செங்கொடியை இறக்கித் தீவைத்துக் கொளுத்த முயன்றனர். இதை எதிர்த்து சிகப்பி தலைமையில் தோழர் எஸ்.எஸ். ராமன் மனைவி பெரியநாச்சி, வா.தொ.உடையம்மை, லெ. பேச்சி முத்தம்மாள், வெ.ராக்கம்மாள் ஆகியோர் சிறுவர்களைத் திரட்டிக் கொண்டு களம் இறங்கினர். பெண்களின் ஆவேசத்தாக்குதலை எதிர் கொள்ள முடியாமல் பின்வாங்கினர்''[63] என்று செங்கொடியைக் காத்த வரலாற்றை ஆதி மூலம் ஜீவபாரதியிடம் பகிர்ந்து கொண்டதைக் கட்டுரையில் வெளிப்படுத்தியுள்ளார். அது முதல் தோழர் ஆதிமூலம் மனைவி 'செங்கொடி காத்த சிகப்பி' என்று அழைக்கப்பட்டுள்ளார்.

சிகப்பியின் பொதுவாழ்வு பற்றிய ஜீவபாரதியின் கேள்விக்குப் பதில் அளித்த அம்மையாரின் பதில்கள் வியக்க வைப்பதாய் உள்ளது.

''கட்சி தடை செய்யப்பட்ட போது நான் கம்யூனிஸ்ட் என்று குற்றம் சுமத்தி என்னைக் கைது செய்து மதுரை சிறைக்குக் கொண்டு சென்றனர். மதுரை சிறையில் வைத்து என்னை விசாரணை செய்த சிறை அதிகாரி, 'நீ கம்யூனிஸ்ட் இல்லை என்று சொல்லி விடு. இப்போதே விடுதலை செய்து விடுகிறேன். இல்லையெனில் நீ ஆறுமாதம் சிறையில் இருக்க வேண்டியிருக்கும். நீ என்ன சொல்கிறாய் என்று கேட்டார். அதற்கு அய்யா 'ஆறு மாதம் இல்லை ஆறு வருஷம் எனக்குத் தண்டனை கொடுத்தாலும் என்னால் பொய் சொல்ல முடியாது. இப்ப இல்ல நான் எப்பவும் கம்யூனிஸ்ட் தான் என்று தைரியமாக நான் பதில் சொன்னேன். இந்தப் பதிலுக்காக என்னை அடித்தார்கள். அதன்பின் என்னைத் திருச்சி சிறைக்குக் கொண்டு சென்று அங்கும் அடித்தார்கள். அதன் அடையாளம் தான் எனக்கு நெற்றியில் இருக்கும் தழும்பு''[64] என்று செங்கொடி காத்த சிகப்பி சொல்லியிருப்பது வியப்பின் உச்சமாக உள்ளது. எப்போதும் நான் கம்யூனிஸ்ட்தான் என்பது பெண்ணுக்கு இருக்க வேண்டிய மனத்திடப்பத்தையும், உறுதியையும் விளக்குவதாய் உள்ளது.

**அகுஸ்தினா பூசிக்**

கொள்கைப் பிடிப்புக்காகவும், தேர்ந்த ஞானத்திற்காகவும் ஜூலியஸ் பூசிக் என்பவரை அகுஸ்தினா பூசிக் திருமணம் செய்தார். ஹிட்லரின் கொடுங்கோன்மை ஆட்சியை எதிர்த்துப் போரிட்டதால் ஒரே சிறையில் மேல் தளத்தில் கணவனையும், கீழ்த்தளத்தில் மனைவியையும் அடைத்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவிடாமல் கொடுமை செய்தனர். சக கைதி ஒருத்தி அடிதாங்காமல் உன்

கணவன் இறந்து போனான் என்று பொய்த்தகவலைச் சொன்னதும் கணவனைப் பார்க்க விரைந்து செல்கிறார் அகுஸ்தினா. அடித்துக் கொண்டு வந்து அவள் அறையிலேயே காவலர்கள் மீண்டும் விடுகின்றனர். உயிரோடு இருப்பதை அறிய, மனைவி விரும்பிப் பாடும் பாடலைக் கணவர் பாடுகிறார். சில நாட்களுக்குப் பின் கணவன் அறைக்கு அவளை அழைத்துச் செல்கின்றனர். உன் கணவனுக்குப் புத்தி சொல். இல்லையென்றால் உன்னையும் சேர்த்துச் சுட்டு விடுவோம் என்றனர். இவற்றையெல்லாம் உருக்கமாகப் பதிவு செய்யும் ஜீவபாரதி, ‘‘மிஸ்டர் இப்படிப் பேசி என்னைப் பயமுறுத்தி விடலாம் என்று நினைக்காதீர். இதுதான் என் கடைசி விருப்பம். பெரிய ஆசை. இவரைச் சுட்டுக் கொன்றால் என்னையும் சேர்த்துச் சுட்டுக் கொன்று விடுங்கள் என்றார் ஆவேசமாக. ஆத்திரம் கொண்ட அதிகாரி அவள் தலைமுடியைப் பிடித்து இழுத்துச் சென்றான். அதைக் கண்டு ஏதும் செய்யமுடியாத நிலையில் கணவன் நின்றான்’’[65] என்று ஜீவபாரதி எழுதியுள்ள குறிப்பு அகுஸ்தினா பூசிக்கின் திடமான திண்ணிய நெஞ்சத்தைப் படம் பிடித்துக் காட்டுவதாய் உள்ளது. மேலும் அவள் டைபாய்ட் காய்ச்சலில் துடித்தபோது *1943* மே *19*இல் போலந்து சிறைக்கு அவளை மாற்றினர். *1943* ஆகஸ்டு *25* கணவனுக்கு மரண தண்டனை விதித்து *1943* செப்–*8*ஆம் நாள் தூக்கிலிட்டனர்.

நாஜிப் படைகளை சோவியத் படை விரட்டிய பின் ஜெர்மன் தலைநகரத்தில் செங்கொடி பறந்தது. கோடிக்கணக்கான மக்களைக் கொன்று குவித்த ஹிட்லர் அரண்மனையின் கீழ்த்தளத்தில் தற்கொலை செய்து கொண்டான்.

பின்னர் அகுஸ்தினா பூசிக் நிலைபற்றிச் சொல்லும் ஜீவபாரதி ‘‘ஜெர்மனைக் கைப்பற்றிய சோவியத் யூனியன் செஞ்சேனை நாஜிகள் சிறை வைத்திருந்த அனைவரையும் விடுதலை செய்தது. அப்போது அவளும் விடுதலை செய்யப்பட்டாள். வெளிவந்த அவள் கணவன் சிறையில் எழுதிய குறிப்புகளைத் தேடித் தேடிச் சேகரித்தாள். சேகரித்தவற்றை நூலாக்கினாள். அந்த நூல் தான் புரட்சித் தம்பதியின் சிறை வாழ்க்கையை உலகுக்குச் சொல்லியது’’[66] என்று முடிக்கின்றார். கணவனோடு சேர்ந்து என்னையும் சுட்டு விடுங்கள் என்று சொன்ன துணிவும், கணவன் இறந்த பிறகும் அவருடைய குறிப்புகளைத் தொகுத்து நூலாக்கிய திறனும் பெண்ணியத்திற்கு வலுச் சேர்ப்பதோடு, பொதுவுடைமைக் கொள்கைக்குச் சான்றாக அமைகிறது.

**கிளாரா ஜெட்கின்**

கிளாரா ஜெட்கினும், அவருடைய கணவர் ஓசிப் ஜெட்கினும் பொதுவாழ்க்கையில் புரட்சிகரமாகச் செயல்பட்டவர்கள். குடும்பம் நடத்த வருமானம் இல்லாத போதும் அடித்தட்டு மக்களின் அவலநிலையை அகற்ற உழைத்தவர்கள். குடியிருந்த வீட்டிற்கு வாடகை கூடத் தரமுடியாமல் விரட்டியடிக்கப்பட்டனர். ஜெர்மன் மண்ணில் பிறந்த காரல் மார்க்ஸ் உலகத் தொழிலாளர்களுக்காக வறுமையை எதிர் கொண்டது போன்றே அதே ஜெர்மனியில் பிறந்த கிளாராவும் எதிர்கொண்டார் என்று கிளாராவின் தன்னலமற்ற தியாக வாழ்வை அடையாளப் படுத்துகின்றார் ஜீவபாரதி.

“பி. ஏ பட்டம் பெற்று ஆசிரியராகப் பணியாற்றிய அவள் மெல்ல மெல்ல புரட்சிகர இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டு பாடுபட்டாள். ரஷ்யாவில் புரட்சிகரப் பணிகளில் ஈடுபட்டு ஜெர்மனியில் தலைமறைவாக வாழ்ந்து கொண்டிருந்த புரட்சிகர இளைஞனை அவள் திருமணம் செய்தாள். ஆம். தந்தை ஜெர்மானியர், தாய் பிரெஞ்சுக்காரி, கணவன் ரஷ்யாக்காரன். அவள் லெனினைச் சந்திக்கிறாள். குரூப்ஸ் காயாவோடு பழகியிருக்கிறாள். மார்க்ஸ் மகள் லெலிரா லபார்க்யூவுடனும் மார்க்ஸ் மருமகன் பவ்லுடனும் தோழமையும் தொடர்பும் கொண்டிருந்தாள். அவள்தான் *1910* கோபன் நகரில் நடந்த இரண்டாவது சர்வதேசப் பெண்கள் சோசலிஸ்ட் மாநாட்டில் மார்ச் 8ஆம் தேதியைச் சர்வதேச மாதர் தினமாக அறிவிக்கும்படி தீர்மானம் கொண்டுவந்த கிளாரா ஜெட்கின்”[67] என்கின்றார்.

ஜீவபாரதியின் இந்தப் பதிவு கிளாரா ஜெட்கினின் தன்னலமற்ற பொதுவுடைமை வாழ்வை தலைநிமிரக் காட்டுகிறது. தாய் பிரெஞ்சு – தந்தை ஜெர்மன் – கணவன் ரஷ்யா என்பதே சமதர்மக் கோட்பாட்டை நன்கு புலப்படுத்தி நிற்கிறது. வறுமையிலும் பொதுவுடைமைத் தலைவர்களுடன் கொண்ட தொடர்பு அவருடைய மார்க்சிஸ்ட் சிந்தனைக்குக் கட்டியம் கூறுவதாக அமைந்துள்ளது.

**ஜென்னி மார்க்ஸ்**

உலகப் பொருளாதார மேதை என்று அழைக்கப்படுகின்ற காரல் மார்க்சின் துணைவியே ஜென்னி மார்க்ஸ். லுட்விக் வான்வெஸ்ட் ஃபாலனின் மகள் தான் ஜென்னி. மார்க்சை விட ஜென்னி அழகானவர் என்று ஜீவபாரதி குறிப்பிடுவதுடன் “மார்க்ஸ் குடும்பத்தை விடப் பொருளாதாரத்திலும், அந்தஸ்திலும் ஜென்னி குடும்பம் உயர்ந்தது. இருப்பினும் சின்னஞ்சிறு வயதிலேயே மார்க்ஸ் மீது ஜென்னி அன்பைச்

செலுத்தினாள். அந்த அன்பே வளர்ந்து காதலாக மலர்ந்தது. வசதி படைத்த குடும்ப இளைஞர்கள் சிலர் ஜென்னியின் அழகில் மயங்கி அவருடைய காதலுக்காகக் காத்திருந்தனர். அவற்றைப் புறந்தள்ளி மார்க்சின் அறிவுக்கு அடைக்கலமானவர் ஜென்னி''[68] என்கின்றார்.

மேலும் ஜென்னி பற்றிய பொதுவுடைமை வாழ்வையும், மார்க்ஸ் மீது கொண்ட தீராத காதலையும் வெள்ளிடை மலையாகக் காட்டுகின்றார். போதிய நிதி வசதிகளும், சமுதாயத்தில் ஓர் அந்தஸ்தும் இல்லாத ஒரு மாணவனுடன் தனது வாழ்க்கையைத் தயக்கமின்றித் துறந்தார். மார்க்சுடைய இயல்பின் அசாதாரணமான ஆழத்தை முதன் முதலில் உணர்ந்தவர் ஜென்னியே என்று சொல்கின்றார். மார்க்சின் மனைவியாக ஜென்னி இருந்ததுடன் நண்பராகவும், ஆலோசகராகவும், முதல் விமர்சகராகவும் திகழ்ந்தார் என்று சொல்லி இதற்குச் சான்றாக 1844 ஜூன் மாதத்தில் மார்க்சிற்கு ஜென்னி எழுதிய கடிதத்தைப் பொருத்தமாக ஜீவபாரதி காட்டுகின்றார்.

''மிகவும் அதிகமான வெறுப்புடனும், எரிச்சலுடனும் எழுதாதீர்கள். உங்களுடைய மற்ற கட்டுரைகள் எவ்வளவு அதிகமான விளைவை ஏற்படுத்தின என்பது உங்களுக்கே தெரியும். எதார்த்தமான முறையில் நயத்துடனும், நகைச்சுவையுடனும், இலேசாகவும் எழுதுங்கள்''[69] என்று ஜென்னி எழுதிய கடிதத்தை ஜீவபாரதி குறிப்பிடுவது ஜென்னியின் அறிவுத் திறனையும் ஆழ்ந்த நிதானத்தையும், கொள்கைப் பற்றையும் விளக்குவதாக அமைகிறது.

மார்க்ஸ், ஜென்னி இல்லற வாழ்க்கை, துயர்கள் நிறைந்ததாகவே இருந்தது. அன்றாடச் செலவுக்குக் கூட அவர்கள் விழி பிதுங்கினர். பல நேரங்களில் குடும்பச் சூழலை மார்க்சின் கவனத்திற்குக் கொண்டு செல்லாமல் தானே அவற்றை நேர்கொண்டு சந்தித்தார் என்கின்றார் ஜீவபாரதி.

ஜென்னி பட்ட துயரங்களையும், தியாகங்களையும் அவர் எழுதிய சில கடிதங்களின் மூலம் ஜீவபாரதி நிறுவுகின்றார்.

''என் மார்பில் ஏற்பட்ட கட்டியால் என் குழந்தைக்கு என்னால் பால் கூடக் கொடுக்க முடியவில்லை. இதற்கு ஒரு தாதிப் பெண்ணை வைத்துக் கொள்ளவும் எங்களுக்குப் பொருளாதார வசதியில்லை. வேறு வழியின்றி என் குழந்தைக்கு நானே வலியைப் பொறுத்துக் கொண்டு பால் கொடுத்தேன். பாலையும், என் மார்புக் கட்டியில் இருந்து வந்த சீழையும் சேர்த்துக் குடித்தது. ஒருநாள் அந்தக் குழந்தை

செத்தும் போனது''[70] என்கின்ற ஜென்னி எழுதிய கடித வரிகள் சிலவற்றைக் காட்டி ஜென்னியின் தியாக வாழ்வை அடையாளப்படுத்துகின்றார் ஜீவபாரதி.

**குரூப்ஸ் காயா**

லெனினுக்குப் பின் ரஷ்யாவின் தலைமைப் பொறுப்பேற்ற எவருடைய மனைவியும் வியந்து பேசப்படவில்லை. லெனினுடைய மனைவி குரூப்ஸ்காயா மட்டும் லெனினுக்கு இணையாக வரலாற்றில் பேசப்படுகிறார். அதனால் தான் குரூப்ஸ் காயாவை 'புரட்சித்தாய்' என்று ஜீவபாரதி வர்ணிக்கின்றார்.

''லெனினைச் சந்திப்பதற்கு முன்பே புரட்சிகரக் குழுக்களில் தன்னை இணைத்துக் கொண்டவர் குரூப்ஸ்காயா. லெனின் அறிமுகத்திற்குப் பின் அவருடைய பணி தீவிரப்படுத்தப்பட்டது. அதுவே குரூப்ஸ்காயாவை லெனின் மனைவியாக்கியது. லெனினுக்கு மனைவியானபின் லெனினைப் போன்றே தலைமறைவு, சிறை, நாடு கடத்தல் என வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டவர் குரூப்ஸ்காயா. இத்தகைய சிறப்பு ரஷ்யாவின் மற்ற தலைவர்களின் மனைவிகளுக்கு வாய்க்கவில்லை''[71] என்கின்றார். இந்தச் செய்தி குரூப்ஸ்காயாவின் போராட்டக் குணத்தையும், பொதுவுடைமை வாழ்வையும் முன்னிறுத்திச் சொல்வதாக அமைகிறது.

போராட்டக் காலங்களில் காவலர்களிடமிருந்து தப்பிக்கப் பல்வேறு வேடங்களைத் தரித்துக் கொண்டு பல நாடுகளுக்கும் சென்று பல வேதனைகளையும், சோதனைகளையும் சந்தித்தவர் லெனின் என்றால் லெனினைச் சந்தித்து இயக்கப் பணிகளைக் கலந்துரையாடப் பல இடங்களுக்கும் சென்று பல இன்னல்களைச் சந்தித்தவர் குரூப்ஸ்காயா. மேலும் லெனினைப் போலவே சிறைவாழ்க்கையையும் சந்தித்தவர். பல சிறைகளுக்குப் பின்னால் ஷுஷென்ஸ் கொயேவில் இருக்கும் சிறையில் லெனின் வாழ்ந்தார். உபா மாகாணத்தில் இருக்கும் சிறைக்கு குரூப்ஸ் காயாவை அனுப்ப ஆளும் வர்க்கம் முடிவு செய்தது. அப்போது சிரமப்பட்டு அனுமதி பெற்று லெனின் வாழ்ந்த போதே லெனின் – குரூப்ஸ் காயா திருமணம் நடந்துள்ளது என்கின்றார் ஜீவபாரதி.

விடுதலை பெற்ற பின்னர் இருவரும் சந்தித்துக் கொள்வது கூட மாறுவேடத்தில் தான் என்ற செய்தி லெனினுக்கு இணையான போராட்ட வாழ்வை குரூப்ஸ்காயாவும் சந்தித்தார் என்பதற்குச் சான்றாக நிற்கிறது. மந்த்ரா செக் புனைபெயரில் வாழ்ந்த லெனினைச் சந்திக்க அவர்பட்ட இன்னல் கொஞ்சமல்ல.

“பிரேக் நகருக்குச் சென்ற குரூப்ஸ்காயா, அழைத்துச் செல்ல எவரும் வராததால், லெனினைத் தேடித் தன்னந்தனி மனிதராகச் சென்றார். கிடைத்த முகவரியில் லெனின் புனைப்பெயரைச் சொல்லி குரூப்ஸ்காயா விசாரித்தபோது, மந்த்ரா செக் நான் தான் என்றான் ஒரு தொழிலாளி. அதன் பின் என் வழியாகத் தான் உங்கள் கணவர் உங்களுக்குச் செய்திகளை அனுப்பி வந்தார். அவர் பெயர் ஹெர் ரிட்டி மேர். இப்போது அவர் மியூனிக் நகரில் இருக்கிறார் என்று சொல்லிவிட்டு குரூப்ஸ்காயாவை அந்தத் தொழிலாளி மியூனிக் நகருக்கு அழைத்துச் சென்றான். மியூனிக் நகரில் ஒரு வீட்டிற்குள் டீக்கடை இருந்தது. அந்தக் கடை நிர்வாகியிடம் ‘ஹெர் ரிட்டி மேர் இருக்கிறாரா? என்றார் குரூப்ஸ்காயா. நான் தான் ரிட்டி மேர் என்றான் நிர்வாகி. தன்னுடைய கணவரைப் பற்றி அந்த நிர்வாகியிடம் குரூப்ஸ்காயா விசாரித்துக் கொண்டிருந்த போது, நீங்கள் ஹெர் மேருடைய மனைவியாக இருக்க வேண்டும். அவர்தான் தன் மனைவி சைபீரியாவிலிருந்து வருவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார் என்று சொல்லிவிட்டு ஹெர்மேர் என்ற புனைபெயரில் வாழும் லெனின் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றாள் நிர்வாகியின் மனைவி. மந்த்ரா செக் என்ற புனைபெயரில் வாழ்வதாகத் தேடி வந்த குரூப்ஸ்காயாவிற்கு ‘ஹெர் ரிட்டி மேர்’ என்ற புனைபெயரில் லெனின் வாழ்வதாகச் சொல்லப்பட்டது. அந்தப் பெயரைத் தேடி குரூப்ஸ் காயா அலைந்த போது, ‘ஹெர் மேர்’ என்ற புனைபெயரில் லெனின் வாழ்வதாகக் கூறப்பட்டது. இறுதியில் ஹெர்மேர்என்ற புனைபெயரில் வாழ்ந்து கொண்டிருந்த லெனினை குரூப்ஸ் காயா கண்டுபிடித்து விட்டார். இதுபோன்று குரூப்ஸ்காயா வாழ்வில் எத்தனை எத்தனை சோதனைகள், அத்தனை சோதனைகளையும் லெனினுக்காகவும், ரஷ்யத் தொழிலாளர் வர்க்கத்திற்காகவும் எதிர் கொண்டு வாழ்ந்து சிறந்தவர் குரூப்ஸ்காயா”[72] என்று எழுதுகின்றார் ஜீவபாரதி.

லெனினுக்கு இணையான துணிச்சலும், போராட்டக் குணமும், தலைமறைவு வாழ்க்கையும் குரூப்ஸ்காயாவின் பொதுவுடைமை வாழ்வைக் கண்முன் நிறுத்துகிறது.

**மறக்கப்பட்ட மங்கையர்களும் பொதுவுடைமைச் சிந்தனையும்**

ஓம் சக்தி மாத இதழில் மாதந்தோறும் ‘மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள்’ என்று எழுதிய கட்டுரைத் தொடரை நூலாக ஆக்கி வழங்கியுள்ளார் ஜீவபாரதி.

“பெண்களை மதிக்காத சமூகமும், பெண் சாதனையாளர்களை நினைத்துப் பார்க்காத தேசமும் வெற்றி காண இயலாது. அதனால் தான் இந்தக் கட்டுரைகளில்

பெண் சாதனையாளர்களைப் பற்றி மட்டும் கவிஞர்.கே. ஜீவபாரதி பதிவு செய்திருக்கிறார்''[73] என்பார் எஸ்.வைரவன்.

மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள் என்று ஜீவபாரதி எழுதியிருப்பது மறக்கப்பட்டவர்கள் மட்டுமல்ல. வரலாற்றில் மறைக்கப்பட்டவர்களாகவும் உள்ளனர். அவ்வகையில் வெள்ளித் திருப்பூர் லெட்சுமி அம்மாள், கடலூர் அஞ்சலையம்மாள், வீரப்பெண்மணி கல்பனா தத், டாக்டர் முத்துலெட்சுமி, காமா அம்மையார், அருணா ஆஸப் அலி ஆகியோரின் வரலாற்றைப் பொதுவுடைமைச் சிந்தனையோடு பதிவு செய்துள்ளார்.

## வெள்ளித் திருப்பூர் லெட்சுமி அம்மாள்

ஈரோடு மாவட்டம் பவானி அருகில் வெள்ளித் திருப்பூர் என்ற கிராமத்தில் கணவனை இழந்த லெட்சுமி அம்மாள் மூன்று குழந்தைகளுடன் எதிர்நீச்சல் போட்டு இச் சமூகச் சழக்குகளை மீறி வாழ்ந்துள்ளார். தேச பக்தி கொண்டு பல சிரமங்களை மீறி காந்தியைச் சந்தித்துள்ளார். கதர் நிதிக்காக நீங்கள் எவ்வளவு பணம் தர முடியும் என்று கேட்டபோது பதினைந்து ரூபாய் கொடுத்தார். கதர்பக்தி இவ்வளவு கொண்ட தாங்கள் இவ்வளவு தான் பணம் தர முடியுமா? என்று கேட்ட போது இதற்கும் மேல் என்னிடத்தில் வழியில்லை என்றார் லட்சுமி அம்மாள். பேருந்திற்குத் தான் பணம் வைத்துள்ளேன் என்றார். ''நான் உங்களிடம் பணம் கேட்கவில்லை. உங்கள் மூன்று மகன்களில் ஒருவரைத் தேசப் பணிக்காக என்னிடம் அர்ப்பணிக்க வேண்டுகிறேன் என்றார் மகாத்மா. சிறிதும் தயங்காமல் என் மூத்த மகனைத் தங்கள் விருப்பப்படி தங்களுக்குத் தத்து செய்கிறேன் பாபுஜி''[74] என்று காந்தியும், லட்சுமி அம்மாளும் உரையாடியதை ஜீவபாரதி வெளிக் கொணர்ந்துள்ளார்.

கணவன் இல்லாத நிலையில் மூத்த மகனின் வருமானமே குடும்பத்தின் அச்சாணி என்பதையும் பொருட்படுத்தாமல் தன் மூத்த மகனைக் காந்தியிடம் ஒப்படைத்தார் என்பது பெண்ணியப் புரட்சியாக அமைகிறது.

## கடலூர் அஞ்சலையம்மாள்

சிப்பாய்க் கலகத்தை ஒடுக்குவதற்காகப் பல பேரைச் சுட்டுக் கொன்ற நீலனை இந்திய வீரன் ஒருவன் சுட்டுக் கொன்றான். அதற்காக ஆங்கிலேயர் சென்னையில் நீலன் சிலையை வைத்தனர். இதை அகற்றக் கோரிப் பலரும் போராட்டம் நடத்தினர். இதில் கடலூரிலிருந்து ஒரு குடும்பமே கலந்து கொண்டது என்கின்றார் ஜீவபாரதி. முருகப்பா என்பவரும், அவர் மனைவி அஞ்சலையம்மாளும் 9 வயது மகளான

அம்மாக் கண்ணுவும் கலந்து கொண்டனர். மூவரையுமே சிறையில் அடைத்தனர். 9 வயதே ஆன அம்மாக் கண்ணுவைச் சிறுமியர்கள் சிறையில் அடைத்தனர்.

"உப்புச் சத்தியாகிரகப் போராட்டத்தின் போது ஒரு கையில் கைக் குழந்தையுடனும், மறு கையில் கைராட்டினக் கொடியுடனும் கலந்து கொண்டார் அஞ்சலையம்மாள். இந்தப் போராட்டத்தின் போது காவல் துறையினர் கண்மூடித்தனமாக அஞ்சலையம்மாளைக் குறி வைத்துத் தாக்கினர். அந்த நிலையிலும் தமது குழந்தையைக் கைவிட்டாரே தவிர பற்றிய கைராட்டினக் கொடியை அஞ்சலையம்மாள் கைவிடவில்லை"[75] என்று அஞ்சலையம்மாளின் மனத்துணிவை ஜீவபாரதி எழுதியுள்ளார். விடுதலை பெற்ற அம்மாக் கண்ணு தன் தந்தையிருந்த சிறைக்குச் சென்று பார்த்தபோது தந்தையுடன் இருந்த ஜமதக்னி என்பவர் மீது நட்பு ஏற்பட்டுக் காதலாக மாறுகிறது.

சாதி, மதம் அழிவதற்குக் காதல் ஒரு காரணி என்ற பொதுவுடைமைக் கோட்பாடும் இங்கே வலுவாக நிற்கிறது. தேசம் விடுதலை பெற்ற பின்னரே கொள்கையோடு நின்று திருமணம் செய்து கொண்டனர். வெறும் 3 ரூபாய்ச் செலவிலே திருமணம் செய்து கொண்டதாக எழுதியுள்ளார்.

"அம்மாக்கண்ணு என்ற லீலாவதியின் கழுத்தில் தாலிக்குப் பதிலாகப் பொதுவுடைமை இயக்கத்தின் சின்னமான அரிவாள் சுத்தியல் பொறித்த வட்ட வடிவமான தங்கத் தகட்டினைத் தாலியாகக் கட்டினார் ஜமதக்னி"[76] என்று எழுதியுள்ளார்.

முருகப்பா அஞ்சலையம்மாளின் பேத்தியான லீலாவதி–ஜமதக்னி மகளை மணம் செய்து கொண்ட பேராசிரியர்.மு. நாகநாதன் என்பவர் ஜமதக்னி தமிழாக்கம் செய்த காரல் மார்க்சின் மூலதனம் என்ற நூலைத் தொகுத்து வெளியிட்டார் என்ற வரலாற்றுச் செய்தியினையும் ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார்.

**வீரப் பெண்மணி கல்பனா தத்**

தென்னாட்டிலே ஆயுதம் ஏந்திப் போரிட்ட வேலுநாச்சியாரைப் போல வங்கத்திலே வீரப் பெண்மணியாகத் திகழ்ந்த கல்பனா தத் பற்றி எழுதவும் ஜீவபாரதி தவறவில்லை. சிட்டகாங் ஆயுதக் கிடங்கை அழிப்பதற்கு சூர்யாசென் தாரகேஸ்வரர் போன்ற வீரர்களுடன் இணைந்து போரிட்ட வீரமங்கை கல்பனா தத் பற்றிய செய்திகளை வெளியிட்டுள்ளார். சிட்டகாங்கிலே காந்தி நிதி திரட்டிய போது தன் ஆறு வயதிலேயே கைவளையல்களைக் கழற்றித் தந்துள்ளார். கன்னத்தில் வருடிக்

கொடுத்து, அதை வாங்க மறுத்து அப்பெண்ணின் தேசபக்தியைப் போற்றிய காந்தியினை ஜீவபாரதி தம் கட்டுரையில் பதிவு செய்துள்ளார்.

காந்தியத்தைத் தழுவியவர்கள் எல்லாம் முடிவில் மார்க்சியத்திற்கு வந்த பின்னே நிறைவு பெறுகின்றனர் என்பதற்கு கல்பனா தத்தும் விதிவிலக்கல்ல.

“விடுதலையான பின்பும் கல்பனா மக்கள் பணியிலிருந்து ஒதுங்கவில்லை. விட்ட இடத்திலிருந்து மீண்டும் கல்வியைத் தொடர்ந்தார். மக்கள் நடத்திய அனைத்துப் போராட்டங்களிலும் இணைந்து நின்று போராடினார். போராட்ட அலை கல்பனாவை பொதுவுடைமை இயக்கத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. அந்த இயக்கத்தின் பொதுச் செயலாளர் பி.சி. ஜோசியை மணந்து அவருடன் இணைந்து இறுதிக் காலம் வரை பொதுவாழ்க்கையில் நடை பயின்றார் கல்பனா”[77] என்கின்றார் ஜீவபாரதி. இதிலிருந்து பொதுவுடைமை இயக்கம்தான் போராட்டக் குணத்தை வளர்த்தெடுக்கும் என்ற உண்மை புலனாகிறது.

**டாக்டர் முத்துலெட்சுமி**

டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டியின் துணிச்சல் மிக்க பல செயல்பாடுகளையும் ஜீவபாரதி எழுதியுள்ளார். பல சிக்கல்களுக்கு மத்தியில் புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் பயின்ற முதல் மாணவி என்பதோடு இண்டர் மீடியட் தேர்வில் சென்னைப் பல்கலைக் கழகத்திலேயே முதன்மை இடத்தைப் பெற்று வெற்றி பெற்றவர் என்ற குறிப்பையும் தந்துள்ளார். முத்துலெட்சுமி லண்டனில் இருந்தபோது பாரீஸ் நகரில் உலக மாநாடு நடந்தது. இந்த மாநாட்டில் நாற்பத்தி மூன்று நாட்டுப் பெண்கள் அமைப்புகள் கலந்து கொண்டன. இந்தியப் பிரதிநிதியாக இந்த மாநாட்டில் முத்துலெட்சுமி கலந்து கொண்டு சிறப்புரை நிகழ்த்தியுள்ளார். வெளிநாட்டில் நடந்த ஒரு மாநாட்டில் இந்தியப் பிரதிநிதியாகக் கலந்து கொண்ட முதல் பெண்மணி இவர்தான் என்று ஜீவபாரதி கூறுகின்றார்.

சட்ட மன்ற மேலவையில் தேவதாசி ஒழிப்புச் சட்டத்திற்கு ராஜாஜி, சத்தியமூர்த்தி இவர்களையெல்லாம் கண்டு கொள்ளாத போது தொடர்ந்து முத்துலெட்சுமியே குரல் எழுப்பியுள்ளார்.

“ஆண்டவன் முன்னால் ஆடுவது புனிதமானது. இதை ஏன் முத்துலெட்சுமி எதிர்க்கிறார்? என்று வினாத் தொடுத்தார் சத்தியமூர்த்தி. இதைக் கேட்டு ஆவேசத்துடன் எழுந்த முத்துலெட்சுமி, அய்யா எங்கள் பெண்கள் பல்லாண்டுகளாக இந்தப் பணியில் ஈடுபட்டுப் புனிதத்தை அளவுக்கு அதிகமாகவே தேடிவிட்டனர்.

அதனால் சிறிது காலத்திற்கு உங்கள் குலப் பெண்களைத் தேவதாசி தொழிலுக்கு அனுப்பி வைத்துப் புனிதமாக்குங்கள்''[78] என்று கேட்டதை அதிரடிப் புரட்சியாக ஜீவபாரதி பதிவிட்டுள்ளார்.

முத்துலெட்சுமியின் முழுமுயற்சியினால் தேவதாசி முறை தமிழகத்தில் ஒழிக்கப்பட்டது. பலதாரத் தடுப்புச் சட்டம், பால்ய விவாகத் தடைச் சட்டம் போன்றவை முத்துலெட்சுமி அம்மையாரால் தமிழகத்திற்குக் கிடைத்தவை என்ற ஜீவபாரதியின் சிந்தனை மிக்க வரிகள் முத்துலெட்சுமி அம்மையாரின் பெண்ணியச் சிந்தனை மிக்க பொதுவுடைமையை அடையாளப்படுத்தி நிற்கிறது.

**காமா அம்மையார்**

ஜீவபாரதியின் மங்கையர் பற்றிய குறிப்புகளில் காமா அம்மையார் பற்றியதும் முக்கியமானது. பார்சி இனக் குடும்பத்தில் மும்பையில் பிறந்த காமா என்பவர் பெல்ஜியத்தில் இருந்து கொண்டு இந்திய வீரர்களுக்குத் துப்பாக்கி அனுப்பி விடுதலைப் போராட்ட வீரராகத் திகழ்ந்தார். ''உலகத்தின் பல பகுதிகளில வாழுகின்ற பொதுவுடைமையாளர்களுடன் நெருக்கமான தொடர்பைக் கொண்டிருந்தார் காமா. ரஷ்ய எழுத்தாளர் மார்க்சிம் கார்க்கி, ரஷ்ய சோசியல் டெமாகிரேட் இயக்கத்தைச் சார்ந்த பாவோலிச், பிரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ஜீன் லோன்க்வன்ட் போன்றவர்கள் காமாவுடன் அடிக்கடி தொடர்பு கொண்டவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்''[79] என்கின்றார் ஜீவபாரதி.

காமா அம்மையார் பற்றிய பல அரிய தகவல்களையும் வெளியிட்டுள்ளார். அதில், ''இந்திய தேசத்திற்காக முதன்முதலாக தேசியக் கொடியை உருவாக்கியவர்; ரஷ்யப் புரட்சி பற்றி முதன்முதலாக எழுதியவர். இந்தியாவில் பிறந்து வெளிநாட்டில் வாழ்ந்து மார்க்சியத்தைத் தழுவிய முதல் இந்தியப் பெண்; லெனினைச் சந்தித்துப் பேசிய முதல் இந்தியப் பெண்மணி; அமெரிக்க வாழ் இந்தியர்களிடம் இந்திய தேசிய விடுதலை பற்றிப் பேசிய முதல் இந்திய மாதர்; இது போன்ற பல சிறப்புகளுக்குச் சொந்தக்காரர் அன்னை காமா''[80] என்று புகழாரம் சூட்டுகின்றார் ஜீவபாரதி.

**அருணா ஆஸப் அலி**

பஞ்சாப் மாநிலத்தின் வீரப் பெண்மணியாக இருந்த அருணா ஆஸப் அலியின் பொதுவுடைமைச் சிந்தனை மிக்க வரலாற்றை ஜீவபாரதி விதந்து பேசுகின்றார். தொடக்கத்தில் காங்கிரஸ் இயக்கப் போராட்டங்களில் பங்கு பெறுகிற போது

முகம்மது ஆஸப் அலியின் தொடர்பு அருணாவிற்குக் காதலாக மாறுகிறது. திருமணம் செய்ய முற்படும் போது ஏற்பட்ட பல தடைகளையும் உடைத்தெறிந்தார்.

“இந்துக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் முஸ்லீமைத் திருமணம் செய்வதா? என்று அவரைக் கண்டித்தனர். இருவர் உள்ளத்திலும் தேச விடுதலையே குடிகொண்டிருந்ததால் மதவேறுபாடு மறக்கப்பட்டது. அனைத்து எதிர்ப்புகளையும் மீறி முகம்மது ஆஸப் அலியின் கரம் பற்றினார். ஆம், விடுதலைப் போராட்டத்தின் போதே மத வேறுபாடுகளையும், தம் வாழ்வில் இருந்து அகற்றிக் காட்டினார். அவர்தான் விடுதலைப் போராட்ட வீராங்கனையாக வாழ்வைத் தொடங்கி பொதுவுடைமை இயக்கப் போராளியாக வாழ்ந்து முடிந்த அருணா ஆஸப் அலி”[81] என்கின்றார் ஜீவபாரதி.

காந்தி நடத்திய சட்ட மறுப்பு இயக்கம், உப்புச் சத்தியாக்கிரகம், வெள்ளையனே வெளியேறு போன்ற போராட்டங்களில் தீவிரமாக ஈடுபட்டவர் அருணா ஆஸப் அலி. வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் துப்பாக்கிச் சூடு நடத்தியும், குடிசைகளுக்குத் தீ வைத்தும் தேச பக்தர்கள் கையிலிருந்த தேசியக் கொடியைப் பிடுங்கியெறிந்தும் வெள்ளையர்கள் அராஜகம் நடத்தினர். இதைப் பற்றி ஜீவபாரதி குறிப்பிடும் போது, “கொடுமையான தாக்குதலைத் தொடுத்த போதும் தாம் பற்றியிருந்த தேசியக் கொடியைப் பாதுகாத்தார் அருணா ஆஸப் அலி. அவருடைய ஆவேசத்தைப் பார்த்து ஆளும் வர்க்கம் நடுங்கியது. ஆம், ஆஸப் அலியின் நெஞ்சில் எரிந்த தேச நெருப்புக்கு முன் வெள்ளையர் மூட்டிய நெருப்பு வீரியமற்றுப் போனது”[82] என்கின்றார்.

காவல்துறைக்குச் சவாலாக மறைந்து கொண்டு போராட்டத்தை நடத்தினார். தன் காதல் கணவர் முகம்மது ஆஸப் அலி மரணத்தைத் தழுவியபோதும் போராட்டத்தை விடவில்லை. காட்டிக் கொடுப்பவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் பரிசு கொடுப்பதாக ஆங்கில அரசு அறிவித்தது. அருணாவின் சொத்துக்களையும் பறித்தது. காந்திஜி “அருணாவின் தீவிரப் போராட்டம் எனது அகிம்சைப் போராட்டத்திற்கு எதிரானது. அதனால் தலைமறைவு வாழ்க்கையை முடித்துக் கொண்டு போலீசாரிடம் சரணடைய வேண்டும் என்று அறிக்கை விட்டார்”[83] என்ற பதிவு ஆராயற்பாலது.

சுதந்திரம் பெறுவதைக் காட்டிலும் தன் சுயநலம் மேலோங்கியிருந்த காந்தியின் எண்ணத்தைத் தோலுரித்துக் காட்டியுள்ளார் ஜீவபாரதி. ஆனாலும் அருணா ஆஸப்

அலி தலைமறைவு வாழ்க்கையை விடவில்லை என்பது அவர்தம் போராட்டக் குணத்திற்கு எடுத்துக்காட்டு. அந்த நேரத்தில்தான் காங்கிரஸ் சிந்தனையைத் துறந்து கம்யூனிசச் சிந்தனைக்குள் இணைந்துள்ளார். ராம் மனோகர லோகியாவுடன் இணைந்து இன்குலாப் என்ற மாத இதழையும் நடத்தியுள்ளார். தேச விடுதலைக்குப் பின்னும் பொதுவுடைமை இயக்கத்திலும், மாதர் அமைப்பிலும் இணைந்து செயல்பட்ட நிலையை ஜீவபாரதி விரிவாகப் பேசியுள்ளார்.

இவர்களைப் போன்ற பல பொதுவுடைமை சார்ந்த பெண்களை மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள் என்ற தலைப்பிலான நூலில் விரிவாக எழுதியுள்ளார். இதில் வெளியிடப்பட்டுள்ள பல தகவல்கள் பெண்ணியத்தையும், பொதுவுடைமைச் சிந்தனையையும் வளர்ப்பதாக அமைந்துள்ளது.

**தொகுப்புரை**

பெண்ணிய ஆய்வானது பெண்கள் மீதான ஆண்மகன் கொண்டுள்ள ஆதிக்க உணர்களையும் பாலியல் ஏற்றத் தாழ்வுக்கான காரணங்களையுமே மையப்பொருளாகக் கொண்டு ஆராய்கிறது. பெண்ணியம் குறித்து அறிஞர்கள் பல கருத்துக்களை முன்வைக்கின்றனர். பெண் விடுதலை பெற பெண்களின் போராட்டம் மட்டும் வெற்றியைத் தராது. பெண் முன்னேற்றம் குறித்த புரிதல் ஆணுக்கு உளப்பூர்வமாக வரவேண்டும். பெண்ணியச் சிந்தனை தத்துவ நிலையிலும், கோட்பாட்டு அடிப்படையிலும் இயக்கம் என்ற செயல்பாட்டிலும் இயங்குவதாக அமைகிறது. இலக்கியங்களிலும், இதிகாசங்களிலும் பெண்கள் வெறும் போகப்பொருளாகவே பார்க்கப்பட்டுள்ளனர்.

இருபதாம் நூற்றாண்டில்தான் பெண்களுக்கான விழிப்புணர்வு தட்டி எழுப்பப்பட்டது. பெண்களின் அடிமைத்தன வாழ்க்கையிலிருந்து விடுபட மார்க்சியமே நிரந்தரத் தீர்வு கூறுகிறது. ஆணுக்கு இணையான ஜனநாயகம், சமத்துவம், பெண்விடுதலை என்ற மூன்று அடிப்படை அம்சங்களும் பெண்ணுக்கும் வேண்டும் என்று மார்க்சியம் முன்னிறுத்துகிறது. பெண்கள் தொழிலாளர்களாக மாற்றம் பெற்றால் பெண் விடுதலை விரைவாகக் கிடைக்கும் என்பது எங்கெல்ஸ் கருத்தாக அமைகிறது.

பொதுவுடைமைச் சிந்தனை மிக்க ஜீவபாரதி பெண்ணியப் பார்வையோடு வேலுநாச்சியார் என்ற புதினத்தையும், வீரத்தாய் வேலுநாச்சியார் என்ற நாடகத்தையும், மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள் என்ற உரைநடை நூலையும் படைத்துள்ளார். வேலுநாச்சியார் கிட்டூர் ராணிக்கும்,

ஜான்சிராணிக்கும் முன்னரே விடுதலைப் போராட்டத்தில் குதித்தவர் என்று நிறுவியுள்ளார் ஜீவபாரதி. வேலுநாச்சியாரின் அஞ்சல்தலை வெளியிட வேண்டுமென்று கட்டுரை எழுதி வெற்றி பெற்றுள்ளார். பலமொழி பயின்றவராகவும், ஆணுக்கு இணையான வீரமிக்கவராகவும், வாரிசுரிமையைத் தடுத்தவராகவும், போர்க்களத்தில் வெள்ளையரை வெற்றி கண்டு இழந்த நாட்டை மீட்டவராகவும் வேலுநாச்சியார் திகழ்ந்துள்ளார். வேலுநாச்சியாரைப் போலவே உடையாள், குயிலி போன்ற பெண்களும் புரட்சிகரப் பெண்களாகத் திகழ்ந்துள்ளனர்.

பொதுவுடைமைச் சிந்தனையாளர் ஜீவாவின் துணைவி பத்மாவதி அம்மையாரும் பல பொதுவுடைமைச் சித்தாந்தப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். கணவனின் போராட்ட வாழ்வில் தன்னையும் இணைத்துக் கொண்டவராக அகுஸ்தினா பூசிக் காணப்படுகின்றார். கணவன் இறந்ததற்குப் பிறகும் தம் போராட்ட வாழ்வைத் தொடர்ந்ததோடு கணவரின் சிறைக்குறிப்புகளை நூலாக்கியுள்ளார். தோழியர் மணியம்மை 21 வயதில் தம் கணவனை இழந்தபோது அதற்குக் கலங்காமல் பொதுவாழ்வில் ஈடுபட்ட துணிச்சலை ஜீவபாரதி எடுத்துக்காட்டியுள்ளார். மார்ச் 8 ஆம் தேதியை சர்வதேச மகளிர் தினமாகக் கொண்டாட வழிவகுத்தவர் கிளாரா ஜெட்கின் என்ற பதிவை ஜீவபாரதி வெளியிட்டுள்ளார். உலகப் பொருளாதார மேதை காரல் மார்க்சின் துணைவி ஜென்னி மார்க்ஸ், மார்க்சுக்கு சிறந்த ஆலோசகராகவும், மூலதனம் நூல் வெளியாவதற்கு மிகப்பெரிய தூண்டுகோலாகவும் திகழ்ந்துள்ளார். லெனினுக்கு இணையான போராளியாக அவர்தம் துணைவி குரூப்ஸ்காயா திகழ்ந்துள்ளார்.

மறக்கப்பட்ட மங்கையர்கள் என்ற தலைப்பில் லட்சுமி அம்மாள், அஞ்சலையம்மாள், லீலாவதி என்ற அம்மாக்கண்ணு, கல்பனா தத், டாக்டர் முத்துலெட்சுமி, அருணா ஆஸப் அலி என்று பல பெண்களின் போராட்டம் மிகுந்த வாழ்வையும், பெண்ணியச் சிந்தனையையும், பொதுவுடைமைப் பண்பையும் நிரல்படத் தொகுத்தும், பகுத்தும் தந்துள்ளார் ஜீவபாரதி. வரலாற்றுச் சிறப்புமிக்க பெண்களின் வாழ்வியலிலும் சிந்தனையிலும் பொதுவுடைமை மிளிர்வதை எடுத்துக்காட்டியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. வாசகி, பெண்ணியம் பேசலாம் வாங்க, ப.7
2. அரங்க.மல்லிகா, பெண்ணின் வெளியும் இருப்பும், ப.8
3. இரா. பிரேமா, பெண்ணிய அணுகுமுறைகள், ப.192
4. ஸ்டீபன் ஹட்ஜ்யன் ரைட் (க.ஆ), சாரா கேம்பள் டோரியல் மேய் (தொ.ஆ), தமிழில் ராஜ் கௌதமன், பெண்ணியம் வரலாறும் கோட்பாடுகளும், ப.9
5. தமிழ்வேட்பன் (தொ.ஆ), பாரதிதாசன் கவிதைகள், பக்.2–3
6. இரா.பிரேமா, பெண்ணியம், ப.1
7. மேலது, ப.28
8. நா.ஜெயபாலன், பெண்ணினம் ஓர் ஆய்வு, ப.25
9. கு.ம.இராமாத்தாள், பெரியாரின் பெண்ணியச் சிந்தனைகள், ப. 32
10. மு.கருணாநிதி, ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா, ப.20.
11. க.பஞ்சாங்கம், பெண் – மொழி — புனைவு, ப.12
12. வெ. கோவிந்தசாமி, வெ. நடராஜ் (மொ.பெ.ஆ) கெய்டி, கார்ட்மேன் (க.ஆ), மார்க்சியம் பெண்ணியம் உறவும் முரணும், ப.10
13. கே.ஜீவபாரதி, நினைவு நாட்களும் நெஞ்சில் அலைகளும், ப.59
14. கே.ஜீவபாரதி, வீரன் எட்டப்பன் முதல் வேலுநாச்சியார் வரை, ப.124
15. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.118
16. கே.ஜீவபாரதி, கண்ணோட்டம், ப.7
17. இளவேனில் (அணிந்துரை), (கே.ஜீவபாரதி, நூ.ஆ), வேலுநாச்சியார், பக்.15–16
18. இனியன் சம்பத், முன்னுரை, வீரத்தாய் வேலுநாச்சியார், (கே. ஜீவபாரதி, நூ.ஆ), ப.5
19. நா.ஜெயபாலன், பெண்ணியம் ஓர் ஆய்வு, ப.22

20. க.பஞ்சாங்கம், பெண்–மொழி–புனைவு, ப.15

21. முத்துச் சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.128

22. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.53

23. கே.ஜீவபாரதி, வீரன் எட்டப்பன் முதல் வேலுநாச்சியார் வரை, ப.125

24. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.90

25. கே.ஜீவபாரதி, வீரத்தாய் வேலுநாச்சியார், ப.18

26. மு.கீதா, கே. ஜீவபாரதியின் வேலுநாச்சியார் நாவலில் பெண்ணியச் சிந்தனைகள், ப.63

27. கே. ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.120

28. மேலது, ப.121

29. மேலது, ப.72

30. மேலது, ப.73

31. மேலது, பக். 74–75

32. தா.பாண்டியன், பாரதியும் சாதி ஒழிப்பும், ப.27

33. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.211

34. இரா.பிரேமா, பெண்ணியம், ப.53

35. ச.மாடசாமி, பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும், ப.167

36. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.27

37. மேலது, ப.27

38. மேலது, ப.28

39. சு.அறிவுக்கரசு, பெண், ப.91

40. மு.கீதா, கே. ஜீவபாரதியின் வேலுநாச்சியார் நாவலில் பெண்ணியச் சிந்தனைகள், ப.109

41. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், பக்.20–21

42. மேலது, பக்.31–32

43. மேலது, ப.61

44. மேலது, ப.214

45. ஜூலியா கிறிஸ்தவா (க.ஆ), விளிம்பு நிலைமையும், தலைகீழாக்குதலும், சாரா காம்பிள், டோரியல் மோய், தமிழில் ராஜ் கௌதமன், பெண்ணியம் வரலாறும் கோட்பாடும், ப.94

46. கே.ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.141

47. மேலது, ப.204

48. மேலது, பக்.204–205

49. கே.ஜீவபாரதி, மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள், ப.33

50. க. பஞ்சாங்கம், பெண்–மொழி–புனைவு, ப.29

51. கே. ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.175

52. மேலது, ப.166

53. மேலது, ப.63

54. மேலது, ப.69

55. தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள், ப.69

56. நா. ஜெயபாலன், பெண்ணினம் ஓர் ஆய்வு, ப.125

57. கே. ஜீவபாரதி, வேலுநாச்சியார், ப.123

58. மேலது, ப.105

59. தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள், ப.54

60. கே.ஜீவபாரதி, வரலாறு பேசுகிறது, ப.30

61. சு.அறிவுக்கரசு, பெண், ப.25

62. கே.ஜீவபாரதி, வரலாறு பேசுகிறது, ப.21

63. மேலது, பக்.108–109

64. மேலது, ப.115

65. கே. ஜீவபாரதி, அந்த நாள் ஞாபகம், ப.30

66. மேலது, ப.31

67. மேலது, ப.46

68. கே.ஜீவபாரதி, பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை, ப.32

69. மேலது, ப.33

70. மேலது, ப.34

71. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.41

72. மேலது, ப.43

73. எஸ். வைரவன், பதிப்புரை, மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள், (கே. ஜீவபாரதி, நூ.ஆ), ப.4

74. கே. ஜீவபாரதி, மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள், பக்.13–14

75. மேலது, ப.25

76. மேலது, ப.27

77. மேலது, ப.51

78. மேலது, பக்.94–95

79. மேலது, ப.110

80. மேலது, ப.112

81. மேலது, ப.62

82. மேலது, ப.66

83. மேலது, ப.67

# இயல் – 5

## ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவுகளில் பொதுவுடைமை

ஒரு மனிதனின் கருத்து, வரலாற்றை உருவாக்கவில்லை. அவனது செயலே வரலாற்றை உருவாக்கும் என்பதே மார்க்சியக் கொள்கையாகும். காலங்காலமாக மனித உழைப்பு என்பது பல அற்புதங்களையும், அதிசயங்களையும் இயற்கையை விஞ்சுகிற ஆற்றலையும் கொண்டு வியத்தகு சாதனைகளை நிகழ்த்தியுள்ளது. இயற்கையைத் தமக்குக் கட்டுப்படவைத்து அதன் விதிகளை அறியக் கற்றுக் கொண்ட மனிதன் தம் வரலாற்றை உணர்வுப் பூர்வமாக ஒழுங்கமைக்கக் கற்று கொள்ளவில்லை. இந்த உலகம் உருவாகத் தொழிலாளர்களின் சக்தி என்ன என்பதைப் பற்றியும், முதலாளி வர்க்கத்தின் எதேச்சதிகாரப் போக்கால் தொழிலாளர்களின் வாழ்வியல் முறையில் ஏற்பட்ட முரண்பாடுகள் பற்றியும் ஆராயத் தொடங்கிய முதல் ஆசிரியர்களாக மார்க்சும், எங்கெல்சும் திகழ்ந்தனர். அவர்களைத் தொடர்ந்து பல கம்யூனிசத் தலைவர்களும், போராட்டக்காரர்களும் உருவாகினர். கொடியும், கோஷமும் தான் ‘பொதுவுடைமைத் தத்துவம்’ என்பதல்ல; வாழ்க்கையின் அனைத்து அசைவுகளுமே பொதுவுடைமைத் தத்துவம் சார்ந்தனவே என்பதே கவிஞர் ஜீவபாரதியின் படைப்பியல் பார்வையாகும். அவ்வகையில் ஜீவபாரதியின் உலகளாவிய வரலாற்றுப் பார்வை, இந்தியப் புரட்சியாளர்கள் பற்றிய வரலாற்றுப் பார்வை, இந்தியப் பழங்குடி மக்களின் விடுதலைப் போராட்டம், தமிழகப் படைப்பாளிகள், புரட்சியாளர்கள் பற்றிய வரலாற்றுப்பார்வை ஆகிய பதிவுகளில் ஜீவபாரதியின் பொதுவுடைமைச் சிந்தனைகள் இடம்பெறுவதை ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### வாழ்வும் வரலாறும்

ஒரு நாட்டின் இனம், மொழி, பண்பாடு, நாகரிகம், தனிமனித சாதனைகள், குழுவினராகச் சேர்ந்து பெற்ற வெற்றிகள், போராட்டங்கள் வாழ்வியல் முறைகள் என நடைபெற்று முடிந்த நிகழ்வுகளை அடையாளப்படுத்திப் பதிவு செய்வதை வரலாறு என்று குறிக்க இயலும். இன்றைய நடைமுறை வாழ்வை எழுதுவோருக்குக் கடந்த கால வாழ்வைச் சிந்திப்பது அவசியமாகிறது.

இன்னும் சிறிது விரிவாக ஆராய்ந்தால், “வரலாறு என்பது புரட்சிகள், எழுச்சிகள், இராணுவக் கலகங்கள், உள்நாட்டுப் போர்கள், தத்துவார்த்தப் பூசல்கள் இன்ன பிறவற்றைக் கொண்ட ஒரு சிக்கலான கதையாகும்”[1] என்ற சிந்தனை குறிக்கத்தக்கது.

இவை அனைத்தும் கலந்த மனித வாழ்க்கையை ஆராய்வது மகத்தான பணியாகிறது.

“மனித வாழ்க்கை என்றுமே இலகுவானதாய், எளிமையானதாய் இருந்ததில்லை. வரலாற்றுப் பாதையில் மனிதகுலம் போடும் நடைமலர்கள் தூவப்பட்ட மென்மையான பாதையில் உலவுவதைப் போன்றதல்ல. புரட்சிகளும், அரசு அமைப்புகளின் மாற்றங்களும், சமாதானமான நல்லண்டை உறவுகளும், இரத்தக் களரியான யுத்தங்களும், சுரண்டப்படும் தொழிலாளர்கள், விவசாயிகளின் கடுமையான உழைப்பும், சுரண்டும் முதலாளிகள், நிலப்பிரபுக்களின் செயலற்ற சோம்பேறித் தனமான வாழ்க்கையும், வண்ண விளக்குகள் பளிச்சிடும் பிரம்மாண்டமான நகரங்களும், அடர்ந்த காடுகளின் உள்ளே எங்கோ ஒரு மூலையில் இருக்கும் சாதாரண குக்கிராமங்களும் இவையெல்லாம் நிறைந்தது தான் மனிதகுல வரலாறு”[2] என்ற கருத்தும் இங்குக் கருதத் தக்கதாய் அமைகிறது.

“கம்யூனிசத் தத்துவார்த்தத்தின் சிருஷ்டி கர்த்தாக்களாலும், அனைத்து உலகத் தொழிலாளர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட தலைவர்களுமான மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின் போன்ற மாமேதைகளைத் தொழிலாளர்களின் இயக்கம் முன்கொணர்ந்துள்ளது. கூரிய, விஞ்ஞான ரீதியான முன்னறிவுப் புரட்சி இயக்கத்தின் அனுபவத்தை ஆக்கரீதியில் பகுத்தாயும் திறன், தத்துவார்த்தத்தை நடைமுறையுடன் இணைக்கும் திறமை, ஸ்தாபனங்களைக் கட்டுவதில் தேர்ச்சி, வெற்றியில் அசைக்க முடியாத நம்பிக்கை, துணிவு, கலந்து பழகும் பண்பு ஆகிய பல ஒப்பற்ற தன்மைகளை மார்க்ஸிஸத்தின் ஸ்தாபகர்கள் கொண்டிருந்தனர். முற்போக்கான மனிதகுலம் அவர்களிடம் பெருமதிப்பு வைத்திருப்பதுடன் சமூக முன்னேற்றத்திற்கும், தொழிலாளர்களின் விமோசனத்திற்கும் அவர்கள் ஆற்றிய பங்கிற்காக அவர்களை நேசிக்கிறது”[3] என்பர்.

சமுதாயம், வரலாறு பற்றிய கண்ணோட்டங்களில் மாபெரும் புரட்சியை ஏற்படுத்திய இவர்களைத் தொடர்ந்து பல சமுதாய மாற்றங்கள் நிகழ பல போராட்டங்களை உருவாக்கிச் சுரண்டலற்ற சமுதாயத்தை உருவாக்கப் பாடுபட்டவர் பலர் ஆவர். சென்ற காலத்தின் எந்த ஒரு இயக்கத்துடனும் ஒப்பிட முடியாத தொழிலாளர்களின் புரட்சிகர இயக்கம் அதன் தலைவர்களுக்குப் பெரும் பணிகளை இட்டுச் சென்றது. அத்தகைய தலைவர்களின் வரலாற்றினை ஜீவபாரதி அரிதின் முயன்று எழுதியுள்ளார்.

**உலகளாவிய வரலாற்றுப் பார்வை**

ஜீவபாரதி பொதுவுடைமைச் சிந்தனை மிக்க பல தலைவர்கள் குறித்துத் தம் கவிதைகளிலும், கட்டுரைகளிலும் எழுதியுள்ளார். அவற்றில் உலகளாவிய வரலாற்றுப் பார்வை மிக்குள்ளதைக் கண்ணுறமுடிகிறது.

“சாதனையாளர்களும், விஞ்ஞானிகளும், தத்துவ மேதைகளும், இசை வாணர்களும், மொழி, சாதி, இனம், மாநிலம், தேசம் என்ற எல்லைகளைக் கடந்தும் வாழ்பவர்கள். வருகின்ற சந்ததிக்கு எப்படி வாழ வேண்டும் என்பதைத் தங்களின் வாழ்க்கையின் மூலம் சொல்லிச் சென்றவர்கள்”[4] என்கின்றார் ஜீவபாரதி. அதனால்தான் கிரேக்க நாட்டில் பிறந்த சாக்ரடீசையும், ரஷ்யாவில் பிறந்த லெனினையும், சுவிட்சர்லாந்தில் பிறந்த ரூசோவையும், ஜெர்மனியில் பிறந்த காரல்மார்க்சையும் மற்றும் அறிவியல் மேதை ஐன்ஸ்டீனையும், மாசிடோனியாவில் பிறந்த அரிஸ்டாட்டிலையும், இங்கிலாந்தில் பிறந்த வின்ஸ்டன் சர்ச்சில் மற்றும் நியூட்டனையும், அமெரிக்காவில் பிறந்த லிங்கன் மற்றும் மார்ட்டின் லூதர் கிங் போன்றோரையும் எழுதி “உலக மேதைகள்” என்ற பெயரால் நூலாக்கி வெளியிட ஜீவபாரதியால் முடிகிறது.

மேற்கூறிய உலகளாவிய தலைவர்கள் மட்டுமன்றி மாயகோவ்ஸ்கி, அலெக்சாண்டர் டூமாஸ், மொசார்ட், சேகுவேரா, மாவீரன் அலெக்சாண்டர், யாசர் அராபத், ஹோசிமின், நெல்சன் மண்டேலா, மாசே துங் போன்ற பலரைப் பற்றியும் கட்டுரை எழுதி நூலாகத் தந்தவர் ஜீவபாரதி.

வாழ்வியல் வரலாற்றுக் கட்டுரைகளை எழுதும் போது மார்க்சியப் பார்வையோடு அணுகியுள்ளார். ‘சரித்திரம் பேசுகிறது’ என்ற நூலுக்கு அணிந்துரை எழுதிய மு.பழநி இராகுலதாசன், “வரலாறு என்றால் அது மன்னர்கள் பற்றியது என்றும், அது மாளிகைகள் பற்றியது என்றும், அது அந்தப்புரங்கள் பற்றியது என்றும் புரவிகள், போர்க்களங்கள் பற்றியது என்றும் முன் ஒரு காலத்தில் பேசப்பட்டு வந்தது. வரலாறு என்பது அது அல்ல; வரலாறு என்றால் அது மானுட வரலாறு. வரலாறு என்றால் அது சமுதாய வரலாறு என்று மார்க்சியம் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சிப் பழைய இருட்டுக்களையெல்லாம் புறந்தள்ளிப் புரட்டிப் போட்டது”[5] என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் பாரதி, ஜீவா வழியில் ஆவேசமாய், அறிவுப் பூர்வமாய், ஜீவபாரதி எழுதுவதாகவும், கையில் ஜீவனுள்ள எழுத்தையும், கருத்தில் மேன்மை மிக்க மார்க்சியத்தையும் தாங்கியுள்ளார் என்றும் ஜீவபாரதியைப் பாராட்டி மு.பழநி இராகுலதாசன் சொல்வதும் இங்கே கருதத்தக்கது.

**எழுத்திலும் பேச்சிலும் ஈர்த்தவர்கள்**

மார்க்சியத்தில் எழுத்தும், பேச்சும் குறிப்பிடத்தக்க மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளன. இவை அழகியல் சார்ந்த கலையாகவும் கருதப் பெறுகின்றன. சிந்தனை வயலின் விளைபொருளாக இருப்பது எழுத்தும், பேச்சும் ஆகும். இதில் பேச்சு மிகப்பெரிய மாற்றத்தை உருவாக்கியுள்ளது. "பேச்சின் மூலமாகத்தான் உணர்வு உருப்பெற்று சமூக உணர்வாக வளர்ச்சி பெறுகிறது. மனித உறவுகள், அனுபவப் பரிமாற்றம், அறிவு பரவுதல் ஆகியவை ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்களிடையே ஒரு காலத்தில் மட்டுமில்லாமல், பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு சமூகங்களைச் சேர்ந்தவர்களிடையே பரவுவதற்கும் மொழி காரணமாகிறது. இதனால் பல வரலாற்றுக் காலக்கட்டங்களில் தொடர்ச்சியான பண்பாட்டு வளர்ச்சி காணப்படுகிறது"[6] என்பார் நா.வானமாமலை.

பேச்சினால் தான் எண்ணங்களும் சிந்தனைகளும், புலனுணர்வு பெறுகின்றன. தனிமனித உணர்வாக இருப்பது பேச்சின் மூலமாகவே பொதுமொழியாக உருப்பெறுகின்றன. அதைப் போலவே மார்க்சியச் சிந்தனை மிக்க எழுத்துக்கள் இலக்கியமாக மாறித் தத்துவமாக உருப்பெறுகின்றன.

"கலை என்பது மக்களின் அழகியல் உணர்வை நிறைவு செய்வதோடு, சமூகத்தின் எதார்த்தத்தை அறிந்து கொள்வதற்கும், அதனை மாற்றுவதற்கும் வழிமுறையை வெளிப்படுத்துவதாக இருக்கிறது"[7] என்பார் அ.கா.ஈஸ்வரன்.

"அழகியல் கல்வி, ஆன்மீக உலகைச் செழுமைப் படுத்துவது மட்டுமின்றி மனிதனை மேம்படுத்தவும் செய்கிறது. அழகின் உலகிலே மனிதன் ஆழ்ந்து செல்லச் செல்ல அதன் விளைவுகளை அவர் மிகுந்த தீவிரத்துடன் உணர்கிறார். அவரும் மேலும் மேலும் நேர்த்தியுள்ளவராகவும், தூய்மையானவருமாக ஆகிறார்"[8] என்ற கருத்தும் இங்கே ஒப்பிடத்தக்கது.

அந்த வகையில் உலகளாவிய சிந்தனையாளர்களாகத் திகழ்ந்த மாயகோவ்ஸ்கி, சாக்ரடீஸ், மாசே துங், பாப்லோ நெரூடோ போன்றோரைப் பற்றிய ஜீவபாரதியின் பதிவுகள் முக்கியத்துவம் வாய்ந்தனவாகும்.

**மாயகோவ்ஸ்கி**

ஜார்ஜியாவைச் சேர்ந்த பக்நதி என்ற சின்னஞ்சிறு கிராமத்தில் வனப்பாதுகாப்புக் காவலரின் மகனாக *1893* ஜீலை *7* அன்று பிறந்த மாயகோவ்ஸ்கி சிறிய வயதிலேயே

தந்தையை இழந்தவன்; அதனால் தாயுடன் பிழைப்புக்காக மாஸ்கோ சென்றான். பள்ளியில் படிக்கும் போதே தத்துவங்களை அறிந்து கொள்வதிலும், அரசியலைப் புரிந்து கொள்வதிலும் மாயக்கோவ்ஸ்கி கவனம் செலுத்தியுள்ளான். அதன் விளைவாக ரஷ்ய சோசலிஸ்டுக் கட்சியில் இணைந்து ரகசியப் பிரசுரங்களை எழுதிக் கொடுத்ததாகக் குற்றம் சுமத்தி மாயக்கோவ்ஸ்கியை ஆளும் வர்க்கம் சிறையில் அடைத்தது. அப்போது அவனுக்கு வயது 13 தான் என்று தமக்கே உரிய பாணியில் ஜீவபாரதி வாழ்வியல் கதை கூறும் பாங்கில் மாயக்கோவ்ஸ்கியை அறிமுகம் செய்கின்றார்.

மாயகோவ்ஸ்கியை தொழிலாளத் தோழர்களின் கவிஞன் என்பதால் ஜீவபாரதி உரிமையோடு அவன் என்று விளிப்பது தோழர்களின் இணக்கம் நிறைந்த சூழலை வெளிப்படுத்துகிறது. வரலாற்றியல் பதிவுகளில் பெரும்பாலான தொழிலாளத் தோழர்களையும், தலைவர்களையும், கவிஞர்களையும் நெருக்கம் மிகுந்த தோழமையோடு அவன் என்று குறிப்பிடும் போக்கு ஜீவபாரதியின் படைப்புகளில் மேலோங்கி நிற்பதனைக் காணமுடிகிறது.

1916ஆம் ஆண்டில் ரஷ்யாவில் ஒதுக்குப்புறமான ஓர் இடத்தில் நடந்த செஞ்சட்டை வீரர்களின் ரகசியக் கூட்டத்தில் மாயகோவ்ஸ்கி முழங்கியதை ஜீவபாரதி மிகத் தெளிவாக வெளிப்படுத்துகின்றார்.

“தலைகளில் லெனினோடும்

கரங்களில் பீரங்கியோடும்

புரட்சிக்குத் தயாராவீர் தோழர்களே! என்ற கவிதையோடு முடித்தான். அனைத்துக் கரங்களும் கொட்டி முடிந்தன. முடிந்ததும் ஒரு செஞ்சட்டை வீரன் மேடை ஏறினான். ஒலிபெருக்கியைப் பிடித்தான்.

தலைகளில் லெனினோடும்

கரங்களில் பீரங்கியோடும்

உள்ளத்தில் உன் கவிதையோடும்

புரட்சிக்குத் தயாராகுவோம் தோழனே!

ஆம், கவிஞரே உன் கவிதை வரிகள் தான் தொப்பியில் லெனினைச் சுமப்பதற்கும், எதிரிகளை எதிர்கொள்ளப் பீரங்கியைத் தாங்குவதற்கும் வலிமை தருகிறது என்றான். அந்தக் கவிஞன் பேசி முடித்தபோது ஏற்பட்ட கர ஒலியைக் கண்டு அந்தக்

கவிஞனே திகைத்தான். லெனினுக்கு இணையாகச் செஞ்சட்டை வீரர்கள் நேசித்த அந்த மகத்தான கவிஞன் தான் மாயகோவ்ஸ்கி''[9] என்று ஜீவபாரதி பொதுவுடைமைக் கவிஞர் மாயக்கோவ்ஸ்கியின் உச்சக்கட்ட வலிமையை உரக்கச் சொல்கின்றார்.

பழைய இலக்கிய மரபுகள் மேல் வெறுப்புற்றும் புதிய இலக்கியம் படைக்க முன் வந்தவராக மாயகோவ்ஸ்கி திகழ்கின்றார்.

''பண்பாட்டின் தளத்தைப் புரிந்து கொள்ளாமல், பண்பாடு எவ்வாறு இயங்குகிறது என்பது பற்றிய சமூகவியல் நிலைப்பட்ட பூரண விளக்கம் இல்லாமல், புதிய கலை இலக்கியங்களை, புதிய கலை இலக்கிய நியமங்களை உட்புகுத்திவிட முடியாது என்பதும் நாம் எடுத்துக் கூறப் போவனவற்றை ஏற்றுக் கொள்வதற்கான ஒரு புலமைத்துவ, கருத்து நிலைத் தயார் நிலையை முதலில் பண்பாட்டுத் தளத்தில் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதும் மிக முக்கியமான அறிவுக் கையளிப்பாகும்''[10] என்ற கார்த்திகேசு சிவத்தம்பியின் கருத்து ஒப்புநோக்கத் தக்கது.

பண்பாட்டுத் தளங்களில் சமூகப் புரட்சிக்கு வித்திடாத பழைய இலக்கியங்கள் மீது ஈடுபாடற்ற நிலையிலிருந்த மாயகோவ்ஸ்கியின் செயல்பாடு பற்றிக் கூறவந்த ஜீவபாரதி ''பழைய இலக்கியங்கள் சமூக மாற்றத்திற்குப் பயன்படாது என்ற முடிவுக்கு வந்த மாயகோவ்ஸ்கி அவற்றைக் கடுமையாக எதிர்த்தான். இத்தகைய சிந்தனை கொண்ட இளைஞர்களை இணைத்து Futurism என்ற அமைப்பை மாயகோவ்ஸ்கி உருவாக்கினான். அந்த அமைப்பு *1912*–இல் பொது ஜன ரசிகத் தன்மையின் மூஞ்சியில் ஓர் அடி என்ற தலைப்பில் ஓர் அறிக்கை வெளியிட்டது. அந்த அறிக்கையில் மாயக்கோவ்ஸ்கியும் கையொப்பமிட்டிருந்தான்''[11] என்ற வரலாற்றுச் செய்தியினை ஜீவபாரதி வெளியிட்டுள்ளார்.

பின்னர் மார்க்சிம் கார்க்கியைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்ததைப் பற்றியும், 'கால்சராய் அணிந்த மேகம்' என்ற மாயகோவ்ஸ்கியின் கவிதையை கார்க்கியிடம் வாசித்துக் காட்டினார் என்பது பற்றியும் எழுதிய ஜீவபாரதி *20* வயது மாயகோவ்ஸ்கி காற்றைக் குதிரையாக்கி அதன் மீது சவாரி செய்யும் கட்டுக்கடங்காத உணர்ச்சி வேகம் கொண்டவனாக இருக்கிறான் என்று பாராட்டி தனது 'பெத்தோபிஸ்' என்ற பத்திரிகையில் தொடர்ந்து மாயகோவ்ஸ்கியின் படைப்புகளை கார்க்கி வெளியிட்ட செய்தியையும் ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார். லெனின், கார்க்கி போன்ற மேதைகளால் பாராட்டப்பட்டவரும், அனைத்து ரஷ்யர்களாலும் எங்கள் கவிஞன் என்று உரிமை கொண்டாடப்பட்ட மாயக்கோவ்ஸ்கி *1930* ஏப்ரல் *14* அன்று துப்பாக்கியால் சுட்டுத்

தற்கொலை செய்து கொண்டான். அப்போது அவனுக்கு வயது 37. இந்த மகத்தான கவிஞனின் தற்கொலைக்கான காரணம் இன்றும் மர்மமாகவே உள்ளது என்று கூறும் ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவு மேலும் நம்மை ஆய்வு செய்யத் தூண்டுகிறது.

**சாக்ரடீஸ்**

கிரேக்க நாட்டின் தத்துவஞானி சாக்ரடீஸ் பற்றியும் ஜீவபாரதி எழுதியுள்ளார். இளைஞர்களைத் தட்டி எழுப்பிய புரட்சிக்காரராக சாக்ரடீஸ் திகழ்ந்துள்ளார். எதையும் கேள்வி கேட்டு ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று கூறி கேள்வி கேட்க வைத்த புதிய சிந்தனையாளராக இருந்துள்ளார். இளைஞர்களைச் சிந்திக்க வைப்பது தமக்கு ஆபத்து என்றுணர்ந்த ஆதிக்க சக்திகள் அவரை ஒழித்துக் கட்ட புதிய வழி தேடினர். இந்த அவலத்தை ஜீவபாரதி தெளிவாகத் தமது கட்டுரையில் பதிவிட்டுள்ளார்.

“இளைஞர்களைக் கூட்டி வைத்துத் தவறான வழிக்குச் செல்ல வழிகாட்டுகிறான் என்றும், நாத்திகக் கருத்துகளை இளைஞர்கள் மனதில் விதைக்கிறான் என்றும் அவன் மீது குற்றம் சுமத்தி அறிஞர் அவையில் வழக்குத் தொடுத்தனர். ஐநூறு பேர் கொண்ட அந்த அவையில் தன்னுடைய கருத்துகளைத் தெளிவுபடுத்தி அவன் பேசினான். ஆனாலும் 281 பேர் அவனைக் குற்றவாளி என்றும் மீதிப்பேர் அவனைக் குற்றமற்றவன் என்றும் கருத்துத் தெரிவித்தனர். இருப்பினும் இறுதி முடிவாக அவனுக்கு மரண தண்டனை கொடுப்பது என்றும் அந்த மன்றம் முடிவு செய்தது”[12] என்று ஜீவபாரதி எழுதியுள்ளார்.

சாவைக் கண்டு அஞ்சாத சாக்ரடீஸ், நன்மையைக் கருதித் தண்டனை விதிக்க வேண்டும். அல்லது தீமையை விலக்கத் தண்டனை விதிக்க வேண்டும். இரண்டும் இல்லாமல் தீமையைப் பெருக்கத் தண்டனை கொடுத்தீர்களே அதை நினைத்துத் தான் நான் வருந்துகிறேன் என்று சாக்ரடீஸ் கூறியதையும் எடுத்துக் காட்டியுள்ளார் ஜீவபாரதி.

இளைஞர்களைச் சிந்திக்க வைத்தார் என்பதற்காக மரண தண்டனை என்பது சிந்திக்க வைக்கிறது. ஆதிக்கம் படைத்தோர் இளைஞர்களும், உழைப்பாளிகளும் சிந்தனையற்றவர்களாகவே இருக்க வேண்டும் என்று நினைப்பர். சிந்தித்தால் சர்வாதிகாரம் உடைத்தெறியப்படும். எனவே சிந்தனையைத் தூண்டிய சாக்ரடீசுக்கு நஞ்சு கொடுத்துக் கொன்றனர். நஞ்சு கொடுப்பதற்கு முன்பாக மனைவியையும், மூன்று குழந்தைகளையும் சிறைச்சாலையில் சந்தித்துள்ளார். அவர்கள் சென்றதற்குப்

பிறகு நஞ்சினை அருந்திய சாக்ரடீசைப் பார்த்து அனைவரின் விழிகளும் கலங்கின. சிலர் வாய் விட்டு அழுதுள்ளனர். அதைப்பற்றி சாக்ரடீஸ், “அழுகை பிரிந்து சென்று கொண்டிருக்கும் ஆன்மாவுக்கு அமைதி கொடுக்காது என்று எண்ணித்தான் என் மனைவியை அனுப்பி வைத்தேன். ஆனால் நான் எதை வெறுக்கிறேனோ அதைச் செய்கிறீர்களே என்று சொல்லி விட்டுச் சிறைக்குள்ளேயே அவன் உலவத் தொடங்கினான். சிறிது நேரத்தில் நடக்க இயலாமல் படுத்தான். சுற்றியிருந்தோர் அவன் கைகால்களை அமுக்கிவிட்டனர். அவர்கள் அப்படிச் செய்து கொண்டிருந்த போதே அவனுடைய ஆவி அவன் உடம்பிலிருந்து விடுதலை பெற்றது. ஆம். இளைஞர்களின் அறிவை விருத்தி செய்ய மேடையைத் தனதாக்கி முழங்கிய ஆயிரமாயிரம் புதிய கருத்துக்களை வழங்கிய அவனுக்கு எதிரிகள் விஷத்தைக் கொடுத்துச் சாகடித்தனர். அந்த எழுபது வயதுக் கிழவன் தான் சாக்ரடீஸ்”[13] என்று ஜீவபாரதி சொல்வது கேள்வி கேட்டுக் கொண்டே இருங்கள் என்று உலகினரைச் சொல்ல வைக்கிறது. பேசும் ஆற்றலும், சிந்திக்கும் ஆற்றலுமே எதேச்சாதிகாரப் போக்கைப் பின்னுக்குத் தள்ளமுடியும் என்பதை உணர்த்தி நிற்கிறது. சாகிறவரை சாக்ரடீஸ் இளைஞர்களுடனும், பொது மக்களுடனும் உரையாடியது கம்யூனிசச் சித்தாந்தத்தின் இயங்கியல் பொருள் முதல் வாதத்தை நிலை நிறுத்துவதாகவும் அமைகிறது.

**மாசே துங்**

சீனாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை வளர்த்த மாசேதுங் பற்றிய ஜீவபாரதியின் குறிப்பும் தவிர்க்க இயலாததாகும். சீனாவில் சங்ஷா நகரத்தில் ஏற்பட்ட பஞ்சத்தால் வாடிய மக்கள் அரசாங்கக் கொடிகளை வெட்டிச் சாய்த்தனர். இதனால் ஏற்பட்ட எழுச்சியை அறிந்த உள்துறை அதிகாரி ஜீவங் மக்களுக்கு உதவ முன்வந்த போது அவருடைய பதவியையும் பறித்து மக்களையும் கொன்று குவித்த மன்னரின் அராஜகச் செயல் மாசே துங் மனதில் இளம் வயதிலேயே பசுமரத்தாணியாய்ப் பதிந்தது. மேலும் ஷாலோசான் என்ற இடத்தில் நிலப்பிரபுக்கள் செய்த அட்டூழியத்தையும் பார்த்த மாசே துங் இவற்றை எதிர்கொள்ள கம்யூனிசமே வழியமைக்கும் என்று கருதிய வரலாற்றை ஜீவபாரதி நிரல்படக் காட்டியுள்ளார்.

“பண்டைய இலக்கியங்களையும், சரித்திர வீரர்களின் வாழ்க்கை வரலாற்றையும் படித்து வந்த அவன் மார்க்சிய நூல்களையும் படித்தான். இந்த வாசிப்பு அவனைக் கம்யூனிஸ்டாக்கியது. கட்சியில் படை அமைக்கும் பணியில் தீவிரமாகச் செயல்பட்டான். அப்போது ஆளும் வர்க்கத்தினர் அவனைக் கைது செய்து சுட்டுக் கொல்ல முயன்றனர். அதிலிருந்து அவன் தப்பினான். காலப்போக்கில் சீனக்

கம்யூனிஸ்ட் கட்சி அவன் தலைமையில் செயல்படத் தொடங்கியது. லாங்க் மார்ச்சுக்குத் (நீண்ட பயணம்) தலைமை ஏற்றான். 1945 ஆகஸ்ட் 25 அன்று சீனம் அவன் ஆளுகைக்குள் வந்தது. உலகம் சீனாவைத் திரும்பிப் பார்த்தது. 1976 செப்டம்பர் 9 அன்று அவன் இறந்தான். இடைப்பட்ட காலத்தில் சீன மக்களுக்காக அவன் செய்த சேவைகள் இன்றும் அந்த மக்களால் போற்றப்படுகிறது. கட்சியின் தொண்டன், செயல்வீரன், அமைப்பாளன், களப்பணியாளன், சிறந்த நிர்வாகி எனப் பல பொறுப்புகளைத் திறம்படச் செய்து முடித்த அவன் மிகச்சிறந்த கவிஞனும் கூட. அவன் கீழைக்காற்று மேற்கை வெல்லும்' என்று ஒரு கவிதை எழுதினான். ஆம்! உழைக்கும் வர்க்கமாகிய கீழைக்காற்று ஆதிக்க சக்திகளான மேற்கை வென்று காட்டியது. அதற்கு அவனுடைய பங்களிப்பு மகத்தானது. அவனே மாசேதுங்”[14] என்று புகழாரம் சூட்டுகின்றார் ஜீவபாரதி.

பொதுவுடைமைச் சிந்தனை மிக்க நூல்களைப் படிக்கிறபோது ஒருவன் தீவிர கம்யூனிஸ்ட் ஆவான் என்பதைவிட மிகச் சிறந்த படைப்பாளியாகவும் ஆகமுடியும் என்பதற்கு மாசேதுங் வாழ்வு பாடமாக அமைகிறது.

**பாப்லோ நெரூடா**

பாப்லோ நெரூடா உலகப் புகழ் பெற்ற சிலி நாட்டுக் கவிஞராவார். 1971இல் அவரது மகத்தான படைப்புகளைப் போற்றி நோபல்பரிசு வழங்கப்பட்டது.

“சிலி கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு உறுப்பினராக இருந்த நெரூடாவிற்கு நோபல் பரிசு வழங்கப்பட்டதை அதிசயங்களில் ஒன்றாகவே கருதினர். காதலையும், வாழ்க்கையின் சில அனுபவங்களையும் பற்றி மட்டும் பாடிய கவிஞரல்ல அவர். தேசிய விடுதலை, சர்வாதிகார எதிர்ப்பு, ஏகாதிபத்திய எதிர்ப்பு, சோசலிச வேட்கை என்ற அடிப்படைகளிலிருந்து கவிதைகளையும், கட்டுரைகளையும் எழுதினார். நோபல் பரிசு வழங்கிய குழுவினர் ‘எல்லையற்ற மனித மதிப்புகளைப் பாடிய கவிஞர்' என்றும், தென்னமெரிக்கக் கண்டத்தின் திசை வழியினையும், அதன் கனவுகளையும் உயிர்த் துடிப்புடன் சித்திரித்தவர் என்றும் போற்றினர்”[15] என்பார் எஸ்.ஜி.கீதானந்தன்.

கியூபாவின் மீதும், அதன் தலைவர் காஸ்ட்ரோவின் மீதும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்த கவிஞர் பாப்லோ நெரூடா ஆவார். அதனால் தான் பாப்லோ நெரூடா பாடுவது போலக் கருத்தை ஏற்றி, ‘பாப்லோ நெரூடா பாடுகிறார்' என்ற தலைப்பில்,

“கொரியா கியூபா

வியட்நாம் அனைத்திலும்

கொட்டிய ரத்தமடா — சிலியில்

கொட்டிய ரத்தமடா — நாளைச்

சீறிக் கிளம்பிடும்

சிங்கப் படைகளில்

செத்து மடிந்திடுவீர் – வேர்

அற்று அழிந்திடுவீர்”[16]

என்று ஜீவபாரதி பாடுவது பாப்லோ நெரூடாவை உள்வாங்கிய அவர்தம் மனப்போக்கை உள்ளபடியே காட்டுகிறது. ஜனாதிபதி தேர்தலில் சால்விடார் ஆலெண்டா நிறுத்தப்பட்டபோது பாப்லோ நெரூடா உள்ளிட்ட எழுத்தாளர்கள் தீவிரமாகப் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர். 1970–இல் ஜனாதிபதியாக ஆலெண்டோ தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனாலும் அவர் சதிகாரர்களால் கொல்லப்பட்டார் என்பது எதேச்சாதிகாரத்தின் ஆணவப் போக்கைக் காட்டுகிறது. இதைப் பற்றி பாப்லோ நெரூடா பாடுவதாக கவிஞர் ஜீவபாரதி பாடும் கவிதை நெரூடாவின் உள்ளத்தை நமக்கு நிறைவாய்க் காட்டுகிறது.

“மக்களால் தேர்ந்தெடுத்த

மாவீரன் ஆலெண் டோவை

மக்களை மதியா அந்த

மடையர்கள் கூட்டம் ஐயோ

குக்கரைப் போலச் சீறிக்

குரைத்தனர்! கொன்றனர்! ஈனர்

மக்களின் தலைவன் அந்தோ

மாண்டனன் போரில் நின்றே!

நேருக்கு நேரே நின்று

நெரூடாவாம் என்னை அந்தப்
போருக்கே அழைத்திருந்தால்
பூரிப்பேன் நானும் அந்த
வீரனாம் ஆலெண்டோ போல்
வெறியர்கள் கூட்டம் தன்னில்
நூறு நூறாயிரம் பேர்
வீழ்த்திடச் சுட்டிருப்பேன்''[17]

என்று ஆலெண்டோவைக் கொன்ற அநீதியைச் சுட்டுவதுடன் தான் போர்க்களத்தில் பங்கெடுக்காமல் போய் விட்டோமே என்ற ஆதங்கத்தை வெளிப்படுத்தியுள்ளார். தான் சென்றிருந்தால் அநீதி இழைக்கக் கூடிய நூறாயிரம் பேரைக் கூடச் சுட்டுத் தள்ளியிருப்பேன் என்று நெரூடா கூறும் போராட்டக் குணத்தைத் தம் கவிதையிலே வடித்துள்ளார் ஜீவபாரதி.

பாப்லோ நெரூடா வீட்டையும், அதிகாரக் கும்பல் சுற்றி வளைத்துக் கொண்டது. அப்போது நெரூடா “ தந்திக் கம்பியில் மாட்டிய விட்டில் பூச்சி போல் தவிக்கும் சிலி நாடே – நீ சிலிர்த்தெழு! என்று எழுதினார். இதுவே அவருடைய கடைசிக் கவிதை வரிகள். ஏற்கனவே புற்றுநோயால் பாதிக்கப்பட்டிருந்த நெரூடா 1973 செப்டம்பர் 23 அன்று மாரடைப்பால் மரணத்தைத் தழுவினார். அப்போது அவருக்கு வயது 69. நெரூடாவின் கவிதை நூல்கள் லட்சக் கணக்கில் விற்பனையாகி, மக்கள் கவிஞராக இன்னும் சிலி மக்கள் மனதில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்''[18] என்று நெரூடாவைப் பற்றிய சிந்தனையை நிறைவாகத் தருகின்றார் ஜீவபாரதி.

**விடுதலைக்கு வித்திட்ட உலகத் தலைவர்கள்**

மண் விடுதலைக்காகப் பாடுபட்ட பொதுவுடைமைச் சிந்தனையாளர்களை மறந்து விட முடியாது. வரலாற்றில் அவர்களின் பங்கு குறிக்கத்தக்கதாகும். வியட்நாம் விடுதலைக்குப் பாடுபட்ட ஹோசிமின், கியூபா விடுதலைக்குப் பாடுபட்ட சேகுவேரா, பாலஸ்தீன விடுதலைக்குப் பாடுபட்ட யாசர் அராபத், கறுப்பர் இன விடுதலைக்குப் பாடுபட்ட நெல்சன் மண்டேலா போன்றோர் குறித்து ஜீவபாரதி வரலாற்றுச் செய்திகளை அரிதின் முயன்று எழுதியுள்ளார்.

**ஹோசிமின்**

வியட்நாம் விடுதலைக்காகத் தீவிரமாகப் பாடுபட்டவர் ஹோசிமின். முதலில் ஜப்பானியர்களை எதிர்த்தும், அதன் பின் பிரெஞ்சுக்காரர்களை எதிர்த்தும், இறுதியில் அமெரிக்கர்களை எதிர்த்தும் வியட்நாம் மக்களைப் போராட வைத்து 1975–இல் வெற்றி வாகை சூடியவர். அவரை அறிமுகப்படுத்தும் போது, "ஒட்டிய கன்னம்; குழியில் கிடக்கும் விழிகள்; கறுப்பும், வெள்ளையும் கலந்த தலைமுடி; ஆட்டுக்கு இருப்பது போன்று கீழ்த் தாடையில் மட்டும் தாடியாகச் சில முடிகள்; அதற்கு ஏற்றாற் போன்று மீசை; எலும்பும், தோலுமான மெலிந்த தேகம்; மொத்தத்தில் அவருடைய கோட்டையும், சூட்டையும் அகற்றி அழுக்கான வேட்டியை மட்டும் அணிவித்தால் நம் தமிழகக் கிராமங்களில் ஆடுமாடுகளை மேய்க்கும் பெரியவர்களைப் போன்றே இருப்பார். இந்தத் தேகத்திற்குச் சொந்தக்காரரான அவர் தாம் பிறந்த தேசத்திற்காகப் பட்ட பாடுகளைப் படிக்கின்ற போது இந்த மேனிக்குள் இத்தனை சக்தியா? என்று வியக்காமல் இருக்க இயலாது"[19] என்கின்றார் ஜீவபாரதி. எளிமைக்குள் ஒரு வலிமை என்பதே இதன் பொருளாக அமைகிறது. அவர் தோற்றத்திற்கு ஆடு, மாடு மேய்க்கும் அழுக்கு வேட்டி கட்டிய பெரியவர்களின் தோற்றத்தைச் சொல்வது அவரின் எளிமையைப் பறைசாற்றுவதுடன், இன்னும் உடையிலே அழுக்கடைந்து இருக்கும் சாமான்யர்கள் தமிழகத்திலே இருக்கிறார்கள் என்பதாலே ஜீவபாரதி இந்த ஒப்பீட்டைச் செய்துள்ளார். அவர்கள் சமநிலைக்கு வர வேண்டும் என்பதே இதன் ஊடுபொருளாக அமைகிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க ஹோசிமின் பற்றிக் கூறும் போது சில புள்ளி விபரங்களையும் அடுக்கியுள்ளார் ஜீவபாரதி. "இரண்டாம் உலகப் போரில் அமெரிக்கப் போர் விமானங்கள் 20 லட்சம் டன் குண்டுகள் வீசின. கொரியப் போரில் 10 லட்சம் டன் குண்டுகளை வீசின. ஆனால் வியட்நாமில் ஒரு கோடியே 30 லட்சம் டன் குண்டுகள் வீசின. ஒரு வியத்நாமியனைக் கொல்வதற்குப் பத்தாயிரம் குண்டுகளையும், அதற்குப் பத்தாயிரம் டாலரையும், அமெரிக்கா செலவிட்டது. வியத்நாமியப் போருக்காக 1965–இல் பத்துக் கோடி டாலர்களை ஒதுக்கிய அமெரிக்கா, 1966–இல் 600 கோடி டாலர்களையும், 1971–இல் 9810 கோடி டாலர்களையும் ஒதுக்கியது. 1969 இறுதி வரை 55 லட்சம் ஏக்கர் பயிர் நிலத்தில் ஒரு கோடியே 50 லட்சம் கேலன் கிருமி நாசினி விஷத்தைத் தூவி வியத்நாம் நிலங்களை அமெரிக்கர் பாழ்படுத்தினர். 1966 — 71 காலங்களில் வியத்நாமைத் தாக்குவதற்காக நாளொன்றுக்கு 5 கோடியே 45 லட்சம் டாலர்களை அமெரிக்கா செலவிட்டது. ஒரு சதுர கிலோ மீட்டர் வியத்நாம் நிலத்தைப் பாழ்படுத்த ஒரு

லட்சத்து 56 ஆயிரம் டாலர்களை அமெரிக்கா செலவிட்டது. 1975 பிப்ரவரியில் ஒரே நாளில் மட்டும் வியத்நாம் மீது 184 முறை அமெரிக்கா விமானத் தாக்குதல் நடத்தியது. இத்தனை செய்தும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தால் வியத்நாமில் காலூன்ற முடியவில்லை. ஆம். ஹோசிமின் என்ற மகத்தான மனிதரின் தலைமையில் வியத்நாம் மக்கள் எழுந்தனர். அமெரிக்காவின் நவீன ஆயுதங்களை இருக்கும் ஆயுதங்களைக் கொண்டு வியத்நாம் வீரர்கள் தகர்த்தனர். ஆம். மனவலிமை என்ற ஆயுதத்தையும், தேசபக்தி என்ற சத்தியத்தையும் ஏந்திய வியத்நாமியர் இறுதியில் வாகை சூடினர்”[20] என்கின்றார் ஜீவபாரதி.

ஹோசிமின் வலிமை மிக்கவர் என்பதோடு புரட்சிக்காரராக அவர் மாறியதற்கான காரணத்தை அவரே சொல்லும் வரலாற்று நிகழ்வையும் ஜீவபாரதி காட்டியிருப்பது குறிப்பிடத் தக்கது.

“ஆரம்பத்தில் தேசபக்திதான் லெனினிடத்திலும், மூன்றாம் அகிலத்திலும் எனக்கு நம்பிக்கை ஏற்படச் செய்தது. படிப்படியாக, போராட்டத்தின் வாயிலாக, நடைமுறை நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்வதுடன் கூடவே, மார்க்சியம், லெனினியத்தைப் பயின்றதன் மூலம் நான் படிப்படியாக சோசலிசமும் கம்யூனிசமும் தான் ஒடுக்கப்பட்ட நாடுகளையும், உலகெங்குமுள்ள உழைப்பாளி மக்களையும் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை செய்ய முடியும் என்ற உண்மையை உணர்ந்தேன் என்று தான் புரட்சிக்காரராக மாறியதற்கான காரணத்தைத் தனது ‘லெனினியத்திற்கு என்னை இட்டுச் சென்ற பாதை’ என்ற நூலில் ஹோசிமின் குறிப்பிடுகிறார்”[21] என்று போராட்டக்காரராக மாறியதற்கான காரணத்தை ஹோசிமினே கூறிய அரிய வரலாற்றுக் குறிப்பைப் படைத்துள்ளார் ஜீவபாரதி.

**பிடல் காஸ்ட்ரோ மற்றும் சேகுவேரா**

கியூபா விடுதலைக்கு வித்திட்ட பிடல் காஸ்ட்ரோ பற்றியும், சேகுவேரா பற்றியும் ஜீவபாரதி எழுதிய பதிவுகள் கவனிக்கத் தக்கவையாக உள்ளன. தொடக்க காலத்தில் இருந்தே அமெரிக்காவிற்குச் சிம்ம சொப்பனமாகத் திகழ்ந்தவர் பிடல் காஸ்ட்ரோ. கியூபாவின் விடுதலைக்கு வித்திட்டவர். சோவியத் யூனியன் போன்ற நாடுகளில் ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்ட போது கியூபாவில் பிடல் காஸ்ட்ரோ தோல்வியைத் தழுவுவார் என்று அமெரிக்கா எதிர்பார்த்தது. ஆனால் அதற்குப் பின்பும் கியூபா மேலும் மேலும் சோசலிசப் பாதையில் முன்னோக்கிச் சென்று அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. அத்தகைய கியூபாவின் மிகப்பெரிய போராட்டக்காரர் பிடல்காஸ்ட்ரோவிற்குப் பக்கபலமாக நின்று கியூபாவின் விடுதலையைப் பெற்றுத்

தந்தவர் மாவீரன் சேகுவேரா என்கின்றார் ஜீவபாரதி. சேகுவேராவை அறிமுகப்படுத்தும் போது ஜீவபாரதி “அவன் கியூபாவில் பிறந்தவனில்லை. ஆனால் கியூபாவின் புரட்சிக்கு பிடல் காஸ்ட்ரோவுடன் இணைந்து போராடி வெற்றி கண்டவன். கியூபாவின் வங்கித் தலைவர் பொறுப்பை அவனுக்கு பிடல்காஸ்ட்ரோ வழங்கியபோதும், அடுத்த நாட்டுப் புரட்சிக்காகப் பதவியைத் துறந்து காங்கோவை நோக்கிப் பயணித்தவன். காங்கோவை விட பொலிவியாவில்தான் தன்னுடைய புரட்சிப்பணி அதிகமாகத் தேவைப்படுகிறது என்று எண்ணி பொலிவியாவில் முகாமிட்டவன். ஆளும் வர்க்கத்தையும், அவர்களின் அடிவருடிகளையும், அமெரிக்க ஏகாதிபத்தியத்தையும் தன்னுடைய பொலிவியா வருகையினால் அதிரச் செய்தவன்: அலற வைத்தவன்”[22] என்று ஜீவபாரதி சொல்வதிலிருந்து சேகுவேராவின் கம்யூனிசச் சிந்தனையை உணர முடிகிறது. ஒரு போராட்டக் காரனுக்குத் தன் தேசம் மட்டும் விடுதலை பெற்றால் போதாது. உலகம் முழுவதும் விடுதலையடைய வேண்டும் என்ற பொதுமைப் பண்பு மேலோங்கித் திகழும் என்பதனை அறிய முடிகிறது. பொலிவியா விடுதலைக்குப் போராடும் போது பல ஆயுதங்களைக் கைப்பற்றி, அந்த ஆயுதங்களாலே எதிரிகளை வீழ்த்தினர். மாவீரன் சேகுவேரா யூரோ கணவாய் வழியாக நடந்து வரும் போது ஏகாதிபத்தியக் கைக் கூலிகளால் காட்டிக் கொடுக்கப்பட்டு கைது செய்யப்படுகிறான். லாஹிகுவேரா கிராமத்தின் பள்ளியில் அடைத்து வைக்கப்படுகிறான். அப்போதும் அச்சம் கொள்ளாத சேகுவேரா கைது செய்தவர்களிடம் உரையாற்றியுள்ளான்.

“நான் இந்தப் போரில் தோற்றுவிட்டேன் என்றாலும், புரட்சிப் போர் தொடரும் என்று பிடலுக்குச் சொல்லுங்கள். என் மனைவி அடிலெய்டாவிடம், உன் கணவன் கடைசி வரை போராடினான் என்று கூறுவதோடு, கலங்க வேண்டாம் என்றும், மறுமணம் செய்து கொள்ளும்படிச் சொன்னேன் என்றும் கூறுங்கள். குழந்தைகள் அனைவரையும், நன்றாகப் படிக்கச் சொல்லுங்கள். படித்து முடித்த பின் புரட்சிப் போரில் பங்கேற்கச் சொல்லுங்கள். நான் தான் தோற்றுவிட்டேன். புரட்சி தோற்கவில்லை. இது தொடரும் என்று கூறுங்கள் என்று அந்த மாவீரன் கூறினான். இது தான் அவனுடைய இறுதி வார்த்தைகள்”[23] என்று ஜீவபாரதி பதிவு செய்கின்றார்.

சாகும் போது கூட புரட்சி தோற்காது; தொடரும் என்று கூறும் அவரது போராட்டக் குணம் வியந்து போற்றத் தக்கது. என் மனைவியை மறுமணம் செய்து கொள்ளச் சொல்லுங்கள். என் பிள்ளைகளைப் படித்து முடித்த பின் போராட்டத்தில்

பங்குபெறச் சொல்லுங்கள் என்று சொல்லியிருப்பது சேகுவேராவின் தீவிர மார்க்சிய எண்ணத்தைப் பிரதிபலிப்பதாய் அமைகிறது.

1967 அக்டோபர் 9 அன்று அந்த மாவீரனைக் கொல்வதற்குப் பள்ளிக்குள் அனுப்பப்பட்ட ரெக்டரான் என்பவன் சேகுவேராவைக் கொல்லும் மனமின்றி நிலை தடுமாறியுள்ளான் என்றும் அதன் பின் மது அருந்திய பின் அந்த மாவீரனை ஒன்பது இடங்களில் சுட்டான் என்றும் ஜீவபாரதி கூறுகிறார். இறந்தபின் அந்த மாவீரனின் இரண்டு கைகளையும் தனியாக வெட்டி எடுத்தனர். எஞ்சிய பகுதிகளை ரகசிய இடத்தில் புதைத்து வைத்தனர். அந்த மாவீரன் தான் உலகப் புரட்சியாளர்களால் “சே” என்று அழைக்கப்படும் சேகுவேரா. சேவின் எலும்புகளைக் காண ஆயிரக்கணக்கான கியூபா மக்கள் குவிந்தனர் என்றும், கியூபா தேசத்தின் மீது அமெரிக்க ஏகாதிபத்தியம் போர் தொடுத்தால், கியூபாவில் புதைக்கப்பட்டிருக்கும் ‘சே’வின் எலும்பும் எழுந்து நின்று ஆயுதம் ஏந்தும் என்பது எதிரிக்கும் தெரியும் என்று ஜீவபாரதி எழுதியுள்ளார். அந்த அளவுக்கு மன உறுதி கம்யூனிசச் சிந்தனையாளர்களுக்கு இருக்கும் என்பதனை இந்தச் சான்று மெய்ப்பிக்கிறது.

**யாசர் அராபத்**

பாலஸ்தீனிய விடுதலைக்குப் பாடுபட்ட யாசர் அராபத் பற்றியும் ஜீவபாரதி எழுதத் தவறவில்லை. அவரை ‘பாலஸ்தீனப் புயல்’ என்றே வர்ணிக்கின்றார்.

பாலஸ்தீனத்தின் 87 சதவீதம் முஸ்லீம்களுக்கும், 13 சதவீதம் யூதர்களுக்கும் எனப் பிரித்ததுடன் ஜெருசலம் இருவருக்கும் பொது என்றும் 1947 நவம்பர் 29 அன்று ஐ.நா சபை அறிவித்தது. இந்த அறிவிப்பை முஸ்லீம்கள் எதிர்த்தனர். உள்நாட்டுப் போர் தொடங்கி, திரைமறைவாக அமெரிக்காவும், பிரிட்டனும் யூதர்களுக்குத் துணை நின்றதால் முஸ்லீம்கள் தோற்கடிக்கப்பட்டனர். வேறு வழியின்றி முஸ்லீம்கள் வெளியேறி முஸ்லீம் நாடுகளில் தஞ்சம் புகுந்தனர். தாங்கள் கைப்பற்றிய பாலஸ்தீனப் பகுதியை ‘இஸ்ரேல் நாடு’ என்று 1948 மே 11 அன்று யூதர்கள் அறிவித்தனர். இந்த அறிவிப்பு வெளிவந்த பதினோறாம் நிமிடத்தில் இஸ்ரேலை அமெரிக்கா அங்கீகரித்தது.

இந்தக் கொடுமையை எதிர்க்க கெய்ரோ பல்கலைக்கழகத்தில் கட்டடக் கலைப் பொறியியல் படிப்பினைப் படித்துக் கொண்டிருந்த அராபத் அதே கல்லூரியில் படித்த பாலஸ்தீன மாணவர்களை இணைத்து 1949–இல் பாலஸ்தீன மாணவர் அமைப்பு அமைத்தார். 1959–இல் அல்ஃபதர் அமைப்பு, 1965இல் பதாகொரில்லா இயக்கம், 1969–

இல் பாலஸ்தீன விடுதலை இயக்கம் என இஸ்ரேலை எதிர்ப்பதற்கு அராபத் கண்ட இயக்கங்களை ஜீவபாரதி வரலாற்றுப் பார்வையோடு படைத்துள்ளார். இதற்கு முதலில் ஜோர்டான் உதவியுள்ளது. பின்னர் அமெரிக்க அச்சுறுத்தலால் ஒத்துழைக்க மறுத்துள்ளது. அதனால் லெபனான், சிரியா, குனிஷியா என அராபத்தின் விடுதலைப் படை ஒவ்வொரு நாடாக அலைந்துள்ளது. பின்னர் ஐ.நா. சபையில் பேசுவதற்கு அராபத் அழைக்கப்பட்டுள்ளார். அப்போது அராபத் பேசிய வரலாற்றுத்துவம் வாய்ந்த பேச்சினை ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார்.

“நான் இங்கே நிராயுதபாணியாக வரவில்லை. என் ஒரு கையில் சமாதானத்துக்கான ஆலிவ் இலையையும், மறுகையில் எம் தாய்நாட்டின் விடுதலைக்காகத் துப்பாக்கியையும் கொண்டு வந்திருக்கிறேன். நான் எதைக் கீழே போட வேண்டும். எதைக் கையில் ஏந்த வேண்டும் என்பதை என் எதிரிகள் தான் முடிவு செய்ய வேண்டும். இருப்பினும் உலக மக்களுக்கு என் கையில் இருக்கும் ஆலிவ் இலையையே உயர்த்திக்காட்ட விரும்புகிறேன் என்று அராபத் முழங்கினார்”[24] என்ற செய்தியை ஜீவபாரதி எழுதியிருப்பது அராபத்தின் சமத்துவச் சிந்தனையையும், சமாதானச் சிந்தனையையும் பிரதிபலிப்பதாக உள்ளது.

மிகப்பெரிய போராட்டக் குணம் மிக்க அராபத் எதிரிகளின் தவறுகளைக் களைந்து சமூகத்தில் பொதுவுடைமை பூக்க வேண்டும் என்ற எண்ணம் உடையவராகவே காணப்பட்டார் என்று ஜீவபாரதி உறுதி செய்கின்றார்.

நார்வே நாட்டின் முழு முயற்சியோடு இஸ்ரேல் பிரதமர் இஷாக் ராபினும், யாசர் அராபத்தும் சந்தித்து 1993–இல் ஒப்பந்தம் போட்டனர். இஸ்ரேல் நாட்டுக்கு உட்பட்ட சுயாட்சி பிரதேசமாக பாலஸ்தீனம் அறிவிக்கப்பட்டது. தொடர்ந்து பாலஸ்தீனத்தைத் தனி நாடாக அறிவிக்கக் கோரி இஸ்ரேலை அராபத் வலியுறுத்தி வந்தார். 2000 ஜுலை 11 அன்று தொடங்கி ஒன்பது நாட்கள் பேசியும் இஸ்ரேல் பிரதமர் எகூத் பராக்குடன் உடன்பாடு ஏற்படாமல் அராபத் பேச்சு வார்த்தையிலிருந்து வெளியேறியுள்ளார். தீவிரவாதிகளை அடக்கத் தவறியதாக அராபத் மேல் பொய்க்குற்றம் சுமத்தி இஸ்ரேல் அராபத் தங்கியிருந்த ரமல்லா நகரத்தை 2001 டிசம்பர் 3 இல் இஸ்ரேல் படை முற்றுகையிட்டது. அராபத் தங்கிய மாளிகையில் மின்வசதி, தண்ணீர்க் குழாய் துண்டிக்கப்பட்டன. உணவுப் பொருள்கள் மறுக்கப்பட்டன. மெழுகுவர்த்தி ஒளியிலே மூன்றாண்டுகள் வீட்டுக் கைதியாக இருந்துள்ளார். ஐ.நா இதைக் கண்டிக்க முடியவில்லை என்று கூறும் ஜீவபாரதி 2004 அக்டோபர் 27 அன்று தான் சிகிச்சைக்காக பாரீஸ் செல்ல அராபத்தை இஸ்ரேல் அனுமதித்தது.

2004 நவம்பர் 11 அன்று பாரீஸ் மருத்துவமனையில் அராபத் மறைந்தார். சதிகாரர்களின் சூழ்ச்சியால் ஒரு சரித்திர நாயகனின் வாழ்வு முடிந்தது என்று அராபத் பற்றிக் கவலை கொள்கின்றார் ஜீவபாரதி.

**நெல்சன் மண்டேலா**

கறுப்பர் இனம், வெள்ளையர் இனம் என்று பாகுபடுத்திப் பார்த்த இழிநிலையை மாற்றி இனவிடுதலைக்குப் பாடுபட்ட நெல்சன் மண்டேலா பற்றியும் ஜீவபாரதி சில வரலாற்றுக் குறிப்புகள் தந்துள்ளார்.

“வெள்ளையர் ஆதிக்கம் நிறைந்த ஒரு சமுதாயத்துடன் ஒப்பிடுகையில் கறுப்பர் தேசம் ஒரு ஒடுக்கப்பட்ட தேசமாகும். இதை ஆப்பிரிக்க, அமெரிக்கர்களின் பொருளாதார மற்றும் சமூக அடையாளங்களின் எந்த ஒன்றையும் கொண்டு காண முடியும். எப்படியாயினும், ஒரு ஒடுக்கப்பட்ட தேசம் ஒரு தனி வகைப்பட்ட குணாம்சங்களைக் கொண்டிருக்கிறது. நவீன சகாப்தத்தில் ஏழை — பணக்காரர், தொழிலாளர்கள் – முதலாளிகள், சுரண்டுவோர் – சுரண்டப்படுவோர் என ஒவ்வொரு தேசமும் வர்க்கங்களாகப் பிளவு பட்டுள்ளது. இதுவே ஒடுக்கப்பட்ட தேசங்களின் குணாம்சமாகும்”[25] என்பார் நிழல்வண்ணன்.

அப்படி அடக்கப்பட்ட இனவெறியிலிருந்து விடுதலை பெற்றுத் தந்தவர் தான் நெல்சன் மண்டேலா. கறுப்பர் இனத்தில் பிறந்திருந்தாலும், வசதி வாய்ப்பு அதிகம் இருந்ததால் வறுமை தன்னைத் தீண்டவில்லை என்றாலும் மொத்தத்தில் கறுப்பர் இனத்திற்காகப் பாடுபட்டவர்தான் நெல்சன் மண்டேலா என்று எழுதுகின்றார் ஜீவபாரதி. கல்லூரியிலேயே கறுப்பர் இன இளைஞர்களைக் கொண்டு பல போராட்டங்களை நடத்தி அதனால் கல்லூரியிலிருந்து வெளியேற்றப்பட்டுள்ளார்.

பின்னர் அரசியல் பக்கம் சென்று வெள்ளையர் மட்டுமே கலந்து கொள்ளும் தேர்தல் முறையை எதிர்த்துக் களம் கண்டார். அரசுக்கு எதிராக இளைஞர்களைத் தூண்டுகிறார் என்று ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. இதைப் பற்றி ஜீவபாரதி எழுதும் போது, “உலக நாடுகளின் தொடர் வற்புறுத்தல், உள்நாட்டு மக்களின் ஆவேசம் ஆகிய அனைத்தும் இணைந்து, ஆளும் வர்க்கத்தைப் பணியச் செய்தது. 27 ஆண்டுகள் கழித்து அவன் விடுதலை செய்யப்பட்டான். ஆம் உலகத்தில் இத்தனை ஆண்டுகள் சிறை வாழ்ந்தது அவன் மட்டுமே. சிறையிலிருந்து வெளி வந்த அவனை, ‘சிறையில் மனத்திட்பத்துடன் இத்தனை ஆண்டுகள் உங்களால் எப்படி வாழ முடிந்தது! என்று பத்திரிகையாளர்கள் கேட்ட போது அவன்

இந்தியாவை நோக்கி வணங்கினான். காரணம் புரியாமல் பத்திரிகையாளர்கள் விளக்கம் கேட்ட போது 'காந்திஜி வாழ்க்கை எனக்கு மன தைரியத்தைக் கற்றுக் கொடுத்தது' என்றான்'[26] என்று எழுதுகின்றார் ஜீவபாரதி.

விடுதலை பெற்ற பின் ஆளும் வர்க்கம் நடத்திய தேர்தலில் மண்டேலா கட்சி ஆட்சியைப் பிடித்தது. இவ்வெற்றிக்குப் பின்னர் கறுப்பு – வெள்ளை வேறுபாடின்றி ஆட்சி நடத்தியதை உலகமே திரும்பிப் பார்த்தது என்கின்றார் ஜீவபாரதி.

உலகம் வியந்த போது மகன் எய்ட்ஸ் நோயால் இறந்தான். மனைவி கடத்தல் வழக்கில் சிக்கிக் கைதானார். அதனால் மனைவி என்றும் பாராமல் தள்ளி வைத்தார். ஐந்தாண்டு முடிந்து மீண்டும் தேர்தல் வந்தது. மக்களெல்லாம் அதிபர் பதவிக்கு நிற்கச் சொல்லி மண்டேலாவை வற்புறுத்திய போது மற்றவர்களுக்கு அந்த வாய்ப்பை விட்டுக் கொடுத்தார். இந்த நல்ல பண்பினை நினைத்து ஜீவபாரதி அதிசயிக்கின்றார்.

"கிடைத்த பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சாகும் வரை பதவியிலிருப்பதே வாழ்க்கையின் லட்சியம் எனப் பெரும்பான்மையோர் வாழும் இந்த வையத்தில் பதவியைத் துறந்த அவனுடைய செயல் உலகத்தை வியக்கச் செய்தது. சிறையில் வாழ்ந்த போதும் வருந்தவில்லை. அதிபர் ஆனபோதும் மகிழவில்லை. மனைவியைப் பிரிந்ததை நினைத்துத் துடிக்கவில்லை. நோபல் பரிசு கிடைத்தபோது குதிக்கவில்லை. ஆம் அவன் இன்பம், துன்பம் அனைத்தையும் ஒரே மனநிலையில் எதிர் கொண்டான்"[27] என்று நெல்சன் மண்டேலாவின் ஒரு படித்தான உணர்வினை விளக்குகின்றார்.

**இந்தியப் புரட்சியாளர்கள் பற்றிய வரலாற்றுப் பார்வை**

உலகளாவிய மார்க்சியச் சிந்தனை மிக்க வரலாற்று நாயகர்களை அடையாளப் படுத்திய ஜீவபாரதி இந்திய அளவிலான வரலாற்றுத் தலைவர்களையும் பதிவு செய்துள்ளார்.

"இந்தியர்கள் வரலாற்று உணர்வில்லாதவர்கள். அவர்கள் தங்களது வரலாற்று ஆவணங்களைப் பாதுகாத்து வைக்கவில்லை என்பது ஒரு பொது ஜன நம்பிக்கை. இந்தியர்கள் தங்களது ஆவணங்களைப் பாதுகாத்துத் தான் வைத்திருக்கிறார்கள். எவை முக்கியமானவை எனப் பண்டைய இந்தியர்கள் கருதினார்களோ அவற்றையெல்லாம் காப்பாற்றி வைத்துள்ளார்கள். கொடி வழிப் பட்டியல்கள்,

கோமிலொழுகுகள், விகாரை வரலாறுகள் போன்ற சமய நிறுவனங்களின் சரித்திரங்கள் இவையெல்லாம் இன்று கிடைக்கின்றன. இவை வரலாற்று மரபின் மூலப் பகுதிகள் தாம். ஆனால் அவை சமகால நிகழ்ச்சிகளின் வருணனைகளாக இல்லாததால் வரலாற்றுச் சான்றுகள் என்ற தன்மையில் உயர்ந்த மதிப்புடையன அல்ல"[28] என்பார் வரலாற்றறிஞர் ரொமீலா தாப்பர்.

இந்த மனக்குறையை நீக்கும் பொருட்டுப் பல வரலாற்றுத் தலைவர்களின் போராட்டம் மிகுந்த வாழ்வியலைச் சம காலத்திலேயே ஜீவபாரதி வெளிக்கொணர்ந்துள்ளார். இந்திய அளவில் படைப்புலக மேதைகளாக இருந்த பொதுவுடைமைச் சிந்தனையாளர்களான ஸ்ரீஸ்ரீ, எஸ்.ஏ.டாங்கே, சரோஜினி நாயுடு போன்றோரை அடையாளம் கண்டு ஜீவபாரதி எழுதியுள்ளார்.

**ஆந்திரக் கவிஞர் ஸ்ரீஸ்ரீ**

ஆந்திரக் கவிஞர் ஸ்ரீஸ்ரீயை செங்கொடியை நேசித்த கவிஞன் என்று ஜீவபாரதி எழுதுகின்றார். "எழுத்தாளன் தனது சமகால மனிதனின் அக வாழ்க்கையைச் சுருக்கத்துடனும், சரியான செயல்முறைகளுடனும் ஊடுருவிப் பார்க்கின்ற பார்வையுடனும் வெளிப்படுத்த வேண்டும்"[29] என்பார் கான்ஸ்டான்டின்ஃபெடின்.

அந்த வகையில் சமகாலச் சிந்தனையில் மேலோங்கி நின்றதோடு மண்ணில் புரட்சியை விதைத்த கவிஞர் ஸ்ரீ ஸ்ரீ ஆவார்.

தெலுங்குத் திரைப்படமான மாதல்லா ரங்காராவின் 'விப்லவ சங்கம்' என்ற திரைப்படத்திற்கு ஸ்ரீ ஸ்ரீயால் எழுதப்பட்ட 'சில இளைஞர் கிழடு தட்டி வாழுகின்றார் பூமியில்' என்ற பாடல் சிறந்த பாடலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அன்றைய முதல்வரான என்.டி.ராமாராவ் அவர்களின் கையால் பரிசு பெற்றார். பரிசளிப்பு விழாவில் பேசிய ஸ்ரீ ஸ்ரீயின் துணிச்சல் மிகுந்த பேச்சையும், பொதுவுடைமைப் பண்பு மிக்க கவிஞரின் உணர்ச்சியையும் ஜீவபாரதி பாராட்டி எழுதியுள்ளார்.

"என்.டி.ஆருடன் எனக்கு முப்பது வருடத் தொடர்புண்டு. சில இளைஞர் கிழடு தட்டி வாழுகின்றார் பூமியில்' என்ற எனது பாடலைச் சிறந்த பாடலாகத் தேர்ந்தெடுத்து இப்போது இங்கே எனக்குப் பரிசு வழங்கப்பட்டது. ஆனால், அதே படத்தில் நான் எழுதி வெளிவந்திருக்கும் 'ஒரு வீரனின் குரல் வளை நெரிக்கப்பட்டால் – அது ஆயிரம் குரல்களாக எதிரொலிக்கும்' என்ற புரட்சிப்

பாடலைத் தான் தேர்வு செய்து பரிசு கொடுத்திருக்க வேண்டும். அந்தப் பாடலே என்னைச் சிறப்பிப்பதற்குத் தகுதியான பாடலாகும். என் வாழ்க்கையில் எனக்குப் பிடித்த பாடலும் அது தான். அந்தப் பாடலைத் தேர்ந்தெடுத்து என்.டி.ஆர் கையினால் அல்ல. ஒரு புரட்சிக்காரனாகவே வாழ்ந்து கொண்டிருக்கும் மாதல்லா ரங்காராவ் கையினால் நான் பரிசு பெற்றிருந்தால் மிகவும் மகிழ்ந்திருப்பேன் என்று பேசினார்''[30] என்ற ஸ்ரீ ஸ்ரீயின் சிந்தனைத் தெளிவை ஜீவபாரதி விளக்கியுள்ளார்.

தனக்குப் பரிசும், பதவிகளும் கிடைக்காதா? ஆளும் வர்க்கத்தின் அருகில் அடிவருடியாக இருக்கும் பாக்கியம் கிட்டாதா என்று நினைக்கும் உலகில் ஸ்ரீ ஸ்ரீ ஒரு மாநில முதல்வர் கொடுக்கும் விருதுக்கான அவர்தம் பாடலில் எனக்குத் திருப்தியில்லை என்று கூறி புரட்சிமிக்க ஒரு பாடலைக் காட்டி அதற்குத் தான் எனக்குப் பரிசு தருவதானால் தந்திருக்க வேண்டும் என்பது அவர்தம் உள்ள உறுதியையும், ஆளும் வர்க்கத்தின் ஆளுகைக்கு உட்படாத தன்மான உணர்வையும் தெளிவாக்குகிறது.

புற்றுநோயால் அவதிப்பட்டு அந்தக் கவிஞன் இறந்தபோது அவர்தம் உடலின் மீது செங்கொடி போர்த்தப்பட்டது. கவிஞருக்கு மிகவும் பிடித்த புரட்சிச் சிந்தனையாளர் மாதல்லா ரங்காராவ் தான் அந்தச் செங்கொடியைப் போர்த்தியுள்ளார். அந்த வரலாற்றையும் ஜீவபாரதி எழுதியுள்ளார்.

''*1983* ஜீன் *15*.... மாதல்லா ரங்காராவின் வீட்டுத் தொலைபேசி சிணுங்கியது. எடுத்த மாதல்லா ரங்காராவ் கிடைத்த செய்தியால் துடித்தார். 'விப்லவ சங்கம்' திரைப்படத்தில் மக்களுக்குத் தலைமை தாங்கி வரும் போது கையில் கம்பீரமாக அவர் பிடித்து வந்த சில்க் துணியில் தைக்கப்பட்டிருந்த மிகப்பெரிய செங்கொடியை எடுத்தார். அந்தக் கவிஞனின் இல்லத்திற்கு விரைந்தார். உயிரற்ற அந்தக் கவிஞனின் உடல் மீது அந்தச் செங்கொடியை மாதல்லா ரங்காராவ் போர்த்தினார். ஆம். தாம் இறந்தபின் முதன் முதலாக மாதல்லா ரங்காராவ் தான் செங்கொடியை என் மீது போர்த்த வேண்டும் என்று அந்தக் கவிஞன் உயில் எழுதி வைத்திருந்தார். இதோ அந்தக் கவிஞனின் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. ஆம். அந்த மகத்தான கவிஞன் தான் தெலுங்கு மக்களால் புரட்சிக்கவி என்று இன்றும் அழைக்கப்படுகிற ஸ்ரீஸ்ரீ''[31] என்று கூறுகிறார் ஜீவபாரதி.

இறக்கும் போதும் செங்கொடியோடே சாக வேண்டும் என்று நினைத்தது அவர்தம் கம்யூனிசச் சிந்தனையைக் காலம் முழுவதும் பேசுவதாய் அமைகிறது.

அக்கொடியையும் தன் தோழமைக்குரிய மாதல்லா ரங்காராவ் போர்த்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும் நட்புக்குப் பலம் சேர்ப்பதாய் அமைகிறது.

**எஸ்.ஏ.டாங்கே**

ஜீவபாரதியின் வரலாற்றுப் பதிவுகளில் மேலும் பல தகவல்கள் குறிப்பிடத் தக்கன. மகாராஷ்டிர மாநிலத்தில் லெனினைப் பற்றி வெளிவந்த முதல் நூலான 'காந்தியும் லெனினும்' என்ற நூலை எழுதிய எஸ்.ஏ.டாங்கே பற்றிய செய்திகள் முக்கியத்துவம் வாய்ந்தனவாகும்.

"கட்டாயமாகப் பைபிள் படிக்க வேண்டும் என்று கல்லூரி நிருவாகம் வலியுறுத்தியது. அதை எதிர்த்து மாணவர்கள் போராட்டம் நடத்தினர். இந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டதால் அன்று அந்தக் கல்லூரியில் பி.ஏ. படித்துக் கொண்டிருந்த எஸ்.ஏ.டாங்கேயும் கல்லூரியிலிருந்து வெளியேற்றப்பட்டார். வில்சன் கல்லூரியிலிருந்து வெளியேறிய எஸ்.ஏ.டாங்கே பொது வாழ்க்கையில் ஈடுபடத் துணிந்தார். அன்று காந்திய எழுச்சி இந்தியா முழுவதும் எதிரொலித்த போதிலும், லெனின் கருத்துக்களே எஸ்.ஏ டாங்கேயைக் கவர்ந்தன. 1922 ஆகஸ்டு 5 அன்று எஸ்.ஏ.டாங்கே சோஷலிஸ்ட் என்ற வாரப் பத்திரிகையை வெளியிட்டார். இந்தப் பத்திரிகையின் முதல் இதழைப் படித்து விட்டு பிரெஞ்சு வங்கியில் பணியாற்றிக் கொண்டிருந்த எஸ்.எஸ்.மிராஜ்கர் சோசலிஸ்ட் பத்திரிகையைப் படிப்பதிலும், விற்பனையாளர்களிடம் பத்திரிகையைக் கொண்டு சேர்ப்பதிலும் தம்மை இணைத்துக் கொண்டார். எஸ்.ஏ.டாங்கேயின் இந்த சோசலிஸ்ட் பத்திரிகை லெனின் பார்வைக்கும் சென்றது"[32] என்கிறார் ஜீவபாரதி.

ஜீவபாரதியின் இத்தகைய பதிவு எஸ்.ஏ.டாங்கேயின் மத எதிர்ப்பையும், கம்யூனிசப் பொதுவுடைமைச் சிந்தனையையும் தெளிவுறக் காட்டுவதாய் அமைகிறது.

**சரோஜினி நாயுடு**

பொதுவுடைமைச் சிந்தனை குறித்த வெளிப்படையான பார்வை ஜீவபாரதியிடம் மண்டிக் கிடப்பினும் மாற்று இயக்கத் தலைவர்களிடம் உள்ள வியத்தகு பண்புகளைப் பாராட்டவும் தயங்குவதில்லை. காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்தவர் தான் கவிக்குயில் சரோஜினி நாயுடு என்றாலும் அவரிடம் மிகுந்திருந்த தேசப் பற்றையும், பொதுவுடைமைக் குணத்தையும் வெகுவாகப் பாராட்டிச் சில வரலாற்றுக் குறிப்புகளையும் பதியமிடுகின்றார்.

1925ஆம் ஆண்டு கான்பூர் காங்கிரஸ் மாநாட்டில் கவிக்குயில் சரோஜினி நாயுடு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்த வரலாற்றைச் சொல்ல முற்படும் ஜீவபாரதி, சரோஜினி நாயுடு அந்த மாநாட்டில் ஆற்றிய உரையை வெளிப்படுத்தியுள்ளார்.

"நாடு விடுதலை பெற வேண்டும் என்பதைப் பற்றி இந்தியர்களுக்குள் கருத்து வேற்றுமை கிடையாது. ஆனால் விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கள் அதிகாரிகளைக் கண்டு அஞ்சினால், அது மன்னிக்க முடியாத பெரும் துரோகமாகும். நாட்டின் விடுதலைக்காகச் செய்ய வேண்டிய தியாகத்தின் அளவையும், கடக்க வேண்டிய தூரத்தையும், கணக்கிட்டுச் சோர்வு கொள்வது மன்னிக்க முடியாத பாவமாகும். அச்சத்தையும், அயர்வையும் அகற்றி நம்பிக்கையையும், துணிச்சலையும் உறுதியாகப் பூண்டு நாட்டின் விடுதலைக்காக நாம் அனைவரும் சேவை செய்யவேண்டும் என்று முழங்கினார். இந்த முழக்கம் அந்த மாநாட்டில் கலந்து கொண்ட தேச பக்தர்களை எழுச்சி கொள்ளச் செய்தது. பெண் தானே என்று இளக்காரமாக நினைத்த சிலரையும், அந்தக் காங்கிரஸ் தலைவியின் முழக்கம் வியப்பில் ஆழ்த்தியது. ஆம். இந்திய தேசிய காங்கிரஸ் கட்சி என்ற அமைப்பின் தலைவராகத் தேர்வு செய்யப்பட்ட முதல் பெண்மணியான அவர் தேசம் சுதந்திரம் கண்ட பின் ஐக்கிய மாகாண கவர்னராக நியமிக்கப்பட்டு இந்தியாவிலேயே கவர்னர் பொறுப்பேற்ற முதல் பெண்மணி என்ற சிறப்பையும் பெற்றார்"[33] என்கின்றார் ஜீவபாரதி.

இதன் மூலம் ஒரு வரலாற்றாசிரியருக்கு விருப்பு – வெறுப்பு இருத்தல் கூடாது என்ற சமநிலைத் தன்மை புலப்படுகிறது. மேலும் சரோஜினியிடம் இருந்த பொதுமைப் பண்பையும் ஜீவபாரதி விளக்குகின்றார்.

"நான் வங்கத்தில் பிறந்தேன். சென்னைக்குச் சொந்தமானேன். முஸ்லீம் நகரத்தில் வளர்ந்தேன். ஆனால் நான் வங்காளியோ, சென்னைக்காரியோ, ஐதராபாத்காரியோ அல்ல. அதே போன்று நான் ஹிந்துவோ, பிராமணச் சாதியைச் சேர்ந்தவளோ அல்ல. நான் இந்தியப் பெண் என்று அவள் சொல்லியது இன்றும் அர்த்தம் உள்ளது. ஆம். அந்தப் பேருள்ளத்திற்குச் சொந்தக்காரி தான் கவிக்குயில் சரோஜினி நாயுடு"[34] என்று நிறைவு செய்கின்றார் ஜீவபாரதி. நான் இந்தியாவிற்குப் பொதுவானவள் என்று கூறும் சரோஜினியின் பொதுவுடைமைச் சிந்தனைக்கு இது தக்க ஆதாரமாய்த் திகழ்கிறது.

**இந்தியப் பழங்குடி மக்களின் விடுதலைப் போராட்டம்**

ஆங்கிலேயர்களை இந்த நாட்டை விட்டு விரட்ட இந்தியப் பழங்குடி மக்களும் அணிதொடுத்தனர். விடுதலைப் போராட்ட வரலாற்றில் அது விரிவாகச் சொல்லப் படவில்லை என்பது ஜீவபாரதியின் வேதனையாகும். அரசியல் கட்சிகள் ஆங்கிலேயர்களை எதிர்த்துக் களம் காணுதற்கு 150 ஆண்டுகளுக்கு முன்பே பழங்குடி மக்களும், விவசாயிகளும் இணைந்து வெள்ளையரை எதிர்த்துப் போராடியுள்ளனர்.

''1778–இல் பீகாரில் பகாரியாக்கள், 1789–இல் நாகபுரியில் டமரியன், 1795–இல் பீகாரில் கவாரியினர், 1807–இல் சோடா நாகபுரியில் கோலியினர், 1868–இல் கேரளா மேற்குத் தொடர்ச்சி மலையில் குறிச்சான், 1911–இல் பஸ்தார், சாந்தல் பழங்குடி மக்கள் என பல்வேறு வகைப்பட்ட பழங்குடி மக்கள் பல்வேறு காலக் கட்டங்களில் வெள்ளையர் எதிர்ப்பில் வீரஞ்செறிந்த போராட்டங்களை நடத்தியிருக்கின்றனர்''[35] என்று ஆதிவாசிகளான பழங்குடி மக்களின் விடுதலைப் போராட்ட வரலாற்றினை நிரல்படக் கூறியுள்ளார் ஜீவபாரதி.

ஆந்திர மாநிலத்தைச் சார்ந்த மொகல்லு என்ற கிராம இளைஞன் ராஜுவின் விடுதலை வேள்வி குறித்து வியந்து எழுதியுள்ளார். விடுதலை வீரர் மட்டூரி அன்னபூர்ணய்யாவின் தொடர்பு ராஜுவை விடுதலை வீரனாக்கியுள்ளது. பழங்குடி இளைஞர்களைச் சேர்த்து ஒரு படையை உருவாக்கி அதன் மூலம் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட்டுள்ளார்.

விடுதலைப் போராட்ட வீரர் வீரய்யாதுரை கிருஷ்ணதேவி பேட்டா காவல் நிலையத்தில் இருந்த போது அவரை விடுவிக்க, பல போராட்டங்களை ராஜு சந்தித்ததை ஜீவபாரதி குறிப்பிடுகின்றார்.

''போலீஸ் ஸ்டேசனில் புகுந்து ஆயுதங்களைக் கொள்ளையடித்ததும், வீரய்யா துரையை விடுவித்து அழைத்துச் சென்றதும் வெள்ளையரைக் கோபம் கொள்ளச் செய்தது. அதனால் அவனைத் தேடிப் பிடித்துத் தண்டிக்க, இராணுவத்தைப் பழங்குடி இளைஞர் படை நேர்கொண்டது. இதில் பிரிட்டீஷாருக்குப் பலத்த உயிர்ச்சேதம் ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து பிரிட்டிஷார் படைக்கும், அவனுடைய பழங்குடி இளைஞர் படைக்கும் அடிக்கடி சண்டை நடந்தது. அவற்றில் தொடர்ந்து பிரிட்டிஷாரே தோல்வியைத் தழுவினர். அதனால் அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குப் பத்தாயிரம் ரூபாய் பரிசளிக்கப்படும் என்று பிரிட்டிஷார்

அறிவித்தனர். *1922 — 24* காலக்கட்டங்களில் பிரிட்டிஷாருக்கு அவன் சிம்ம சொப்பனமாகத் திகழ்ந்தான்''[36] என்கின்றார் ஜீவபாரதி.

அவனைத் தீவிரவாதிகள் பட்டியலில் ஆங்கிலேயர்கள் சேர்த்துள்ளனர். பனை மர உச்சியிலிருந்து ஆங்கிலேயர்களைத் தாக்குவதும், மறைந்து நின்று திடீர் தாக்குதல் செய்வதும் ராஜுவின் புதிய உத்தியாக இருந்துள்ளது. அவன் செய்த போர் முறையை 'ரம்பா புரட்சி' என்று ஆங்கிலேயர்கள் குறிப்பிட்டனர் என்று ஜீவபாரதி சொல்வது வரலாற்றின் பக்கம் நம்மை இழுத்துச் செல்கிறது.

பின்னர் ஆங்கிலேயர்களிடம் சிக்குகிற நிலைக்கு ராஜு ஆளானதையும், சரணடைந்ததாக ஆங்கிலேயர்கள் பரப்பிய செய்தியையும், மக்கள் அதை நம்ப மறுத்த நிலையினையும் ஜீவபாரதி தம் வரலாற்றுக் கட்டுரையில் மிகுந்த கவனத்துடன் குறிப்பிட்டுள்ளார்.

*1924*ஆம் ஆண்டு விசாரணையின்றி ராஜுவைச் சுட்டுக் கொன்ற ஆங்கிலேயர்களின் கொடுங்கோன்மை நிலையைக் குறிப்பிடும் ஜீவபாரதி அப்போது அவனுக்கு வயது *27* என்றும், அவனைக் கொன்றதை வெளி உலகிற்கு பிரிட்டிஷார்' அறிவிக்கவில்லை என்றும் தெரிவிக்கின்றார். அப்படிப்பட்ட ராஜுவை தெலுங்கு மக்கள் இன்றும் 'காட்டுராஜா' என்று சொல்லி நினைவைப் போற்றுகின்றனர் என்றும் எழுதியுள்ளார்.

**தமிழக வீரர்களும் பொதுவுடைமைச் சிந்தனையும்**

தமிழகப் போராட்டங்களில் தலைவர்கள் என்பதை விட மக்களின் போராட்டம் என்பது மகத்தானதாகக் குறிக்கப் பெறுகிறது. மக்களாகிய உழைப்பாளிகளின் போராட்டம் இன்றிப் புரட்சி இல்லை என்பதை இப்பகுதி உறுதி செய்கிறது.

''நாம் அரசியலின் பக்கம் நம் பார்வையைச் செலுத்தினால் பொதுமக்கள் நிர்ணயமான பங்கு வகிக்காமல் எந்த ஒரு புரட்சியும் நடந்ததில்லை என்று நாம் உறுதியாகக் கூற முடியும். புரட்சிகள், விடுதலைப் போராட்டங்கள் இரண்டிலுமே, பொதுமக்கள் தான் எப்போதும் முதன்மையான சக்தியாக இருந்து வந்துள்ளார்கள். சமாதான காலங்களில் கூட, பொதுமக்கள் அரசியலில் பங்கு கொள்ளாமல் தவிர்க்க ஆளும் வர்க்கங்கள் முயற்சித்த போதிலும், பொதுமக்கள் அரசியலில் தங்கள் முத்திரையைப் பதிக்கிறார்கள். சுரண்டுபவர்களின் நலன்களைப் பாதுகாக்கும் அரசர்களும், அதிபர்களும், அமைச்சர்களும் மக்களின் கோரிக்கைகளுக்கு

இணங்கும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். மக்கள் தங்களது இடைவிடாத போராட்டத்தின் மூலம் ஆள்பவர்களின் பசியைக் கட்டுப்படுத்திச் சலுகைகளை அளிக்கும்படி அவர்களை நிர்ப்பந்திக்கிறார்கள்''[37] என்பர்.

முதலாளித்துவப் போக்கையும், நிலப்பிரபுத்துவத்தையும் எதிர்த்தே புரட்சி வெடிக்கிறது.

''சமுதாயப் புரட்சிகளின் நெறிமுறைகள் நாட்டுக்கு நாடு வேறுபடும். சில வகையான புரட்சிகள் இறுதி மாறுதலுக்குத் தயாரிப்பாக அமையலாம். இவ்வகையான புரட்சிகளுக்குப் பின் முழுமையான சமுதாயப் புரட்சி தோன்றும். சமுதாயப் புரட்சிக்கு முன் புரட்சியை நடத்தும் சக்திகள் அரசியல் அதிகாரத்தைப் பெற வேண்டும். இதனை அரசியல் புரட்சி என்று கூறுகிறோம். ஒரு பிற்போக்கு வர்க்கம் முற்போக்கு வர்க்கத்திடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டால் அதனை எதிர்ப்புரட்சி என்கிறோம்''[38] என்பார் நா.வானமாமலை.

தமிழகப் புரட்சி என்பது பெரும்பாலும் முதலாளித்துவ எதிர்ப்பு, சாதிய எதிர்ப்பு போன்றவற்றை மையம் கொண்டே அமைகிறது. தமிழகப் புரட்சியாளர்கள் பற்றிய ஜீவபாரதியின் பார்வை நெடியதாய் அமைகிறது. அவ்வகையில் மாயாண்டி பாரதி, ராமுத்தேவன், எம்.வி.சுந்தரம், பி.இராமமூர்த்தி, ரங்காராவ், மதன கோபால், எஸ்.எம்.பொன்னையா, டி.காசிநாதன் உள்ளிட்ட தோழர்கள் பலரின் புரட்சிச் சிந்தனைகளை ஜீவபாரதி விதைத்துள்ளார்.

**மாயாண்டி பாரதி**

ஊமையாகப் பிறந்து தன்னம்பிக்கையால் பேசத் தொடங்கிய மாயாண்டி பாரதியின் வாழ்வியல் பதிவுகளை ஜீவபாரதி காட்டியுள்ளார். வீரபாண்டிய கட்டப்பொம்மன் நாடகமே மாயாண்டியின் வாழ்வில் தேச பக்தியை விதைத்துள்ளது. மேடைகளில் பாடும் போதும், பேசும் போதும் பாரதி பாடல்களை அதிகம் உச்சரித்ததால் மாயாண்டி என்ற அவர்தம் பெயரை பத்மாசினி அம்மையார், சிதம்பர பாரதி போன்ற தேச பக்தர்கள் மாயாண்டி பாரதி என்றே அழைத்தனர் என்று சொல்கின்றார் ஜீவபாரதி.

*1939* ஜூனில் விருதுநகர் அருகிலுள்ள கன்னிசேரி என்ற கிராமத்தில் நடந்த யுத்த எதிர்ப்புக் கூட்டத்தில் பேசிய மாயாண்டி பாரதி 'பட்டாளத்தில் சேராதே! யுத்த நிதி வழங்காதே!'' என்று முழங்கியுள்ளார். இதற்காக மாயாண்டி பாரதி கைது செய்யப்பட்டு திருவில்லிப்புத்தூர் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டுள்ளார்.

காவல்துறை அதிகாரி உனக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா என்று விசாரித்துள்ளார். அதற்கு மாயாண்டிபாரதி வழங்கிய பதில் புரட்சிகரமானது.

“மதுரை ரயில்வே ஸ்டேசன் எதிரில் இருக்கிற மங்கம்மாள் சத்திரம் என் பாட்டன் சொத்து. திருமலை நாயக்கர் மகால் என் அப்பன் சொத்து. இந்தப் பாரத தேசமே என் சொத்து என்றார் மாயாண்டி பாரதி. இந்தப் பதில் அதிகாரிக்கு திமிர்த்தனமாகத் தெரிந்தது. ஆனால் மாயாண்டி பாரதிக்குத் தேச பக்தியின் வெளிப்பாடாக அமைந்தது”[39] என்கின்றார் ஜீவபாரதி.

சுதந்திரம் பெற்றததற்குப் பிறகு கம்யூனிஸ்ட் கட்சியை காங்கிரஸ் கட்சி தடைசெய்தது. நெல்லை சதி வழக்கில் மாயாண்டி பாரதி இணைக்கப்பட்ட போது அவரை விசாரித்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கிருஷ்ணசாமி நீங்கள் பெரிய சுதந்திரப் போராட்ட வீரர். மந்திரியாக இருக்க வேண்டிய நீங்கள் ஏன் இந்தக் கம்யூனிஸ்ட் கட்சியில் இருக்கிறீர்கள் என்று சொல்லி உங்கள் தலைவர் யார்? அவர் எங்கு உள்ளார் என்று கேட்ட போது என் தலைவர் ஸ்டாலின் – அவர் இருப்பது மாஸ்கோவில் என்று மாயாண்டி பாரதி சொல்லியுள்ளார். அதனால் போலீசார் அவரை அடித்துத் துவைத்ததாக ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார். பட்டுக்கோட்டையார் பற்றிய பல தகவல்களை மக்களிடம் வெளிக்கொணர்ந்த பெருமை மாயாண்டி பாரதிக்கு உண்டு என்றும், பொதுவுடைமைக் கவிஞர் ஜீவா எழுத முடியாமல் சிரமப்பட்ட காலத்தில் அவர் சொல்லச் சொல்ல எழுதித் தந்த உணர்வு மிக்க கம்யூனிசத் தோழராக மாயாண்டி பாரதியை ஜீவபாரதி அடையாளப்படுத்துகின்றார்.

**ராமுத்தேவன்**

சில நேரங்களில் தன்னுணர்வு மேலிடுகிறபோதும் புரட்சி வெடிக்கிறது. சமூகத்திற்குத் தன் பங்களிப்பு என்ன என்பதை உணரத் தலைப்படுகிற போது தன்னுணர்வும், சமூக உணர்வும் கைகோர்க்க ஆரம்பிக்கிறது.

“அறிவின் பிறிதோர் அம்சம் தன்னுணர்வு ஆகும். ஒருவன் தனக்குப் புறத்தே உள்ள உலகை மட்டுமல்லாமல் தன்னையும் அறிதல் வேண்டுமென வாழ்க்கை கோருகிறது. புற உலக உண்மைகளை அறியும் பொழுதே மனிதன் உணருகிறவனாக அறிகிறவனாகத் தன்னையும் அறிந்து கொள்ளுகிறான். தனது இலட்சியங்களையும், ஆர்வங்களையும், ஒழுக்க நியதிகளையும் அறிகிறான். தன்னைப் புற உலகினின்றும் பிரித்துக் கொண்டு உலகைத் தான் காணும்

கண்ணோட்டத்தையும், தான் உணர்வது, நினைப்பது, செய்வது அனைத்தையும் அறிகிறான்''[40] என்பார் நா.வானமாமலை.

ராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், ஆர்.எஸ்.மங்கலம் அருகிலுள்ள தும்படைக்காக் கோட்டை என்ற சிறிய ஊரில் ராமலிங்கத்தேவர் – காளியம்மாள் தம்பதிக்கு 1927 இல் பிறந்த ராமுத்தேவன் என்பவரின் வரலாற்றைக் கறை படியாமல் எழுதியுள்ளார் ஜீவபாரதி.

பிழைப்புத் தேடி பினாங்கு சென்ற ராமலிங்கத் தேவர் ஊருக்கு ஒரு முறை வந்த போது தன் மகனையும் பினாங்கில் படிக்க வைக்க அழைத்துச் சென்றுள்ளார். அப்போது ராமு 3ஆம் வகுப்பு படித்துள்ளார். பினாங்கில் ஜூனியர் கேம்ப்ரிட்ஜ் வரை படித்த ராமு நேதாஜியின் முழக்கம் கேட்டு இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்து பயிற்சி பெற்றுள்ளார். அவருடைய பயிற்சியைக் கண்டு வியந்து சுயராஜ் நிறுவன அதிகாரிகள் ராமுத்தேவன் என்றே அழைத்தனர் என்கின்றார் ஜீவபாரதி.

ஒற்றர் படைக்குத் தேர்வு செய்யப்பட்ட ராமுத்தேவன், டி.பி.குமரன் நாயர், சேது மாதவன் ஆகியோருடன் 1943 ஜனவரி முதல் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டுள்ளார்.

பர்மா எல்லையில் வைத்தே ஆங்கிலேயர்கள் இவரைச் சுட்டுள்ளனர். டி.பி.நாயரின் கால்கள் பாதிக்கப்பட்டன. மூவரையும் அலிப்பூர் சிறையில் அடைத்துள்ளனர். பிறகு சென்னை சிறைக்கு மாற்றியுள்ளனர். 1944 ஜூலை 07 அன்று அதிகாலை தூக்கிலிடுவதென நீதிபதி ஹேப்பல் தீர்ப்பு வழங்கியுள்ளார். இறுதியாக 1944 ஜூலை 6 அன்று ராமுத்தேவன் தன் தாய்க்குக் கடிதம் எழுதியுள்ளான். அப்போது அந்த இளைஞரின் வயது 17 என்பதும் குறிக்கத் தக்கது.

"அன்புள்ள தாயார் அவர்களுக்கு எழுதிக்கொண்டது. நான் இந்தியாவிற்கு வந்து 18 மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் நான் கடிதம் எழுதவில்லை என்று கவலைப்படவேண்டாம். நான் லெட்டர் எழுதாததற்கு முக்கியமான காரணங்கள் இருக்கின்றன. தங்களுக்குக் கவலை கொடுக்க இஷ்டம் இல்லை. ஆனால் இனிமேல் தெரிவிக்காமல் இருக்க முடியாது. வெள்ளிக்கிழமை 07.07.1944இல் காலை 6 மணிக்கு நான் சர்க்காரால் தூக்கிலிடப்படுவேன். அதைப் பற்றி எனக்குக் கொஞ்சமும் கவலையோ அல்லது பயமோ இல்லை. நான் என் உயிரைக் கொடுப்பதற்குக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. ஆனால் எனக்காக வேண்டி ஒரு விஷயம் செய்ய வேண்டும். அதாவது எனக்காகச் சிறிய தகப்பனார் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கிறார். ஆனபடியால் அவருடைய மகனைக் காப்பாற்ற வேண்டியது உங்களுடைய கடமை. அவனையும் தாங்கள் என் கூட ஒரு மகனைப் பெற்றதாக

எண்ணி அவனைப் பார்த்து வரும்படி கேட்டுக் கொள்கிறேன்''[41] என்று தன் தாய்க்கு உருக்கமாக எழுதிய கடிதத்தை ஜீவபாரதி குறிப்பிடுவது சிந்தனையைத் தூண்டுவதாகும்.

திட்டமிட்டபடி தூக்கிலிடப்பட்டு சென்னை ஓட்டேரி சுடுகாட்டில் ஆளும் வர்க்கமே புதைத்தது. தூக்கிலிட்ட பின்னர் தான் தாய் காளியம்மாளுக்கே கடிதம் கிடைத்துள்ளது. கதறியபடி சென்னைக்கு ஓடிச்சென்ற தாய் சுடுகாட்டில் கண்ணீர் வற்றும் வரை அழுதார். சிலகாலம் சித்தப் பிரமை பிடித்து அலைந்தார். பின்னர் துயரம் குறைந்து ராமுத்தேவனின் தியாகத்தைக் காட்டி ஓய்வூதியம் வழங்க அரசிற்கு விண்ணப்பித்தார். எனினும் ஓய்வூதியம் கிடைக்காமல் *1984*இல் மகனைப் பற்றிய கவலையோடேயே இறந்தார் என்று பதிவிட்டிருக்கும் ஜீவபாரதியின் கருத்து பல கோணங்களில் ஆராய வைப்பதாய் உள்ளது. புரட்சிக்காரர்கள் என்றால் அவர்களின் தலைமுறையினரைக் கூட அரசாங்கம் சந்தேகக் கண் கொண்டு நோக்கும் என்பதற்கு ராமுத்தேவனின் வாழ்வே சான்றாக அமைகிறது.

**எம்.வி.சுந்தரம்**

முகவை மாவட்டத்தின் முதல் கம்யூனிஸ்ட் என்று எம்.வி.சுந்தரத்தை ஜீவபாரதி குறிப்பிடுகின்றார். கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டிருந்த காலங்களில் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்து போலீஸ்காரர்களின் கண்ணில் படாமல் அவர்களுக்குச் சிம்ம சொப்பனமாக இருந்தவர் எம்.வி.சுந்தரம் என்கின்றார்.

''பள்ளியில் படிக்கின்ற போதே பத்மாசினி அம்மையாரின் அரிசன சேவா சங்கப் பணிகளால் கவரப்பட்டு சைமன் கமிஷன் எதிர்ப்புப் போரில் கலந்து தேச பக்தப் பணியைத் தொடங்கி *1936*–இல் முகவை மாவட்டத்திலேயே முதன்முதலாக கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராகி, அதன் பின் கம்யூனிஸ்ட் கட்சி வளர்ச்சிக்காக அல்லும், பகலும் உழைத்து முகவை மாவட்ட இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் மாவட்டச் செயலாளராகி இராமநாதபுரம் சதி வழக்கில் குற்றிவாளியாக இணைக்கப்பட்டு எந்தக் காலக்கட்டத்திலும் தேர்தலில் போட்டியிடாமல் விலகி நின்று, பொது வாழ்க்கை புனிதமானது என்று வாழ்ந்து காட்டிய கட்சியின் தமிழ் மாநிலப் பொருளாளர், என்.சி.பி.எச் நிறுவனத்தின் தலைவர் என்று பொறுப்புகளை வகித்து அனைத்திலும் சிறந்து விளங்கியவர் எம்.வி.சுந்தரம்''[42] என்கின்றார் ஜீவபாரதி.

என்.சி.பி.எச் என்ற நியூசெஞ்சுரி பதிப்பகம் இவர் தலைவராக இருந்தபோது தான் பல வழிகளிலும் நெறிப்படுத்தப்பட்டது என்பதும் வரலாறு என்கின்றார்.

எந்தக் காலக் கட்டத்திலும் தேர்தலில் போட்டியிடாமல் விலகி நின்று பொதுவாழ்வில் ஈடுபட்டார் என்பது ஒரு பொதுவுடைமைவாதி பதவிக்கு ஆசைப்படமாட்டார் என்பதையும் தெற்றென விளக்குகிறது.

**பி.இராமமூர்த்தி**

தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்தில் வேப்பத்தூர் என்ற சின்னஞ்சிறு கிராமத்தில் பஞ்சாப கேச சாஸ்திரி – சீதா லெட்சுமி, தம்பதிக்கு *1908* செப்டம்பர் *20* அன்று பிறந்த தோழர் ராமமூர்த்தியின் பொதுவுடைமை வாழ்வையும் ஜீவபாரதி மிகத் தெளிவாகப் பதிவிட்டுள்ளார்.

இவருடைய தந்தையார் வடமொழிப் புலமையும், தெய்வ பக்தியும் கொண்ட ஜமீன்தார் என்றாலும் அதையும் மீறி இளமைப் பருவத்திலேயே கடவுள் மறுப்பாளராகவும், தம் பண்ணையில் வேலை செய்யும் தாழ்த்தப்பட்ட சமூகத் தொழிலாளர்கள் மீது பாசம் கொண்டவராகவும், திகழ்ந்தார் என்றும், ஜமீன்தாரின் எதிர்ப்பில் களம் கண்டார் என்றும், தோழர் ராமமூர்த்தி பற்றி ஜீவபாரதி எழுதியுள்ளார்.

“ஒரு கால் ஊனத்தோடும் உள்ளத்தில் அசைக்க முடியாத நம்பிக்கையோடும், தேசத்திற்காகவும், தேச மக்களுக்காகவும், தொழிலாளர்களுக்காகவும் இறுதி நாள் வரை போராடி மடிந்தவர் தான் தோழர் பி.ராமமூர்த்தி. இவரை அரசியல் எதிரிகள் ‘நொண்டி ராமமூர்த்தி’ என்று மேடைகளில் பேசிய இழிசெயலும் நடந்தது. ஆனால் இயக்கத் தோழர்கள் இவரை ‘தோழர் பி.ஆர்’ என்று பெருமையுடன் அழைத்தனர். இன்றும் இயக்கத் தோழர்கள் நெஞ்சங்களில் பி.ஆர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்”[43] என்கின்றார் ஜீவபாரதி.

ஒரு ஜமீன்தார் குடும்பத்தில் பிறந்தவர் அதனை உதறித் தள்ளியதோடு தன் தந்தையாரின் ஆன்மீக, கடவுள் மயக்கத்தையும் தூக்கியெறிந்து சாதியத்திற்கும் அப்பாற்பட்டு வாழ்ந்த தோழர் ராமமூர்த்தியின் பொதுவுடைமை வாழ்வு போற்றத்தக்கதாய் அமைகிறது.

**ரங்காராவ்**

மகாத்மா காந்தியைக் கண்ணீர் சிந்த வைத்த வரலாற்றுப் பதிவினையும் ஜீவபாரதி எழுதியுள்ளார். காஷ்மீரில் வாழ்ந்த ‘பிராமண’ வகுப்பைச் சார்ந்த சில குடும்பங்கள் இஸ்லாமியர்களின் கொடுமைக்கு ஆளாகி கோவாவிற்கும், மங்களூருவிற்கும், கேரளாவிற்கும் குடி பெயர்ந்தனர். கேரளாவில் குடியேறிய

தேவப்பையரின் மூத்த மகனாகிய ரங்காராவ் வாழ்வு பற்றிய செய்தி தான் காந்தியின் கண்ணில் நீரை வரவழைத்தாக ஜீவபாரதி குறிக்கின்றார்.

16 வயதிலேயே ஆசிரியப் பணியில் சேர்ந்து தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த மாணவர்கள் மீது தனிக்கவனத்தோடு திகழ்ந்துள்ளார். ருக்மணிபாய் என்பவரைத் திருமணம் செய்த அவர் பல புதுமைகளைச் செய்ததாகவும், ஜீவபாரதி எழுதியுள்ளார். பெண்கள் பள்ளி செல்லாத காலத்திலேயே தன் மகள் லலிதாபாயையும், இராதா பாயையும் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைத்ததனால் சாதியிலிருந்தும், தள்ளி வைக்கப்பட்டுள்ளார். தாழ்த்தப்பட்ட சிறுவர்களுக்குப் பள்ளி கட்டுதல், நரிக்குறவர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்தல், பால்ய மணங்களைத் தடுத்தல், கைம்பெண்களுக்கு மறுமணம் செய்து வைத்தல் போன்ற புரட்சிகரச் செயல்களில் ஈடுபட்டதாக எழுதியுள்ளார்.

எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய இறப்பைப் பற்றிய கடிதமே அவரின் உயர்புகழுக்குச் சான்றாய் அமைகிறது. மனைவி இறந்த பின் துறவு மேற்கொண்ட ரங்காராவ் ‘‘என்னுடைய உயிர் பிரிந்த பின் என் உடலை ஆதி திராவிட மக்களிடம் ஒப்படைக்க வேண்டும். சக்கிலியர் என்று அழைக்கப்படுகிற அருந்ததியர் மயானத்தில் என் உடலை அடக்கம் செய்ய வேண்டும் என்று உயில் எழுதிவைத்தார். 1928 ஜனவரி 30 அன்று ரங்காராவ் உயிர் பிரிந்தது. அவருடைய உயிலின் படி அவருடைய உடல் தாழ்த்தப்பட்டோர் காலனியிலேயே இறுதி மரியாதை செய்யப்பட்டு அருந்ததியர் சுடுகாட்டிலேயே அவருடைய உடல் புதைக்கப்பட்டது. இதையறிந்த காந்திஜி, ரங்காராவ் புதைக்கப்பட்ட இடத்திற்கு வந்து கண்ணீர் சிந்தி, அங்கிருந்த ஆதிதிராவிடர் மக்களிடம் உங்கள் குரு ரங்காராவ் தான் எனது உண்மையான குரு என்றார்’’[44] என்ற வரலாற்றுப் பதிவு பொன்னெழுத்துகளால் பொறிக்கத்தக்கது. மேல் தட்டு வர்க்கத்தின் ஆணவப் போக்கை அழித்து, அடித்தளமக்களின் உயர்வுக்குப் பாடுபட்டதோடு, அவர்களோடு அவர்களாக ஒன்றிணைந்து வாழ்ந்த செய்தி பொதுவுடைமைப் பயணத்திற்கு உகந்ததாய் அமைகிறது.

ரங்காராவ் புதைக்கப்பட்ட இடத்திற்கு காந்திஜி வந்ததோடு, தாகூர், அன்னிபெசன்ட அம்மையார், சி.ஆர்.ஆன்ட்ரூஸ், சென்னை மாகாண அன்றைய கவர்னர்கள் விஸ்கவுண்ட கோசன், ஆல்பிரட், ஸ்டான்லி போன்றோர் வந்து கண்ணீர் சிந்தினர் என்ற பதிவு குறிப்பிடத்தக்கதாகும்.

இந்த ரங்காராவின் இரண்டாவது மகளான இராதா பாங்கருக்கும், டாக்டர்.ப.சுப்பராயனுக்கும் பிறந்த ஒரே மகள் தான் இன்றைக்கும் கம்யூனிஸ்டுகள்

முன்னுதாரணமாக மதிக்கும் தோழியர் பார்வதி கிருஷ்ணன் என்ற செய்தியையும் ஜீவபாரதி அடுக்கிச் சொல்வது கருதத் தக்கது.

**இரத்தத்தால் அரிவாள் சுத்தியல் வரைந்த மதனகோபால்**

சமத்துவ நெறி தழைப்பதற்காக மனிதன் தொடர்ந்து போராடுகின்றான். அதற்காக அவன் சந்திக்கின்ற போராட்டங்கள், கலகங்கள், சவால்கள் பலவாக உள்ளன. தோல்விகளை உரமாகக் கொண்டு ‘பயணிப்பதே மார்க்சியச் சிந்தனையாளர்களான பொதுவுடைமைவாதிகளின் பண்பாக அமைகிறது.

சமூகத்தை மாற்றி அமைப்பதற்கு கம்யூனிஸ்டுகள் சிந்திய ரத்தமும், போராட்டமும் அளவிடற்கரியன.

“உழைப்பாளிகளைச் சுரண்டி தனது செல்வங்களைப் பெருக்கிக் கொள்ளும் முதலாளி வர்க்கத்தை எதிர்த்துப் போராடுவதற்கு உழைப்பாளிகளுக்கென்று தனித்த இயக்கம் தேவைப்படுகிறது. இந்த இயக்கத்தை நடத்திச் செல்லும் கம்யூனிஸ்டுகள் தமக்கென எந்தக் குறுக்குவாதக் கண்ணோட்டத்தையும் வைத்திருக்கவில்லை. கம்யூனிஸ்டுகள் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களைத் தவிர்த்து வேறு நோக்கம் எதனையும் கொண்டவர்கள் அல்லர்”[45] என்பார் அ.கா.ஈஸ்வரன்.

சமூக மாற்றத்திற்காகப் பாடுப்பட்ட கம்யூனிஸ்டுகளின் தியாகம் பற்றி எழுத மாவட்டம் தோறும் ஜீவபாரதி களப்பணி மேற்கொண்டார். திண்டுக்கல் மாவட்டக் களப்பணியில் தோழர் சந்தானம், தோழர் மணிவேலு உதவியுடன் தோழர் மதனகோபாலைச் சந்தித்துள்ளார். இவர்களின் கலந்துரையாடலின் மூலம் கிடைத்தது தான் இரத்தத்தால் அரிவாள் சுத்தியல் வரைந்த வரலாறு.

ஜீவாவின் பேச்சைக் கேட்டே நான் கம்யூனிஸ்டாக மாறினேன் என்றும், கல்கத்தாவில் நடைபெற்ற கட்சி மாநாட்டுக்குச் சென்றேன். மாநாடு முடிந்ததும் கட்சியைத் தடைசெய்ததால் நான்கு நாட்கள் கல்கத்தாவிலேயே தங்கினேன். பின்னர் சென்னைக்கு டிக்கெட் வாங்காமல் கூடுருக்கு டிக்கெட் வாங்கி ஈரோட்டில் இறங்கி கரூர், பாளையம் வழியாக எரியோடு என்ற என் சொந்த ஊருக்கு வந்தேன் என்று ஜீவபாரதியிடம் தம் கம்யூனிச வாழ்வை விவரித்த மதனகோபால் தமது தலைமறைவு வாழ்க்கையைப் பற்றியும் கூறியுள்ளார்.

தலைமறைவில் இருந்த மதனகோபால், சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தேவசகாயம் கையில் சிக்கிய போது அவருக்கு ஏற்பட்ட இன்னல்களை ஜீவபாரதியிடம் கூறியதை விவரித்துள்ளார்.

“காந்தி மைதானம் வழியாக என்னை இழுத்துச் சென்றனர். தோல் பதனிடும் தொழிற்சாலை முதலாளிகள் என்னை வழிமறித்து காபி குடிக்க வலியுறுத்தினர். அதையும் மறுத்தேன். காவலர்கள் மாற்றி மாற்றி அடித்தும், உதைத்தும் என்னை வீதியில் இழுத்துச் சென்றனர். அதையெல்லாம் தாங்கிக் கொண்டு ‘கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க!” ‘போலீஸ் அராஜகம் ஒழிக’ என்று முழங்கினேன். வீதியில் நின்று வேடிக்கை பார்த்தவர்கள் வேதனையில் விம்மினர். வயதான பெண்கள் சிலர் என்னை ஏசுபிரானுடன் இணைத்து ‘ஏசுவுக்கா இந்த நிலை’ என்று முணுமுணுத்தது என் காதில் விழுந்தது. சில பெண்களிடம் துடைப்பத்தைக் கொடுத்து போலீசார் என்னை அடிக்கக் கூறினர். சிலரிடம் செருப்பைக் கொடுத்து என்னை அடிக்க வைத்தனர். அனைத்தையும் தாங்கிக் கொண்டு கம்பீரமாக நடந்தேன். ஒரு செருப்பை என் வாயில் கவ்வும்படி போலீசார் வலியுறுத்தினர். அதற்கு நான் எதிர்ப்புத் தெரிவித்தேன். அதனால் மீண்டும் சூழ்ந்து நின்று போலீசார் என்னைத் தாக்கினர்”[46] என்று தோழர் மதனகோபால் சொல்லிய செய்தியை அவர்தம் உரையாடலிலேயே ஜீவபாரதி தந்திருப்பது பொதுவுடைமைச் சிந்தனைமிக்க கம்யூனிஸ்டுகள் பட்ட வேதனையையும், சோதனையையும் முன்னிறுத்திக் காட்டுகிறது.

மேலும் காவல் நிலையத்தில் வைத்து மதனகோபாலைக் கொடுமைப்படுத்தியதையும், அவர் சொல்லிய உரைநடையிலேயே ஜீவபாரதி வெளியிட்டுள்ளார். அதில் தான் புரட்சிமிக்க இரத்த வரலாறு உறைந்துள்ளது.

“திண்டுக்கல் தாலுகா போலீஸ் ஸ்டேசன் லாக்கப் அறையில் 1.5 அடி பள்ளம் தோண்டி அதில் தண்ணீரை நிரப்பி என்னை அதில் உட்கார வைத்தனர். உடம்பு முழுவதும் அடி. தலையிலும் பலத்த அடி. இந்த நிலையில் எனக்கு மயக்கம் வருவது போல் இருந்தது. இத்துடன் நம் வாழ்க்கை முடியப் போகிறது என்று எண்ணினேன். அப்போது என் மூக்கிலிருந்து ரத்தம் கொட்டியது. அந்த ரத்தத்தை என் இடது கை உள்ளங்கையில் பிடித்தேன். வலதுகைச் சுண்டுவிரலால் அந்த ரத்தத்தைத் தொட்டேன். இன்னும் சிறிது நேரத்தில் சாகப் போகிறோம். அதற்குள் ஏதாவது செய்தாக வேண்டும் என்று எண்ணினேன். அதனால் ரத்தத்தைத் தொட்டு அருகில் இருந்த லாக்கப் அறைச் சுவரில் ஒரு படத்தை வரைந்தேன். அதை முடித்த போது எனக்கு அவ்வளவு மகிழ்ச்சி. ஆம். என் ரத்தத்தால் நான் வரைந்தது அரிவாள் சுத்தியல். அந்த மகிழ்ச்சியில் மயங்கி விழுந்தேன்”[47] என்று மதனகோபால் சொல்லியதை ஜீவபாரதி வெளிக்கொணர்ந்து வரலாறாக்கியுள்ளார்.

கடைசி வரை போராடும் வல்லமை கம்யூனிஸ்டுகளுக்கு உண்டு. எந்தச் சூழ்நிலையிலும், யாரிடமும் அடிபணியும் எண்ணம் அவர்களுக்கு இருக்காது என்பதற்கு இது சான்றாக அமைகிறது. பின்னர் 1952 பொதுத் தேர்தலில் வேடச்சந்தூர் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்று தொடர்ந்து பல்வேறு ஆக்கப் பணிகளில் ஈடுபட்டார் என்பதும் குறிக்கத் தக்கது.

**மயானத்தில் வகுப்பெடுத்த மார்க்சியவாதி எஸ்.எம்.பொன்னையா**

போராட்டக்காரர்களுக்கு இடம், பொருள் பற்றிய சிந்தனையெல்லாம் இருந்ததில்லை. தன் போராட்டம் வெற்றி பெற எந்தச் சூழ்நிலைக்கும் செல்லத் தயாராய் இருந்தனர். ஜனசக்தி நிர்வாகி தோழர் இளசை கணேசன் உதவியோடும், தேனி மாவட்டக் கம்யூனிஸ்ட் செயலாளர் ஜீவா உதவியோடும் தோழர் எஸ்.எம்.பொன்னையாவை ஜீவபாரதி சந்தித்துள்ளார். “மெலிந்த தேகம், உயர்ந்த தோற்றம், தீர்க்கமான கண்கள் கொண்ட 88 வயதுப் பெரியவரை தோழர் ஜீவா எனக்கு அறிமுகம் செய்தார். அவர் தான் பெரியகுளம் தோழர் எஸ்.எம்.பொன்னையா என்றும் கூறினார். நான் தோழர் பொன்னையாவின் விரல்களையே பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு விரலில் காரல் மார்க்ஸ் படம் பொறித்த மோதிரமும், மற்றொரு விரலில் லெனின் படம் பொறித்த மோதிரமும் அணிந்திருந்தார்”[48] என்று பொன்னையாவின் தோற்றத்தை விவரிக்கும் போதே அவர் தம் ஆழமான கம்யூனிசப் பற்றை ஜீவபாரதி படிப்போர் கண்முன் நிறுத்துகின்றார்.

என் கையில் காரல் மார்க்ஸ், லெனின் இருப்பதைப் போல நான் வெளியில் செல்லும் போது பகத்சிங் பேட்ஜ் அணிந்து செல்வேன் என்று பொன்னையா கூறியதையும் அடுத்த செய்தியாக எழுதியுள்ளார். ஜீவாவின் பேச்சு மற்றும் தொடர்பால் காங்கிரசிலிருந்து கம்யூனிஸ்டுக்கு மாறினேன் என்றும் தலைமறைவு வாழ்க்கையில் பல இன்னல்களைச் சந்தித்ததாகவும் ஜீவபாரதியிடம் கூறியதை எழுதியுள்ளார். மார்க்சிய வகுப்பினை ஊருக்குள் நடத்த முடியாமல் சுடுகாட்டில் நடத்திய எழுச்சி குறித்து தோழர் பொன்னையா கூறியதையும் ஜீவபாரதி காட்டியுள்ளார்.

“போடியில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் பத்தாவது படித்துக் கொண்டிருந்த சேதுபாண்டியன் என்ற மாணவன் எனக்கொரு கடிதம் எழுதியிருந்தான். அந்தக் கடிதத்தில் கம்யூனிசம் பற்றியும், கம்யூனிஸ்ட் கட்சி பற்றியும் அறிந்து கொள்ள விரும்புவதாகவும், குறிப்பிட்டிருந்தான். பெரிய குளத்தில் முதன்முதலாக அதாவது 1939 ஆம் ஆண்டிலேயே ஜனசக்தியைக் கொண்டு வந்தவர் தோழர் எபினேசர். இவரை அழைத்துக் கொண்டு நான் போடிக்குச் சென்றேன். அப்போது போடி

முத்தையா என்ற காங்கிரஸ்காரர் மாணவன் சேதுபாண்டியனை அழைத்து ‘போடிக்குள் கம்யூனிஸ்ட் கட்சிக்காரன் எவனும் வரக் கூடாது என்று மிரட்டி இருக்கிறார். அதனால் ஊருக்குள் வகுப்பு எடுக்க வாய்ப்பில்லை. ஊருக்கு வடக்கே இருந்த தோப்பைத் தாண்டி ஒரு சுடுகாடு இருந்தது. அந்தச் சுடுகாட்டில் வைத்து மார்க்சிய வகுப்பு நான் எடுப்பதென முடிவு செய்யப்பட்டது. ஒரு அரிக்கன் விளக்கோடு இரவில் சுடுகாட்டிற்குச் சென்றோம். மொத்தம் *14* பேர். அதில் கோம்பை சுருளிராஜன் என்ற காங்கிரஸ் காரரும் இருந்தார். இதில் அதிசயம் என்னவென்றால் மயானத்தில் நடந்த அந்த மார்க்சிய வகுப்பில் அடிக்கடி கேள்விகள் கேட்ட காங்கிரஸ்காரர் கோம்பை சுருளிராஜன் பிற்காலத்தில் பெரியகுளம் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளராகப் பொறுப்பேற்றார். இது தான் என் வாழ்வில் மறக்க முடியாத சம்பவமாகக் கருதுகிறேன்”[49] என்று பொன்னையா சொல்லியதை அச்சுக் குலையாமல் ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார். கம்யூனிஸ்டின் வீர வரலாற்றையும், உண்மைத் தத்துவத்தையும் தெரிந்து பல காங்கிரஸ்காரர்கள் கம்யூனிஸ்டிற்கு மாறினர் என்ற வரலாற்றுக்கு இதுவும் ஒரு சான்று.

**நெஞ்சில் ஆணி அடித்தபோதும் நெஞ்சை நிமிர்த்திய டி.காசிநாதன்**

தஞ்சை மாவட்டத்தில் ஆம்பலாப்பட்டு என்ற கிராமம் கம்யூனிச வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெறுகிறது. கம்யூனிஸ்டு தோழர்கள் திருஞானம், வே.துரைமாணிக்கம், அரங்க சின்னப்பா போன்றோரின் உதவியுடன் ஆம்பலாம்பட்டிலுள்ள பொதுவுடைமைச் சிந்தனை மிக்க தோழர்களைச் சந்தித்து ஜீவபாரதி வரலாற்றுத் தகவல்களை வெளிக்கொணர்ந்துள்ளார். அவர்களுள் டி.காசிநாதன் என்பவரின் வரலாறு கவனிக்கத்தக்கது.

இளம் வயதிலேயே காசிநாதன் ஈடுபட்ட பொதுவாழ்வு குறித்து ஜீவபாரதி விளக்கியுள்ளார். வங்கத்தில் ஏற்பட்ட பஞ்ச நிவாரண நிதிக்காக நிதி திரட்டிய குழுவில் முக்கியப் பங்காற்றியவர். வே.ஆ.சுப்பையன், எஸ்.ஏ.முருகையன், ஆர்.ஏ.சுப்பையன், பி.முத்துகாமாட்சி போன்ற தோழர்களுடன் இணைந்து விவசாய சங்கத்தில் தீவிரமாகச் செயல்பட்டவர் என்று டி.காசிநாதனைப் பற்றிக் கூறுகின்றார். “வங்க பஞ்ச நிவாரண நிதிக்காக ஆம்பலாப்பட்டு கட்சித் தோழர்களும், விவசாய சங்க உறுப்பினர்களும் வீடு வீடாகச் சென்று பொருட்களையும், துணிகளையும் வாங்கினோம். அப்போது ‘வங்கம் பாரடி தோழி’ என்ற பாடலை நான் பாடிக்கொண்டு வீதியில் செல்வேன். தோழர்கள் வசூலில் ஈடுபடுவர். இப்படித்தான் என் பொதுவாழ்க்கை தொடங்கியது. அப்போது எனக்கு வயது *16*”[50] என்று

பொதுவாழ்க்கையில் ஈடுபட்ட காசிநாதனின் வரலாற்றை அவர் கூறிய பாங்கிலேயே எழுதியுள்ளார்.

கம்யூனிஸ்டு கட்சியைத் தடை செய்திருந்த போது பட்டுக்கோட்டையில் நடைபெற்ற காங்கிரஸ் பொதுக்கூட்டத்தில் பேச வருகை தந்த அக்கட்சியின் தலைவர் காமராஜரை எதிர்த்துக் குரல் கொடுத்தோம். பரங்கிவெட்டிக் காட்டில் என் தலைமையில் தோழர்கள் திரண்டு காமராஜருக்கு எதிர்ப்பு தெரிவித்தோம். அதனால் அவர் பட்டுக்கோட்டைக்கு வராமலேயே திரும்பிச் சென்றுவிட்டார். பின்னர் காமராஜரின் இறுதிக்காலம் வரை இதை நினைவில் வைத்திருந்தார். கம்யூனிஸ்டுகளுக்கு எதிர்ப்பாக இருந்த காமராஜரை ஆம்பலாப்பட்டு தோழர்களும் பொதுமக்களும் கடைசி வரை ஏற்றுக்கொள்ளவில்லை. *1954* இல் தமிழக முதலமைச்சராகப் பொறுப்பேற்ற பின் ஆம்பலாப்பட்டு இலுப்பைத் தோப்புக்கு காமராஜர் பொதுக்கூட்டத்தில் பேச வருகை தந்த போதும் எதிர்த்துள்ளனர். கூட்டம் இல்லாததால் வெறுப்போடு காமராஜர் கூட்டத்தில் பேசாமல் திரும்பிச் சென்றார் என்று நடந்ததை நடந்தபடியே தோழர் டி.காசிநாதன் கூறியதை ஜீவபாரதி எழுதியுள்ளார். இதிலிருந்து காங்கிரஸ் – கம்யூனிஸ்டு கட்சிகளின் ஆரம்பகால மோதல் போக்குகளைப் புரிந்து கொள்ள முடிகிறது.

மக்களிடம் வரி விதித்து வட்டி வாங்கிய ஜமீன்தார்களையும் ஆம்பலாப்பட்டு தோழர்கள் எதிர்த்துள்ளனர். அதற்கான பதிவுகளையும் ஜீவபாரதி எழுதியுள்ளார். “மதுக்கூர் ஜமீன்தாரும் பாப்பா நாடு ஜமீன்தாரும் மக்களிடம் வட்டிக்குப் பணம்கொடுத்து வசூலித்து வந்தனர். வட்டிக்கு மேல் வட்டி போட்டு அந்த ஜமீன்தார்கள் மக்களைத் துன்புறுத்தினர். இதைத்தடுக்க வேண்டுமென்று எண்ணினோம். அப்போது தோழர்கள் எஸ்ஏ.முருகையனும், கு.சுப்பையனும் கொடுத்த ஆலோசனைப்படி, ஒரு நாள் மதுக்கூர் ஜமீன்தாரின் மணியக்காரர் தம்புசாமி மாதுறாரும், அவருடைய உதவியாளர் ராமசாமி நாயக்கரும் ஜமீன்தார் வட்டிக்குக் கொடுத்த வரவு செலவு நோட்டுடன் குடிக்காட்டிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தபோது, அந்த நோட்டுகளை நம் தோழர்கள் கைப்பற்றி தீ வைத்துக் கொளுத்தினர்”[51] என்று தன்னிடம் டி.காசிநாதன் கூறிய செய்திகளை ஜீவபாரதி வரலாற்றுப் பதிவுகளாக எழுதியுள்ளார். இதிலிருந்து ஜமீன்தார்கள் வட்டி வாங்கி மக்களைக் கொடுமை செய்த நிலையையும், அதை எதிர்த்து நின்ற கம்யூனிஸ்டு தோழர்களின் போராட்ட நிலையையும் அறிந்து கொள்ள முடியும்.

அடக்குமுறைக் காலங்களில் சந்தித்த கொடுமைகளைப் பற்றியும் தன்னிடம் காசிநாதன் பகிர்ந்து கொண்ட செய்தியையும் ஜீவபாரதி வெளிக்கொணர்ந்துள்ளார்.

“தலைமறைவு வாழ்க்கையிலிருந்த நான் ஒரு நாள் போலீசிடம் சிக்கிக்கொண்டேன். என்னைக் கைது செய்து பட்டுக்கோட்டைக்கு இழுத்துச் சென்றனர். அங்கு வைத்து என்னை அடித்து உதைத்தனர். தலைவர்கள் தலைமறைவாக இருக்கும் இடங்களைப் பற்றிக் கேட்டனர். நான் சொல்ல மறுத்ததால் தொடர்ந்து என்னைத் தாக்கினர். என்னிடமிருந்து எந்த விஷயத்தையும் வரவழைக்க முடியாததால் ஆத்திரம் கொண்ட போலீசார் உன்னை ஏசுவாக்குகிறோம் பார் என்று சொல்லிவிட்டு நெஞ்சில் ஆணியை அடித்தனர். அதன்பின் அந்த ஆணியைப் பிடுங்கி முதுகில் அடித்தனர். அத்தனை கொடுமைகளையும் ஏற்றுக்கொண்டேன். அதற்குக் காரணம் நம் இயக்கம் கொடுத்த தைரியம்தான்”[52] என்று தோழர் காசிநாதனை காவல்துறையினர் செய்த கொடுமைகளையும், அந்த நேரத்திலும் அவர் கொண்டிருந்த நெஞ்சுறுதியையும் ஜீவபாரதி குறிப்பிட்டுள்ளார்.

**கலை இலக்கியப் பொதுவுடைமையாளர்கள்**

கலை மற்றும் இலக்கியமானது பாட்டாளி வர்க்கத்தின் பொதுக் குறிக்கோளின் ஒரு பகுதியாக வேண்டும் என்பார் லெனின். கலை என்பதை ஒரு பொழுதுபோக்கு வடிவமாகக் கொள்ளமுடியாது. குறிப்பாக இன்பம் கொள்ளும் சுவை வடிவமாக மட்டும் பார்த்து ஒதுக்கிவிட முடியாது. அழகியல் உணர்வு, கற்பனை மிக்க தொகுப்பாக இலக்கியத்தைப் புறந்தள்ளிவிட முடியாது. கருத்து முதல்வாதிகள் கலை மற்றும் இலக்கியத்தைச் சமூகத்தோடு பொருத்திப் பார்க்கத் தவறி விடுகிறார்கள். பொருள் முதல்வாதிகளாகிய பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் கலை மற்றும் இலக்கியத்தைச் சமூக மறுமலர்ச்சிக்கான ஆயுதமாகவே படைக்கின்றனர்.

“மார்க்சியம் கலையினை வர்க்கத்தன்மை பெற்றதாகவே அறிவிக்கிறது. முரண்பட்ட சமூகத்தில் கலை ஒரு சார்பற்றதாக வர்க்கங்களுக்கு அப்பாற்பட்ட கலையாக இருக்க முடியாது. பகைமை கொண்ட சமூகத்தில், கருத்துப் போரை நிகழ்த்த கலை எப்போதும் ஒரு கருவியாகச் செயல்படுகிறது”[53] என்பார் அ.கா.ஈஸ்வரன்.

தமிழகப் படைப்பாளிகளில் பொதுவுடைமைச் சிந்தனை மிக்க படைப்பாளிகளான நா.வானமாமலை, தி.க.சிவசங்கரன், சடையப்பன் போன்றோரின் இலக்கியப் பணி குறித்தும், அவர்தம் பொதுவுடைமைப் பணி குறித்தும் ஜீவபாரதி எழுதியுள்ளார்.

**நா.வானமாமலை**

பொதுவுடைமை எழுத்தாளர் நா.வானமாமலை பற்றி ஜீவபாரதி, பல புதிய பொலிவு மிக்க செய்திகளை வழங்குகின்றார். பொது வாழ்க்கைக்கு இடையூறாக இருந்த ஆசிரியப் பணியைத் துறந்தது; குடும்பத்தை ஓட்டுவதற்கு வானமாமலை டுடோரியல் கல்லூரி உருவாக்கியது; கம்யூனிச இயக்கத் தோழர்களோடு நெருங்கிய தொடர்பு வைத்திருந்தது; இளைய படைப்பாளிகளை ஊக்குவித்தது; நா.வா, என்.வி, பேராசிரியர் என்று இயக்கத் தோழர்களால் அழைக்கப்பட்டது போன்ற செய்திகளை ஜீவபாரதி தருவது அனைவரும் அறிந்த செய்திகளே.

வீரபாண்டியக் கட்டப்பொம்மனின் வரலாறு குறித்த கூத்து, கும்மி, நாடகம், திரைப்படம் அனைத்திலும் வெள்ளையத் தேவன் போர்க்களத்தில் இறந்தபோது அவன் மனைவி வெள்ளையம்மாளும் உடன்கட்டை ஏறி வீரமரணம் அடைந்தார் என்றே கூறப்பட்டுள்ளது. ஆனால் வெள்ளையம்மாள் மரணத்தை மறுத்துப் பேசியவர் நா.வா. என்று ஜீவபாரதி கூறுகின்றார். அதற்காக நா.வா காட்டிய ஆதாரத்தைத் தம் கட்டுரையில் காட்டியுள்ளார்.

“வெள்ளையம்மாளின் காளையை அடக்கி வெள்ளையத்தேவன் அவளைத் திருமணம் செய்ததாகவும், வெள்ளையரை எதிர்த்து வெள்ளையத் தேவன் போர்க்களம் புறப்பட்ட போது ‘போகாதே போகாதே என் கணவா’ என்று வெள்ளையம்மாள் பாடியதாகவும், களத்தில் வெள்ளையத் தேவன் வீரமரணம் எய்தியதும் அவனுடன் வெள்ளையம்மாள் உடன்கட்டை ஏறியதாகவும், கூத்துப் பாடல்கள் பதிவு செய்தன. இதையே ஆதாரமாகக் கொண்டு நாடகத்திலும், திரைப்படத்திலும் வெள்ளையம்மாள் கதாபாத்திரம் சித்திரிக்கப்பட்டது. ஆனால் இந்தக் கூத்து முற்றிலும் வேறுபட்டு வெள்ளையம்மாள், வெள்ளையத் தேவனுடன் உடன்கட்டை ஏறவில்லை என்றும், கட்டப்பொம்மன் தூக்கிலிடப்பட்டதும், வெள்ளையம்மாள் வெள்ளையர் கண்ணில் சிக்காமல் வாழ்ந்தாள் என்றும், சிறையிலிருந்து தப்பி வந்த ஊமைத்துரை வெள்ளையரால் இடிக்கப்பட்ட பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைச் சூழ்ந்து நின்று தாக்கிய போது கோட்டைக்குள் இருந்த வீரர்களுக்கு வெள்ளையம்மாள் உணவு கொண்டு சென்றாள் என்றும், அது போன்ற வேளையில் வெள்ளையர் படையைச் சேர்ந்த அறுபது வீரர்களை வெள்ளையம்மாள் வெட்டிக் கொன்றாள் என்றும் ஓர் ஏட்டுச் சுவடிப்பாடலை எடுத்துக் காட்டி வெள்ளையம்மாளின் வீரத்தைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியவர் நா.வானமாமலை”[54] என்று வெள்ளையம்மாள் பற்றிய புதிய

வரலாற்றைப் புதிய பார்வையில் தந்த நா.வானமாமலை பற்றி ஜீவபாரதி தம் கட்டுரையில் பாராட்டி எழுதியுள்ளது கருதத்தக்கது.

கணவன் இறந்ததற்குப் பிறகு மனைவியும் உடன்கட்டை ஏறி இறப்பதே வீரமரணம் என்று கூறுவதைப் பொதுவுடைமையாளர்கள் ஏற்பதில்லை. கணவன் இறந்ததற்குப் பிறகும் தன்னால் வாழ முடியும் என்ற தன்னம்பிக்கை இரத்தம் உடையவர்களாகப் பெண்கள் திகழ வேண்டும் என்றே பொதுவுடைமையாளர்கள் விரும்புகின்றனர். அந்த வகையில் வெள்ளையத் தேவன் இறந்த பிறகு அவன் மனைவி வெள்ளையம்மாளும் இறந்துபடவில்லை. அதற்குப் பின்னும் வாழ்ந்து வெள்ளையர் படையைச் சந்தித்துப் போரிட்டாள் என்று ஆதாரத்தோடு ஒரு ஏட்டுச் சுவடிப் பாடலைக் காட்டி நிறுவுவது வானமாமலையின் வரலாற்றுத் தேடலுக்கும், பொதுவுடைமைச் சிந்தனைக்கும் சான்றாக அமைகிறது. வெள்ளையம்மாளின் வீரத்தை வெளி உலகிற்குக் கொண்டு வந்த நா.வானமாமலையின் புதிய வரலாற்றுப் பார்வையோடு அவர்தம் பொதுவுடைமைச் சிந்தனைக் கூறுகளையும் ஜீவபாரதி வெளிக்கொணர்ந்து எழுதியுள்ளார்.

**தி.க.சி**

படைப்புகளின் விமர்சனத்தை அஞ்சலட்டையில் எழுதி அனுப்பும் பழக்கம் கொண்டிருந்த தி.க.சிவசங்கரன் பற்றி ஜீவபாரதி சில வரலாற்றுக் குறிப்புகளை வழங்குகின்றார். தன் நெஞ்சைத் தொட்ட படைப்புகளாயினும், சமூகக் கேடு குறித்த படைப்புகளாயினும் அதைப் படித்த மறுநிமிடமே அது குறித்த விமர்சனத்தை அஞ்சலட்டையில் எழுதி அனுப்பும் பழக்கம் தி.க.சி.யின் கை வந்த கலை என்கிறார் ஜீவபாரதி.

அவர் சாகித்ய அகாதெமி விருது வாங்கிய போது அஞ்சலட்டை எழுதுபவருக்கு சாகித்ய அகாதெமி விருதா? என்று ஏளனம் செய்த பலபேரை ஜீவபாரதி கடிந்துரைக்கின்றார். அஞ்சலட்டையுடன் அவருடைய இலக்கியப் பணி முடிந்து விடவில்லை. இலக்கியப் பணி என்ற முகமூடி அணிந்து கொண்டு, எதையாவது எழுதி நூலாக்கிக் கொண்டு கருத்துப் பரிமாற்றம் என்ற அரிய உத்தியை மறுப்பவர்களால் அவருடைய அஞ்சலட்டையின் மகத்துவத்தைப் புரிந்துகொள்ள இயலாது என்கின்றார்.

இதழ்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் அவர் எழுதிய கடிதங்களைத் தொகுத்து நூலாக வெளியிட்டால் அது மிகச்சிறந்த கடித இலக்கியமாக வரலாற்றில் திகழும் என்கின்றார். கடிதத்தின் வழியாகப் படிப்பாளிகள், படைப்பாளிகள் மத்தியில் தவிர்க்க

முடியாத ஆளுமையாகத் திகழ்ந்தவர் தி.க.சிவசங்கரன் என்பது ஜீவபாரதியின் மேலான எண்ணம். அதனால் தான் ‘‘தேச விடுதலைப் போராட்டத்திற்கு ஒரு வ.உ.சி., இலக்கிய ரசனைக்கு ஒரு டி.கே.சி., சிலப்பதிகாரத்திற்கு ஒரு ம.பொ.சி, தோழமைக்கு ஒரு தி.க.சி’’[55] என்கின்றார் ஜீவபாரதி.

பொதுவுடைமை எழுத்தாளர்கள் கலை, இலக்கிய வடிவத்தைக் கூட ஆடம்பரப்படுத்துவதில்லை. அஞ்சலட்டையின் மூலமாகக் கூட வாசிப்பாளர்களிடம் புரட்சியை விதைக்கலாம் என்று நினைத்த புதிய உத்தி பொதுவுடையாளர்களுக்கு இருந்தது. இதையே ‘தோழமைக்கு ஒரு தி.க.சி’ என்று ஜீவபாரதி குறிப்பிடுகின்றார். அஞ்சலட்டையின் மூலமாகத் தோழமை உணர்வையும், தொண்டு உணர்வையும் தி.க.சி. வளர்த்தார் என்று சுட்டுவதன் மூலம் தி.க.சி.யின் பொதுவுடைமைச் செயல்பாட்டை ஜீவபாரதி புலப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**சடையப்பன்**

தருமபுரி மாவட்டம அரூர் வட்டம் சக்கிலிப்பட்டி என்ற கிராமத்துச் சேரியில் வாழ்ந்த சடையன் – பேச்சியம்மாள் தம்பதிக்கு *1925* நவம்பர் *21* அன்று பிறந்த சடையப்பன் என்பவர் பல சோதனைகளைச் சந்தித்துக் கம்யூனிசக் கவிஞராகவும், இயக்கத்துப் பணிகளை வெளியில் எடுத்துச் செல்லும் களப்பணியாளராகவும் திகழ்ந்துள்ளார். அவரைப் பற்றிய ஜீவபாரதியின் பதிவும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது.

‘‘ஊருக்குள் செருப்புப் போட்டுச் செல்லக் கூடாது. தலையிலோ, தோளிலோ இருக்க வேண்டிய துண்டு கக்கத்தில் தான் இருக்க வேண்டும். உயர் சாதியினரைக் கண்டால், அவர் இளம் வயதினராக இருப்பினும், குனிந்து, பணிந்து வணங்க வேண்டும். உயர் சாதியினர் எவரேனும் இறந்துவிட்டால் அந்தத் துயரச் செய்தியை இறந்தவர்களின் உறவினர்கள் வாழும் பிற ஊர்களுக்குச் சென்று சொல்ல வேண்டும். இப்படித் தான் அந்தச் சேரி வாழ் மக்களை உயர் சாதியினர் நடத்தி வந்தனர்’’[56] என்று அந்த ஊரில் நடந்த சாதியின் கோரத் தாண்டவத்தை தோலுரித்துக் காட்டியுள்ளார் ஜீவபாரதி.

சடையப்பன் இசைஞானம் உள்ளவர். அவருடைய தாய் சேரிப் பெண்களுக்கு கும்மி, தாலாட்டு, ஒப்பாரி போன்ற கிராமியப் பாடல்களைக் கற்றுக் கொடுத்து வந்துள்ளார். தந்தையின் உதவியால் வீட்டிலேயே ஆசிரியர் சிதம்பரத்தைக் கொண்டு தமிழ், தெலுங்கு கற்றுள்ளார். நடந்தே ஜோலார்பேட்டை சென்று ராணுவத்திற்கு ஆள்

எடுக்கும் தேர்வில் வெற்றி பெற்றுள்ளார். நெல்லூர், யாழ்ப்பாணம், கயா, தாய்லாந்து, சிட்டகாங், கொல்கத்தா ஆகிய இடங்களில் ராணுவப் பயிற்சி பெற்றுள்ளார். பின்னர் பெரியார், ஜீவா கருத்துக்களால் ஈர்க்கப்பட்டுள்ளார். பின்னர் சொந்தக் கிராமத்தில் தொடக்கப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். பள்ளித் தலைமை ஆசிரியர் அப்பாதுரை என்பவரின் தூண்டுதலால் கம்யூனிச இலக்கியங்களைப் படித்துள்ளார். பாடல் எழுதுவது, டேப் அடித்துக் கொண்டு இயக்க மேடைகளில் பாடுவது, நாடகம் எழுதுவது, நடிப்பது என்று பல களப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். கம்யூனிஸ்ட் கட்சியின் தடைக் காலத்தில் சேலம், ஏற்காடு சிறைகளில் தள்ளப்பட்டுள்ளார். விடுதலையானபின் சென்னைக்குச் சென்று ஜனசக்தி அலுவலகத்தில் தங்கி சினிமா வாய்ப்புத் தேடியுள்ளார். இவைபோன்ற சடையப்பனின் பொதுவுடைமைப் பண்பு மிக்க வாழ்வியற் செய்திகளை ஜீவபாரதி தம் கட்டுரையில் விரிவாக எழுதியுள்ளார்.

திறமையிருந்தும், எழுத்தாற்றல் இருந்தும் அவர்தம் படைப்புகளை நூலாக்கம் செய்ய முடியாமல் கனவுகளோடே தம் வாழ்வினை நிறைவு செய்துள்ளார். சடையப்பன் எழுதி வைத்திருந்த 'எனது வரலாறு' என்ற கையெழுத்துப் பிரதியைப் படிக்கும் வாய்ப்பு ஜீவபாரதிக்கு ஏற்பட்டதாகவும் அதில் அவர் எழுதியுள்ளதாகக் கூறியுள்ள நூல்களைக் கண்டு வியப்படைந்ததாகவும் கூறியுள்ளார்.

இன்றைய உலகம், பெரும்பணக்காரர் பெரும்பாவி, சொல்லத் துடிக்குதடா, உன்னைப் போல் ஒருத்தி, மக்கள் கவிஞன், மனித தெய்வம், மக்கள் தொண்டன், ஏழைகளின் புது உலகம், வீரகாவியம், நீதி உறங்குகிறது, கொலைகாரன், கலப்புமணம், ஒருபிடி சோறு ஆகிய 15 நாடகங்களையும், 865 கவிதைகளையும், 705 இசைப்பாடல்களையும், 50 கவியரங்கக் கவிதைகளையும், தீண்டாமையை எதிர்த்து 75 கவிதைகளையும், 25 கட்டுரைகளையும், 35 சிறுகதைகளையும் தாம் எழுதியிருப்பதாக சடையப்பன் குறிப்பிட்டுள்ளதாக ஜீவபாரதி கூறியுள்ளார்.

"இறுதி நாள் வரை ஒரு முழுமையான கம்யூனிஸ்டாகவும், போர்க்குணம் மிக்க போராளியாகவும், வாழ்ந்த கவிஞர் சடையப்பன் 1991 மே 26 அன்று இறந்தார். வாழும் போது தன்னுடைய படைப்புகளை நூலாக்க அலைந்தார். எவரும் கைகொடுக்காததால் அந்தக் கவலையோடு அவர் இறந்தார். ஆம். பொதுவுடைமை இயக்கத்தைச் சார்ந்த எத்தனை படைப்பாளிகள் இது போன்று கனவுகளோடு கண்மூடினரோ?"[57] என்று ஜீவபாரதி சொல்வது பொதுவுடைமைப் படைப்பாளிகளின் சோக வாழ்க்கையை விவரிப்பதாய் உள்ளது.

பொதுவுடைமைப் படைப்பாளிகள் யாருடனும் சமரசம் செய்து கொள்ளாததால் அவர்களின் படைப்புகளைக் கூட வெளியிடுவதில் இருக்கிற சிரமத்தை ஜீவபாரதி சுட்டிக்காட்டியிருப்பது சிந்திக்கத் தக்கதாய் அமைகிறது.

**தொகுப்புரை**

ஒரு நாட்டின் இனம், மொழி, வாழ்வியல் உள்ளிட்ட பல்வேறு அம்சங்களை வரலாற்றுப் பார்வையோடு ஆராய்வது அவசியமாகிறது. பொதுவுடைமைச் சிந்தனை மிக்க பல தலைவர்களின் வாழ்வியல் போக்கையும், போராட்டக் குணத்தையும் ஜீவபாரதி தம் படைப்புகளில் வெளிக் கொணர்ந்துள்ளார். உலகளாவிய சரித்திரம் படைத்த சாக்ரடீஸ், மாயகோவ்ஸ்கி, பிடல் காஸ்ட்ரோ, சேகுவேரா, யாசர் அராபத், நெல்சன் மண்டேலா, ஹோசிமின், மாசேதுங் போன்ற புரட்சியாளர்களின் வாழ்வியலைத் தடம் மாறாமல் ஜீவபாரதி படைத்தளித்துள்ளார். கியூபாவின் மீதும், அதன் தலைவர் காஸ்ட்ரோவின் மீதும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்த கவிஞர் பாப்லோ நெரூடா பற்றியும் எழுதியுள்ள ஜீவபாரதியின் வரலாற்றுப் பார்வை முக்கியத்துவம் வாய்ந்தது.

உலகளாவிய வரலாறு படைத்தவர்களின் எழுத்துச் சிந்தனை போல இந்திய அளவில் படைப்புலக மேதைகளாக இருந்த பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் பற்றியும் ஜீவபாரதி எழுதியுள்ளார். ஆந்திரக் கவிஞர் ஸ்ரீஸ்ரீ, மகாராஷ்டிரப் படைப்பாளி எஸ்.ஏ.டாங்கே, காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்த கவிக்குயில் சரோஜினி நாயுடு போன்றோரின் வாழ்வியலை வரலாற்றுப் பார்வையும், பொதுவுடைமைப் பார்வையும் கொண்டு எழுதியுள்ளார். இந்தியப் பழங்குடி மக்களின் போராட்ட உணர்வு குறித்தும் ஜீவபாரதி பல வரலாற்றுத் தகவல்களைத் தந்துள்ளார்.

தமிழகப் புரட்சியாளர்களான மாயாண்டி பாரதி, தும்படைக்காக் கோட்டை ராமுத்தேவன், முகவை மாவட்டத்தின் முதல் கம்யூனிஸ்டான எம்.வி.சுந்தரம், தஞ்சை மாவட்டத் தோழர் பி.ராமமூர்த்தி, பிராமண பேதத்தை உடைத்தெறிந்த ரங்காராவ், ரத்தத்தால் அரிவாள் சுத்தியல் வரைந்த தோழர் மதனகோபால், மயானத்தில் மார்க்சிய வகுப்பெடுத்த தோழர் பொன்னையா, நெஞ்சிலே ஆணி அடித்த போதும் நெஞ்சை நிமிர்த்திய தோழர் டி.காசிநாதன் போன்றோரின் போராட்டக் குணங்களை ஜீவபாரதி வெளிப்படுத்தியுள்ளார்.

பொதுவுடைமைச் சிந்தனை மிக்க படைப்பாளிகளான நா.வானமாமலை, தி.க.சிவசங்கரன், சடையப்பன் போன்றோரின் இலக்கியப் பணியைப் பொதுவுடைமைச் சிந்தனையோடு ஜீவபாரதி அடையாளப்படுத்தியுள்ளார். இவற்றால் ஜீவபாரதி பொதுவுடைமை சார்ந்த வரலாற்றுப் பதிவுகளைத் தம் படைப்புகளில் எழுதுவதைக் கொள்கையாகக் கொண்டுள்ளார் என்பது புலனாகும்.

## சான்றெண் விளக்கம்

1. கியோர்க்கி ஷகனஸாரவ் மற்றும் ஆசிரியர் குழு, பாக்கியம் சுந்தரம் (மொ.பெ.ஆ), மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும், ப.55.
2. எஸ்.இல்யீன், அ.மொத்திலோவ், அரசியல் பொருளாதாரம் என்றால் என்ன? ப.11
3. கியோர்க்கி ஷகனஸாரவ் மற்றும் ஆசிரியர் குழு, பாக்கியம் சுந்தரம் (மொ.பெ.ஆ), மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும், ப.77.
4. கே.ஜீவபாரதி, உலகமேதைகள், ப.4.
5. மு.பழநிஇராகுலதாசன், அணிந்துரை, (கே.ஜீவபாரதி நூ.ஆ), சரித்திரம் பேசுகிறது, ப.5.
6. நா.வானமாமலை, இந்தியத் தத்துவ மரபும் மார்க்சிய இயக்கவியலும், ப.144
7. அ.கா.ஈஸ்வரன், சமூக வளர்ச்சியின் அடித்தளமும் மேற்கட்டமைப்பும் பற்றி மார்க்சியம், ப.55.
8. கியோர்க்கி ஷகனஸாரவ் மற்றும் ஆசிரியர் குழு, பாக்கியம் சுந்தரம் (மொ.பெ.ஆ), மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும், ப.363.
9. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, பக்.26–27.
10. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழ்ப்பண்பாடும் இலக்கியமும், ப.122.
11. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, பக்.27–28.
12. கே.ஜீவபாரதி, அந்தநாள் ஞாபகம், பக்.79–80.
13. மேலது, ப.80.
14. மேலது, ப.103.
15. எஸ்.ஜி.கீதானந்தன், அரசியல் சாளரத்தின் ஊடே சமூக இலக்கியப் பார்வைகள், ப.154.
16. கே.ஜீவபாரதி, கனல் மணக்கும் பூக்கள் பக். 64–65
17. கே.ஜீவபாரதி, ஒரு முடிவுக்கு வாருங்கள், ப.40.
18. கே.ஜீவபாரதி, அந்த நாள் ஞாபகம், ப.125.
19. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.62.
20. மேலது, ப.57

21. கே.ஜீவபாரதி, எனது தரிசனங்கள், பக்.56–57.
22. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.57.
23. மேலது ப.58.
24. மேலது ப.112.
25. நிழல்வண்ணன், மார்க்சியத்தின் அடிப்படைகள், ப.12.
26. கே.ஜீவபாரதி, அந்தநாள் ஞாபகம், ப.67.
27. மேலது ப.68.
28. ரொமீலா தாப்பர், வரலாறும் வக்கிரங்களும், தமிழில்: நா.வானமாமலை, ப.3.
29. கான்ஸ்டான்டின்ஃபெடின் கலையும் மொழியும், தமிழில்: டி.எஸ்.நடராஜன், ப.4.
30. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.138.
31. மேலது, ப.139.
32. மேலது, பக்.173–174.
33. மேலது, பக்.263–264.
34. மேலது, ப.265.
35. மேலது, ப.314.
36. மேலது, ப.316.
37. கியோர்க்கி ஷகனஸாரவ் மற்றும் ஆசிரியர் குழு, பாக்கியம் சுந்தரம் (மொ.பெ.ஆ), மனிதனும் விஞ்ஞானமும் சமுதாயமும், ப.79.
38. நா.வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப.60.
39. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.76.
40. நா.வானமாமலை, இந்தியத் தத்துவ மரபும், மார்க்சிய இயக்கவியலும், ப.144.
41. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, பக்.60–61.
42. மேலது, ப.199.
43. மேலது, ப.108.
44. கே.ஜீவபாரதி, சரித்திரம் பேசுகிறது, ப.14.
45. அ.கா.ஈஸ்வரன், மார்க்சியத் தத்துவம், ப.129

46. கே.ஜீவபாரதி, வரலாறு பேசுகிறது, ப.63.

47. மேலது, பக்.63–64.

48. மேலது, ப.92.

49. மேலது, ப.102.

50. கே.ஜீவபாரதி, வரலாறு பேசுகிறது, இரண்டாம் தொகுதி, ப.96.

51. மேலது, ப.98

52. மேலது, ப.99

53. அ.கா.ஈஸ்வரன், மார்க்சியத் தத்துவம், ப.114.

54. கே.ஜீவபாரதி, வாழும் வரலாறு, ப.25.

55. மேலது, ப.115.

56. மேலது, ப.249.

57. மேலது, ப.250.

## முடிவுரை

பொதுவுடைமை என்பது தத்துவமாகவும், கோட்பாடாகவும், விஞ்ஞானமாகவும் திகழ்கிறது. கருத்து முதல்வாதத்தை எதிர்த்து, பொருள் முதல் வாதத்தை நிறுவுவதே பொதுவுடைமையின் நோக்கமாகும். மார்க்ஸ், எங்கெல்ஸ் என்ற இருவரின் கூட்டுப் படைப்பாகவே பொதுவுடைமைச் சித்தாந்தமாகிய கம்யூனிச அறிக்கை திகழ்கிறது. பொதுவுடைமையை வலியுறுத்தும் மார்க்சியத் தத்துவம் உலகில் உள்ள அனைத்துத் தத்துவங்களையும் விட மேலானது. இத்தத்துவம் மதம், சமயம், சார்ந்த ஆன்மீகம் அல்ல. இது ஒரு சமுதாய விஞ்ஞானம்.

மனிதகுல வரலாறு வர்க்கப் போராட்டங்களால் ஆனது. சமுதாயத்தில் பெரும் வலிமை வாய்ந்த உழைப்பாளி வர்க்கம் சமுதாய மாற்றத்திற்கான தமது போராட்டத்தைப் பொருளாதாரப் போராட்டம், அரசியல் போராட்டம், கருத்துப் போராட்டம் என்று மூன்று நிலைகளில் வெளிப்படுத்துகின்றது. புராதனப் பொதுவுடைமைச் சமூகமாக இருந்த நிலைமாறி அடிமை உடைமைச் சமூகமாகவும், நில உடைமைச் சமூகமாகவும், முதலாளித்துவச் சமூகமாகவும், காலந்தோறும் சமூக நிலைகள் மாறி வந்துள்ளன. இந்நிலையில் விஞ்ஞான சோசலிச சமூகத்தை உருவாக்குதே பொதுவுடைமைவாதிகளின் நோக்கமாக உள்ளது.

பொதுவுடைமைச் சிந்தனைக்கான களமாக ரஷ்யப் புரட்சிக்கு முன்னரே இந்தியா பலநிலைகளில் தயாராகியிருந்தது. இந்தியாவின் ஆதிவாசிகள், விவசாயிகள், தொழிலாளர்கள் போன்ற உழைப்பாளி வர்க்கத்தினரின் போராட்டங்களும், தியாகங்களும் பொதுவுடைமை இயக்கம் இந்தியாவில் தோன்றக் காரணமாய் அமைந்தன.

இந்தியாவின் பொதுவுடைமை வளர்ச்சிக்கு கம்யூனிஸ்டுகள் மட்டுமன்றி காங்கிரஸ், காங்கிரஸ் சோசலிஸ்டு, சுயராஜ்யக் கட்சி என்று எல்லாக் கட்சிகளும் ஆரம்பத்தில் உதவின.

தமிழகத்தில் பொதுவுடைமைக் கருத்துகளை மக்களிடம் பரப்பியதில் பெரும்பங்கு சிங்காரவேலருக்கு உண்டு. பெரியார், திரு.வி.க, ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பாரதி, பாரதிதாசன் போன்றோரும் தமிழகத்தில் பொதுவுடைமை காலூன்றப் பாடுபட்டனர். இந்த வரிசையில் கே.ஜீவபாரதியின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாய் உள்ளது.

கவிதை, புதினம், நாடகம், உரைநடை என்று பல தளங்களில் தம் படைப்புகளை நூலாக்கி கே.ஜீவபாரதி பொதுவுடைமைச் சார்பாளராகத் திகழ்ந்து

வருகிறார். ஜனசக்தியில் கட்டுரைப்பிரிவின் ஆசிரியராகவும், மேன்மை இதழில் ஆசிரியராகவும் செயல்பட்டு பொதுவுடைமைக் கொள்கைகளைப் பரப்பியுள்ளார். சமுதாய மாற்றத்துக்கான போராட்டக் கருவியாகவே ஜீவபாரதியின் படைப்பிலக்கியங்கள் திகழ்கின்றன. பாமரன், பாட்டாளி, உழைப்பாளி போன்றோரின் வாழ்வியல் சிக்கல்களைப் பொருளாதாரக் கண்கொண்டு தம் எழுத்துகளில் பதிவு செய்துள்ளார். சமூகக் கொடுமைகள் மாறிட போராட்டக் குணமும், தோழமை உணர்வும் வேண்டும் என்கின்றார்.

சமூக மறுமலர்ச்சிக்குத் தடையாக இருக்கும் சாதியின் கொடுமைத் தாக்குதலை தமிழகத்தின் பல்வேறு வட்டாரங்களில் நிகழ்ந்த சம்பவங்கள் மூலமாக ஜீவபாரதி சுட்டிக் காட்டியுள்ளார். சுயநலத்திற்காகச் சாதியைப் பயன்படுத்த நினைப்பவர்களை அடையாளம் கண்டு ஒடுக்குவதே எதிர்காலச் சமூகத்திற்கு உகந்தது என்றும் கூறுகின்றார். பண்ணையாளர்கள், முதலாளிகள் செய்யும் அக்கிரமங்களை ஜீவபாரதி தம் படைப்புகளில் எழுதியதோடு அவர்களின் அடாவடித்தனத்தை ஒடுக்கிட கம்யூனிசச் சிந்தாந்தமே சரியானது என்றும், தொழிலாளர்கள் சேர்ந்து நின்று குரல் கொடுத்தால் முதலாளி வர்க்கத்திற்குச் சாவுமணியாய் அது அமையும் என்றும், தேசத்தில் பொதுவுடைமை பூக்கும் சிவப்புக் கம்பளம் என்று விரிக்கப்படுகிறதோ அன்று தான் நியாயம் பிறக்கும் என்றும் கூறுகின்றார்.

ஜீவபாரதி தம் படைப்புகளில் மதங்களையும், கடவுளையும் சாடி எழுதியுள்ளார். மானுட உணர்வுக்கு மதங்கள் வழிவகுக்கவில்லை என்று குற்றம் சாட்டியுள்ளார். பொதுவுடைமைக்கு இடையூறாக இருப்பதால் மதம் களையப்பட வேண்டிய ஒன்று என்கின்றார். வர்ணாசிரமக் கொள்கைகளைக் காந்தியிடம் எதிர்த்துப் பேசிய ஜீவாவைத் தம் படைப்புகளில் உயர்வாக எழுதியுள்ளார். தலையெழுத்து, தவப்பயன் போன்ற போலி வேதாந்தங்களை உடைத்தெறிந்தால் தான் உழைக்கும் நம்பிக்கை பெருகும். அதன் மூலமே பொதுவுடைமை மலரும் என்கின்றார்.

ஆடம்பரமான விழாக்களையும், விலைவாசி ஏற்றத்தையும் கண்டிக்கின்றார். சமூகநோக்கில் எதிர்ப்புரட்சி வெடிக்கும் போது மாற்றம் உருவாகும் என்பது ஜீவபாரதியின் அசைக்க முடியாத நம்பிக்கையாய் உள்ளது. உழைப்புச் சாதனங்களும், பொருட்களும் ஒரு சிலருக்கே சொந்தமாக இருந்தால் அது தனியுடைமை என்றும் எல்லோருக்கும் பொதுவானதாகவும் அரசு சார்ந்ததாகவும் இருந்தால் அது பொதுவுடைமையென்றும் கொள்ளப்பெறும். பொதுவுடைமை பேணவேண்டிய

அரசாங்கமே சுரண்டும் வர்க்கமான முதலாளிகளுக்கு ஆதரவாக இருப்பதை ஜீவபாரதி கண்டிக்கின்றார்.

இந்திய மண் சிவந்ததற்குக் காரணமே கம்யூனிஸ்ட் தோழர்களின் இரத்தம் தான் என்றும் சுதந்திரம் வாங்கியதற்குப் பிறகும் முறையான வாழ்க்கை முறையும் பொருளாதாரச் சமநிலையும் உருவாகவில்லை என்றும் ஜீவபாரதி கூறுகின்றார். உழைக்கும் வர்க்கம் ஏமாளியாய் இருக்கும் வரை அரசியல்வாதிகளின் உதைபந்தாகவே இருக்கும் சூழ்நிலை ஏற்படும். அரசியலில் மாற்றம் வர, தொழிலாளர்கள் ஒன்றுகூடிக் குரல் கொடுத்தால் ஒழிய வேறு வாய்ப்பில்லை என்று உறுதியாக எழுதுகின்றார்.

மன்னராட்சி ஒழிந்தாலும் முதலாளித்துவ ஆட்சி ஒழியவில்லை. ஆள்பவர்கள் யாராக இருந்தாலும் பாதிப்படைவது மக்களாக உள்ளனர். சுதந்திரம் கிடைத்தும் சுதந்திரத்தின் பலன் சாதாரண மக்களுக்கு வந்து சேரவில்லை என்பதும் முதலாளிகளின் சுரண்டல் தன்மை ஏழைகளின் தேவையைக் கெடுத்திருக்கிறது எனபதும் இவர்தம் பதிவாக உள்ளது. முதலாளித்துவச் சமுதாயம் மாற்றியமைக்கப்பட்டு சோசலிச ஆட்சி மலர்வதற்கு ஜீவபாரதியின் அரசியல் சிந்தனை தெளிவான பாதையை வகுக்கிறது.

இப்போது இந்தியாவில் அமைந்துள்ள மக்களாட்சி முறையில் தேர்தல் முக்கியப் பங்குபெறுகிறது. ஐந்தாண்டுக்கு ஒரு முறை வரும் தேர்தல் அதிகாரப் போக்குடைய அரசியல்வாதிகளுக்கே சாதகமாய் அமைகிறது. அது ஒரு முதலாளித்துவப் போக்கே என்பது ஜீவபாரதியின் சிந்தனைத் தெளிவாக உள்ளது. சட்டத்தையும், அரசையும் தனக்குச் சாதகமாகப் பணத்தால் விலைபேசுபவர்களே பலம் படைத்த அரசியல்வாதிகளாக உலா வருகின்றனர். அவர்களே தேர்தல் களத்தில் வெற்றி வாகை சூடுகின்றனர். அவர்கள் கையில் செல்லும் அரசாட்சியால் மக்களுக்கு நன்மை பயப்பதில்லை என்பது ஜீவபாரதியின் எண்ணமாக உள்ளது.

ஜார் மன்னனின் கொடுங்கோல் ஆட்சியை வீழ்த்திடத் தோழர்களோடு கைகோர்த்து உழைத்திட்ட லெனினைப் பற்றி தம் படைப்புகளில் ஜீவபாரதி பதிவு செய்துள்ளார். மார்க்சியக் கொள்கையின் மூலவர் மார்க்சைப் பற்றியும் எங்கெல்ஸ் பற்றியும் பலவிடங்களில் தம் எழுத்து மூலமாக வெளிப்படுத்துகின்றார்.

தமிழ்க்கவிதை வரலாற்றில் பொதுவுடைமைச் சிந்தனையை அரசியல் நோக்கோடு விதைத்த கவிஞர்களான பாரதி, பாரதிதாசன், ஜீவா, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் போன்ற கவிஞர்களையும் தம் படைப்புகளில் போற்றி எழுதியுள்ளார்.

தமிழக அரசியல் தலைவர்களான சிங்காரவேலர், நல்லகண்ணு போன்றோரைப் பற்றிய ஜீவபாரதியின் கருத்துகளும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக உள்ளன.

பெண்களின் அடிமைத்தன வாழ்க்கையிலிருந்து விடுபட மார்க்சியமே நிரந்தரத்தீர்வு கூறுவதாக ஜீவபாரதி குறிப்பிடுகின்றார். ஆணுக்கு இணையான ஜனநாயம், சமத்துவம், விடுதலை என்ற மூன்று அடிப்படை அம்சங்களும் பெண்ணுக்கும் வேண்டும் என்று போராடுகின்ற மார்க்சியவாதியாக ஜீவபாரதி திகழ்கின்றார். பொதுவுடைமைச் சிந்தனையோடு வேலுநாச்சியார் என்ற புதினத்தையும், வீரத்தாய் வேலுநாச்சியார் என்ற நாடகத்தையும், மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள் என்ற உரைநடை நூலையும் படைத்துள்ளார்.

வேலுநாச்சியார் பலமொழி பயின்றவராகவும், ஆணுக்கு இணையான வீரமிக்கவராகவும், வாரிசுரிமையைத் தடுத்தவராகவும், போர்க்களத்தில் வெள்ளையரை வெற்றி கண்டு இழந்த நாட்டை மீட்டவராகவும் திகழ்ந்துள்ளார். வேலுநாச்சியாரைப் போலவே உடையாள், குயிலி போன்ற பெண்களும் புரட்சிகரப் பெண்களாகத் திகழ்ந்துள்ளனர் என்பதனை ஜீவபாரதியின் ‘வேலுநாச்சியார்’ புதினத்தின் வழி அறியமுடிகிறது.

மார்ச் 8ஆம் தேதியை சர்வதேச மகளிர் தினமாகக் கொண்டாட வழிவகுத்த கிளாரா ஜெட்கின், மார்க்சுக்கு சிறந்த ஆலோசகராகத் திகழ்ந்த அவர் துணைவி ஜென்னி மார்க்ஸ், லெனினுக்கு இணையான போராளியாகத் திகழ்ந்த அவர்தம் துணைவி குரூப்ஸ் காயா, கணவனின் சிறைக்குறிப்பை நூலாக்கிய அகுஸ்தினா பூசிக் போன்றோரின் பொதுவுடைமை வாழ்வை அச்சுக் குலையாமல் எழுதியுள்ளார்.

ஜீவாவின் துணைவியார் பத்மாவதி அம்மையாரின் பொதுவுடைமை வாழ்வு குறித்தும் ஜீவபாரதி தம் சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளார். மறக்கப்பட்ட மங்கையர்கள் என்ற தலைப்பில் லட்சுமி அம்மாள், அஞ்சலையம்மாள், லீலாவதி என்ற அம்மாக்கண்ணு, கல்பனாதத், டாக்டர் முத்துலெட்சுமி, அருணா ஆஸப் அலி என்று பல பெண்களின் போராட்டம் மிகுந்த வாழ்வையும், பெண்ணியச் சிந்தனையையும் பொதுவுடைமைக் கூறுகளோடு நிரல்படத் தொகுத்தும், வகுத்தும் தந்துள்ளார்.

உலகளாவிய சரித்திரம் படைத்த சாக்ரடீஸ், மாயகோவ்ஸ்கி, மார்க்சிம் கார்க்கி, பிடல் காஸ்ட்ரோ, சேகுவேரா, யாசர் அராபத், நெல்சன் மண்டேலா, ஹோசிமின், மாசேதுங் போன்ற புரட்சியாளர்களின் வாழ்வியல் போராட்டத்தை வரலாற்றுப் பார்வையோடும் பொதுவுடைமைச் சிந்தனையோடும் ஜீவபாரதி எழுதியுள்ளார்.

கியூபாவின் மீதும், அதன் தலைவர் காஸ்ட்ரோவின் மீதும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்த கவிஞர் பாப்லோ நெரூடா பற்றிய வரலாற்றுப் பதிவு பொதுவுடைமைச் சிந்தனையோடு கைகோர்ப்பதாய் உள்ளது. இந்தியப் படைப்பாளிகளான ஆந்திரக் கவிஞர் ஸ்ரீஸ்ரீ, மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த எஸ்ஏ.டாங்கே, காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்த கவிக்குயில் சரோஜினி நாயுடு போன்றோரின் வாழ்வியலை வரலாற்றுப் பார்வையோடும், பொதுவுடைமைப் பார்வையோடும் எழுதியுள்ளார். பொதுவுடைமைச் சிந்தனைமிக்க படைப்பாளிகளான நா.வானமாமலை, தி.க.சிவசங்கரன், சடையப்பன் போன்றோரின் எழுத்துக்களில் உள்ள பொதுவுடைமைச் சிந்தனைகளை அடையாளப்படுத்தியுள்ளார்.

தமிழகப் புரட்சியாளர்களான மாயாண்டிபாரதி, தும்படைக்காக்கோட்டை ராமுத்தேவன், முகவை மாவட்டத்தின் முதல் கம்யூனிஸ்டான எம்.வி.சுந்தரம், தஞ்சை மாவட்டத் தோழர் பி.ராமமூர்த்தி, பிராமண பேதத்தை உடைத்தெறிந்த ரங்காராவ், தோழியர் பார்வதிகிருஷ்ணன், ரத்தத்தால் அரிவாள் சுத்தியல் வரைந்த தோழர் மதனகோபால், மயானத்தில் மார்க்சிய வகுப்பெடுத்த தோழர் பொன்னையா, நெஞ்சில் ஆணி அடித்த போதும் நெஞ்சை நிமிர்த்திய தோழர் டி.காசிநாதன் போன்றோரின் போராட்டக் குணங்களை ஜீவபாரதி தம் உரைநடை நூல்களில் பதிவு செய்துள்ளார்.

சமூகக் கேடுகளிலிருந்து விடுபட எதிர்வினை புரியும் ஆற்றல் மிக்க போராட்டம் வேண்டும். மக்கள் விரோதப் போக்காக இருக்கும் அரசியல் போக்கு மாற்றப்பட வேண்டும். ஆணுக்கு இணையாகப் பெண்களின் நிலை சரிநிகராகப் பேணப்படுதல் வேண்டும். சமூக மாற்றத்திற்காகப் போராடியவர்களின் வரலாற்றை முறைப்படி வெளிக்கொணர வேண்டும். மேற்சொன்ன கருத்தாக்கங்களே ஜீவபாரதியின் பொதுவுடைமைச் சிந்தனைமிக்க படைப்பாக்கக் கொள்கையாகும்.

**மேலாய்வுக் களங்கள்**

1. கே.ஜீவபாரதியின் இலக்கியக் கொள்கை
2. நடையியல் நோக்கில் கே.ஜீவபாரதியின் படைப்புகள்
3. கே.ஜீவபாரதியின் தொகுப்பு நெறியும் பொருண்மையும்

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

**கவிதை நூல்கள்**


| | | |
|---|---|---|
| 1 | ஜீவபாரதி.கே | **ஒரு முடிவுக்கு வாருங்கள்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்,<br>41–பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,<br>சென்னை–98.<br>முதற்பதிப்பு–ஆகஸ்டு, 1977. |
| 2 | மேலது | **களத்தில் பிறந்த கவிதைகள்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்,<br>41–பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,<br>சென்னை–98.<br>முதற்பதிப்பு–டிசம்பர், 1982. |
| 3 | மேலது | **கனல் மணக்கும் பூக்கள்,**<br>அணு பதிப்பகம்,<br>143, பெரிய தெரு, திருவல்லிக் கேணி,<br>சென்னை–5,<br>முதற்பதிப்பு, அக்டோபர்–1983. |
| 4 | மேலது | **புதுயுகக் கவிஞனும் புதியவன் குரல்களும்**<br>அணு பதிப்பகம்,<br>143, பெரிய தெரு, திருவல்லிக் கேணி,<br>சென்னை–5, முதற்பதிப்பு, அக்டோபர்–1983. |

5 மேலது **சொல்லுறதச் சொல்லிப்புட்டேன்,**
கனிமுத்துப் பதிப்பகம்,
727, அண்ணாசாலை, சென்னை–6
முதற்பதிப்பு, டிசம்பர்–1986.

6 மேலது **மனிதர்கள் வாழும் மண்ணைத் தேடி,**
கற்பகம் புத்தகாலயம்,
தி.நகர், சென்னை–6,
முதற்பதிப்பு, டிசம்பர்–1986.

7 மேலது **கவிதை எழுதினேன் கடிதம் வந்தது,**
கற்பகம் புத்தகாலயம்,
தி.நகர், சென்னை–6,
முதற்பதிப்பு, அக்டோபர்–1999.

8 மேலது **அறிவை வளர்க்கும் சிறுவர் பாடல்கள்,**
மணிமலர் பதிப்பகம்,
434, பாரதிநகர் தெற்கு, காரைக்கால் ரோடு,
கும்பகோணம்–612001,
முதற்பதிப்பு, ஏப்ரல்–2009.

9 மேலது **கே.ஜீவபாரதி கவிதைகள்,**
ஜீவா பதிப்பகம், 8, சீனிவாசன் தெரு,
தி.நகர், சென்னை–17,
முதற்பதிப்பு, டிசம்பர்–2014.

**புதினம்**

| | | |
|---|---|---|
| 10 | ஜீவபாரதி.கே | **வேலுநாச்சியார்,**<br>குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை,<br>தி.நகர், சென்னை–17,<br>மூன்றாம் பதிப்பு, மார்ச்–2010. |

**நாடகம்**

| | | |
|---|---|---|
| 11 | ஜீவபாரதி.கே | **வீரத்தாய் வேலுநாச்சியார்,**<br>குமரன் பதிப்பகம்,<br>19, கண்ணதாசன் சாலை, தி.நகர்.<br>சென்னை–17,<br>இரண்டாம் பதிப்பு, பிப்ரவரி–2009. |

**வரலாற்று உரைநடை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 12 | ஜீவபாரதி.கே | **காலமறிந்து கூவிய சேவல்,**<br>வைரம் வெளியீடு,<br>முதலியாண்டான் தோட்டம், காமராஜ் சாலை,<br>சென்னை–18,<br>இரண்டாம் பதிப்பு, டிசம்பர்–1999. |
| 13 | மேலது | **எனது தரிசனங்கள்,**<br>குமரன் பதிப்பகம், 3,முத்துகிருஷ்ணன் தெரு,<br>பாண்டி பஜார், தி.நகர், சென்னை–17,<br>முதற்பதிப்பு, டிசம்பர்–2001. |

14 மேலது **வீரன் எட்டப்பன் முதல்**
**வேலு நாச்சியார் வரை,**
ராஜேஸ்வரி புத்தக நிலையம்,
4, முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர்,
சென்னை–17, முதற்பதிப்பு, ஜீன்–2002.

15 மேலது **இந்தப் பாடல்களும் எனது திரையும்,**
நிவேதிதா பதிப்பகம்,
அசோக் நகர், சென்னை–83,
முதற்பதிப்பு, 2002.

16 மேலது **மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள்**
குமரன் பதிப்பகம்,
3, முத்துகிருஷ்ணன் தெரு,
பாண்டி பஜார், சென்னை–17,
முதற்பதிப்பு–2005.

17 மேலது **வாழும் வரலாறு,**
குமரன் பதிப்பகம்,
தி.நகர், சென்னை–17,
முதற்பதிப்பு, டிசம்பர்–2007.

18 மேலது **அந்த நாள் ஞாபகம்,**
குமரன் பதிப்பகம், தி.நகர்,
சென்னை–17, முதற்பதிப்பு–2008.

19 மேலது **சரித்திரம் பேசுகிறது ,**

குமரன் பதிப்பகம், தி.நகர்.

சென்னை–17, முதற்பதிப்பு, ஜுன்–2009.

20 மேலது **உலக மேதைகள்,**

சுவாமி மலை பதிப்பகம்.

19,கண்ணதாசன் சாலை, தி.நகர்,

சென்னை–17, மூன்றாம் பதிப்பு,

செப்டம்பர்–2009.

21 மேலது **நல்லகண்ணு,**

ஸ்டார் நூல் வரிசை, ஜீவா பதிப்பகம்,

எண் 8, சீனிவாசன் தெரு,

தி.நகர், சென்னை–17,

முதற்பதிப்பு, டிசம்பர்–2014.

22 மேலது **நினைவு நாட்களும் நெஞ்சில் அலைகளும்,**

மேன்மை வெளியீடு, 5/2, பெர்தோ தெரு,

ராயப்பேட்டை, சென்னை–14,

முதற்பதிப்பு, ஏப்ரல்–2016.

23 மேலது **மலர்களுக்காக மலர்ந்தவை,**

மேன்மை வெளியீடு,

ராயப்பேட்டை. சென்னை–14,

முதற்பதிப்பு, ஏப்ரல்–2016.

24 மேலது **கண்ணோட்டம்,**
மேன்மை வெளியீடு,
ராயப்பேட்டை.
சென்னை–14,
முதற்பதிப்பு, ஏப்ரல்–2016.

25 மேலது **பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை,**
மேன்மை வெளியீடு,
ராயப்பேட்டை,
சென்னை–14,
முதற்பதிப்பு, ஜூன்–2016.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1 அகத்தியலிங்கம்.சு.பொ **பொதுவுடைமை வளர்த்த தமிழ்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.
அம்பத்தூர், சென்னை–98,
முதற்பதிப்பு, ஜூன்–2010.

2 அருணன் **மார்க்சிய அழகியல்,**
வசந்தம் வெளியீட்டகம்,
மதுரை, இரண்டாம் பதிப்பு–2009.

3 அறிவுக்கரசு.சு **பெண்,**
கரண் பதிப்பகம்,
காமராஜ் சாலை. நகர்க்கூறு–18,
நெய்வேலி–607803,
முதற்பதிப்பு, பிப்ரவரி–2002.

4 ஆலன் உட்ஸ் நிழல்வண்ணன் (தமிழில்) **மார்க்சியத்தின் இன்றைய பொருத்தப்பாடு,**
விடியல் பதிப்பகம்,
கோவை–641015,
முதற்பதிப்பு. ஜூலை–2015.

5 இதயகீதன் **வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம்,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத்தெரு, டிரஸ்ட்புரம்.
கோடம்பாக்கம்,
சென்னை–24, முதற்பதிப்பு, ஜூன்–2012.

6 இராமாத்தாள் கு.ம. **பெரியாரின் பெண்ணியச் சிந்தனைகள்,**
விஜயா பதிப்பகம்,
20, ராஜவீதி, கோவை,
முதற்பதிப்பு, ஜூன் 2001.

7 இல்யீன் எஸ், மொத்திலோவ்.அ பாஸ்கரன்.இரா (மொ.பெ.) **அரசியல் பொருளாதாரம் என்றால் என்ன?**
முன்னேற்றப்பதிப்பகம்,
மாஸ்கோ, முதற்பதிப்பு, 1986

| | | |
|---|---|---|
| 8 | ஈஸ்வரன் அ.கா | **சமூக வளர்ச்சியின் அடித்தளமும் மேற்கட்டமைப்பும் பற்றி மார்க்சியம்,**<br>செந்தழல் வெளியீட்டகம்,<br>செல்லப்பா தெரு, கோயம்பேடு,<br>சென்னை–12,<br>முதற்பதிப்பு, டிசம்பர்–2010 |
| 9 | ஈஸ்வரன் அ.கா | **மார்க்சியத் தத்துவம்,**<br>பொன்னுலகம் பதிப்பகம்,<br>4/413, பாரதி நகர், 3வது வீதி,<br>பிச்சம்பாளையம், திருப்பூர் – 641603<br>முதற்பதிப்பு, டிசம்பர், 2014 |
| 10 | கருணாநிதி.மு | **ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா,**<br>பாரதி பதிப்பகம், தி.நகர்,<br>சென்னை – 17<br>முதற்பதிப்பு, 1982 |
| 11 | கார்த்திகேசு சிவத்தம்பி | **தமிழ்ப்பண்பாடும் இலக்கியமும்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,<br>அம்பத்தூர்,<br>சென்னை – 98<br>முதற்பதிப்பு, 1982 |

12 கான்ஸ்டான்டின் ஃபெடின் நடராஜன் டி.எஸ் (தமிழில்) — **கலையும் மொழியும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை — 98
இரண்டாம் பதிப்பு, ஜூலை, 2016

13 கியோர்க்கி ஷஹனஸாரவ் மற்றும் ஆசிரியர் குழு, பாக்கியம் சுந்தரம் (தமிழில்) — **மனிதனும் விஞ்ஞானமும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
நல்லதம்பி செட்டிதெரு, சென்னை,
முதற்பதிப்பு, ஆகஸ்டு, 1972

14 கீதா.மு — **கே.ஜீவபாரதியின் வேலுநாச்சியார் நாவலில் பெண்ணியச் சிந்தனைகள்,**
திரு பதிப்பகம், 5–ஏ, போயஸ் சாலை,
தேனாம்பேட்டை, சென்னை–18,
முதற்பதிப்பு, டிசம்பர்–2007

15 கீதானந்தன் எஸ்.ஜி — **அரசியல் சாளரத்தின் ஊடே சமூக இலக்கியப் பார்வைகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை — 98
முதற்பதிப்பு, மார்ச் 2010

16 குடந்தையான் — **சாதிகள் இல்லாச் சமுதாயம்,**
பல்லவநாதம்,
4, முத்தமிழ் நகர், முதல் தெரு,

பூந்தமல்லி, சென்னை–56
முதற்பதிப்பு, ஏப்ரல் 2002

17 குருசாமி ம.ரா.போ — **இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை,**
சாகித்ய அகாதெமி,
அண்ணாசாலை, சென்னை–18
இரண்டாம் பதிப்பு, 2006

18 சம்பந்தன் மா.சு — **தமிழ் இதழியல் சுவடுகள்,**
தமிழர் பதிப்பகம்,
சென்னை–1, முதற்பதிப்பு, 1990

19 சாமிநாத சர்மா — **காரல் மார்க்ஸ்,**
கவிதா வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 2017

20 சாரா கேம்பிள் டோரியல் மேய் (தொ.ஆ)
ராஜ்கௌதமன் (தமிழில்) — **பெண்ணியம் வரலாறும் கோட்பாடுகளும்,**
விடியல் பதிப்பகம்,
88, இந்திரா தோட்டம், 4வது தெரு,
கோவை – 641015, முதற்பதிப்பு, ஜனவரி, 2011

21 சிங்காரவேலர்.ம — **பொதுவுடைமை விளக்கம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, 1974

22 சிந்தன் வி.பி

**ரஷ்யப் புரட்சி வரலாறு,**
சவுத்விசன் புக்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 1975

23 செம்பியன்.கி

**பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம்,**
திங்கள் பதிப்பகம்,
1/165, முதன்மைச் சாலை,
செம்பனார் கோவில், தரங்கம்பாடி,
முதற்பதிப்பு, 1981

24 தந்தை பெரியார்

**பெண் ஏன் அடிமையானாள்?,**
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு,
50, ஈ.வெ.கி சம்பத் சாலை,
சென்னை–600007
22ஆம் பதிப்பு, 2004

25 தமிழ்வேட்பன் (தொ.ஆ)

**பாரதிதாசன் கவிதைகள்,**
செண்பகா பதிப்பகம்,
சென்னை–17,
பன்னிரெண்டாம் பதிப்பு, 2016

26 தான்யா.கோ — **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை–5,
முதற்பதிப்பு, நவம்பர், 1990

27 தியாகு — **மார்க்சியம் அனா ஆவன்னா,**
நிறைமதி வெளியீட்டகம்,
ஈரோடு,
முதற்பதிப்பு, 1994

28 துரை.சு — **தமிழ் இலக்கிய ஆய்வில் மார்க்சிய நோக்கு,**
காவ்யா பதிப்பகம்,
பெங்களூர்,
முதற்பதிப்பு, 2000

29 நடராஜ்.வெ
கோவிந்தசாமி.வெ — **மார்க்சியம் பெண்ணியம் உறவும் முரணும்,**
விடியல் பதிப்பகம்,
பெரியார் நகர், கோவை–641 015,
இரண்டாம் பதிப்பு, டிசம்பர்–2006

30 நம்பூதிரிபாடு.இ.எம்.எஸ் — **மார்க்சிய கலாச்சார இயக்கத்தில் அரைநூற்றாண்டு,** மார்க்சிஸ்டு இதழ்,
சென்னை,
ஜனவரி, 1990

31 நியூ செஞ்சுரி ஆசிரியர்குழு — **மார்க்சியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (சிறுநூல் வரிசை),**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, மார்ச் 2010

32 மேலது — **வரலாற்றுப் பொருள்முதல் வாதம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 98 முதற்பதிப்பு, 2012

33 நிழல் வண்ணன் — **மார்க்சியத்தின் அடிப்படைகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, ஆகஸ்டு, 2006

34 பஞ்சாங்கம்.க — **பெண்–மொழி–புனைவு,**
காவ்யா, பெங்களூர், 560038,
முதற்பதிப்பு, டிசம்பர், 1999

35 பாண்டியன்.தா — **பாரதியும் சாதி ஒழிப்பும்,**
குமரன் பதிப்பகம், தி.நகர், சென்னை–17
முதற்பதிப்பு, ஜுன், 2009

36 பாரி முடியரசன் (தொ.ஆ) **முடியரசன் கவிதை முத்துக்கள்,**
சாகித்ய அகாதெமி,
புதுதில்லி,
முதற்பதிப்பு, 2015

37 பாலதண்டாயுதம் **மார்க்சிய ஞானரதம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை — 98
இரண்டாம் பதிப்பு, நவம்பர், 2004

38 பிரேமா.இரா **பெண்ணியம்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை–600113,
முதற்பதிப்பு, அக்டோபர், 1994

39 பிரேமா.இரா **பெண்ணிய அணுகுமுறைகள்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
15, மாசிலாமணி தெரு,
தி.நகர், சென்னை–17,
முதற்பதிப்பு, 1998

40 பேரின்பன்.தேவ **தற்காலப் பண்பாட்டுப் போராட்டத்தில் மார்க்சியத்தின் இடம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை – 98

முதற்பதிப்பு, ஜுன், 2007

41 மணிவேல்.எம்.பி **மகாகவிகள் பாரதியும் இக்பாலும்,**

குமரன் பதிப்பகம்,

பாண்டி பஜார், சென்னை–17,

முதற்பதிப்பு, ஜீலை 2006

42 மல்லிகா.அரங்க **பெண்ணின் வெளியும் இருப்பும்,**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,

41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98

முதற்பதிப்பு, டிசமப்ர், 2008

43 மாடசாமி.ச **பொதுவுடைமை இலக்கியம் பார்வையும் பயணமும்,**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,

41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98

முதற்பதிப்பு, டிசம்பர், 2003

44 மார்க்ஸ் எங்கெல்ஸ் **கம்யூனிஸ்ட் கட்சி கூட்டு அறிக்கை,**

முன்னேற்றப் பதிப்பகம்,

மாஸ்கோ,

முதற்பதிப்பு, 1974

45 மாஜினி — **கம்யூனிசம்–5000 ஆண்டுகள்,**
தமிழ்ச் சுரங்கம் வெளியீடு,
மதுரை, முதற்பதிப்பு–1955

46 முகமது செரீபு — **பாரதியும் பொதுவுடைமையும்,**
அன்னம் (பி) லிட்,
சிவன் கோவில் தெரு, சிவகங்கை,
முதற்பதிப்பு, ஏப்ரல், 1982

47 முத்துச் சிதம்பரம் — **பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்,**
தமிழ்ப்புத்தகாலயம்,
தி.நகர், சென்னை–17,
முதற்பதிப்பு, 1995

48 முத்துமோகன்.ந — **இயங்கியல் பொருள் முதல்வாதம் ஓர் அறிமுகம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, ஜூலை, 2012

49 மேலது — **மார்க்சிய விவாதங்கள்,**
காவய்பா பதிப்பகம், சென்னை,
முதற்பதிப்பு, 2002

50 மெய்யப்பன்.ச (ப.ஆ) **பாரதியார் கவிதைகள்,**
தென்றல் நிலையம், சிதம்பரம்–608 001,
ஒன்பதாம் பதிப்பு, செப்டம்பர், 2008.

51 யாக்தோத்.ஓ **முரண் தர்க்கப் பொருள்முதல்வாதம்,**
மூர்த்தி ஏ.எஸ், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
திருமதி பாக்கியம், (தமிழில்) 41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, 1967

52 ரொமீலா தாப்பர் **வரலாறும் வக்கிரங்களும்,**
வானமாமலை.நா. (தமிழில்) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, ஆகஸ்டு, 2008.

53 லெனின் வி.இ **கிராம ஏழை மக்களுக்கு,**
பீப்பிள்ஸ் பப்ளிசிங் ஹவுஸ் லிமிடெட்,
சென்னை–2,
இரண்டாம் பதிப்பு, நவம்பர் – 1950

54 மேலது **தேசியக் கொள்கையும் பாட்டாளி வர்க்கச் சர்வ தேசிய வாதமும் சில பிரச்சினைகள்,**
முன்னேற்றப் பதிப்பகம்,
மாஸ்கோ, முதற்பதிப்பு, 1979

55 வானமாமலை நா **இந்தியத் தத்துவ மரபும் மார்க்சிய இயக்கவியலும்,**
அலைகள் வெளியீட்டகம்,
5/1 ஏ, இரண்டாவது தெரு,
நடேசன் நகர், இராமாபுரம்,
சென்னை–600 089,
இரண்டாம் பதிப்பு, 2017

56 மேலது **தத்துவ விமர்சனக் கட்டுரைகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–B, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 98
முதற்பதிப்பு, 2012.

57 மேலது **மார்க்சிய சமூகவியல் கொள்கை,**
அலைகள் வெளியீட்டகம், சென்னை–24,
முதற்பதிப்பு, டிசம்பர், 2008.

58 வைரமுத்து **திருத்தி எழுதிய தீர்ப்புகள்,**
சூர்யா இலக்கிய வெளியீடு, சென்னை,
14வது பதிப்பு, 2008

59 ஜவஹர்.இரா **கம்யூனிசம் நேற்று இன்று நாளை,**
நக்கீரன் வெளியீடு,
சென்னை, முதற்பதிப்பு, 2004

60 ஜீவபாரதி.கே (தொ.ஆ) **பட்டுக்கோட்டையார் பாடல்கள்,**
குமரன் பதிப்பகம்,
கண்ணதாசன் சாலை,
தி.நகர், சென்னை–17,
டிசம்பர் – 2009.

61 ஜெகந்நாதன்.ஆ **பாரதிதாசனில் மார்க்சியம்,**
அகரம்,
15 B–1, சரவணா காம்ப்ளெக்ஸ்,
கும்பகோணம்–612001,
முதற்பதிப்பு, நவம்பர், 1996

62 ஜெயபாலன்.நா **பெண்ணியம் ஓர் ஆய்வு,**
எம்.எஸ். பப்ளிகேசன்ஸ்,
சென்னை–05, முதற்பதிப்பு–1998

**ஆய்வேடுகள்**

63 கீதா.மு **கே.ஜீவபாரதியின் வேலுநாச்சியார் நாவலில் பெண்ணியச் சிந்தனைகள்,**
எம்.ஃபில். பட்ட ஆய்வேடு,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 2005.

64 சந்திரசேகரன்.பெ **கே.ஜீவபாரதி கவிதைகள் ஓர் ஆய்வு,**
எம்.ஃபில். பட்ட ஆய்வேடு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம், 2002

65 மகேந்திரன்.ப **மீரா கவிதைகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்,**
முதுகலைப்பட்ட ஆய்வேடு,
மன்னர் துரைசிங்கம் கல்லூரி, சிவகங்கை. 2012

## பின்னிணைப்பு 1

## கே.ஜீவபாரதி வாழ்க்கைக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| பிறந்த ஊர் | : | பூதலபுரம், விளாத்திகுளம் வட்டம், தூத்துக்குடி மாவட்டம், |
| பெற்றோர் | : | இரா.கந்தசாமித் தேவர் — வைரம் அம்மையார் |
| பிறந்த நாள் | : | 15.06.1950 |
| இயற்பெயர் | : | இராமமூர்த்தி |
| கல்வி | : | பள்ளி இறுதி வகுப்பு (பத்தாம் வகுப்பு) |
| மனைவி | : | காமாட்சி (கலப்புத் திருமணம்) |
| மகன் | : | சசிக்குமார் (வளர்ப்புமகன்) |
| பணி | : | 15 ஆண்டு காலம் நியூசெஞ்சுரி புத்தக நிறுவனத் தலைமை அலுவலகத்தில் பல்வேறு பிரிவுகளில் பணி; அதன் பின் திரைப்படத் துறையில் ஐந்தாண்டுகள் பணி; அதன்பின் முழுநேர எழுத்துப்பணி; பிறகு 'ஜனசக்தி' நாளிதழில் ஆறாண்டுகாலம் கட்டுரைப்பகுதி ஆசிரியராகப் பணி; இடையில் 'மேன்மை' இதழில் ஓராண்டு ஆசிரியர் பணி; தற்போது முழுநேர எழுத்துப்பணி. |
| திரைப்படத்துறையில் | : | இயக்குநர் மணிவண்ணனிடம் உதவி இயக்குநராகப் பணி |
| பணியாற்றிய படங்கள் | : | ஜனவரி1, 24 மணிநேரம், இங்கேயும் ஒரு கங்கை, முதல் வசந்தம், சின்னத்தம்பி பெரியதம்பி, விடிஞ்சா கல்யாணம், பாலைவன ரோஜாக்கள், இனி ஒரு |

சுதந்திரம், அன்பின் முகவரி, தீர்த்தக் கரையினிலே

தெலுங்குப்படம் : ராவ்கோபால்ராவ் கொடுகு

எழுதிய திரைப்பாடல்கள் : 3 பாடல்கள்

1. ‘இனி ஒரு சுதந்திரம்’ என்ற படத்தில்
   ‘கைகளிலே வலுவிருக்கு
   கம்மாக்கரை நெலமிருக்கு’
2. ‘கனம் கோர்ட்டார் அவர்களே’ என்ற படத்தில்
   “ஆசைக்குப் பூசைபோடும் நேரம்பாரு
   ஆம்பளச் சிங்கம் இங்கே யாருயாரு”
3. ‘சந்தனக் காற்று’ என்ற படத்தில்
   “சந்தனக் காற்றில் சுந்தரப் பூக்கள்
   ஆடுது நாட்டியமே”

**பெற்ற பரிசுகளும், விருதுகளும்**

- சென்னை பம்மல் பாரதி கலை இலக்கியப் பேரவையின் ‘மக்கள் கவிஞர்’ விருது (1999).
- மன்னார்குடி செங்கமலத் தாயார் கல்வி அறக்கட்டளையின் ‘இலக்கியச் செம்மல்’ விருது மற்றும் ஐம்பதாயிரம் பரிசுத் தொகை (2005).
- ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை அறக்கட்டளையின் ‘எஸ்.கே.எம்’ இலக்கிய விருது மற்றும் 25ஆயிரம் பரிசுத்தொகை (2009).
- கலைமாமணி கவிஞர் பொன்னடியான் இலக்கியப் பொன்விழாவில் ‘இலக்கியப் பேரொளி’ விருது (2011).
- திருச்சி மாவட்ட எழுத்தாளர் சங்கத்தின் ‘பாரதியார் விருது’ (2013).
- தேனி வையத் தமிழ்ச்சங்கத்தின் ‘எழுத்துச் சிற்பி’ விருது (2014).
- சென்னை அசோக் நகர் மக்கள் கவிஞர் மாமன்றத்தின் ‘மக்கள் நாவலர்’ விருது (2015).
- ராஜபாளையம் மணிமேகலை மன்றத்தின் ‘ஆய்வுச்செம்மல்’ விருது (2016).

- ❖ தென்னிந்தியப் புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கத்தின் ‘கலைஞர் பொற்கிழி விருது மற்றும் ஒரு லட்சம் பரிசு (2017).
- ❖ தமிழக அரசின் தமிழ்வளர்ச்சித் துறையின் ‘பாவேந்தர் பாரதிதாசன் விருது மற்றும் ஒரு லட்சம் பரிசுத் தொகை (2017).

**தற்போதைய பணி**

தொடர்ந்து எழுதி வருகிற வாழ்வியல் எழுத்தாளராகத் திகழ்கிறார்.

## பின்னிணைப்பு 2

## நேர்காணல்

தகவல் தந்தவர் : கே.ஜீவபாரதி (படைப்பாளர்)

தகவல் பெற்றவர் : இரா.கண்ணதாசன் (ஆய்வாளர்)

தகவல் பெற்ற நாள் : *24.02.2019*

**1. பொதுவுடைமைச் சிந்தனை உங்களுக்கு எப்போது வந்தது?**

நான் பிறந்து வளர்ந்தது தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள பூதலபுரம் என்ற கிராமமாகும். பள்ளிப் படிப்பையே நான் பல ஊர்களில் படித்தேன். படிப்பில் இருந்த ஆர்வத்தை விட மெட்டுக்கட்டிப் பாடுவதில் எனக்கு ஆர்வம் அதிகமாய் இருந்தது. என் பெரியப்பா வேலுச்சாமித் தேவர் கம்யூனிஸ்ட் கட்சியில் தீவிர ஈடுபாடு கொண்டவர். முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வெங்கட்ராமன் அவர்களுடன் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு பெற்று சிறை சென்றவர். நெல்லை மாவட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டிக் காத்த தோழர்களான பாலதண்டாயுதம், மாயாண்டி பாரதி, நல்லக்கண்ணு போன்ற 63 பேருடன் நெல்லை சதி வழக்கில் கைது செய்யப்பட்டு சிறைவாசம் கண்டவர். அவரைப் பார்த்தே எனக்குக் கம்யூனிசப் பற்றும் பொதுவுடைமைச் சிந்தனையும் ஏற்பட்டது.

2. ஜீவபாரதி என்று புனைபெயர் வைத்துக் கொண்டதற்கான காரணம் என்ன?

என்னுடைய இலக்கியப் படைப்பான கவிதைகளை முல்லைச்சரத்திலே வெளியிட அதன் ஆசிரியர் பொன்னடியான் அவர்களிடம் என் சொந்தப் பேரான பூதலபுரம் க.இராமமூர்த்தி என்று தந்தபோது ஒரு புனைபெயரை இட்டுக்கொள்ளுங்கள் என்று சொன்னார். ஜீவாவின் மேலும் பாரதியின் மேலும் நான் கொண்ட தீராத தாகத்தால் ஜீவபாரதி என்று வைத்துக்கொண்டேன். அதைப் பார்த்து கவிஞர் பொன்னடியான் மிக மகிழ்ந்து ஜீவாவும், பாரதியும் சேர்ந்தாற்போல் உன் எழுத்து இருக்கிறது என்றார். அன்று முதல் கே.ஜீவபாரதி என்று எழுதி வருகிறேன்.

3. நீங்கள் பல ஆண்டுகள் ‘ஜனசக்தி’ இதழில் பணியாற்றியுள்ளீர்கள். ஒரு கம்யூனிஸ்ட் தோழராக, எழுத்தாளராக, பேச்சாளராக, அமைப்பாளராகப் பணியாற்றியுள்ளீகள். பொதுவுடைமை என்றால் என்ன? என்பது பற்றிச் சுருக்கமாகச் சொல்லமுடியுமா?

‘பொதுவுடைமை’ என்பது ஒரு கொள்கை; அதாவது வாழ்க்கை பற்றிய கொள்கை. இது மானுடம் பற்றியது; எங்கெல்லாம் சமுதாயத்தில் மானுடம் காயப்படுகிறதோ, இழிவு செய்யப்படுகிறதோ மாறுபட நடத்தப்படுகிறதோ அங்கெல்லாம் எதிர்த்துப் போராடும் கொள்கையே ‘பொதுவுடைமை’ என்பதாகும். மொத்தத்தில் சமூகத்தில் சமத்துவம் நிலவ வேண்டும் என்பதே என்னுடைய பொதுவுடைமைக் கொள்கையாகும்.

4. அந்த வகையில் தான் தங்களது படைப்புலகம் அமைந்துள்ளதா?

ஆம். அந்த வகையில் தான் கவிதையில், கட்டுரையில், வாழ்க்கை வரலாற்று நூல்களில் வகைப்படுத்தி, பொதுவுடைமைச் சிந்தனையை மேம்படுத்தி இலக்கியத்தைப் படைத்துள்ளேன்.

5. அப்படியானால் தங்களது படைப்புகளை ‘எதிர்ப்பு இலக்கியம்’ என்று சொல்லலாமா?

எதிர்ப்பு இலக்கியமா? இதுதான் இலக்கியம். மக்களுக்காக எழுதுவதே இலக்கியம். ஜனநாயகத்துக்கு ஆபத்து என்றால் எதிர்த்து எழுதியிருக்கின்றேன். எளிய மனிதனின் வாழ்வு உரிமைக்கு ஆபத்து என்றால் எதிர்த்து எழுதியிருக்கிறேன். யார், யாரெல்லாம் சமுதாய மேம்பாட்டுக்குப் பாடுபட்டார்களோ, இந்த அரசு எந்திரத்தை, அரசு ஏவலாளர்களை எதிர்த்தார்களோ; எதிர்த்துக் களம் கண்டார்களோ; துன்பம் பல அடைந்து உயிரும் துறந்தார்களோ அவர்கள் பற்றி எழுதியிருக்கிறேன்.

6. மானுடம் சார்ந்து அனைத்து வித எதிர்ப்புகளையும் எதிர்த்துப் போராடுவது தான் பொதுவுடைமை என்று கருதுகிறீர்களா?

ஆம். எங்கெல்லாம் மானுடத்திற்காகப் போராட்டம் நிகழ்ந்ததோ அதையெல்லாம் எழுதிக்கொண்டு வந்திருக்கிறேன். போராட்டம் தான் தீர்வு தரும். சமதர்மப் பொதுவுடைமை அமைக்கத் திறவுகோலாய் அமையும்.

7. தொடர்ச்சியாக கவிதைகள் எழுதி வந்த நீங்கள் வேலுநாச்சியார் புதினம் எப்படி எழுதினீர்கள்?

ஜீவா முழக்கம் என்ற இதழின் பொன்விழா மலரில் ‘துப்பாக்கிக் கவுண்டன்’ என்று ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். தருமபுரியில் பிறந்த கோபாலவர்மா என்னும் பெயருடையவன்; பிரிட்டிஷ் ராணுவத்தில் பணிபுரிந்தவன்; சுதந்திரப் போரில் பிரிட்டிஷ் ராணுவத்தால் சிவகங்கைச் சீமையில் வேலுநாச்சியாரின் கணவர் முத்துவடுகநாதர்

இறந்துபட்டார் என்ற செய்தியறிந்து துடித்துப் போகிறான்; பின்னர் வேலுநாச்சியாரைச் சந்தித்து மருதுபாண்டியருக்கு உதவியாக இருந்து போராட்டத்தில் மடிந்து போகிறான். இந்த வரலாற்றை நான் எழுதியுள்ளதைப் படித்த கௌரிவல்லபரின் வாரிசான சிவகங்கை பாப்பாதுரை என்ற திருவரங்கராசன் என்னைத் தொடர்பு கொண்டு வேலுநாச்சியார் புதினத்தை எழுதச் சொன்னார்.

8. வேலுநாச்சியார் வரலாற்றை எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?

திருவரங்கராசன் அவர்கள் சென்னையிலிருந்த அவருடைய மகனை அனுப்பி என்னைச் சந்திக்க வைத்தார். மகன் மூலம் அவர் வைத்த கோரிக்கை வேலுநாச்சியார் பற்றி நான் எழுதவேண்டும் என்பதே. களப்பணி செய்யாமல் என்னால் எழுதமுடியாது என்றேன். எனவே ஒரு கார், புகைப்படக்காரர், சிவகங்கை பற்றி நன்கு தெரிந்த நபர் ஒருவர் என்று தந்தார்கள். களப்பணியை மதுரையிலிருந்து தொடங்கினோம். வேலுநாச்சியாரின் வீரமும், சுதந்திர வேட்கையும், அறிவும், செறிவும் என்னுள் பிரமிப்பை ஏற்படுத்தியது. சுதந்திர தாகத்துக்காக கணவனை, மகளை, மகள் வயிற்றுப் பேத்தியைப் பறிகொடுத்தவள். இப்படி அவருடைய தியாக வாழ்வைக் கள ஆய்வின் மூலம் தெரிந்து கொண்டே 'வேலுநாச்சியார் புதினம்' எழுதினேன்.

9. வேலுநாச்சியார் புதினத்தின் மூலம் தாங்கள் கூறும் பொதுவுடைமைச் செய்தி என்ன?

நிறைய இருக்கிறது. சாதி, மத பேதமற்றவர். சமூக மரபு இதுதான் என்ற கட்டமைப்பை உடைக்கப் பாடுபட்டவர். பெண்ணாக இருந்தும் கல்வியில் மேம்பட்டுத் திகழ்ந்தவர். தாய்மொழியோடு பல மொழிகளையும் கற்றுக்கொண்டவர். இவற்றையெல்லாம் நீங்களே புதினத்தைப் படிக்கும் போது உணர்ந்திருப்பீர்கள்.

10. வரலாற்று நூல்கள் எழுதக் காரணம் என்ன?

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் சமூகப் பொறுப்பு இருக்கிறது. இந்த மண்ணுக்காகப் போராடிய மாபெரும் தலைவர்களின் வரலாற்றுச் சிறப்பை வெளிக்கொணர வேண்டிய பொறுப்பு எழுத்தாளர் என்ற முறையில் எனக்கு இருக்கிறது என்பதனை உணர்ந்தேன். அந்த வகையில் தேடித்தேடிச் செய்திகளைத் தொகுத்து வரலாற்று நூல்களை எழுதினேன். குறிப்பாகப் பொதுவுடைமைச் சிந்தனையாளர்களின் வாழ்வியலை அதிகம் வெளிக்கொணர்வதையே என் வாழ்வின் இலட்சியமாகக் கொண்டேன்.

*11.* நீங்கள் வெளியிட்டுள்ள நூல்களில் தொகுப்பு நூல்கள் அதிகமாய் இருப்பதன் காரணம் என்ன?

நான் நினைத்திருந்தால் கவிதை, கட்டுரை, புதினம், நாடகம் என்று இன்னும் என்னுடைய படைப்புகளில் எழுதிச் சம்பாதித்திருக்கலாம். என்னுடைய படைப்புகள் வெளிவருவதோடு இந்த மண்ணில் வாழ்ந்த கவிஞர்களையும், போராளிகளையும், வரலாற்றுத் தலைவர்களையும் வெளிக்கொணர எல்லோரும் முன்வருவதில்லை. அதனால் தான் தொகுப்பு நூல்கள் வெளியிடுவதிலும் கவனம் செலுத்தினேன்.

*12.* திரைத்துறைக்குச் சென்று பிறகு விலகி வந்துவிட்டீர்கள். ஏன்?

நான் சினிமாத்துறையில் இயக்குநர் மணிவண்ணனிடம் பதினோரு படங்களில் பணியாற்றினேன். சில பாடல்களும் எழுதினேன். ஆனாலும் அந்தத் துறையில் என்னைப் போன்ற கம்யூனிசச் சிந்தனையாளர்கள் நிலைக்கமுடிவதில்லை. காரணம் அங்குள்ள சினிமாத்தனமே. இடதுசாரிச் சிந்தனைளை விதைக்க வேண்டும் என்றுதான் சென்றேன். ஆனால் சினிமாத் துறையில் கொள்கைப் பிடிப்பு செல்லுபடியாவதில்லை. அதனால் இலக்கியம் தான் நிலையானது என்று திரும்பி வந்துவிட்டேன்.

*13.* பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், ஜீவா பற்றி அதிக நூல்கள் எழுதியதன் பின்னணி என்ன?

இவர்கள் இருவரும் பொதுவுடைமையின் ஜீவநதிகள். ஜீவ ஊற்றுகள். அதனால்தான் ஜீவா பற்றி மட்டுமே தொகுப்பு நூல்களோடு சேர்த்து 22 நூல்கள் வெளியிட்டுள்ளேன். பட்டுக்கோட்டையின் மேல் உள்ள தாகத்தால் பட்டுக்கோட்டையில் அவருக்கு மணிமண்டபம் அமைக்கப்பாடுபட்டேன்.

*14.* சமூகத்தில் பொதுவுடைமை எப்போது மலரும்? வாய்ப்பு உள்ளதா?

உறுதியாக பொதுவுடைமை மலர்ந்தே தீரும். மார்க்சியச் சிந்தனை தோற்கவே தோற்காது. தடைகள் வரத்தான் செய்யும். தொடர்ந்து போராடினால் பொதுவுடைமை மலரும் காலம் வெகுவிரைவிலேயே இருக்கிறது.

*15.* நிறைவாக ஒரு கேள்வி. இன்றைய படைப்பாளிகளுக்குத் தாங்கள் கூறும் ஆலோசனை என்ன?

மக்களுக்காக எழுதுங்கள். மக்களை மையமாக வைத்து எழுதுங்கள். பொதுவுடைமைச் சிந்தனையோடு படைப்புகளை அணுகுங்கள்.

## பின்னிணைப்பு 3

## கே.ஜீவபாரதியின் நூல்கள் அட்டவணை

| **எண்** | **கவிதை நூல்கள்** | **ஆண்டு** |
|---|---|---|
| 1 | ஒரு முடிவுக்கு வாருங்கள் | 1977 |
| 2 | களத்தில் பிறந்த கவிதைகள் | 1982 |
| 3 | புதுயுகக் கவிஞனும் புதியவன் குரல்களும் | 1983 |
| 4 | கனல் மணக்கும் பூக்கள் | 1983 |
| 5 | சொல்லுறதச் சொல்லிப்புட்டேன் | 1986 |
| 6 | அறிவை வளர்க்கும் சிறுவர் பாடல்கள் | 1998 |
| 7 | கவிதை எழுதினேன் கடிதம் வந்தது | 1999 |
| 8 | மனிதர்கள் வாழும் மண்ணைத்தேடி | 1999 |
| 9 | கே.ஜீவபாரதி கவிதைகள் | 2014 |
| | **வரலாற்றுப் புதினம்** | |
| 10 | வேலுநாச்சியார் | 2001 |
| | **நாடகம்** | |
| 11 | வீரவாஞ்சி | 2004 |
| 12 | வீரத்தாய் வேலுநாச்சியார் | 2005 |
| | **உரைநடை நூல்கள்** | |
| 13 | காலமறிந்து கூவிய சேவல் | 1988 |
| 14 | பாட்டுக்கோட்டை | 1995 |
| 15 | உலகப்பன் காலமும் கவிதையும் | 1995 |
| 16 | காலத்தை வென்ற கவிஞர்கள் | 1997 |

| | | |
|---|---|---|
| 17 | உன்னைச் சுற்றி வாழுகின்ற உயிரினங்கள் | 1998 |
| 18 | பொன்விழாச் சுற்றுலா | 1998 |
| 19 | உலக மேதைகள் | 1999 |
| 20 | எனது தரிசனங்கள் | 2001 |
| 21 | வீரன் எட்டப்பன் முதல் வேலுநாச்சியார் வரை | 2002 |
| 22 | இந்தப்பாடல்களும் எனது திரையும் | 2002 |
| 23 | மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள் | 2005 |
| 24 | வரலாறு பேசுகிறது, முதல் தொகுதி | 2006 |
| 25 | விதைக்கப்பட்டவர்கள் | 2007 |
| 26 | வாழும் வரலாறு | 2007 |
| 27 | அப்துல் ரஹீம் வாழ்வியல் இலக்கியம் ஓர் ஆய்வு | 2007 |
| 28 | வரலாறு பேசுகிறது, இரண்டாம் தொகுதி | 2007 |
| 29 | அந்தநாள் ஞாபகம் | 2008 |
| 30 | சரித்திரம் பேசுகிறது | 2009 |
| 31 | கேப்டன் லெட்சுமி | 2012 |
| 32 | சமுதாயப் பார்வையில் மணிமேகலை | 2014 |
| 33 | வந்தே மாதரம் வந்த கதை | 2014 |
| 34 | வீரன் எட்டப்பன் | 2014 |
| 35 | நல்லகண்ணு | 2014 |
| 36 | ஜெயகாந்தன் | 2014 |
| 37 | கட்சி அரசியலும் கவியரசு கண்ணதாசனும் | 2014 |
| 38 | மாணவர்களுக்கான பொதுக்கட்டுரைகள் | 2015 |

| | | |
|---|---|---|
| 39 | மலர்களுக்காக மலர்ந்தவை | 2016 |
| 40 | நினைவு நாட்களும் நெஞ்சில் அலைகளும் | 2016 |
| 41 | கண்ணோட்டம் | 2016 |
| 42 | பிறந்த நாட்களுக்காகப் பிறந்தவை | 2016 |
| **வாழ்க்கை வரலாற்று நூல்கள்** | | |
| 43 | வீரபாண்டிய கட்டபொம்மன் | 2003 |
| 44 | கல்பனா சாவ்லா | 2003 |
| 45 | திருப்பூர் குமரன் | 2004 |
| 46 | நீதியரசர் மோகன் | 2004 |
| 47 | லெனின் | 2005 |
| 48 | பாதை மாறாத பயணம் | 2006 |
| 49 | குமாரமங்கலம் தியாகதீபங்கள் | 2008 |
| **தொகுப்பு நூல்கள்** | | |
| 50 | காலம் | 1988 |
| 51 | பட்டுக்கோட்டையார் பாடல்கள் | 1997 |
| 52 | மலரும் நினைவுகளில் மக்கள் கவிஞர் | 1998 |
| 53 | கவிஞர்கள் நெஞ்சில் மக்கள் கவிஞர் | 1998 |
| 54 | மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டையார் பாடல்கள் | 1999 |
| 55 | பல கோணங்களில் பட்டுக்கோட்டையார் | 1999 |
| 56 | ஜீவாவின் பாடல்கள் | 1999 |
| 57 | மேடையில் ஜீவா | 1999 |
| 58 | சட்டப்பேரவையில் பசும்பொன்தேவர் | 1999 |

| | | |
|---|---|---|
| 59 | பாரதி பற்றி ஜீவா | 2000 |
| 60 | சட்டப்பேரவையில் ஜீவா | 2000 |
| 61 | சோவியத் இலக்கியம் பற்றி ஜீவா | 2000 |
| 62 | ஜீவா தொகுத்த பழமொழிகள் | 2000 |
| 63 | ஜீவாவின் தாமரை தலையங்க இலக்கியம் | 2000 |
| 64 | புதுமைப் பெண்ணுக்கு ஜீவாவின் கடிதங்கள் | 2000 |
| 65 | பசும்பொன் தேவரின் மேடை முழக்கம் | 2000 |
| 66 | ஜீவா தொகுத்த வழக்குச் சொல் அகராதி | 2001 |
| 67 | தேசத்தின் சொத்து ஜீவா | 2001 |
| 68 | ஜீவாவின் கடிதங்கள் | 2001 |
| 69 | மாமனிதர் ஜீவா | 2001 |
| 70 | மதத்தைப் பற்றி ஜீவா | 2001 |
| 71 | கவிஞர்கள் நெஞ்சில் ஜீவா | 2001 |
| 72 | ஜீவா என்னும் பேராசான் | 2001 |
| 73 | ஜீவா ஒரு பல்கலைக்கழகம் | 2001 |
| 74 | ஜீவா என்றொரு ஜீவநதி | 2001 |
| 75 | மாஸ்கோவில் ஜீவா | 2002 |
| 76 | ஜீவன் பிரிந்த போதும் சிலையாய் எழுந்த போதும் | 2002 |
| 77 | பசும்பொன் தேவரின் கட்டுரைகள் | 2002 |
| 78 | வாழும்போதே வரலாறான தேவர் | 2002 |
| 79 | பசும்பொன் தேவரின் பன்முகத் தோற்றம் | 2002 |
| 80 | மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டையார் திரையிசைப் | 2003 |

| | | |
|---|---|---|
| | பாடல்கள் | |
| 81 | பழகியோர் பார்வையில் பட்டுக்கோட்டையார் | 2003 |
| 82 | தேர்தல் மேடைகளில் பசும்பொன் தேவர் | 2003 |
| 83 | சட்டப்பேரவையில் தேவர் பற்றிய சதி வழக்கு | 2003 |
| 84 | பசும்பொன் தேவரும் கம்யூனிஸ்டுகளும் | 2003 |
| 85 | பசும்பொன் தேவரும் திராவிட இயக்கங்களும் | 2003 |
| 86 | சட்டப்பேரவையில் அருட்செல்வர் | 2003 |
| 87 | வந்த வினாக்களும் தந்த விடைகளும் | 2005 |
| 88 | சந்தித்த வேளையில் தா.பாண்டியன் | 2006 |
| 89 | சட்டப்பேரவையில் சோ.அழகர்சாமி | 2007 |
| 90 | பசும்பொன்தேவர் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் | 2009 |
| 91 | அன்று சொன்னது | 2011 |
| 92 | ஜீவா பார்வையில் கலை இலக்கியம் | 2012 |
| 93 | ஜீவா பார்வையில் அறிஞர்களும் கவிஞர்களும் | 2012 |
| 94 | மறந்தும் மறையாத மானுடப் பறவை | 2013 |
| 95 | ஜீவா பார்வையில் பாரதி | 2013 |
| 96 | சட்டமன்ற மேலவையில் ப.மாணிக்கம் | 2014 |
| 97 | காந்திஜி நேதாஜி கடிதத் தொடர்புகள் | 2014 |
| 98 | பல கோணங்களில் பசும்பொன் தேவர் | 2014 |
| 99 | சட்டப்பேரவையில் கே.டி.தங்கமணி | 2014 |
| 100 | எரிமலையின் சிகரம் எங்கள் நல்லகண்ணு | 2014 |
| 101 | சட்டப்பேரவையில் எம்.கல்யாணசுந்தரம், பாகம்–1, 2 | 2015 |

| | | |
|---|---|---|
| 102 | எளிமையின் ஏந்தல் | 2016 |
| 103 | மேன்மை களஞ்சியம் தொகுதி | 2016 |
| 104 | சட்டப்பேரவையில் எம்.கல்யாணசுந்தரம், பாகம்–3 | 2017 |

# பின்னிணைப்பு – 4

## நிழற்படங்கள்



படைப்பாளர் கே.ஜீவபாரதியுடன் நேர்காணலின் போது ஆய்வாளர் இரா.கண்ணதாசன்

படைப்பாளர் பெற்ற விருதுகள் சில...






உலகப்பன் காலமும் கவிதையும் என்ற நூலுக்கு மேனாள் தமிழக முதல்வர் கலைஞரிடமிருந்து முதல் பரிசு பெறும் கே.ஜீவபாரதி

## கவிஞர் ஜீவபாரதிக்கு கலைஞர் பொற்கிளி விருது



சென்னை: தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கம் சார்பில், ஆண்டுதோறும் படைப்பாளர்களுக்கு 'கலைஞர் பொற்கிளி விருது' கலைஞர் வழங்கிய நிதியிலிருந்து வழங்கப்படுகிறது.

இந்த ஆண்டு இதழாளருக்கான விருதிற்கு கவிஞர் ஜீவபாரதியும், புனைக்கதைக்கான விருதிற்கு எழுத்தாளர் பிரபஞ்சனும், நவீன இலக்கியத்திற்கான விருதிற்கு கலாப்ரியாவும், கட்டுரைக்கான விருதிற்கு சுப.வீரபாண்டியனும், இலக்கியத்திற்கான விருதை தீபம் எஸ்.திருமலையும், கவிதைக்கான விருது ஆலந்தூர் கோ.மோகனரங்கனுக்கும், சிறுவர் இலக்கியத்திற்கான விருதிற்கு பி.எல்.ராஜேந்திரனும் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

சரியான, பொருத்தமான படைப்பாளிகளை தேர்வு செய்துள்ள தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கத்திற்கு ஜனசக்தி வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

குறிப்பாக ஜனசக்தியில் கட்டுரையாசிரியராக பணியாற்றி அரிய பல வரலாற்றுச் செய்திகளை ஆவணமாக தந்திட்ட கவிஞர் ஜீவபாரதிக்கு இதழாளருக்கான விருது வழங்கி சிறப்பித்தமை மிகச் சாலப் பொருத்தமாகும்.

கவிதை, வரலாறுப்புதினம், சிறுவர் இலக்கியம், நாடகம், நேர்காணல், கட்டுரை என 103க்கும் மேற்பட்ட நூல்களை படைத்துள்ளவர் ஜீவபாரதி.

பல எழுத்தாளர்களை உருவாக்கிய எழுத்தாளர் என்றே இவரை கூறலாம். பல ஆய்வாளர்கள் இவருடைய நூல்களையே ஆதாரமாக கொள்கின்றனர். இவருடைய வேலுநாச்சியார் வரலாற்றுப் புதினத்தை ஆய்வு செய்து எம்ஃபில் பட்டம் பெற்றுள்ளனர். இன்றைக்கும் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வேலு நாச்சியார், முத்துராமலிங்கத் தேவர், வீரபாண்டிய கட்டபொம்மன் போன்ற வரலாற்று மாந்தர்களுக்கு இவர்களுடைய நூல்களே ஆதாரத் திரட்டாகும். ஆறாண்டுகாலம் இவர் ஜனசக்தியில் கட்டுரையாசிரியராக பணியாற்றியுள்ளார். இவருக்கு இவ்விருதை வழங்கிய தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கத்திற்கும், கலைஞர் பொற்கிளி நடுவர்குழுவிற்கும் ஜனசக்தி சார்பில் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

## கே.ஜீவபாரதிக்கு தமிழ்நாடு அரசின் பாரதிதாசன் விருது!

எழுத்தாளரும் பத்திரிகையாளருமான கே. ஜீவபாரதிக்கு தமிழ்நாடு அரசின் பாரதிதாசன் விருது வழங்கி சிறப்பிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் தமிழக அரசின் சார்பில் திருவள்ளுவர் தினத்தன்று திருவள்ளுவர் திருநாள் மற்றும் தமிழக அரசின் விருதுகள் வழங்கும் விழா சென்னை கலைவாணர் அரங்கில் ஜனவரி 15இல் நடைபெற்றது.




துணைமுதல்வர் ஓ.பன்னீர்செல்வம் தலைமையில் தமிழ் பண்பாட்டு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் பாண்டியராஜன் முன்னிலையில் முதல்வர் எடப்பாடி பழனிச்சாமி திருவள்ளுவர், பெரியார், அண்ணா, காமராஜர், பாரதியார், பாரதிதாசன், திரு.வி.க., கி.ஆ.பெ. விஸ்வநாதன் உள்ளிட்ட தலைவர்களின் பெயரால் ஆன விருதுகளை வழங்கி விருதாளர்களை சிறப்பித்தார்.

விருது பத்திரம், ரூ. ஒரு இலட்சத்துக்கான காசோலை மற்றும் ஒரு சவரன் மதிப்புள்ள பதக்கம் உள்ளிட்ட சிறப்பினை கே. ஜீவபாரதி மற்றும் எட்டு விருதாளர்களுக்கும் முதல்வர் கொடுத்து சிறப்பித்தார்.

ஏற்கெனவே முரசொலி அறக்கட்டளையின் கலைஞர் விருதும் ரூ. ஒரு இலட்சம் பொற்கிழியும் பெற்றிருந்த தோழர் கே. ஜீவபாரதி ஜனசக்தி நாளேட்டின் கட்டுரை ஆசிரியராக பணியாற்றியவர்.

தோழருக்கு ஜனசக்தி வாழ்த்தினையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறது.







## தமிழ் வளர்ச்சித் துறை

## பாவேந்தர் பாரதிதாசன் விருது - 2017



விருது பெறுபவர் : **திரு. க. ஜீவபாரதி**



### தகுதியுரை

**திரு. க. ஜீவபாரதி** அவர்கள் 15.06.1950-இல் தூத்துக்குடி மாவட்டம் பூதலபுரத்தில் பிறந்தவர். தாய் திருமதி வைரம், தந்தை திரு. கந்தசாமி. இவர் நியூ செஞ்சுரி புத்தக நிறுவனத்தின் பல்வேறு பிரிவுகளில் 15 ஆண்டுகளும், திரைத் துறையில் சுமார் 5 ஆண்டுகளும், முன்னணி நாளிதழ்களில் 6 ஆண்டுகள் கட்டுரைப் பகுதி ஆசிரியராகவும் பணியாற்றிவிட்டுத் தற்போது முழுநேர எழுத்தாளராகப் பணியாற்றிவருகிறார். இவர் களத்தில் பிறந்த கவிதைகள், கனல் மணக்கும் பூக்கள், புதுயுகக் கவிஞனும் புதியவன் குரல்களும் போன்ற கவிதை நூல்கள் உள்ளிட்ட 103 நூல்களை எழுதியுள்ளார். இலக்கியச் செம்மல், மக்கள் கவிஞர், சிறந்த உரைநடை ஆசிரியர், பாரதி, மக்கள் நாவலர், எழுத்துச் சிற்பி உள்ளிட்ட 11 விருதுகளையும் பெற்றுள்ளார்.

இவரின் உலகப்பன் காலமும் கவிதையும் என்ற பாவேந்தர் பாரதிதாசன் படைப்புகள் பற்றிய ஆய்வு நூலும் 'பொன்விழாச் சுற்றுலா' என்ற சிறுவர் இலக்கிய நூலும் தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் முதல் பரிசு பெற்ற நூல்களாகும். இவரின் வேலுநாச்சியார் என்ற நூலை 3 மாணவர்கள் ஆய்வு செய்து எம்.பில் பட்டம் பெற்றுள்ளனர். இவரின் வீரபாண்டிய கட்டபொம்மன் வாழ்க்கை வரலாற்று நூலை மதுரை காமராசர் பல்கலைக்கழகம் துணைப் பாடநூலாக வைத்துள்ளது. இவரின் பல்வேறு நூல்கள் பல இலக்கிய அமைப்புகளின் பரிசுகளையும், பாராட்டுகளையும் பெற்றுள்ளன.

இவரின் தமிழ்ப் பணியைப் பாராட்டித் தமிழ்நாடு அரசு 2017ஆம் ஆண்டிற்கான **'பாவேந்தர் பாரதிதாசன் விருது'** அளித்து ஒரு இலட்சம் ரூபாயும் தங்கப் பதக்கமும் வழங்கிச் சிறப்பிக்கின்றது.

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
திருவள்ளுவராண்டு 2049, தை 3
16.01.2018

எடப்பாடி கே. பழனிசாமி
முதலமைச்சர்



பொதுவுடைமை இயக்கப் பணியில் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் மனைவி கௌரவாம்பாள் அவர்களுடன் கே.ஜீவபாரதி



பொதுவுடைமை இயக்கப் பணியில் நல்லகண்ணு அவர்களுடன் கே.ஜீவபாரதி



திரைப்படப் பணியில் கே.ஜீவபாரதி



வரலாற்றுத் தேடலில் கேப்டன் லெட்சுமி அவர்களுடன் கே.ஜீவபாரதி

# எழுத்தாளர் தி.க.சி அவர்கள் கே.ஜீவபாரதிக்கு எழுதிய அஞ்சல் அட்டை

தி.க.சி. 21E, சுடலைமாடன் தெரு, நெல்லை-6, 20.8.99

என்னருமைத் தோழர் ஜீவபாரதி அவர்களுக்கு,

வணக்கம். 'பல கோணங்களில் பட்டுக்கோட்டையார்' கிடைத்தது; மிக்க மகிழ்ச்சி; நன்றி.

○ தோழர் எஸ்.டி.எஸ். அவர்களின் அணிந்துரை, மிக நன்று. "கல்யாண சுந்தரம் படைப்புக்களை மக்கள் மனதில் பதிய வைப்பதே ஒரு சமூகக் கடமை என்ற நோக்குடன் தொடர்ந்து தோழர் ஜீவபாரதி செயல்பட்டு வருகிறார்" என்னும் எஸ்.டி.எஸ். அவர்களின் சொற்கள், எள்ளளவும் மிகையல்ல.

○ தங்களது நற்பணிகளுக்குத் தமிழ் மக்களின் பேராதரவு கிடைக்கும் என்பது உறுதி.

என்றும் தோழமையுடன்,
தி.க.சி.

பின் குறிப்பு:-

உடல் நலம், மிகவும் குறைவு. அண்மையில், மீண்டும் முறையாகக் கடுமையான 'நெஞ்சு வலி' காரணமாக, மருத்துவ மனையில் தொடர் சிகிச்சை பெற்றேன்; வீடு திரும்பி சில நாள்களே ஆயின; எனினும், தங்கள் அரிய உழைப்பைப் பாராட்டுவது, என் கடமை.

வாழ்த்துக்களுடன்,
தி.க.சி.

POST CARD · INDIA · 25

TIRUNELVELI TO · C · 20-8-99 · 6270..

600018

தோழர் கே. ஜீவபாரதி,
30, முதலியாண்டான் தோட்டம்,
காமராஜர் சாலை,
எல்டாம்ஸ் ரோடு,
தேனாம்பேட்டை, சென்னை-18
PIN 600018
சென்னை-18